உ

தமிழ்த்தாய் வாழ்க.



# தமிழ்ப் பொழில்

தஞ்சைக்

கரந்தைத் தமிழ்ச் சங்கத்துத்

திங்கள் வெளியீடு





தாது ஆண்டு

(1936—37)

பன்னிரண்டாந் துணர்

தஞ்சைக் கூட்டுறவுப்பதிப்பகத்தில்
அச்சிடப்பெற்றது.

# கட்டுரை எழுதிய பேரறிஞர்களும், கட்டுரைகளும்.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ிஉ | தாது, சித்திரை | மலர் க |

உ

## வாழ் நாள்

திரு. வித்துவான், ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்

உலகின்கண் தோன்றி, நின்று, மடியும், உயிர்கள் உடலோடு தோன்றி நிலவுதலைக் காண்பவர், "இவ்வுயிர்கள் வாழ்கின்றன," என்றும், தான் நின்ற உடம்பின் நீங்கி உயிர்பிரிந்த வழி, "இவ்வுயிர்கள் வாழ்நாள் முடிந்தன," என்றும் வழங்குவர். இவ்வழக்கம், "வாழ்நாள்" என்னும் தொடர்க்கு உயிர் உடலோடு கூடியுறையும் காலம்" என்னும் பொருளைத் தருகின்றது. உடலோடு கூடியுறையும் உயிர், அவ்வுடலைத் துணைகொண்டு வினைசெய்யுமிடத்து நுகரும் இன்பம், துன்பம் என்னும் இரண்டனுள் இன்பமே மிக்கு அவ்வுயிரால் நுகரப்படும்போது, "இவ்வுயிரின் வாழ்வே வாழ்வாகும்" எனச் சிறப்பித்தும், ஏனையது மிக்க வழி, "இவ்வுயிரின் வாழ்வு வாழ்வாகாது" என்றும் கூறும். கருத்துப் பற்றி, "முப்பது வருஷம் வாழ்ந்தவரும்,

முப்பது வருஷம் வாழாதவரும் உலகில் இல்லை" எனப் பலரும் வழங்குப. இவ்வழக்கத்திற்பெறும் வாழ்விற்கும், மேற்கூறிய வழக்கத்திற்பெற்ற வாழ்விற்கும் பொருண்மைக்கண் வேறுபாடு புலப்படுவதுபோலத் தோன்றினும், நுணுகி நோக்குமிடத்து, பொருணிலையில் இரண்டற்கும் வேறுபாடின்மையும், வேறு பட்டனபோற் றோன்றுதற்குக் காரணம் பயனையும் உடன் கொண்டு நோக்குதலும் விளங்குகின்றன. ஆகவே, வாழ் நாளாவது உயிர் உடலோடுகூடி உறையும் காலத்தையே உணர்த் துவதென்று துணிக. ஆசிரியர் பரிமேலழகரும், "வாழ்நாள் வழியடைக்கும்கல்" (குறள். 38) என்றவிடத்து. "வாழ்நாள்" என்றதற்கு "யாக்கையோடு கூடுநாள்" என்றே பொருள் கூறினர்.

இனி, நாளாவது காலத்தின் கூறுபாடுகள் பலவற்றுள்ளும் ஒன்றற்குப் பெயராயினும், ஈண்டுக்காலம் என்னும் பொதுப் பொருளையே உணர்த்துகின்றது. காலமாவது தமிழிற் பொரு ளிலக்கணத்துட் கொள்ளப்படும் நிலம், பொழுது எனப்படும் முதற்பொருள் இரண்டனுள் பொழுதாகும். சமய நூல்களில் அசுத்தமாயா காரியமெனப்படும் காலம், நியதி முதலிய தத்து வங்களுள் ஒன்றாகக் கூறப்பெறும் காலம் என்பதும் இதுவே யாகும்.

இனி, "ஒரு பொருளின் பண்பும் தொழிலுமல்லதுகாலம் என்ற சொல்லுக்கு ஒருபொருட் பேறில்லை" என்று சொல்லுப வரும் உண்டு; ஆயினும், அகத்தியமுனிவர் காலமுண்டென்பது அருமறையகத்தேயும் கூறப்பட்டதென, "உலக வழக்கமொரு முக்காலமும், நிலைபெறவுணர்தரு முதுமறைநெறியால்" என்ற சூத்திரத்தாற் கூறினர்; மேலும், முன் பிறந்தான், பின் பிறந் தான், மூத்தான், இளையான் என்பனவற்றை உதாரணங் காட்டிக் காலம் உண்டு என்பவரும் உளர் என்று பிரயோக விவேக நூலார் கூறுவர். மற்று, ஆசிரியர் சிவஞானயோகிகள் காலம் என்றொருபொருள் இல்லையென்பவர் புத்தர் முதலியோர் என்றுகூறி, "மாந்தளிர் முதலியன இளவேனிற்கால முதலிய வற்றினன்றி உற்பத்தியாகாமையும், முல்லைப்பூ முதலியன

கார்கால முதலியவற்றினன்றி உற்பத்தியாகாமையும், நசித்தலும் அவ்வக்காலம் வந்துழியன்றி நசியாமையும் காண்டும். காலம் இல்லையென்பார்க்கு அவ்வக்காலம் இன்றியும் அவையவை உற்பத்தியாய், உற்பத்தியானபொழுதே எல்லாப்பொருளும் நாசம் எய்தவும் வேண்டும். அங்ஙனங் காணுமையானும், செய்த * வினைக்குப் பயன் நீட்டித்து வருதலானும், 'ஒரு கணத்திற்றோன்றும், ஒரு கணத்தில் அழியும்,' என்று வழங்கப்படுதலானும், இன்னோரன்னவற்றிற்குக் காரணமாகிய காலம் உண்டென்பது தெற்றெனவுணர்க,'' என்பர்.

இங்ஙனம், உண்டெனத் துணிந்த காலம் ஒன்றே என்பர் சிலர். அவர் நையாயிகர் முதலியோர் என்று கூறி, "காலம் ஒன்றாயின் நடத்தல் முதலிய தொழில்களும் இறப்பு நிகழ்வு முதலியவற்றான் வேறுபடுதலின்றி, ஒன்றே யாதல்வேண்டும்; அவ்வாறன்றி, இறப்பு, நிகழ்வு முதலியனவாய் நிகழும் தொழிற் பாகுபாட்டிற்குக் காரணம் காலத்தினது பாகுபாடேயாகலின், காலம் பலவாதல் அறிக,'' என்றனர் வண்டமிழ் மாபாடியங் கூறிய சிவஞான வள்ளல். இப்பெருமானார், இம்மட்டில் நில்லாது, காலத்திற்கு இறப்பு முதலிய பாகுபாடு ஞாயிற்றின் செலவு முதலியவற்றானாகிய செற்கையே என்பார் கூற்றினையும் ஆசங்கித்து, "நாழிகை, நாள், பக்கம், திங்கள், பருவம், அயனம், ஆண்டு என்றற்றொடக்கத்துக் காலப் பாகுபாடு மாத்திரையே ஞாயிற்றின் செலவு முதலியவற்றானாய செயற்கையாவதன்றி, இறப்பு, நிகழ்வு, எதிர்வு, கணம், இலவம் என்றற்றொடக்கத்துக் காலப்பாகு பாடுகள் ஞாயிற்றின் செலவு முதலியவற்றானாகிய செயற்கையல்லவாகலான், இயற்கையான், இறப்பு நிகழ்வு என்றற்றொடக்கத்துப் பலவேறு வகைப்படும் காலம் ஒன்றுமாறு யாண்டையதென்க'' என்று கூறியருளினவர், மேலும், "ஒரு காலத்திற்றானே உடைந்த குடத்தைநோக்கி இறந்த காலமெனவும், பிறந்த குடத்தைநோக்கி நிகழ்காலமெனவும், பிறக்கக் கடவதாகிய குடத்தைநோக்கி எதிர்காலமெனவும் வழங்கக்காண்டும். அங்ஙனம் வழங்குதல்பற்றிக் காலங் தம்முள் வேறுகாமையும் காண்டுமாகலின், இறப்பு,

நிகழ்வு முதலிய வேறுபாடுபற்றிக் காலம் பலவென்றல் சாலா தெனின்!—அற்றன்று; ஒருவன் தானே தந்தையை நோக்கி மகனும், மகனை நோக்கித் தந்தையுமாதலும், நெடியனை நோக்கிக் குறியனும், குறியனை நோக்கி நெடியனுமாதல்போல, பலவேறு வகைப்பட்ட பொருள்களை நோக்கிப் பலவேறு வகைப்பட வழங்கும் இறப்பு முதலியன மாறுபட்ட தன்மைய வல்லவாக லின், அவற்றை நோக்கிக் காலம் ஒன்றேயாயினும், ஒரு குடத் தின் கண்ணவாகிய இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்பன மாறு பட்ட தன்மையவாதல் காட்சிப் புலனாகலின், அவற்றைநோக்கி காலம் பலவாதல் சாலும் என்க,'' என்று விரித்துரைத்தருளி னர். இவ்விரிவுரையாற் காலம் உள்ளதே என்பதும், அது பலவாமென்பதும் பெறப்பட்டனவாம்.

ஒருபொருள் மற்றொரு பொருளொடு தொகுமிடத்து, அவ் விரண்டற்கும் தொடர்பொன்றும் இல்லையேல் தொகுதல் ஆகா தென்பது யாவரும் அறிந்தது. அப்பொருளிடமாக நிகழும் சொற்களும் அன்னவாகலின், வாழ்நாள் என்ற தொகைச்சொற் கண் வாழ்தல் என்ற வினையும், நாள் என்னும் பெயரும்தொக்கு நிற்றற்குரிய தொடர்புவேண்டும். அத்தொடர்புகள் பலவாயி னும், ஆசிரியர் தொல்காப்பியனார் வினைச்சொல் பெயர்ச்சொல் லொடுதொக்கும், எச்சமாய் நின்று பெயர்கொண்டும் முடிதற்கு "நிலனும் பொருளும் காலமும் கருவியும், வினை முதற் கிளவியும் வினையுமுளப்பட, அவ்வறு பொருட்கும் ஓரன்னவுரிமைய'' (தொல். சொல். 234) என்னும் சூத்திரத்து நிலம் முதலியன தொடர்புடைய என்றனராகலின், இத்தொகைச் சொல்லினும் வாழ்தல் வினைக்குரிய காலம் முடிக்குஞ் சொல்லாய், வினையொடு தொக்கு ஒரு சொல்லாய் நிற்பதாயிற்று. ஆகலின், வினைக்கும் காலத்துக்கும் தொடர்புண்மையும் பெற்றும்.

உயிர்கள் உணருந் தன்மையுடையவாகலின் வினை முத லாதற்குரியனவாகும். இன்ப துன்பங்களை யுணர்தலும் நுகர் தலுமே உயிருணர்வின் பயனாகலின், அவ்வுயிர்கள் அவற்றைப் பெறுதற்குரிய வினைகட்கு வினைமுதலாகின்றன. உயிர்கள்

உடலோடு கூடுதலே வினைப்பயனாகிய இன்பதுன்பங்களை நுகர் தற்பொருட்டேயாகலின், உடலோடு ஒன்றிய உயிர்தோன்றும் பொழுதே வினையும் உடன் தோன்றுகின்றது. அங்ஙனம் தோன்றும் வினைக்கு அது வினைமுதலாய், அவ்வினையை நிகழ்த்து மிடத்து அதன் பயன் தோன்றாதொழிதல் ஒருகாலுமில்லை. ஆதலால், தான் நுகர்தற் பாலதாகிய வினைப்பயன் குறித்து உயிர் வினை முதலாதலும் வினையுளதாதலும் ஒருதலையென்று கோடல்வேண்டும். அங்கு உளதாகத் துணிந்த வினைமேல் வினைமுதலாகிய உயிர்கள்சென்று அதனைச் செய்தற்குரிய நெறியினைச் சமய நூல்கள் கலாதத்துவம் என்றும் கூறும். உயிர் கட்கு அறிவு, இச்சை, தொழில் என மூன்று நிலையுண்டென்றும், அவ்வுயிர்கள் வினைப்பயன் நுகர்தல் கருதித் தொழின்மேற் செல்லுமாறு அத்தொழில் நிலையை விளக்குவது இக்கலாதத்துவ மாகும் என்றும் கூறுப. வினை, தொழில், செய்கையென்பன ஒரு பொருளன.

இனி, கலையால் விளக்கமுற்று வினைபுரிவான் வினை முத லாகிய உயிர்க்கு வேண்டுவது வினைப்பயனேயன்றி வேறு ஒன் றும் அன்று. அப்பயனை விளைக்கும் வினை, அதற்குக் காரண மாயினும், அதனை வரையறைப்படுத்து, உயிரை நுகர்விக்கு மிடத்து, காலம் பெருந்தொடர்பு பெறுகின்றது. இப்பெருந் தொடர்பு தானும் துணைக்காரணத் தொடர்பேயாம். ஒருவன் தன் நுகர்ச்சிக்கென ஈட்டிய பொருள் மலையெனக் குவிந்தகாலை யும், ஒருநாளை நுகர்ச்சி, இருநாளை நுகர்ச்சியெனக் காலத்தால் வரையறை செய்யப்பட்டு அந்நுகர்பொருள் கழிதலை நாடோ றும் நாம் காணுதலின், பயனாகிய நுகர்பொருளைக் காலம் நுகர் விக்கும் துணைக்காரணமாய் நிற்றல் அறியப்படுகின்றது. அன்றியும், ஒரு வினை தொடங்கியவுடனே பயன் காண்டல் இன்மையின், அது தொடங்கி, நிலவி, முடிதற்கும் காலம் துணை செய்தலின், வினைநிகழ்ச்சிக்கும் காலம் துணைக்காரணமாதல் பெறப்படும். இதுபற்றியே, "அருத்திமிகும் கலைகால நியதி யுடன் வித்தையராகமிவை அனந்தரான் மாயை தனிலாகும்" எனச் சிவப்பிரகாசம் என்னும் தண்டமிழ் நூலும், "கலாதத்து

வம், காலமும் நியதியும் தனக்குத் துணைக்கருவியாகக்கொண்டு, முதற்காரணமாய் நின்று, வித்தை, அராகம் முதலிய தத்துவங்களெல்லாவற்றையும் தன்பால் நின்றும் தோற்றுவிக்கும்,'' எனத் தத்துவப் பிரகாசம் என்னும் வடநூலும் ஓதுகின்றன. தொல்காப்பியமென்னும் செந்தமிழ் இலக்கணமும், "வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது நினையுங்காலைக் காலமொடு தோன்றும்'' என்றும், காலமொடு தோன்றுதனபோல் தோன்றும் குறிப்புவினையும் நினையுங்காற் காலமொடு தோன்றுமென்பதனை "நினையுங்காலை'' என்ற இலேசினால் எய்துவித்து, "அம்முக்காலமும் குறிப்பொடுகொள்ளும், மெய்ந்நிலையுடைய'' எனவரும் சூத்திரத்தால் யாப்புறுத்தும் கூறுவதாயிற்று.

இனி, வினைக்கும், வினைப்பயன் நுகர்ச்சிக்கும் துணைக் காரணமாய் நிற்கும் காலம், வினையின் திட்பநுட்பங்கட்கும், வினைப்பயன்களின்பெருமை சிறுமைகட்கும் தக நீண்டும் குறுகியும் நிலவும் என்பது போதரும். ஒரு வினைமுதல் ஈட்டிய வினைப்பயன் பெரிதாயவழி, அதுதான் நின்ற உடலோடு நெடிது நின்று அதனைத் துய்த்துத் தீரும்; அப்பயன் கழியுமளவும் அதனை வரையறை செய்து அவ்வுயிரை நுகர்வித்தல் வேண்டுதலின், அதன் வாழ்நாள் நீடுதல் தானே அமையும். இதனை நினையாது ஒருயிர்க்கு வாழ்நாள் இத்துணை என வகுத்தல் வாய்மையாகாது கழிதல் பெரும்பான்மை.

ஓருயிர் நுகர்தற்குரிய வினைப்பயனும், அதற்குரியவினையும் அவ்வுயிரால் அறியமுடியாமையின், வாழ்நாளை வரையறுத்துக் கூறுதல் கூடாமையின்பாற் படுவதாயிற்று. முற்றத்துறந்த முனிவரும், கற்றுத் துறைபோகிய காட்சியரும் இந்நெறியில் மயங்குகின்றனர். நெடிது வாழலாமெனக் கருதுமோருயிர், கடிதுபொழுதில் உடல் விட்டேகுதல் நாடோறும் நிகழும் நிகழ்ச்சியாயிற்று. இதனைக் கண்ணுற்றே நம் வன்றொண்டப் பெருந்தகையார்,

"ஒன்றலா வுயிர்வாழ்க்கையை நினைந்திட்
டுடல்தளர்ந்தருமா நிதியயற்றி

என்றும் வாழலாம் எமக்கெனப் பேசும்
இதுவும் பொய்யெனவே நினையுளமே''

என்றும், திருவாரூர்ச் செல்வனார்,

"தந்தையார் தாயாருடன் பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தாமாரே
வந்தவாறெங்ஙனே போமாறேதோ
மாயமாம் இதற்கேது மகிழவேண்டா''

என்றும், சீகாழிப் பிள்ளையார்,

"மற்றிவ் வாழ்க்கை மெய்யெனும்
மனத்தினைத் தவிர்ந்துநீர்
பற்றிவாழ்மின் சேவடி
பணிந்துவந் தெழுமினோ'' (கோடிகா. 8.) என்றும்

கூறிப்போயினர்.

இனி, இக்காலத்தையும் ஒருவாறு துணிந்து கூறுதலு முண்டு. இத்துணிபிற்குரிய பொருள்கள் திண்ணியவாய்க் கிடைத்திலவாயினும், உயிர்களுட் பல நெடிது வாழ்தலைக்கண்டு அந்நெடுவாழ்வின் முறையே பிறவுயிரும் வாழலாம் என எதிர் நோக்கிக் கூறுவதேயாம். அளவைகளாலும் பொருந்துமாற்று லும் பொருள்களையாராய்ந்து கூறிய தெய்வப்புலமைத் திரு வள்ளுவனாரும் "நெருநல் உளன் ஒருவன்' இன்றில்லையென்னும், பெருமை யுடைத்திவ்வுலகு'' என்றதையன்றி, வாழ்நாளெல் லையை வரையறுத்துக் கூறிற்றிலர். "வேதநூற் பிராயம் நூறு'' என ஓதிய பெரியார் வாய்மொழியினையும், பிறவாழ்க்கை நிலை களையும் கண்டு மக்களுயிர்க்கு வாழ்நாளெல்லை நூறாண்டாகும் என்ப.

இனி, மேனாட்டார் கருதிக் கூறுவனவற்றை யாராய்வாம்: மக்களுயிருள் ஒன்று உலகிற்றோன்றித் தானே தன் வாழ்க்கை யைத் தொடங்குதற் கெய்துங்காலம் அதற்குரிய வளர்ச்சிக் காலமாகும். அக்காலத்திற்குவேண்டும் யாண்டுகளின் தொகை யினை ஆறுதல் ஏழாதல்கொண்டு பெருக்கியவழியெய்தும்யாண்டு களின் தொகை அவ்வுயிர் உடலோடுகூடி வாழுங் காலநிலை

யென்று ஒரு முடிபுகொண்டு, மேனுட்டறிஞர் பலர் வாழ்நாளெல்லையை வரையறுக்கப் புகுந்தனர். அவருட்டலையாயவர் பவூன் என்பாராவர்.

அவர், "மக்கள் வளர்ச்சிக்குரிய வாலப்பருவம் பதினைன்காண்டுகளாதலின், அவர் தம் வாழ்நாளும் எண்பத்து நான்காண்டாதல் தொண்ணூற்றெட்டு யாண்டுகளாதல்வேண்டும்," என்று கூறினர். அவர் கூற்று, நூறாண்டென்பார் கூற்றோடு நெருங்குதலின், உடன்படற்பாலதாயினும், வளர்ச்சிக் காலமாகிய வாலப்பருவத்துக்கு வகுத்த யாண்டுகள் சாலா. அவ் "வாலப்பருவம்" பதினைன்கினும் மிக்க யாண்டுகள் வேண்டி நிற்பதை இன்றும் காணலாம். அன்றியும், மக்களுட் பலர் தொண்ணூற்றெட்டியாண்டு கழிந்த காலையும் கட்டுக்குலையா உடல்வன்மையும், நிறப்பொலிவும் ஒளியும் உடையராய்த் திகழ்வார் உளராகலின், அவ்வரையறை வாழ்நாள் எல்லையாதற்கியைவதன்றாம்.

இவர் கூற்றினல் ஊக்கப்பெற்றெழுந்த பிளாரன்ஸ் என்பார், மக்களுயிரோடு விலங்கினங்களின் உயிரையும்கொண்டு, உயிர்கட்குரிய வாழ்நாளெல்லையை வரையறை செய்யத் துணிந்தார்.

| விலங்கினம். | வாலப்பருவம். | வாழ்நாளெல்லை. |
|---|---|---|
| ஒட்டகம் | 8 ஆண்டு | 40 ஆண்டு |
| குதிரை | 5 ,, | 25 ,, |
| ஆனேறு | 4 ,, | 15, 20 ,, |
| அரியேறு | 4 ,, | 15, 20 ,, |
| நாய் | 2 ,, | 10, 12 ,, |
| மக்கள் | 20 ,, | 100, ,, மிகுதி. |

இவற்றை நோக்குமிடத்து, பவூன் என்பார் கூறியதுபோலாது, வளர்ச்சிக்குரிய யாண்டுகள் வாழ்நாளெல்லைக்குவேண்டும் யாண்டுகளுட் சற்றேறக்குறைய ஐந்தனுள் ஒரு பகுதியாமென்பது பெறப்படுகின்றது.

(தொடரும்.)

# தமிழ்ப் பத்திரிகையின் வரலாறு

திரு. ப. கலியாணசுந்தரம் பிள்ளை, அவர்கள், B. A. (Hons.)

நாகரிகத்திற் சிறந்து விளங்கும் நாடுகளில் பத்திரிகை ஓர் சிறந்த கருவியாக நின்று நிலவுகின்றது. சரித்திர வாயிலாக ஆராயும் பொழுது சிறுமையுற்று சீரழிந்த நாடுகள் பத்திரிகையின் உதவியால் பெருமையுற்று விளங்கக் காண்கின்றோம். பசியாலும் பிணியாலும் நலிந்த நாடுகள், பத்திரிகையின் ஆற்றலால் வசியும், வளமும் சிறந்து மிளிரக் காண்கின்றோம். செல்வரே மேலோர் என்றும் வறியவர் கீழோர் என்றும் வழங்கிய கொள்கை நிலையழிந்து வீழக்காண்கின்றோம். மேற்பிறந்தார் மேலோர் என்றும் கீழ்ப்பிறந்தார் கீழோர் என்னும் முன்னையோர் வகுத்த முறை சின்னபின்னமாகக் காண்கின்றோம். எல்லோரும் ஒன்றெனனும் காலம் வந்ததே, நல்லோர் பெரியர் என்னும் காலம் வந்ததே, என்று எல்லோர் நெஞ்சங்களும் துள்ளி மகிழக் காண்கின்றோம். இத்தகைய நிகழ்ச்சிகளெல்லாம் பத்திரிகைகளாலேயே நிகழ்கின்றன என்று கருதுவது மிகையாகாது. பத்திரிகையின் வலிமையை நன்குணர்ந்த மேல்நாட்டு மக்கள், அதன் பெருமையை மனமாரப் புகழ்ந்து போற்றியுள்ளார்கள். படைவீரர் கையிலமைந்த வாளினும் பத்திராசிரியர்கள் எழுதுகோலின் வன்மை பெரிதென்று ஓர் ஆங்கிலப் பழமொழி கூறுகின்றது. ஆக்குந்திறமும் அழிக்குந் திறமும் பத்திரிகையின்பால் அமைந்திருத்தலால், நாகரிகமுற்ற நாடுகளில், பத்திரிகைகள் பொன்போற் போற்றப்படுகின்றன.

இத்தகைய வன்மையைத் தன்னகத்தே கொண்ட பத்திரிகை, தமிழ் நாட்டில் தோன்றி வளர்ந்த வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுவதே இக்கட்டுரையின் கருத்தாகும். தென்னாட்டில் தொன்றுதொட்டு வழங்கி வந்த மொழி தமிழ் மொழியே என்பது யாவரும் அறிந்த உண்மையேயாம். தமிழ்மொழி மிகத் தொன்மையும், செம்மையும் வாய்ந்த மொழியே யாயினும், அம்

2

மொழியில் எழுந்த நூல்கள், பெரும்பாலும் பாட்டாக இருந்தமையால், கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்கு அவை பயன்படாதனவாயின. ஓர் நாட்டில் பத்திரிகை தோன்றி வளர்வதற்கு அடிப்படையாக இருப்பது செவ்விய உரை நடையே யாகும். சங்க நூல்களிலும், சங்க காலத்திற்குப் பின்னெழுந்த நூல்களிலும், சிறுபான்மை வசனநடை காணப்படினும், பாட்டில் நூல் செய்யும் வழக்கே பெருவழக்காகத் தமிழ்நாடு முழுதும் பரவி யிருந்தது. ஆதியில் எழுந்த அகத்தியமும், அதன் பின் எழுந்த தொல்காப்பியமும் நூற்பாவடிவமாக உள்ளன. சங்கத்துச் சான்றோர் செய்த பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று போற்றியுரைக்கப்படும் நூல்களும் பா வடிவமாக அமைந்துள்ளன. சொற்பொருள் உணர்த்தப்போந்த நிகண்டுகளும் பாட்டாகவே அமைந்துள்ளன. ஆகவே தமிழ் மொழியிலமைந்த பழைய இலக்கணங்களும் இலக்கியங்களும் நிகண்டுகளும், பிறவும் பாவடிவிலேயே அமைந்தன என்பது யாவருக்கும் இனிது விளங்கும், ஆயினும் இடையிடையே வசன மில்லாமற் போகவில்லை. சிலப்பதிகாரம் என்னும் சிறந்த காப் பியத்தில், இடையிடையே, உரைநடை அமைந்திருக்கக் காண் கின்றோம். இன்னும் சில பழைய நூல்களிலும் வசனம் விரவி யிருப்பதாக அறிகின்றோம். இதனால் பாட்டு வசனம் என்னும் இருவகை நடைகளையும் தமிழ் நாட்டார் நெடுங்காலத்திற்கு முன்னரே அறிந்திருந்தாரென்பதும், இவ்விரு நடைகளிலும் பாட்டு நடையையே போற்றி வளர்த்தார்களென்பதும் நன்கறி யப்படுகின்றது. தமிழ் மொழியின் வரலாற்றை நோக்கும் போது, சென்ற நூற்றாண்டுகளாகவே வசனநடை வளர்ந்தோங்கி வருகின்றதென்பது இனிது புலப்படும்.

முதன் முதல் வசன நூல்கள் எழுதத் தலைப்பட்ட புல வர்கள், பெரும்பாலும் செய்யுள் நடையை ஒத்த உரைநடையே இயற்றினார்கள். இயன்றவரை இயற்சொற்களை விடுத்து எதுகை மோனைகளை எடுத்தடுக்கி, இன்னோர் செய்த வசன நூல் கள், கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்கு விளங்காதனவாக அமைந் தன. ஆயினும், காலம் செல்லச் செல்ல, இலக்கணக்

கட்டமைந்த இறுகிய உரை நடை இளகி, நெகிழ்ந்து எளிதாக இயங்கத் தொடங்கிற்று. இக்காலமே பத்திரிகைகள் தோன்றுவதற்கு ஏற்றகாலமென்பது சொல்லாமலே யமையும்.

தமிழ் மொழியிற் காணப்படும் பத்திரிகைகளை ஐந்தாறு வகைகளாக வகுத்துக் கூறலாம். தமிழ்மொழி வளர்த்தலே தலையாய நோக்கமாகக்கொண்டு சில பத்திரிகைகள் எழுந்துலாவுகின்றன. இவற்றை (Literary Journals) இலக்கியப் பத்திரிகைகள் என்று கூறலாம். இன்னும் தென்னாட்டில் வழங்குஞ் சிறந்த சமயநெறிகளாகிய சைவம் வைணவம், முதலிய சமயங்களை வளர்த்தலே சிறந்த நோக்கமாகக் கொண்டு சிலபத்திரிகைகள் தோன்றின. அவற்றை (Religious Journals) சமயப் பத்திரிகைகள் என்று கூறலாம். இன்னும் தென்னிந்திய சமுதாயத்தில் காணப்படும் குறைகளை நீக்கி, சமுதாய சீர்திருத்தம் செய்யுமாறு எழுந்த பத்திரிகைகள் சில; இவற்றை (Social Reform Journals) சமுதாய சீர்திருத்தப் பத்திரிகைகள் என்று கூறலாம். இன்னும் தென்னாட்டில் தோன்றி நிலவும் சாதிகள் அல்லது பகுப்புகளின் குல நலம் பேணக் கருதி எழுந்த பத்திரிகைகள் சில. இவற்றை (Communal Journals) வகுப்பு முன்னேற்றப் பத்திரிகைகள் என்று வழங்கலாம். இவ்வாறு உயரிய பொது நலம் குல நலங்களில் தலையிடாது விகடவிநோதம் பேசி நகை விளைக்கும் பத்திரிகைகள் சில, இவற்றை விகடப் பத்திரிகைகள் என்று கூறுதலமையும். இனி தேசீய முன்னேற்றமே குறிக்கோளாகக் கொண்டு, அரசியற் சீர்திருத்த முறையில் ஆர்வமுற்றுரைக்கும் பத்திரிகைகள் சில; இவற்றைத் தேசீயப் பத்திரிகைகள் என்று கூறலாம்.

இவ்வாறு அறுவகைப்பட்ட பத்திரிகைகளின் பண்பினை இனி ஒருவாறு ஆராய்வாம். இலக்கியப் பத்திரிகைகளை எடுத்துக்கொள்வோம். இப்பொழுது தமிழகத்தில் நான்கு சிறந்த இலக்கியப் பத்திரிகைகள் உலாவி வருகின்றன என்று தெரிகின்றது. புலவர் பாடும் புகழமைந்த மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் வெளியிடப் படுகின்ற "செந்தமிழ்" ஒன்று. தென்பாண்டிநாடாகிய திருநெல்வேலியிலமைந்த, தென்னிந்திய

சைவ சித்தாந்த சபையின் ஆதரவில் வெளியிடப்படுகின்ற 'செந்தமிழ்ச் செல்வி, ஒன்று. தஞ்சையை அடுத்த கரந்தைமா நகரில் களித்திலங்கும் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் வெளிவந்துலவும் 'தமிழ்ப் பொழில், ஒன்று. சென்னைமா நகரில் கலாநிலையம் என்னும் பெயரோடு கலைவளர்க்கும் பத்திரிகை ஒன்று. ஆகிய இவை நான்கும் இவைபோல்வன பிறவும், சொல்நயம், பொருள் நயம் ஆர்ந்த தமிழ் நூல்களின் அழகினை இனிய முறையில் எடுத்துரைத்து நாட்டில் புதியதோர் ஊக்கத்தை எழுப்பும் நன் நோக்கத்தோடு தோற்றுவிக்கப்பட்டனவாம். ஆயினும், இவ்விலக்கியப் பத்திரிகைகள் இன்னும் தமிழ்நாடெங்கும் பரவிப் பெரும் பயன் விளைக்கவில்லையென்று கூறுதல் குற்றமாகமாட்டாது. இந்நான்கு பத்திரிகைகளில், மூன்று, பொருள் நலம் படைத்த சங்கங்களினாதரவைக் கொண்டுள்ள காரணத்தால் இன்றுகாறும் இறவாது நின்று நிலவுகின்றன. இப்பத்திரிகைகளின் சந்தாதார்களை நூற்றுக் கணக்காக எண்ண வேண்டுமேயன்றி ஆயிரக்கணக்காக எண்ணக்கூடிய நிலையிலில்லை. இப்பத்திரிகைகளில் புலவர் பெருமக்கள் ஆராய்ச்சித்திறத்தாற் கண்ட அரும்பெரும் பொருளமைந்த கட்டுரைகள் வெளிவருவது உண்மையேயாம். இருபதாண்டுகளுக்கு மேலாக நிகழ்ந்து வரும் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளிவந்த வியாசங்கள் பல, நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன; அவ்வாறே செந்தமிழ்ச் செல்வி முதலிய பத்திரிகைகளும், தண்டமிழ் மொழிக்குத் தலையாய அன்பு கூர்ந்து உலையாத ஊக்கத்துடன் உழைத்து பல அரிய பெரிய ஆராய்ச்சி நூல்களைத் தந்தன. ஆயினும், இப் பத்திரிகைகள் சிலர்க்கேயன்றி பலர்க்குப் பயன்படாத பான்மையின் அமைந்த காரணத்தை ஆராய்தல் நம்கடமையாம்.

இழுமென் மொழிகளால் இயன்ற விழுமிய நூல்களின் எழில் நலங்களை, இனிய எளிய கட்டுரைகளில் எழுதுவோமாயின் அவற்றைப் பல்லோரும் விரும்பிப் படிப்பர். அவ்வாறன்றி இறுகிய நடையும் கருகிய போக்கும் படிப்போர் மனத்தில் சலிப்பை விளைவிப்பனவாம். மேற்கூறிய இலக்கியப் பத்திரிகைகளில் இத்தகைய கடுநடை பயில்கின்றமையால் அவை

சிலர்க்கே பயன்படுவனவாய் சிறிய உலகத்தே உலாவி வருகின்றன. இலக்கணம் கற்றுணர்ந்த பண்டிதர்களேயன்றி மற்றையோரும் தமிழ் இலக்கியச் சுவையறிந்து தமிழ்மொழியைப் போற்றவேண்டுமாயின் இப்பத்திரிகைகள் இன்னும் எளிய நடையில் இயங்கவேண்டுமென்பது எனது கொள்கை.

இனி தமிழ் நாட்டில் வழங்கும் சமய நெறிகளை வளர்க்கக் கருதி எழுந்த பத்திரிகைகளின் தன்மையை ஆராய்வாம். இத் தமிழகத்தில் சைவமும் வைணவமும் நெடுங்காலமாக நிலைத்துள்ளன செந்தமிழ்ச் சுவைநிரம்பிய சிலப்பதிகாரத்துள்

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்" நின்று நிலவின என்று கூறப்படுதலால் சைவ நெறியும் வைணவ நெறியும் இந் நாட்டுத் தொன்னெறிகளென்பது சொல்லாமலே அமையும்.

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேயமைவரை யுலகமும்" என்று எழுந்த தொல்காப்பிய அடிகளானும் இவ்வுண்மை வலியுறுத்தப்பெறும். சங்க காலத்தில் நிலவிய சமண மதமும், சாக்கிய மதமும், இடைக்காலத்தில் இந்நாட்டைவிட்டகன்றன. சில நூற்றாண்டு கட்கு முன்னர் வடநாட்டில் மகம்மதியர் ஆட்சி நிலைத்தபொழுது மகம்மதிய மதம் தென்னாட்டில் பரவுவதாயிற்று. அப்பால் ஆங்கில அரசாட்சி நிலைபெற்ற பொழுது அந்நாட்டினர் மேற்கொண்ட கிரிஸ்தவ மதமும் தமிழ் நாட்டில் தலைப்படுவதாயிற்று. இவ்வாறு பல சமய நெறிகள் உலாவும் தமிழ் நாட்டில் தத்தம் சமயத்தைப்போற்றி வளர்க்க ஆர்வமுற்று, அறிஞர்கள் சமயப் பத்திரிகைகள் தொடங்குவாராயினர். சென்னைமா நகரில் இருபத்தைந்தாண்டுகட்கு முன்னர் சைவசித்தாந்த சமாஜம் என்னும் சங்கம் நிறுவப்பெற்று அதன் ஆதரவில் "சித்தாந்தம்" என்னும் சமயப் பத்திரிகை நிகழ்ந்து வருகின்றது. வெள்ளிவிழா நடத்தும் பேறுபெற்ற சில பத்திரிகைகளில் இதுவும் ஒன்றாயிருத்தல் குறிப்பிடத் தக்கதாகும். இன்னும் 'லோகோபகாரி' யென்னும் வாரப்பத்திரிகையும் பல்லாண்டு

களாகச் சமயத்தொண்டு புரிந்து வருகின்றது. சென்னைக்கடுத்த பல்லாவரம் என்னும் சிற்றூரில் சாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள் நடத்திவரும் 'ஞானசாகரம்' என்னும் சமயப் பத்திரிகை சிவமணமும் தமிழ் மணமும் தாங்கித் திகழ்வதாகும். இப்பத்திரிகையின் அருமை பெருமைகளையறிந்து தமிழ் நாடு போற்றாத குறை பெருங்குறையேயாகும். நான்காண்டுகட்கு முன்னர் தனவணிக நாடென்னும் செட்டி நாட்டிலுள்ள பலவான்குடியில் சிவநேசன் என்னும் சமயப் பத்திரிகை தோன்றுவதாயிற்று. அன்ன சத்திரங்களமைத்தலும், ஆலயங்கள் எடுத்தலும் சிறந்த அறமெனக் கருதி, அளவிறந்த பொருளைச் செலவு செய்து வந்த செட்டி நாட்டில், சில ஆண்டுகளாக சுயமரியாதை என்னும் சூறாவளி சுழன்றடிக்கின்றது. அதன் வெம்மையையும் வேகத்தையும் அடக்கி மீண்டும் சிவநெறியை விளக்கக் கருதி எழுந்த பத்திரிகையே சிவநேசன் என்பர். இந்நான்கு பத்திரிகைகளும், சிவநெறிக்குத் தொண்டு செய்வதுபோலவே தென்பாண்டி நாட்டில் தோன்றிய "வைஷ்ணவன்" என்னும் சமயப் பத்திரிகை, வைணவமத உண்மைகளை விளக்கும் மாதப் பத்திரிகையாக விளங்குகின்றது. இவ்வாறே மகம்மதிய மத உண்மைகளை தாருல் இஸ்லாம், சைபுல் இஸ்லாம், முதலிய பத்திரிகைகள் பரப்பி வருகின்றன. கிருஸ்தவமதக் கொள்கைகளை 'திருஇருதயத் தூதன்' 'சத்தியநேசன்' போன்ற பத்திரிகைகள் விளக்கிவருகின்றன. இன்னும் பிரமஞான சபையாரால் வெளியிடப்படும் பூர்ணசந்திரோதயம் முதலிய பத்திரிகைகளும் இராமகிருஷ்ண மடத்தினின்று வெளியிடப்படுகின்ற 'இராமகிருஷ்ண விஜயம்' என்னும் மாதப் பத்திரிகையும், சமயப் பத்திரிகைகளாகவே நிகழ்ந்துவரக் காணலாம்.

இனி தென்னாட்டில் வழங்கிவரும் சமயங்களிலும் சமுதாயங்களிலும் காணப்படும் ஒவ்வாத பழக்க வழக்கங்களை யொழித்து சீர்திருத்தும் நோக்கத்தோடு எழுந்த பத்திரிகைகள், பரபரப்புடன் பணிசெய்து வருகின்றன. சுயமரியாதை என்னும் இபக்கத்தை தோற்றுவித்த இராமசாமி நாயக்கர் என்பார் ஆசிரியராக இருந்து நடத்திவரும் குடியரசு என்னும் பத்தி

ரிகை சமயக் கொள்கைகளையும் சாதிக் கொடுமைகளையும் அஞ்சாது எடுத்துரைக்கின்றது. புதியன புகுதலும் பழையன கழிதலும் முறையே என்று கருதும் இப்பத்திரிகை வீரமும் வேகமும் பொருந்திய எளிய நடையில் வெளிவந்துலாவுவதால் அதன் கொள்கைகள் கற்போர் மனதைக் கவர்கின்றன. மாதரை அடிமைகளாக நடத்தும் மடமை ஒழிய வேண்டுமென்றும், காதல் மணமுறையே சாலச் சிறந்ததென்றும், எல்லாவுயிர்க்கும் பிறப்பு ஒக்கும் என்றும், இறைவன் பெயரால் நிகழும் ஏமாற்றம் தொலைய வேண்டுமென்றும், இப்பத்திரிகை இடித்துரைக்கின்றது. இதனடிச்சுவடுபற்றிச் செல்லும் 'குமரன்' என்னும் வாரப்பத்திரிகை செட்டி நாட்டில் சிறப்புற்று விளங்குகின்றது. பல்லாயிரம் ஆண்டுகளாக நிலைத்திருக்கும் பழக்கவழக்கங்களைத் தகர்த்தெரிவதற்கு வாரப்பத்திரிகைகள் போதா என்று கருதி இப்பொழுது சண்டமாருதம் என்னும் ஒரு தினசரிப் பத்திரிகையும் வெளிவருகிறது. பெருமழை பொழியும் பொழுது பொங்கி எழும் காட்டாறு, நெறியிகந்து செல்லுதல்போன்று, புதிதாகத் தோன்றிய இயக்கத்தை ஆதரிக்கப்போந்த இப்பத்திரிகைகள், வரைகடந்து செல்லுகின்றன என்று சிலர் வருந்துகின்றார்கள்.

இனி, இந்நாட்டில் உலாவிவரும் சாதி முன்னேற்றப் பத்திரிகைகளைக்குறித்து சில சொற்கள் கூறுதல் அவசியமாகும். வடமொழி நூல்களில் கூறப்படுகின்ற நால்வகைச் சாதி, ஆதியில் தமிழ் நாட்டில் இல்லையென்றும் தொழில்பற்றி வேற்றுமைகள் இந்நாட்டில் தொன்று தொட்டு விளங்குகின்றன என்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

''பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்
சிறப் பொவ்வா செய் தொழில் வேற்றுமையால்'' என்

னும் பொதுமறையை ஆதாரவாகக்கொண்டு தமிழ் நாட்டில் பிறப்பினால் ஏற்றந் தாழ்வில்லையென்றும், தொழில் வேற்றுமையை அடிப்படையாகக்கொண்ட பாகுபாடுகள் தொன்றுதொட்டு நிலைத்திருந்தன என்றும் இன்னார் கூறுவர். அன்று தொட்டு இன்றுகாறும் தமிழ்நாட்டில் வழங்கி வருகின்ற வகுப்புப் பெயர்களை ஆராய்ந்தால் இவ்வுண்மை இனிதறியப்படும். வேளாண்மைப் பணிசெய்வோர் வேளாளர் என்றும், பண்ணோடு பாடவல்லார் பாணர் என்றும், பறைசாற்றுவோர் பறையர் என்றும், தொழிலடியாகப் பிறந்த வகுப்புப் பெயர்களை நோக்கும்போது இவ்வுண்மை வலியுறுவதாகும். இவ்வாறு பல வகுப்பினராய்ப்

பிரிந்து வாழும் மக்களிடையே சென்ற பத்தாண்டுகளாக ஓர் சிறந்த இயக்கம் தோன்றி வளர்ந்து வருகின்றது. தாழ்ந்த வகுப்பாரென்றும் தீண்டத்தகாதாரென்றும் கருதப்படுகின்ற வர்கள் சாதி வழக்குகளை உடைத்தெறிந்து சம உரிமைபெற்று முன்னேற்றமடைய முனைந்து நிற்கின்றார்கள். இவர்கள் முயற்சியை அரசாங்கம் ஆதரித்து வருகின்றது. 'எழுத்தறியத்தீரும் இழிதகைமை' என்னும் முன்னோர் மொழியை பொன்னெனப் போற்றி இவ்வகுப்பார் கல்வி நலம் பெற்று அரசியலில் உரிய இடம் பெறக் கருதுகின்றார்கள். அறியாமையில் ஆழ்ந்து கிடக்கும் தங்கள் இனத்தவரைத் தட்டி எழுப்புமாறு பத்திரிகைகள் நடாத்தி வருகின்றார்கள். நாடார் குலத்தைச் சேர்ந்த நன்மக்கள் மேம்படுமாறு நாடார் குலமித்திரன் தோன்றிற்று. முல்லை நில மக்களாய கோனார் குலத்தை வாழ்விக்கக் கருதி "யாதவ குலமித்திரன்" மதுரையில் எழுந்தது. இவ்வாறே கள்ளர் மறவர் முதலிய வகுப்பாரை உயர்த்தக் கருதி பாண்டிய மித்திரன் தோன்றிற்று. இத்தகைய பணியில் குன்றாத ஊக்கத்துடன் இவை உழைத்து வருகின்றன.

இனி, நாகரிகமுற்ற மேலை நாடுகளில் நகைச்சுவை மிகுந்த பத்திரிகைகள் அதிகமாக நடமாடக் காண்கின்றோம். மாந்தர்கள் நடையுடைகளிலும், பழக்க வழக்கங்களிலும், காணப்படுகின்ற குற்றங்கடிந்து சீர்திருத்தும் முறையில் இப்பத்திரிகைகள் சிறந்த கருவிகளாய்த் திகழ்கின்றன. நடையுடை பாவனைகளை சித்திரமாக எழுதிச் சிங்காரித்து, நகை விளைக்கும் பத்திரிகைகள் பல்லாயிரக் கணக்காக மேலை நாடுகளில் விற்கக் காணலாம். ஆயினும் நம் நாட்டில் இன்னும் இத்தகைய விகட விநோதப் பத்திரிகைகள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. விகட தூதன் என்னும் விகடப் பத்திரிகை தோன்றி மறைந்தது. சென்னையில் பிரசுரிக்கப்படுகின்ற 'ஆனந்த விகடன்', 'விகட சக்கரம்', 'அமிர்தகுண போதினி' முதலிய பத்திரிகைகள், அரும்பணியால் தளர்வுற்று, இளைப்பாறக் கருதும் அறிஞர்க்கு ஆராயின்பமளிப்பனவாம். பாமரமக்கள் வேடிக்கை விநோதங்களை அதிகமாக விரும்புதலால் இக்காலத்திய பத்திரிகைகளிலெல்லாம் நகைச்சுவை அமைந்த துண்டுத் துணுக்குகள் அமைக்கப்பட்டிருக்கக் காணலாம். சிற்றுளியால் கல்லும் தகரும் என்னும் சிறந்த மொழிக்கிணங்க வேடிக்கைப் படங்களாலும் விநோதச் சொற்களாலும் பாமர மக்களை வழிப்படுத்துதல் சாலச்சிறந்த பணியென்று கூறுதல் மிகையாகாது.

(தொடரும்)

# கருதலளவைப் பகுதி.

திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை.

## 4-ம் அதிகாரம்.

(முற்றொடர்ச்சி துணர் 11. மலர் 11. பக்கம் 438.)

### 12. அப்பியாசங்கள்.

1. உண்மைத் துறைகளில் உத்தரபதம் உத்தரசாதனத்துப் பயனிலேயானுற் சாத்தியம் உடன்பாட்டுப் பொதுவாகாது. ஈண்டு நிரூபிக்க வேண்டியது என்னவெனின்:—

சாத்தியம் எதிர்மறையன்றேல் உடன்பாட்டுச் சிறப்பென்பதே. உத்தரபதம் உத்தரசாதனத்துப் பயனிலேயானல், ஈந்திருக்கும்; அற்றேல் ஈயாதிருக்கும் சாதனத்துப்பயனிலேயாகிய உத்தரபதம் ஈந்திருக்குமானல் அச்சாதனம் எதிர்மறையாக வேண்டும். ஆண்டுச் சாத்தியம் எதிர்மறையாகும். 6-ம் விதி இனி உத்தரபதம் ஈயாதிருந்தால் சாத்தியத்தும் ஈயாதிருத்தல் வேண்டும் (4ம்விதி) உத்தரம் சாத்தியத்தில் எழுவாயாகவிருக்குமாகையால் சாத்தியம் சிறப்பாகும்.

2. உண்மைத் துறைகளில், பூர்வபதம் பூருவசாதனத்தில் பயனிலேயாகின், உத்தரசாதனம் உடன்பாடாகும். பூர்வபதம் ஈந்திருக்குமன்றேல் ஈயாதிருக்கும் பூர்வபதம் பயனிலேயாகி ஈந்துமிருக்குமாயின் பூர்வசாதனம் எதிர்மறையாதல்வேண்டும். அங்ஙனமாயின் எத்தரம் உடன்பாடாதல்வேண்டும். 5ம் விதி இனிப் பூர்வபதம் சாதனத்து ஈயாதிருந்தால் சாத்தியத்தும் ஈயாதிருத்தல்வேண்டும். 4ம் விதி. பூர்வபதம் சாத்தியத்து ஈயாததாயும் பயனிலேயாகவும் இருத்தற்கு சாத்தியம் உடன்பாடாதல்வேண்டும்.

### 13. முதனிலைத் துறைகள்.

முதனிலைத் துறைகளின் உண்மைப் போலிகளை ஆராய்ந்து காட்டுதும். பொது விதிகளான் போலியென விலக்கப்பட்ட

எட்டுத் துறைகளும் ஒழிந்த, வினைய எட்டுத் துறைகளின் உண்மைப் போலிகளை ஆராய்வாம்.

1 உ, ம—ப பூர்வசாதனம்.
உ, எ—ம உத்தரசாதனம்.
உ, எ—ப சாத்தியம்.




மத்தியபதம் பூர்வ சாதனத்தில் ஈந்திருக்கிறது. சாதனத்து ஈயாதபதம் சாத்தியத்தும் ஈயாத பதமாகவே இருக்கின்றது. ஈந்திராமத்தியும் கள்ளநடையும் இல்லை. ஆகலின் சாத்தியம் உண்மை ஊ, எ—வி என்பதைச் சாத்தியத்தினின்று உடன் கருதலாம். இது மென்மைத்துறை. (weakend mood.)

2 உ, ம—ப எ, எ—ம
எதிர்மறைச் சாத்தியம் உண்டெனின் பூருவபதக் கள்ளநடை என்னும் போலி நிகழும். இதுப் போலித்துறை.

3 உ, ம—ப
ஊ, எ—ம
ஊ, எ—ப உண்மைத்துறை




4 உ, ம—ப
வ, எ—ம
பூர்வபதக் கள்ள நடைப்போலி.

5 எ, ம—ப
உ, எ—ம
எ, எ—ப உண்மை.
வ, எ—ப மென்மைத்துறை.







6 எ, ம—ப
ஊ, எ—ம
வ, எ—ப உண்மை







7 ஊ, ம—ப
உ, எ—ம
ஈந்திராமத்திப்போலி (ஈயாமத்தி)

8 வ, ம—ப
உ, எ—ம
ஈற்திராமத்திப்போலி

முதனிலை உண்மைத் துறைகள் நான்கு. உஉஉ (முருகு) எஉஎ, உஊஊ, எஊவ.

இரண்டாநிலை உண்மைத் துறைகள் நான்கு. எஉஎ, உஎஎ, எஊவ, உவஎ.

மூன்றாநிலை உண்மைத் துறைகள் ஆறு. உஉஊ (வன்மைத்துறை); ஊஉஊ, உஊஊ, எஉவ, (வன்மைத்துறை), வஉவ, எஊவ.

நான்காம் நிலைத்துறைகள் ஐந்து. உஉஊ, உஎஎ, ஊஉஊ எஉவ, எஊவ.

## 14. முதனிலைச் சிறப்புவிதிகள்.

அ. முதனிலை உண்மைத் துறைகளில் உத்தரசாதனம் உடன்பாடாதல் வேண்டும்.

ம—ப பூருவசாதனம் எ—ம உத்தரசாதனம் எ—ப உத்தரசாதனம் உடன்பாடன்றாயின், எதிர்மறையாகும். உத்தரசாதனம் எதிர்மறையாயின், பூருவசாதனம் உடன்பாடாதல் வேண்டும். பூருவபதம் பயனிலையாகலால் ஈந்திராது. உத்தரசாதனம் எதிர்மறையாகலான் சாத்தியம் எதிர்மறையாகவேண்டும். சாத்தியத்தில் பூர்வபதம் பயனிலை ஈந்திருக்கும். இது பூர்வபதக் கள்ளநடை. உத்தரசாதனம் எதிர்மறையாகில் போலித்துறையாகும். உண்மைத் துறையாகுதற்கு உத்தரசாதனம் எதிர்மறையன்றாதல்வேண்டும். ஆகலின் உத்தரம் சாதனம் உடன்பாடே.

ஆ. முதனிலை உண்மைத் துறைகளில் பூருவசாதனம் பொதுவாதல்வேண்டும். முதனிலையில் உத்தரசாதனம் உடன்பாடு என்பதை பிரமாணமாகக் கோடலால்; உத்தரசாதனத்து பயனிலையாகில் மத்தியபதம் ஈந்திராது அங்ஙனமாயின் மத்தியபதம் பூருவசாதனத்தில் ஈந்திருத்தல் அவசியம். பூருவசாதனத்து எழுவாயாகிய மத்தியபதம் ஈந்திருப்பதற்கு பூருவசாதனம் பொதுத்தாட்டாந்தமாதல்வேண்டும்.

### 15. இரண்டாம் நிலைச் சிறப்பு விதிகள்.

அ. ஒரு சாதனம் எதிர்மறையாகவேண்டும்.

ஆ. சாத்தியம் எதிர்மறையாகும்.

இ. பூர்வசாதனம் பொதுவாகும்.

### 16. மூன்றும் நிலைச் சிறப்பு விதிகள்.

அ. உத்தரசாதனம் உடன்பாடாதல்வேண்டும்.

ஆ. சாத்தியம் சிறப்பாகும்.

### 17. நிலைகளைப் பற்றிய குறிப்புரை.

முதனிலைத் துறைகள் மூலமாகப் பிரமாணங்களை மொழிகிறோம். முதனிலையில் மாத்திரம் உடன்பாட்டுத் தாட்டாந்தம் ஒன்றை நிரூபித்துக் காட்டலாம். முதனிலையில் மாத்திரம் மேற்கோள் ஒன்றை பூருவசாதனமாக எடுத்துக் காட்டி அம் மேற்கோளுடன் உத்தரசாதனமாகும் ஓர் ஏதுவை உற்று நோக்கி வழியளவையின் சிறப்பியல்பைக் காட்டலாம். யூகிக்கும்போது ஒவ்வொரு காட்சியையும் முதனிலைத் துறையாகக் கருதுகிறோம்.

இந்த அடையாளம் இன்ன இன்ன பண்புடையது.
இன்னஇன்ன பண்புடையது மக்களது அடி.
ஆகையால் இந்த அடையாளம் மக்களது அடி

ஆராய்ச்சி நூல்களின் பிரமாணங்களை எல்லாம் முதனிலையிலேயே நிரூபித்துக் காட்டுகிறோம். இயற்கை விதிகள் எல்லாம் முதனிலை முதல்துறையே. (உஉஉ) யாதி யாது பூதப்பொருள் அது அது அனல்சாரணமாவிரியும். பளிங்கு ஒரு பூதப் பொருள். பளிங்கு விரியுந்தன்மையுடையது. திறனாயும் நூல்களின் பிரமாணங்களும் முதனிலைத் துறையாலே நிரூபிக்கப்படும்.

மோகங்கள் தெரிந்து தெளிந்து நிச்சயிக்கப்பட்ட செயல்களல்ல. அறங்கள் தெரிந்து தெளிந்து நிச்சயிக்கப்பட்டசெயல்கள். அறங்கள் மோகங்களல்ல. (யவனமஞ்சரி) வைத்தியநூல்

பொருணூல் முதலியவற்றின் பிரமாணங்களும் முதனிலையால் இலகுவாய் மொழியலாம்.

ஒருபொருளின் சொரூபத்தை அறிதற்கு முதல் அத்தியாவசியமாகும்; ஏனைய நிலைத்துறைகளால் சொரூபத்தை அறியவியலாது. இரண்டாம் மூன்றும் நிலைகள் உடன்பாட்டுப்பொது தாட்டாந்தம் ஒன்றை நிரூபித்துக் காட்டா.

இரண்டாம் நிலைத்துறைகள் எதிர்மறைக் காட்சிகளையே நிலை நிறுத்தும்; மூன்றும் நிலைத்துறைகள் சிறப்புத் தாட்டாந்களை நிலை நாட்டுதற்குப் பயன்படுமாதலின் பயிர்நூல் விலங்கியல் நூல்களில் வகுத்தல் முறைகளில் உபயோகமாகும் மூன்றும் நிலையில் மத்தியபதம் இருசாதனத்திலும் ஈந்திருந்து சாத்தியமொன்றை மொழியுமாயின் அத்துறை வன்மைத்துறையெனப்படும். உஉஊ என்னுமதத் துறையில் ஊசாத்தியத்தைப் பெறுதற்கு உத்தரசாதம் சிறப்பாகவிருந்தால் போதும்.

உ திமிங்கிலம் கருப்பையிற் தோன்றும் விலங்கு

உ திமிங்கிலம் நீர்ப்பிராணி

சில நீர்ப்பிராணி கருப்பையிற்றோன்றும் பிராணி

மத்தியபதம் இருசாதனத்தும் ஈந்திருத்தல் அருமை சிறப்புப் பதங்களை உடைய தனித்தாட்டாந்தங்களைத் துறைகளில் உபயோகிக்கும்போது மூன்றும்நிலை சிறப்புடையதாகும். கீத்தே (Goethe) ஒரு சர்மானிய தேசத்துப் புலவன். கீத்தே ஒரு இயற்கை ஆராய்ச்சி வல்லுநன். சிலபுலவா ஆராய்ச்சி வல்லுநர். சோடியம் நீரில் மிதக்கும். சோடியம் ஒருலோகம் சில லோகம் நீரில் மிதக்கும். மூன்றும் நிலையில் இயற்கையாராய்ச்சித் துணிபுகளை உணர்த்தலாம். நான்காம் நிலை முறை பிறழ்ந்த நிலை. எல்லா முல்லைகளும் பயிர்கள். எல்லாப் பயிர்களும் வாயுவை உண்பன. வாயுவை உண்பன முல்லைகள்.

(தொடரும்.)



# பிரம்பில் என்னும் வைப்புத் தலம்.

ஸ்ரீ ந. வை. சுந்தரேச வாண்டையார், அவர்கள் ஆசிரியர், திருவையாறு.

சோழநாட்டுத் தேவார வைப்புத் தலங்களுள் பிரம்பில் என்பதும் ஒன்றும். திருநாவுக்கரசர் அருளிய க்ஷேத்திரத் திருத்தாண்டகம் ஆறும் திருப்பாட்டில்* இத்தலம் வைத்துப் பாடப்பெற்றுள்ளது. இஃது யாண்டுள்ளதென ஆராய்வாம்.

இப்பெயருள்ள ஊர்கள் தஞ்சாவூர் சில்லா தஞ்சாவூர் தாலூகாவில் இரண்டுள்ளன. ஒன்று குடமுருட்டி ஆற்றின் தென்கரையிலுள்ள திருவாலம்பொழிற்குத் தென்மேற்கே இரண்டு கல் தூரத்திலுள்ள வேளாண் பிரம்பூரும், மற்றொன்று வேளாண் பிரம்பூருக்குத் தெற்கே மூன்று கல் தூரத்தில் வின்னாற்றின் தென்கரையிலுள்ள கள்ளப் பிரம்பூருமாகும்.

வேளாண் பிரம்பூர் சிவன் கோயிலில் கர்ப்ப இல்லத்தின் (விமானத்தின்) தென்புறத்தில் ஒரே ஒரு கல்வெட்டிருக்கின்றது. அது சோழ மன்னனாகிய இரண்டாவது அல்லது மூன்றாவது இராசராசனது எனத் தோன்றுகிறது. அதன்கண் "பாண்டிய குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பிரம்பில் உடைய திருவேகம்ப முடையான் கோயில்" என்று குறிக்கப் பெற்றுளது.

*மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர் வக்கரை மந்தாரம் வாரணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக்குடி விளமர் விராடபுரம் வேட்கள
த்தும்
பெண்ணை யருட்டுறை தண்பெண் ணாகடம் பிரம்பில் பெரும்புலியூர்
பெருவே ளூருங்
கண்ணை களர்க்காறை கழிப்பாலையுங் கயிலாச நாதனையே காண லாமே.

இனி, கள்ளப் பிரம்பூர் சிவன் கோயிலில் ஆறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டு மூன்றாங் குலோத்துங்க மன்னவனதும், ஏனையவை அவன் காலத்துக்கு முன்பு வாழ்ந்த முதற்குலோத்துங்கனதும், அவனது பின்னோரனவுமாம்.

இம்மூன்றாங் குலோத்துங்கன் கல்வெட்டு ஒன்றின் மாத்திரம் அவ்வூர்க்கோயில் 'பிரம்பிற் சீகயிலாயம்' என்று குறிக்கப் பெற்றுள்ளது. இக்கல்வெட்டுக்கு முற்பட்டனவாகிய ஏனையவற்றுள் "பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துப் பிர்மதேயம் ஸ்ரீ ராஜசுந்தர சதுர்ப்பேதி மங்கலத்து உடையார் ஸ்ரீகயிலாசமான குலோத்துங்க சோழ ஈஸ்வரமுடையார் கோயில்" என்றே குறிக்கப் பெற்றுள்ளது. எனவே மூன்றாங் குலோத்துங்கன் காலத்துக்கு முன்னர் அவ்வூருக்குப் பிரம்பில் என்ற பெயர் எய்திலாமையும், ஸ்ரீ ராஜசுந்தர சதுர்ப்பேதி மங்கலம் என்ற பெயரே வழங்கி வந்தமையும் போதரும்.

ஆனால் வேளாண் பிரம்பூர் நம் சோழ மண்டலத்தை கி.பி. 985 முதல் கி. பி. 1012 வரையில் ஆண்ட முதலாம் இராசராச மன்னனது காலத்திலேயே பிரம்பில் என்ற பெயரால் வழங்கி வருதலால் அதுவே, திருநாவுக்கரசர் காலத்தும் அப்பெயரால் வழங்கி வந்த பழைய ஊராக இருக்கலாம் என்றும், அதுவே முற்கூறிய வைப்புத்தலமாமென்றும் தோன்றுகிறது. இவ்வாராய்ச்சிக்குப் பயன்படக்கூடிய இவ்விருவூர்களின் கல்வெட்டுக்களை வேண்டிய அளவு கீழே குறிப்பிடுகின்றேன். இவைகள் இதுகாறும் தென் இந்திய கல்வெட்டுப் புத்தகங்களில் வெளிவாராதனவாம்.

## வேளாண் பிரம்பூர் சிவன்கோயில் கல்வெட்டு.

*இடம்—விமானத்தின் தென்புறம்*

*அரசன்—இரண்டாம் அல்லது மூன்றாம் இராசராசன்*

*காலம்—இராச்சிய ஆண்டின் பதினாறாவது ஆண்டு.*

(1) திரிபுவன சக்கரவ (2) ர்த்திகள் (3) சுவஸ்திஸ்ரீ இராஜரா (4) ஜ தேவற்கு யாண்டு மக (5) ஆவது தனுநாயிற்று பூர் (6) வ பட்சத்து ஏகாதசியு (7) ம் செவ்வாய்க்கிழமை (8) யும் பெற்ற அவிட்டத்து (9) நாள் அரையன் திருப்பூவ (10) ........ ...............(11)....................பாண்டிய குலாசினீ (12) வளநாட்டு ஆற்காட்டு கூற்றத்(13) துப் பிரம்பில் உடையதிரு (14) வேகம்ப முடையான் கோயி (15) ல் ஆதிசண்டேஸ்வர தேவற்கு (16)

நான் இற்றைநாளால் தாரம (17) ஆகக் கொடுத்த நிலமாவது எ (18) ன் காணியான..............என்று தொடர்கிறது.

## கள்ளப் பிரம்பூர் சிவன் கோயில் கல்வெட்டு.

இடம்—விமானத்தின் மேற்குப்பக்கம்

அரசன்—முதற் குலோத்துங்கன்

காலம்—இராச்சிய ஆண்டில் 49-வது ஆண்டு.

பூமாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ..............உல குடையாளொடு வீற்றிருந்தருளிய கோவிராஜகேசரிபன்மரான உடையார் திரிபுவன சக்கரவர்த்திகள் முதற்குலோத்துங்க சோழதேவற்கு யாண்டு நாற்பத்தொன்பதாவது ராஜசுந்தரச் சதுர்ப்பேதி மங்கலத்து ஸ்ரீகயிலநாதமாந ஸ்ரீகுலோத்துங்க சோழீஸ்வரம் உடைய மகாதேவர் திருமடை வளாகத்து இருக் கும்..............என்று தொடர்கிறது.

[விரிவஞ்சி இக்கல்வெட்டிலுள்ள மெய்க்கீர்த்தியின் எஞ்சிய பாகம் நீக்கலாயிற்று.]

இடம்—கோபுரத்தின் தென்புறம்

அரசன்—மூன்றாங் குலோத்துங்கன்

காலம்—இராச்சிய ஆண்டின் இருபத்து மூன்றுவது ஆண்டு.

(1) சுவஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ம (2) துரையும் ஈழமும் பாண்டியன் முடித்தலை (3) யுங் கொண்டருளிய குலோத் துங்க சோழ தேவர்க்கு (4) யாண்டு இருபத்து மூன்றுவது மீனஞாயிற்று அபரபக்ஷத்து (5)..................திங்கட்கிழமையும் பெற்றவாரத்து பாண்டிகுலா (6) சினிவளநாட்டு தஞ்சாவூர் கூற் றத்து பிர்மதேயம் ஸ்ரீராஜசுந்தர சது (7) ர்ப்பேதி மங்கல உடையார் ஸ்ரீ கயிலாசமான குலோத்துங்க சோழ (8) ஈஸ்வர முடையார் கோயில் ஆதி சண்டேஸ்வர தேவர்க்கு (9) இவ்வூர் விருதராச பயங்கரச்சேரி ஆம்பலூர் ஆண்டான்..............யான ஆதிவராகப்பட்டனை..............குடுத்த நிலமாவது.............. என்று தொடர்கிறது.

இடம்—அர்த்தமண்டபத்தின் தென்புறம்

அரசன்—III குலோத்துங்கன்

காலம்—இராச்சிய ஆண்டின் பன்னிரண்டாவது ஆண்டு.

சுவஸ்திஸ்ரீ வெண்ணக்கமுமி ராஜாக்கள் தம்பி...............விளங் கிடக் கவித்தருளி வீரா...............தமிழ்ப் பாண்டியன் முடித் தலை கொண்டவன் தனபதி கொண்ட சோழற்குப் பன்னிரண் டாவதின் சென்னிமிசைத்த...............திஞர்க் கங்கணுத் தரித் தார்க்குப் பிரம்பிற் சீகயிலாயத்து...............என்றுள்ளது.

குறிப்பு:—இது செய்யுள் வடிவமாய் மிகவும் சிதைந்துபோன ஒரு கல் வெட்டு, இதில்தான் இக் கள்ளப் பிரம்பூருக்குப் பிரம்பில் என்ற பெயர் உண்டென்று புலப்படுகிறது.

இடம்—அர்த்தமண்டபத்தின் வடக்குப் பக்கம்

அரசன்—மூன்றும் இராசராசன்

காலம்—இராச்சிய ஆண்டு இருபத்தொன்பதாவது.

(1) சுவஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் இராஜராஜதேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது பாண்டிய குலாசிநி வளநாட்டு தஞ்சாவூர்க் கூற்றத் (2) து பிர்மதேயம் ராஜசுந்தரச் சதுர்ப் பேதிமங்கலத்து...............என்று தொடர்கிறது.

ஆர்க்காட்டுக் கூற்றத்தில் பிரம்பில் உண்டென்று உணர்த் தும் முதலாம் இராசராச மன்னனது தஞ்சை இராசராசேச் சரத்தில் குறிக்கப்பெற்ற கல்வெட்டு. (South Indian inscription Vol. II Part IV. page 438 line 6.)

பாண்டிய குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டு கூற்றத்துப் பிரம்பில் இருக்கும் இடையன் [நீ] ங்கா நிலை கூனனும் தஞ்சா வூர்ப் புறம்படி ராஜ வித்யாதரப் பெருந்தெருவில் இருக்கும் இடையன் கணிச்சன் திருமலையும் ஆடவல்லானுல் நிசதம் அளக்கக் கடவ நெய் உழக்கு.

இக்கல்வெட்டுக்களைப்பற்றிய சில குறிப்புக்கள்

**பாண்டிய குலாசனி வளநாடு:—**

முதலாம் இராசராச மன்னனது பதினெட்டாவது இராச் சிய ஆண்டில் நம் சோழமண்டலம் ஒன்பது வளநாடுகளாகப்

பிரிக்கப்பட்டிருந்தது. அவைகளுள் பாண்டிய குலாசனி வளநாடு என்பது ஒன்றாகும். இம் முதலாம் இராசராச மன்னன் காலம் முதல், அதிராசராசன் காலம் முடிய இதற்கு இப்பெயரே வழங்கி வந்தது. இவனுக்குப் பின்னர் பட்டம் எய்திய முதலாங் குலோத்துங்கன் இவ்வள நாடுகளின் பெயர்களைமாற்றி, அவைகளுக்குத் தன் இயற்பெயரையும் விருதுப் பெயர்களையும் வைத்துள்ளான். அவ்வாறு வைத்துள்ள போதிலும், இப் பாண்டிய குலாசனி வளநாட்டின் பெயரை மாற்றிவிடவில்லை. மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சியின் முற்பகுதிவரை இதற்கு இப்பெயரே வழங்கி வந்துளது. பின்னர் இம்மன்னன் தன் ஆட்சியின் பிற்பகுதியில் இவ்வளநாட்டின் பெயரைமாற்றி அதற்குப் பாண்டியகுலபதி வளநாடு என்று பெயர் வைத்துள்ளான்.

**ஆர்க்காட்டுக் கூற்றம்:—**பாண்டிய குலாசனி வளநாடு பல கூற்றங்களாகப் பகுக்கப்பட்டிருந்தது. அவைகளுள் ஆர்க்காட்டுக் கூற்றம் என்பது ஒன்றாகும். இதுகாவிரிக்கு வடக்கு, வெண்ணாற்றிற்குத் தெற்கு, திருவையாற்றிலிருந்து தஞ்சாவூருக்குப் போகும் பெருவழிக்குமேற்கு, திருக்காட்டுப்பள்ளி, விண்ணமங்கலம் இவைகளுக்குக் கிழக்கு, ஆகிய இந்நாற்பாலெல்லைக்குட்பட்டு ஆர்க்காட்டைத் தலைமையாகக்கொண்ட நிலப்பரப்பாகும். (இவ்வார்க்காடு நிலைபெற்றுள்ள இடம், இதன் தொன்மை இவைகளைப்பற்றி திருப்பூந்துருத்தி சிவன் கோயில் கல்வெட்டுக்கள் என்ற தலைப்பின் கீழ் தமிழ்ப்பொழில் யான் எழுதிய கட்டுரையிற் காண்க.) ஆயிரத்தளி, ஒதவேலி (ஒம்பத்துவேலி) பெருமங்கலம், பிரம்பில், புதுக்குடி, சந்திரலேகை (செந்தலை) பேர்ஆர்க்காடு, பேர்அரசூர், திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, ஆகிய இவ்வூர்கள் இக்கூற்றத்திற்குட்பட்டிருந்தனவென்று முதலாம் இராசராச மன்னனது இராசராசேச்சுரக் கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கின்றன.

**தஞ்சாவூர்க் கூற்றம்:—** இதுவும் பாண்டிய குலாசனி வளநாட்டின் பல கூற்றங்களில் ஒன்றாம். இஃது ஆர்க்காட்டுக் கூற்

றத்திற்குத் தெற்கு, கஞ்சாவூர், கருந்திட்டைக்குடி, இவைகளுக்கு மேற்கு, விண்ணமங்கலம், பூதலூர், இவைகளுக்குக் கிழக்கு ஆகிய இந்நிலபரப்பை யுடையதாய், தஞ்சாவூரைத் தலைமையாகக் கொண்டுள்ளதாகும். தஞ்சாவூர், தஞ்சாவூர் பற்று, கருந்திட்டைக்குடி ஆகிய இவ்வூர்கள் மன்னனது இக்கூற்றத்திற்குட்பட்டிருந்தனவாக முதலாம் இராசராச இராசராசேச்சரக் கல்வெட்டுக்களால் அறியலாகும்.

---

## இந்தியாவும் சீனுவும்

---

T. S. நடராசன், வாணுதுறை, கும்பகோணம்.

---

[சீனப்பேராசிரியர் டான்-யுன்-ஷன் என்பார் சாந்திநிகேதனத்தில் நிகழ்த்திய ஆங்கிலச் சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு.]

விரைந்து செல்லும் அம்புபோலக் காலம் கழிந்து செல்லா நிற்கின்றது. இந்தியாவை விட்டு எனது தாய் நாட்டிற்குச் சென்று மூன்று ஆண்டுகளாகின்றன. ஆனுல், இடைப்பட்ட இந்த நீண்ட காலத்தில் ஒரு நாளாயினும் இந்தியாவை நினையாதிருந்தறியேன்; அதிலும், இந்த அழகிய, எனது அன்பிற்குரிய சாந்தி நிகேதனத்திலுள்ள 'விசுவபாரதி' ஒரு இமைப்பொழுதும் என் உள்ளத்தைவிட்டு நீங்கவில்லை. தன் கூட்டினை விட்டு நீங்கும் ஒரு தேனீயைப் போன்றே யான் சாந்திநிகேதனத்தை நீங்கிச் சென்றேன். யான் சாந்திநிகேதனத்தை எனது பிறந்த ஊரைப்போல நேசிக்கிறேன்; எனது தாய் நாட்டைப்போன்று இந்திய நாட்டைக் காதலிக்கிறேன். இம்முறை யான் எனது பிறந்த ஊரினையும் தாய் நாட்டினையும் நீங்கிச் சாந்திநிகேதனத்திற்கு இரண்டாம் முறையாக வந்ததானது, யான் மூன்று ஆண்டுகட்கு முன்னர் இந்தியாவையும் சாந்திநிகேதனத்தையும் நீங்கி என் தாய் நாட்டிற்கும் என் பிறந்த ஊருக்கும் திரும்பியது போன்றே இருக்கின்றது. இது யான்

முழுமனதோடு கூறுவதாகும். ஆதலின், இங்கு இருப்பதில் எனக்குள்ள மகிழ்ச்சி உண்மையிலேயே அளவிட்டுரைக்குந் தரத்ததன்று.

இந்தியா, சீனு ஆகிய இருநாடுகளும் இயற்கையிலேயே பிரிக்க முடியாத உடன் பிறப்பு நாடுகளாகும். அவைகளிடையேயுள்ள ஒற்றுமைகளையும் உறவுகளையும் அறிவிப்பன, சிறந்தனவாயும் எண்ணற்றவையாயும் இருக்கின்றன. உலகிலுள்ள எல்லா நாடுகளின் நிலமேற் பரப்பு விவரத்தினையும் (Geography) வரலாற்றினையும் ஆராய்ந்துபார்க்கின், நம் இரு நாடுகளோடு ஒப்பிடக் கூடிய வேறு இருநாடுகளைக் காணல் இயலாது. எந்த விதங்களாலும், எந்த முறைகளாலும் ஆராய்ந்து அறுதியிட்டுப் பார்க்கினும் இவ்வுண்மை அறியலாகும்.

நம் இரு நாடுகளும், அழகும் பெருமையும் வாய்ந்த ஆசியாவில் தென்மேற்கில் இந்தியாவும் வடகிழக்கில் சீனுவுமாக இருவேறு புறங்களில் விரிந்து அமைந்துள்ளவாயினும் ஒரு வண்டியின் இரு உருளைகளைப் போலவும், ஒரு பறவையின் இரண்டு இறக்கைகளைப் போலவும், ஒரு மனிதனது இருகைகள், இருகால்கள், இருகாதுகள் அல்லது இருகண்களைப் போலவும் இணைக்கப்பட்டுள்ளன. மிக வுயர்ந்ததும், பெருமையும் பேரழகும் பெருஞ்சிறப்பும் வாய்ந்ததுமான இமயமலை அவைகளுடைய முதுகெலும்பு, தோள்கள் அல்லது கழுத்துப் போன்றிருக்கிறது. அவைகளுடைய எல்லைகள் அறுதியிடப்பட்டுள்ள போதிலும் இயற்கை யமைப்பு ஒரே விதமாயுள்ளது.

ஒரு சீனப் பழமொழி 'எண்ணற்ற மக்களுள்ள பரந்த நாட்டை'ப் பற்றிக் கூறுகின்றது. இந்தியாவும் சீனுவும் உண்மையிலேயே இவ்விருபேறுகளையும் பெற்றுள்ளன. அன்றியும், நம் இரு நாடுகளுடைய மண் மிகுந்த வளமுள்ளதாயும், வனப்பு வாய்ந்ததாயும், மிகுந்த விளைவுள்ளதாயும் இருக்கின்றது; மக்கள் வாய்மையும் நேர்மையுமுடையோர்களாயும் சிக்கனமும் உழைப்புமுடையவர்களாயும் இருக்கின்றனர். நமது விளைபொருள்களும் மற்றைய பொருள்களும் நமக்குப்போதியனவாயிருப்பதோடு மற்ற நாடுகளுக்கும் பயன்படுகின்றன.

நமது நாகரிகங்கள் நம்மால் நினைத்தற்கரிய மிகப் பழைய காலத்தில், அதாவது, பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தொடங்கின. சீனர்களது மிகப் பழைய வரலாற்றுக் குறிப்புக்களில், ஹுவாங்-டி என்னும் மன்னரால் கி. மு. 2697 ஆம் ஆண்டில் சீன ஐக்கியப் பேரரசு நிறுவப்பட்டதென்று கூறப்பட்டுள்ளது. ஆகவே, கி. பி. 1934 ஆகிய இவ்வாண்டு சீனர்களது பழைய வரலாற்றுக் கணக்கின்படி 4631-ஆம் ஆண்டாகும். வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட காலமானது மிக நீண்டதாயும் நிகழ்ச்சிகள் நிறைந்ததாயும் இருந்திருக்கவேண்டும். சில பழைய நூற்கள் ஹுவாங்-டி மன்னன் ஆட்சிக்குப் பதினெண்ணாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சீன நாகரிகம் தொடங்கியதென்று கூறுகின்றன; வேறு சில நூற்கள் அம்மன்னனுக்கு ஐம்பதினாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சீன நாகரிகத் தோற்றம் உண்டாயிற்றென்று மொழிகின்றன. இக்குறிப்புக்கள் உண்மையானவையாயிருந்தாலும் இருக்கலாம்; குறிக்கப்பட்டுள்ள செய்திகள் நம்பக்கூடியனவாயில்லை. ஹுவாங்டி மன்னனது ஆட்சிக்குப் பின்னர்தான் வெவ்வேறு காலங்களில் நடைபெற்ற முறைகளும், நிகழ்ச்சிகளும் சிறிதும் ஐயமின்றி ஆராய்ந்து அறியக்கூடியனவாயுள்ளன. இந்தியாவின் மிகப் பழைய செய்திகளை யறிவிக்கக் கூடிய கருவிகள் மிகக் குறைந்திருந்தபோதிலும் புத்த சமயத்தைப்பற்றிய சீன நூற்களிலுள்ள செய்திகளால் பழைய இந்தியா பெரும்பாலும் பழைய சீனுவையே ஒத்திருந்ததென்பது அறியப்படுகிறது. இக்காலத்து அறிஞர்கள் தங்கள் ஆராய்ச்சியின் பயனாக வேதகாலம் கி. மு. 3000 க்கும் கி. மு. 2000 க்கும் இடைப்பட்டதாகுமென்று நிறுவியுள்ளனர்; ஆதலின் இந்திய நாகரிகத்தின் பழமையைப்பற்றி யாரும் ஐயுறமுடியாது. நாகரிகத்தின் முதலாவதான சிறப்பு தமது மொழிக்கு எழுத்துக்களைக் கண்டுபிடித்தலே யாதலின் ஒரு நாட்டின் நாகரிக வரலாற்றை அறிவதற்கு அதன்மொழி முதன் முதலாக எழுதப்பட்ட காலத்தைக் கண்டுபிடிப்பது இன்றியமையாதது. சீனமொழி ஹுவாங்-டியின் காலத்திலேயே நல்ல எழுத்து முறையை யுடையதாயிருந்தமையின், அதற்கு நீண்ட காலத்திற்கு முன்னரே எழுதத்

தொடங்கப் பெற்றுப் பல சீர்திருத்தங்களோடு வளர்ச்சியுற்றிருக்கவேண்டும். இதனை அறிவுறுத்தும் சீன இலக்கியங்கள் மிகப்பலவாதலின் எல்லாமேற்கோள்களையும் இங்கே கூறுதல் இயலாததாகும். டாங் மரபினரின் ஆட்சிக்காலத்திருந்த பேர் பெற்ற துறவியாகிய டாவோஷி என்பார் இயற்றிய 'புத்த உலகத்தின் முத்துக்கள்' என்றநூலில் இந்தியமொழிகளின் எழுத்து முறையைப்பற்றிய குறிப்பு காணப்படுகிறது. "பழைய காலங்களில் எழுதும் முறையைக் கண்டுபிடித்தவர் மூவர் இருந்தனர்; முதலாமவராகிய பிரம்மாவின் முறை இடது பக்கத்திலிருந்து வலது பக்கத்திற்கு எழுதுவதாகும்; இரண்டாமவராகிய காருவின் முறை வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்திற்கு எழுதுவதாகும்; மூன்றுமவராகிய ட்ஸாங்-சியாவின் முறை மேலிருந்து கீழே எழுதுவதாகும்." இங்கே குறித்துள்ள பிரம்மா வடமொழி எழுத்துகளைக் கண்டுபிடித்தவர்; கரோஸ்தி எழுத்துக்களைக் கண்டு பிடித்தவர் காரு ஆவார்; சீன வார்த்தைகளை உண்டு பண்ணியவராகிய ட்ஸாங்-சியா என்பார் ஹுவாங்-டி மன்னனது அதிகாரிகளுள் ஒருவர். உண்மையில், ட்ஸாங்-சியா சின எழுத்துக்களைக் கண்டுபிடித்தவரல்லர்; சீன மொழியில் அப்போது எழுதப்பட்டிருந்தவைகளை ஒன்று சேர்த்து முறைப்படுத்தியதே அவர் செய்ததாகும். இன்னும் மேற்கூறிய நூலில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. 'பிரமா மூத்தவர்; காரு அடுத்தவர்; இவ்விருவரும் டியேஞ்சு (இந்தியா)வில் இருந்தனர்; இளையவராகிய ட்ஸாங்-சியா நடுவிராச்சியத்தில் (சீனு) இருந்து வந்தனர்.'

ஆகவே, இந்திய மொழியின் எழுத்து முறை அசோகருக்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்பாதல், சீன எழுத்து வழக்கு முறையை வரையறுத்த ட்ஸாங்-சியாவின் காலத்திலாதல் ஏற்பட்டிருக்க வேண்டுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. இந்தியாவிலுள்ள பழைய வரலாற்று ஆராய்ச்சியாளர் அண்மையில் பல அரிய உண்மைகளைக் கண்டறிந்துள்ளனராதலின், யான் இதுபோது கூறியன பல புதிய சான்றுகளால் வலியுறுத்தப்பெறும் என்று நம்புகிறேன். எனவே இந்திய சீன நாகரிகங்கள்

தொடங்கிய காலங்களும் அக்கால நிகழ்ச்சிகளும் தம்முட் பெரிதும் ஒற்றுமைப்படுவது விளக்கமாகும்.

உலகத்தில் மிகப்பழைய நாகரிகம் வாய்ந்த நாடுகள் நான்காகும்; அவை ஈஜிப்ட், பாபிலோனியா, இந்தியா, சீனு என்பன. ஆனல் ஈஜிப்டும் பாபிலோனியாவும் இதுபோது வரலாற்றில் குறிப்பிடப்படுவதான தன்மையை மாத்திரம் பெற்றுள்ளன. அவற்றின் பழங்குடிகள் தாழ்ந்த நிலையை எய்தியுள்ளதோடு அவற்றின் நாகரிகங்களும் காலமென்னும் இருளில் மறைந்து போயின; அவற்றின் நிலங்களும் தொன்மை ஆராய்ச்சியாளர் தம்மைத்தோண்டி ஆராய்வதற்கும் அறிஞர்களும் கவிஞர்களும் தம்மைப்பாடி வருந்துவதற்கும் நிலைக்களங்களாக இருக்கின்றன. பிற்காலத்தே தோன்றிய பலநாடுகள் தோன்றுவதும் மறைவதும் உயர்வதும் தாழ்வதுமாக இருக்கின்றன. இந்தியாவும் சீனுவுமாகிய நம் இருநாடுகள் தாம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றி அந்நாள் தொடங்கி இந்நாள் வரை அழியாச் சிறப்போடும் பெருமையோடும் விளங்கி வருகின்றன. நமது நாடுகள், பிறநாட்டுப் படையெழுச்சிகளால் அல்லற்பட்டுச் சிறுமையுற்று அரசுரிமையை இழந்தகாலத்தும் நமது ஒப்பற்ற நீண்டகால அனுபவ அறிவு, படிப்பினைகள், முறைகள், வழக்கவொழுக்கங்களாகிய இவற்றால் கொடியவர்களும் நாகரிகமற்றவர்களுமான படையெடுப்போர்களை நம்மையொத்தவர்களாகச் செய்து கல்வியையும் நாகரிகத்தையும்புகட்டி வந்துள்ளமையால் பல்வேறு நாடுகள் அழிந்த பின்னும் எந்நாளும் அழியாது நிலைபெற்று விளங்குவனவாயுள்ளன. உலக வரலாறுகளில் இந்தியாவும் சீனுவுமே இத்தகைய தனித்த இயல்பை அடைந்துள்ளன.

இனி, சீனநாட்டிற்குரிய அடிப்படையான குணங்கள் ஒப்புரவும் பணிவுடைமையும் ஆகும்; அவை ''நிறைந்த சீலம்' என்று பொருள்படும் (Jen) என்னும் வார்த்தையினுல் குறிக்கப்பெறும். இந்திய நாட்டிற்குரிய இன்றியமையாத பண்புகள் இரக்கமும் அமைதியுமாம்; அவை 'அஹிம்சை' என்னும் மொழியால் குறிக்கப்படும். இந்த நாற்குணங்களும் வெவ்வேறு

தன்மையவாயினும் பொதுவாக நோக்கின் அடிப்படையான ஒரே கொள்கையில் அடங்குவனவாகும். சீனர்களது வாழ்க்கை 'நன்னெறி'யைப் பற்றுக்கோடாகக் கொண்டுள்ளது; ஆதலின் உலகத்தைப்பற்றிய அவர்களது கொள்கை அமைதியாகும். இந்தியர் தமது வாழ்க்கையில் ஐம்புல ஒடுக்கத்தை வற்புறுத்து கின்றார்கள்; உலகத்தைப்பற்றிய அவர்களது கொள்கை சமத் துவமாகும். சீனர்கள் தம் முன்னோரை வழிபாடு செய்பவர்க ளாயும் உறவினர்களிடத்தில் பேரன்புடையோராயுமிருத்தலின் வழிவழியாகப் பெரிய குடும்பமாக வசிக்கும் முறை எப்போ தும் நிலைபெற்றிருக்கிறது. இந்தியரும் இத்தன்மையரேயாவர். இந்தியர்கள் தாம் பிறந்த நாட்டில் வசிப்பதையே விரும்புவர்க ளாயும் தம் ஆசிரியர்களிடத்தும் முதியோர்களிடத்தும் மரி யாதையுடையவர்களாயும் இருக்கின்றனர். சீனர்களும் இத்த கைய ஒழுக்கமுடையவரே. பொது வாழ்க்கையில் சீனர்கள் நியாயத்தையும் நடுவுநிலைமையையும் வற்புறுத்துகின்றனர். இந்தியர்களும் இவ்வண்ணமே ஒழுகுகின்றார்கள். இந்தியர்கள், நிறை, கற்பு, அடக்கமுடைமை ஆகிய குணங்களை மிகப் போற் றுகின்றார்கள். சீனர்களும் அத்தகையோரே. இம்மாதிரியான ஒழுக்க முறைகளிலேயன்றிப் பல்வேறு காலங்களிலிருந்த நமது சான்றோர்களது அறவுரைகளும் ஒரேவிதமானவைகளாக இருக்கின்றன. கான்பூஸியஸ் என்பார் ஐந்து அறவுரைகளை விதித்தனர். அவைகள் முறையே உபகாரம், நடுவுநிலைமை, நியாயம், அறிவு, உண்மையுடைமை என்பவற்றை உரைக்கின் றன. வர்த்தமானஜிநரும் புத்தர்பெருமானும் 'பஞ்சசீலாதி' எனப்படும் துறவிகளுக்குரிய ஐந்து அறவுரைகளை மக்களுக்கு அறிவுறுத்தினர். ஜினருடைய விதிகள் முறையே உண்மை புரைத்தல், தூய எளியவாழ்க்கை, கொல்லாமை, கள்ளாமை, தூய ஒழுக்கம் என்பனவாம். புத்தருடைய அறவுரைகள் முறையே கொல்லாமை, கள்ளாமை, பிறர்மனைவிழையாமை, பொய்யாமை, கள்ளுண்ணாமை ஆகிய ஐந்துமாம். இவையன்றி, சீனர்கள் பொதுவாக அறிவுடைமை, ஈகை, அஞ்சாமை ஆகிய இம்மூன்றையும் உலகத்திற்குப் பொதுவான உயர்ந்த ஒழுக்கங் களாக மதிக்கிறார்கள்; இந்தியர்கள், துறவு, யோகம், ஞானம்

(சீலம், சமாதி, பிரக்ஞை) ஆகியவைகளை மனித வாழ்க்கையின் மணிவிளக்குகளென்று கருதுகின்றனர். இவ்வாருகிய ஒழுக்க முறைகள் மிகவிரிவாகக் கிடக்கின்றமையின் எல்லாவற்றையும் கூறுதல் எளிதன்று.

நமது நாடுகளின் வாழ்க்கைமுறைகளிலுள்ள ஒற்றுமை இவ்வாருகும். இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே நம் இருநாடுகளின் நாகரிகங்களும் கலைகளும் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குள் புகுந்து கலக்கத் தொடங்கின. புத்தரது வரலாற்றைக் கூறும் 'புத்தசரிதம்' என்னும் நூலில், புத்தர் ஒருகால் விசுவாமித்ர ஆசாரியர் என்பவரிடத்தில் பல நூல்களைக் கற்றனரென்றும் அவற்றுள் சீனுவைப்பற்றிய நூலும் ஒன்று என்றும் கூறப்பட்டுள்ளன. 'இரத்தின கூதம்' என்னும் புத்த சமயநூலில் 'வு', 'ஷா', 'சின்' என்பனபோன்ற சீனச் சிற்றரசுகளின் பெயர்கள் கேட்கப்படுகின்றன. சீன நூற்களிலே காணப்படும் இத்தகைய குறிப்புக்கள் மிகப்பலவாகும். இப்போது வலிமையெய்தியுள்ள நாடுகளில் பல, நாகரிகமே இன்னதென்று அறியாத காலத்தும், அவைகளிலிருந்த பழங்குடிகள் பண்படுத்தப்பெருத நிலத்தில் விலங்குகளைப்போன்று வாழ்ந்த காலத்தும், நம் இருநாடுகளாகிய இந்தியாவும் சீனுவும் சிறந்த நாகரிகங்களையும் மேன்மைகளையும் எய்தியனவாய், இக்காலத்து அமெரிக்க ஐரோப்பிய வல்லரசுகள் உண்மையான வாழ்க்கை முறையில் அடைந்துள்ளனவற்றைவிட உயர்ந்த செல்வச் சிறப்பையும் மேலான வாழ்க்கையையும் பெற்றிருந்தன. இக்காலத்து மேனுட்டு நாகரிகத்திற்கு அடிப்படையாயுள்ளனவும், மேனுட்டார் பெருமை கொள்வதற்கும் மற்றையோர் அவர்பால் மதிப்பும் அழுக்காறும் கொள்வதற்கும் கருவியாயுள்ளனவும் அறிவுநூற்களே (Sciences) யாகும். இந்தியாவும் சீனுவும் மிகப் பழைய காலத்திலேயே இந்த அறிவுநூற்கள் சிலவற்றின் பொதுவியல்புகளை உணர்ந்திருந்தன. சீனமொழியில் 'வூ-மின்' என்று சொல்லப்படும் 'பஞ்சவித்தை'களை மிகப்பழையகாலத்திலேயே இந்தியர் அறிந்

திருந்தனர். 'பஞ்சவித்தை'களாவன, சப்தவித்தை (ஒலி இலக்கணம்), சில்பகர்மஸ்தானவித்தை (சிற்பநூல்), சிகிச்சைவித்தை (மருத்துவநூல்), ஹேதுவித்தை (அளவுநூல்), அத்யாத்துமவித்தை (ஆன்மநூல்) என்பனவாம். சீனவில் அப்போது (Lu-yi) என்று கூறப்படும் ஆறுகலைகள் இருந்தன. அவை, அறநூல், இசைநூல், வில்வித்தை, சாரத்தியம், எழுதுதல், கணக்கு என்பன. இவைகளேயன்றி (Lu-shu) என்று சொல்லப்படும் ஆறுவகை எழுதும் முறைகளும், (Lu-ching) எனப்படும் ஆறுவகைக் காவியங்களும், மருத்துவ ஆராய்ச்சிகளும், இரணவைத்தியம், வானநூல், சோதிடம், மட்கலவேலை, சிற்பம் முதலியனவும் பயிலப்பட்டுவந்தன. குருதிப்பெருக்கையும் படுகொலையையும் விளைவிப்பனவாகிய நீராவிப்பொறிகள், புகை வண்டிகள், வானவூர்திகள், போர்க்கப்பல்கள், நீர்மூழ்கிக் கலங்கள், துப்பாக்கிகள், வெடிகுண்டுகள், கவசமிட்ட பீரங்கி வண்டிகள் (Tanks), நச்சுக் காற்றுக்கள் முதலிய மேனுட்டுப் பொருள்களே நம் இருநாடுகளாகிய இந்தியாவும் சீனவும் உண்மையில் பெற்றிருந்தறியாதனவாம்.

(தொடரும்)

---

## வல்வடுகு நான்கு

திரு. K. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B. A., B. L.,

(முற்றொடர்ச்சி துணர் 11. மலர் 4. பக்கம் 150)

### III

**அச்சுதப்ப நாயக்கர்.** அச்சுதப்ப நாயக்கர் தன் தகப்பனர் செவப்ப நாயக்கரிருந்த காலத்தே அவரால் நாட்டினை ஆள உரிமை பெற்றார். இவர் பல உதார குணங்களையுடையவர். இவர் ஸ்ரீரெங்கநாதருக்கு இரத்தின பீடம், இரத்தினங்களால் செய்யப்பட்ட பதைக்கம், கிரீடம், சதங்கை முதலியன அளித்தார். மற்றும் ஸ்ரீரெங்கத்தில் முக்கிய வீதிகளைப் புதுப்பித்

தும், சில வீதிகளை ஆக்கியும் ஆங்கு மறையிலே பாண்டித்தியம் பெற்ற அந்தணர்களைக் குடியேறவும் செய்தனர். இவர் வைணவ மதத்தில் அதிகப் பற்றுடையவராயிருந்தாலும் சைவ மதத்தில் வெறுப்புற்றிலர். இவர் கும்பகோணம், திருவிடைமருதூர், மாயவரம், திருவையாறு முதலிய இடங்களில் புஷ்ய மண்டபங்கள் ஏற்படுத்தினர்: பல தீர்த்தக் குளங்கள்தொட்டும் படிகள் கட்டியும் புதுப்பித்தார்: மற்றும் அளவற்ற திருப்பணிகளும் இத்திருக் கோயில்களுக்குச் செய்தருளினர்.

இவர் தம் நாடு வளம்பெற உழவுத் தொழிலைப் பெருக்கினர். உழவினிற்காகவே பல வாய்க்கால்களையும் ஏரிகளையும் வெட்டினர். இவர் காவிரியினது கல்லணையைப் புதுப்பித்தார். கி. பி. முதல் நூற்றாண்டில் கரிகாலன் I காவிரிக்குக் கல்லணை கட்டினன். பின்னர் 1060-1070 வரையிலும் ஆண்ட (மூன்றாவது கரிகாலன்) இராஜகேசரி வர்மன் என்ற வீரராஜேந்திரன் காவிரிக்கு ஓர் கல்லணை கட்டி முடித்தனன்.

'சொல்லார் பணியுஞ் செம்பியர்கோன்
செழுங் காவிரியின் சிறந்தகரை
கல்லாணை கட்டுவதற்கே வக்கருமமுடித்த
சோழியர்கள்
பல்லோர் மேழிநெடுங் கொடியைப்
பாயும் புலியிேனாடும் பதித்த
வல்லாண்மையினர் குடிவாழ்வ வளஞ்சேர்
சோழமண்டலமே.'

'தொக்கசக னிற்றொளா யிரத்துத்
தொண்ணூற்றின்
மிக்க கரிகாய் வயவேந்தன்—பக்கம்
அலைக்கும் புனற்பொன்னி யாற்றணையை
யிட்டான்
மலைக்கும் கொடைக் கரத்தான் வந்து'

இவரால் கட்டப்பட்ட கல்லணையை அச்சுதப்பநாயக்கர் பழுது பார்த்து வந்தனர்.

அச்சுதப்ப நாயக்கரது அமைச்சர் கோவிந்த தீக்ஷதர். இவர் கல்வி கேள்விகளில் அதிநிபுணர். இவர் 'ஹரிவம்ச சரித்திரம்,' 'சங்கீத சுதாநிதி' முதலிய நூற்களை இயற்றியிருக்கின்றனர். இவர் கி. பி. 1605ல் வடமொழியிலிருந்து திருவையாற்றுப் புராணத்தை தமிழ்மொழியில் பெயர்த்தெழுதியதாக தெரிகிறது.

'மலிபுனல் சூழ்சோணாடு தஞ்சையிற்
காத்திடுமரசர் மதியமைச்ச
னொலிமறைதேர் கோவிந்த தீட்சிதராயன்
திருவாக் குடைமையாலே
கலியுகத்துச் சகனாண்டு மூவைஞ்ஞூற்திரு
பதின்மேற் காணுமேழாய்ப்
பொலிவருடத்தை யாற்றுப்புராண
வடமொழி தமிழாற் புகலலுற்றேன்.'

அச்சுதப்ப நாயக்கரது காலத்தில் சில முகம்மதியப் படைகள் கடல் மார்க்கமாய் நாகைப்பட்டினத்தில் தங்கி ஆங்கு ஓர் படையெழுச்சி செய்ததாக எக்ய நாராயணர் இயற்றிய ஸாஹித்ய ரத்நாகரம் கூறுகின்றது. அச்சுதப்ப நாயக்கர் இவர்களைக் கடலில் புகும்படி முறியடித்தார்கள். இவர் தம் நாட்டினிலே விளைந்த கலகத்தை வேரொடு களைந்து தஞ்சையை நன்னிலைமை யடையும்படி முயற்சி செய்தார். இவர் கர்நாடகத்து இளஅரசருக்கும் படைத்துணை உதவி செய்து அவரை கர்நாடக அரசனாக நியமிக்க விரும்பினர். கர்நாடகத்தை யாண்ட வேங்கடதேவர் கி. பி. 1614ல் விண்ணுலகெய்திடவே கர்நாடக முழுவதும் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. வேங்கட தேவருக்கு புத்திரப்பேறில்லாமையால் அவருக்குப் பின்னர் பட்டம் சூட்டிக் கொள்ள உரிமையாளர் யாவர் என்ற கேள்வியே கலகம் விளைவித்தது. வேங்கடதேவரது மனையார் தன் தகப்பனுடன் சேர்ந்த தன்னினத்தான் ஒருவன் கர்நாடகத்தை ஆள வேண்டுமென்ற எண்ணங் கொண்டாள். இவருடைய கொள்கைக்கு குடிகள் இணங்காது வேங்கடதேவரது தமையன் குமாரனை பட்டத்திற்குரியவனென்று எண்ண முடையவ

ராய் அவனுக்குப் பட்டம் சூட்டினார்கள். வேங்கடதேவரது மாமனாராகிய சக்கமன்னன் ஓர் நாள் நள்ளிரவில் கொலையாளிகளின் துணை கொண்டு அரண்மனையின் கண் புகுந்து ஆங்கு புதிதாகப் பட்டம் சூட்டப் பெற்ற மன்னனையும், அவனைச் சார்ந்த உற்றாரையும் நட்டாரையுங் கொன்றனன். இப்படி கொலையினின்றும் இறந்துபட்ட அரசரது சிறுபிராயமுள்ள குமாரன் ஒருவன் தப்பித்துக் கொண்டான். இறந்த கர்னாடக வம்சத்தரசனுக்குப் போர்களத்தில் துணைநலமாயிருந்த எச்சம நாயக்கர் என்றார் இச் சிறாரை யாவருக்கும் தெரியாவண்ணம் வளர்த்தெடுத்து பின்னர் சக்கமன்னனோடு போர் புரிவானெண்ணி அச்சுதப்ப நாயக்கரது உதவியை நாடினான். அச்சுதப்ப நாயக்கர் கர்னாடகத்து அரசகுமாரனைத் தன் ஆதரணையின் கீழ்வைத்து பெரிதும் போற்றி சக்க மன்னனுடன் போர் புரிந்து அவனையும் முறியடித்தான். தோல்வியுற்ற சக்கமன்னன் பின்னர் தம் துணைவலியைப் பலப்படுத்திக்கொள்ளப் பாண்டிய நாட்டரசனோடு சேர்ந்து கொண்டான். இத்தகைய சமயத்தே அச்சுதப்ப நாயக்கர் விண்ணுலகு போந்தனர்.

## IV

இரகுநாத நாயக்கர். இவர் நற்குணங்களால் பெரிதும் சிறப்புற்று குடிகளின் நன்மதிப்பினைப் பெற்றவர். இவர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கி கல்வித் துறையை மேம்படுத்த முயன்றார். தெலுங்குமொழியினை முன்னேற்றத்திற்குக்கொண்டு வர ஆவலுற்றவராய் இவர் பல மேன்மை வாய்ந்த புலவர்களை தனது இருப்பிடத்திற்கழைத்து அவர்களது புலமையைப் பெரிதும் வியந்து பரிசு அளிப்பாராயினர். இவர் மகாபாரத சங்கிரகம், இராமாயண சங்கிரகம், பாரிஜாதகரணம், அச்சுதாப்பியுதம், நளாப்பியுதம் முதலிய கிரந்தங்களை இயற்றியிருக்கின்றனர். இவர் வைணவ மதப்பற்றுடையவரானதால் மதாசாரியர்களை அழைத்து பல்வேறு மதங்களின் உண்மைப் பொருளினை ஆய்ந்து சாஸ்திர ஆராய்ச்சியும், தத்துவ ஆராய்ச்சியும் செய்து வந்தனர். இவர் கும்பகோணம், விஜயராகவபுரம்

முதலிய இடங்களில் இராமசாமி கோயில் கட்டி வைத்ததாகத் தெரிகிறது.

சக்கமன்னன் பாண்டிய மன்னனது துணையைப் பெற்றனன் என முன்னர்க் கூறினோம். இரகுநாத நாயக்கருடன் பாண்டிய மன்னனும் போர்புரியத் தக்க சமயமும் காரணமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். தக்க காரணம் பாண்டிய மன்னனுக்குப் புலப்படாமையால், பாண்டிய மன்னன் காவிரி யாற்றங்கரைக்குச்சென்று ஆங்குள்ள பழுதுபார்த்துச் சீர்திருத் தப்பட்ட கல்லணையை உடைத்தனன். இரகுநாத நாயக்கர் நாட்டின் நலத்தினைக் கருதிப்பாதுகாத்த கல்லணை பாண்டியனால் அழிபட்டு போயினமையைக் கேட்டு மனம் பொறாது சினந்து பாண்டிய மன்னனுடன் போரிடவே, சக்க மன்னன் சீர்குலைந்த பாண்டிய சேனையுடன் புறங்காட்டத் தலைப்பட்டான். இரகுநாத நாயக்கர், கர்னாடக வம்சத்திலுள்ள முன்னர் கூறிய சிறு பிராயமுள்ள அரச குமாரனை கர்னாடக அரசனாக்கினார்.

## V

**விஜய ராகவ நாயக்கர்.** இரகுநாத நாயக்கர் காலஞ்சென்ற பின்னர் அவரது குமாரரான விஜயராகவ நாயக்கர் தஞ்சையை ஆண்டார். இவர் தஞ்சையை பலகோட்டைகள் கட்டி பலப் படுத்தி இராஜ்ஜிய முன்னேற்றத்தில் தன் முழுக் கருத்தையும் செலுத்துவாராயினர். தஞ்சையில் இவர் உழவின் நலத்தையும் வாணிகச் சிறப்பினையும் பெருக்கினார். மன்னுயிர்களைத் தன்னுயிர்போன்று பாதுகாத்தார். அரசியல் நீதி முறைமைகளை நன்குணர்ந்தவர். இவர்காலத்தில் நின்றுலவிய மதங்கள்யாவையும் காத்து அவைகளை வளம்பெறச் செய்தார். ஆனால் இவர் போர்த்திறமை நன்குணர்ந்த புயவன்மையில்லார். ஆதலால் இவரது காலத்தோடு தஞ்சை நாயக்கரது அரசு ஒழிவுற்றது.

விஜயநகர இராஜ்ஜியம் தலைக்கோட்டைப் போரில் சீர் குலைந்து கலவரப்பட்டு நிற்க, முகலாயர்கள் அந்த இராஜ்ஜியம் தலையெடுக்கவொண்ணாதபடி பலவிதமான இடுக்கண் புரிந்தன ரென்பது நாம் முன்னர் அறிந்ததே. விஜயராகவ நாயக்கர்

தஞ்சையில் அரசு செலுத்தினபொழுது மதுரையிலாண்ட நாயக்கர், முத்து ஆளகாத்தி நாயக்கராகும் (1659—1662). இவர் முகம்மதியர்கள் புரியும் துன்பத்தினை அடியோடு நீக்க எண்ணமுடையவராய் தஞ்சை மன்னனது உதவியை நாட முயன்றனர். விஜயராகவ நாயக்கர், ஒரோவழி, முத்து அள காத்திரி நாயக்கர், முகலாயர்களைத் துரத்திவிட்டு பின்னர் தம் இராஜ்ஜியத்தை கைக்கொள்ள முயலுவரோ என்று பெரிதும் பயந்து மதுரை நாயக்கருக்கு உதவி புரியாது முகம்மதியர் களோடு சேர்ந்திருப்பவர் போலும் சேரா திருப்பவர் போலும் ஓர் மனநிலைமையோடு நில்லாது தயங்கித் தத்தளித்துக் கொண் டிருந்தனர். இச்சமயத்தில் முகலாயரது சேனை இடல்கானைத் தலைவனாக நியமித்து, மதுரை நாயக்கர் போருக்கென பலப்படுத் திக்கொண்ட திருச்சிராப்பள்ளிக்கோட்டையை கொள்ளையடிக்க முயன்றது. ஆனால் அவர்களது எண்ணம் நிறைவேறவில்லை பின்னர் முகலாயரது சேனை தங்கள் நாடு சேரும் வரையில் கண்ட திசைகளிலெல்லாம் சூறையாடினர். இதுபோது தான் தஞ்சைக்கடுத்த வல்லம் கோட்டையினை முகலாயர்கள் 1660-ல் கைப்பற்றிக் கொண்டனர். இக்கோட்டையினில் தஞ்சை நாயக்க மன்னர் தனது பண்டாரத்தை சேமித்து வைத்திருந் தனர். பண்டாரம் முழுவதும் முகலாயர்களது கைவசப்படவே தஞ்சை நாயக்க மன்னனுக்கு ஆதாரமாக நின்ற அரசிறையும் பணநிர்வாக சம்பந்தமான நிலைமையும் குன்றின. அரசனது வருவாய்நிறைந்துள்ள பண்டாரம் அழிவுற்றதினால் விஜயராகவ நாயக்கரோடு தஞ்சையில் நாயக்கர் அரசியல் முடிவுற்றது.

இதன் பின்னர் மதுரையை அரசாண்ட சொக்கநாத நாயக் கர் (1662—1682) தத்தளித்துக் கொண்டிருக்கும் தஞ்சை நாயக்கரது நிலைமையைக் கண்ணுற்று, தஞ்சையை கைப்பற்ற வேண்டுவான் எண்ணி தக்க சமயம் எதிர்பார்த்திருந்தனர். சொக்கநாத நாயக்கர் தஞ்சை செழிப்புற்ற நிலைமையிலிருந்த தினால் அந்நகரை மதுரையோடு சேர்க்க எண்ணினர். மற்றும் நாயக்கர்கள் இருபகுதியாக யிருந்து ஒருவர் தஞ்சையையும் மற் றொருவர் மதுரையையும் ஆளுவது நாயக்க மன்னர்களுக்கு அழ

கல்லவென்றும் அப்படி ஆளுவது நாயக்க வம்சம் செழித்தோங்காத காரணமெனவும் எண்ணினர். மதுரை நாயக்கர் முகலாயர்களோடு எதிர்த்துப் போர் புரிய விஜயராகவ நாயக்கரை வேண்டியபொழுது அவர் அதைக் கவனியாது பராமுகமாயிருந்த நிலைமையினைக் கண்டு சொக்கநாத நாயக்கர் தஞ்சையைத் தன்னுடைய இராஜ்ஜியத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்ற அவா பெரிதும் உடையவராயிருந்தார். இவ்வாறிருக்கையில் சொக்கநாத நாயக்கர் விஜயராகவ நாயக்கரது புதல்வியை மணம்பெற வேண்டி, தஞ்சைக்குத் தூது அனுப்பினார். இம்மண சம்பந்தத்தினை விஜயராகவ நாயக்கர் ஏற்றுரில்லை. விஜயராகவ நாயக்கரோடு போர் புரிய இதனையே ஓர் அரிய காரணமெனக்கொண்டு சொக்கநாத நாயக்கர் தமது தளவாய் வேங்கட கிருஷ்ணப்ப நாயக்கரின் தலைமையாக ஓர் படையினை ஏவினன். இவர்கள் தஞ்சையைப் படையெடுக்கும் முன்னர், மீண்டும் சொக்கநாத நாயக்கர் தாம் தஞ்சையின்மேல் ஏவின படை போதாதென எண்ணி, அழகிரி நாயக்கர் மூலமாயும் மற்றோர் படையினையும் விடுத்தனன். தஞ்சைப் படைகளும் மதுரைப் படைகளும் தஞ்சை இராஜகோபால சுவாமி கோயிலுக் கண்மையிலுள்ள ஓர் வெளியில் கை கலந்தன. போரினில் விஜயராகவ நாயக்கரும் அவனது குமாரனும் இறந்தார்கள். விஜயராகவநாயக்கரது அரசியல் அவருடன் அழிந்ததென்றாலும் தஞ்சை நாயக்க மன்னர்களது அரசு முற்றும் ஒழியவில்லை. விஜயராகவ நாயக்கரது வம்சத்தைச் சார்ந்த செங்கமல தாஸ் என்ற ஓர் அரசிளங்குமாரர் கடந்த போரினில் மடியாதிருந்தனர். இச்செங்கமலதாஸை Tanjore District Manual விஜயராகவ நாயக்கரது குமாரர் எனக் கூறுகின்றது. ஆனால் Taylor's Oriental Manuscripts செங்கமலதாஸை விஜயராகவ நாயக்கரது குமாரனை மன்னார் நாயக்கரது குமாரன் எனக் கூறுகின்றது. எதிலராயிருக்கும் செங்கமலதாஸ் நாகையில் ஒருவர் ஆதரவின்கீழ் வளர்ந்து வந்தான். இஃது இவ்வாறாகயிருக்க சொக்கநாத நாயக்கர் தஞ்சை நாயக்க மன்னர் இறந்தவுடன் அழகிரி நாயக்கரை தஞ்சையில் ஆளவிடுத்தான். இவன் மதுரை நாயக்கருக்கு கப்பம் கட்டாது அரசாது வருவாயினை அதிகப்படுத்தி தஞ்சையையும் தன்னையும் பலப்படுத்திக்கொண்டான்.

(தொடரும்.)

# தமிழ்ச்செய்திகள்.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் வெள்ளி விழா :— சங்கந் தொடங்கி இருபத்தைந்து ஆண்டுகள் 1936 மே 13-ஆம் நாளுடன் முடிகின்றது. அக்காலத்தே வெள்ளி விழா வெடுக்கக் கருதியும் அவ்வெண்ணம் நிறைவேறு மாறில்லை. சங்கத்தின் வருவாய் ஆகுமாறு மிக மிக இட்டிதாகவும் போகாறு மிக விரிந்தும் வருதலால் சங்கம் மேற்கொண்டிருக்கும் பணிகளைத் தடுமாற்றமின்றி நடத்துவதே கடினமாக இருக்கின்றது.

வித்துவான் தேர்விற்குப் பயிலும் மாணவர்கள் இசை முதலிய கவின் கலைகளையும் (Fine Art) மருத்துவம் ஆதிய தொழிற் கலைகளையும் பயிலுதற்கான கல்லூரி நிறுவுதல், நூல் வெளியீடு செய்தல், தமிழ் நாகரிகக் காட்சிச்சாலை நிறுவுதல், கிராமத்தொண்டு தொடங்குதல் ஆதிய நன்முயற்சிகளை மேற்கொள்ளுதலே வெள்ளி விழாவின் சிறந்த நோக்கங்களாம். இவ்வெண்ணங்கள் சிறிதளவு நிறைவேறினும் தமிழ் வளம்பெருகி தமிழரும் ஆக்கம் பெறுவர் என்பதற்கு யாதும் ஐயமில்லை.

தமிழ் நாட்டினும், அப்பாலுமுள்ள தமிழன்பர்களும், தமிழ்ச்சங்கங்களும் தோட்கோப்புக்கொண்டு தத்தம் இயல்பிற் கேற்றவாறு முழுமனதுடன் உதவிபுரிய முன்வந்தால் இவ்வெண்ணங்கள் மிக எளிதிற் கைகூடும்.

இச்சங்கத்தின் தலைவர் ஆதிய பணியாளர்களும், சங்க உறுப்பினர்களும் சங்கத்தின் அன்பர்களும், போதிய ஊக்கமும் முயற்சியுமின்றித் தத்தமக்குள்ள அலுவல்களையும் இடர்ப்பாடுகளையும் காரணமாகக் கொண்டு சோர்வுற்றிருப்பது வருந்தத் தக்க செய்தி. இங்கிலையில் தமிழ் நாட்டின் பரந்த எல்லையில் இருக்கும் தமிழ்ப்புலவர்களிற் சிலர் 'வெள்ளிவிழா' எப்பொழுது என்று உசாவுகிற அளவில் தமது அன்பையும் ஆதரவையும் காட்டி சங்கத்தாரின் கடமைகளை நினைவூட்டி வருவதும் நலந்தரும் செயலெனமதிக்கவேண்டியிருக்கின்றது.

இனியேனும் காலத்தை அவமே கழிக்காது இக்கூறிய ஒவ்வொரு பகுதியினரும் தத்தம் கடமையை நன்குணர்ந்து பெரும்பொருள் திரட்டி வெள்ளிவிழா அண்மையில் நடக்கும் வழிகண்டு தமிழ்த் தொண்டு புரிவாராக.



அண்ணமலைப் பல்கலைக்கழகம் :— இக்கழகம் தோன்றிய காலம் முதல் இதுகாறும் தமிழ்மொழியின் ஆக்கத்தையும் வளர்ச்சியையும் பேணுவது இக்கழகத்தின் சிறந்த நோக்கங்களுள் ஒன்றென்பது யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. என்றாலும் இக்கழகத்தினர் நடத்திவரும் இசைக் கல்லூரியின் நடைமுறைகளைக் கவனிக்க இக்கொள்கை பாழ்படுதற்குரிய கருமங்கள் நிகழ்த்தப் பெறுகின்றனவென்பது தேற்றம்.

இசைக் கல்லூரி தோன்றியபோது ஏற்படுத்தப்பட்ட பாடதிட்டத்தில் தமிழ்ப் பாட்டுகள் இடம் பெறவேயில்லை. உயர்திரு. விபுலானந்த அடிகள் தமிழ்ப் பேராசிரியரான கால முதல் அவர்களின் நன்முயற்சியால் சில தமிழ்ப் பாடல்களைப் பயிற்றத் தொடங்கினதன்றி அவை பாடதிட்டத்தில் இடம் பெற்றதாகத் தெரியவில்லை.

தமிழ் மொழிக் கல்வியும், தமிழிசைப் புலமையும் தரமாட்டாத இசைக் கல்லூரி தமிழ் நாட்டின் நன்மதிப்பைப் பெற மாட்டாதெனஉணர்ந்த ஆட்சிக் கழகத்தினர் (Syndicate) இக் குறைபாட்டை நீக்க வேண்டுமென முடிவு செய்தனர். இம் முடிவை இசைக் குழுவினர். (Board of studies in Music) கருதி 1933—34ம் ஆண்டின் இசைக்கல்லூரியின் பாட திட்டத்தில் தமிழ்மொழிக் கல்வியையும், தமிழ்ப் பாடலையும் சேர்க்க வேண்டுமெனவும், அங்கிலமொழிப்பயிற்சி இசைக் கல்விக்குப் பொறுத்த மற்றதெனவும் வேண்டப்படாததெனவும் முடிவு செய்தனர்.

இம்முடிபானது Faculty of Oriental Studies என்ற குழுவினரால் ஒப்புக் கொள்ளப்பெற்று இதற்கேற்றவாறு

அமைக்கப் பெற்ற பாடதிட்டம் 1936-37ம் ஆண்டின் தொடக்கத்திலிருந்து ஆட்சியில் கொணரத் தீர்மானித்தனர்.

21—3—36 ஆம் நாள் நிகழ்ந்த கல்விக்கழகத்தில் (Acadamic council) நீண்டகாலமாய் பலகுழுவினரும் ஆராய்ந்து கண்ட இந்த முடிவைக் கருதத் தொடங்கினர்.

பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரிரியர் திருவாளர். S. சோமசுந்தர பாரதியாரவர்கள், திருவாளர். பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள், திரு. C. வேதாசலம் பிள்ளை அவர்கள் ஆகிய மூவரும் தமிழ்மொழிப் பயிற்சியும் தமிழிசைப் புலமையும் இன்றியமையாதவை எனவும், தமிழ் தெலுங்குமொழிகளுடன் அங்கிலமும் பயிலுவது மாணவர்க்குச் சுமையாமெனில், பாட திட்டத்தினின்றும் அதனை அகற்றி விடலாமெனவும், இசைக் குழுவினர் செய்த முடிவைப் பல எதுச்களால் வலியுறுத்தினர். தமிழ்க் கலைவளர்ப்பதும் அதன் சிறந்த நோக்கங்களுள் ஒன்றெனக்கூறி தமிழ் நாட்டில் நிறுவப் பெற்றிருக்கும் பல்கலைக் கழகத்தில் தமிழ்மொழிக்கும் தமிழிசைக்கும் இடமில்லை எனத்தகுமா? தெலுங்கர், மலையாளர், கன்னடர் ஆகியோர் தமிழ்மொழிப் பயிற்சியின்றி தமிழ்ப் பாடல்களைப் பாடுவது எவ்வாறியலும்? தெலுங்குப் பாடல்களைப் பயிலுதற்குத் தெலுங்குமொழிப் பயிற்சி இன்றியமையாதெனக்கண்டு அம்மொழிப் பயிற்சியைக் கட்டாய பாடமாக அமைத்த கழகத்தினர் தமிழ்ப் பாடலைப் பயிலத் தலைப்படும் மலையாளர், தெலுங்கர் கன்னடர்கள் தமிழ்மொழி பயிலுதல் வேண்டுமெனக் காண்பதற்குக் கண்ணும் கருத்தும் வேண்டுமா? தமிழ்மொழியறியாத மலையாளர், தெலுங்கர், கன்னடர்கட்குத் தமிழ்மொழி பயிலுதல் தாங்கவொண்ணாத பெருஞ்சுமை என்னக்கருதும் கழகத்தினர், தெலுங்கறியாத மலையாளர், கன்னடர் தமிழர்களைத் தெலுங்கு பயிலவேண்டுமென வலியுறுத்துவது ஏனோ? மொழிப் பயிற்சி சிறிதுமில்லாத பாடகர்கள் தெலுங்கு தமிழிசைகளைச் செவ்வனம்பாடுவதைக் கண்டாமன்றே! இசைப் புலமைக்கு மொழிப் பயிற்சி எற்றுக்கு? தமிழ்மொழிப் பயிற்சி

வேண்டுவதில்லை என வாதுபுரியும் கழகத்தினர் இதே எதுக் களைக் கூறி கல்லூரியில் பயிலப்படும் தெலுங்கு தமிழிசை கட்குச் சிறிதும் தொடர்பில்லாத அங்கில மொழிப் பயிற்சி யையும் தெலுங்கு மொழிப் பயிற்சியையும் பாடதிட்டத்தி னின்றும் அகற்றாதது ஏனோ? பொருளுணர்ச்சியுடன் பாடல் களைப் பாடுதல் மெய்ப்பாடு விளங்கி இசைகள் சிறக்குமென்று கண்டு தெலுங்குப் பாடல்களைப் பாடுவோர் அம்மொழி பயில வேண்டுமென விதித்த கழகத்தினர் தமிழ்ப்பாடலுக்கு இவ்விதி சாலாதெனக் கருதும் மதி என்னையோ? தமிழ் நாட்டில் நிகழும் இசையரங்குகளில் பொருட்பொலிவுள்ள தமிழ்ப்பாடல்களையே மிகமிக அதிகமாய்ப் பாடிவர இசைப் புலவர்கள் முயலவேண்டு மெனவும், இவ்வாறு இசை அரங்குகள் நடந்தால் பொரு ளுணர்ந்து மனங்கனிந்து மக்கள் பயன்துய்த்து செம்மைப் பெறுவர் என்றும் சிறந்த இசைப்புலவர்கள் அண்ணாமலைநகரில் ஒருங்குகூடி அண்மையில் செய்த முடிபுகளின் உண்மை காண முடியாத கழகத்தினரின் மதிதான் என்னே? இசைப்பயிற்சியை விரும்பி கல்லூரியிற் சேரும் மாணவர்களை பொருளுணரமாட் டாது இசைக்கும் இசைத்தட்டுகள் (Gramophone records) போன்ற கருவிகளாகச் செய்து "சங்கீத பூஷணம்" என்ற பெயரால் அலங்கரித்து அனுப்பப்பெறும் நன்மரங்களால் பல் கலைக் கழகத்தின் இசை விளங்குமா?

இசைக் கல்லூரியிற் பயிலும் மாணவர்களில் பெரும்பாலர் அங்கிலம் அறவே தெரியாதவர்களாய் இருக்க அவர்கள் இரண்டு ஆண்டுகள் அங்கிலம் பயில வேண்டுமெனும் பாடதிட்டத்தினால் விளையும் பயன் யாதேனும் உளதா? இரண்டெழுத்துச் சொற் களைக்கூட்டிப் படிக்கக் கற்பிக்கமுயலும் பல்கலைக்கழகத்தினரின் மதி நுட்பத்தை அறிவுடை உலகம் எங்ஙனம்பாராட்டும்? இம் மாணவர்கள் கற்கும் அங்கிலந்தான் கல்லூரியில்பயிலும் இசைக் கலைக்கு எவ்வாறு இயைபுடையது? எங்ஙனம் துணைசெய்யும்? இசைக் கலை தமிழ் மொழியில் கற்பிக்கப் பெற்றும், தேர்வுகள் நடத்தப் பெற்றும், வருகின்ற நிலையில் பாடதிட்டத்தினின்றும் தமிழ் மொழியைப் புறக்கணிப்பதும் அங்கில மொழி வேண்டு

மென வாது புரிவதும் மதியுடைமை ஆகுமா? இன்னோன்ன காரணங்களைத் தமிழன்பர்கள் விளக்கியும், தோமாட்டாத கழக உறுப்பினரால் விளையும் ஏதங்கட்கு அளவு தானும் உண்டோ? இக்கூறிய முடிபுகளை நிறைவேற்றுதற்கு தமிழன்பர்கள் முன் மொழிந்தும், வழி மொழிந்தும் துணைமொழிந்தும் அவற்றினை ஏற்காது அழி வழக்குப் பேசி எதிர்வாதம் புரிந்து வன்கண்மை செய்தவர்கள் திரு. V. S. கிருஷ்ணய்யர் அவர்கள், திரு. இராமாநுஜாச்சாரியார் அவர்கள், திரு. C. R. மயிலேறுஐயர் அவர்கள், திரு. G. சீனிவாசய்யர் அவர்கள், M. S. சுந்தரம் ஐயர் அவர்கள் திரு. A. நரசிங்கராயர் அவர்கள் திரு. T. R. வேங்கடராம சாஸ்திரியார் அவர்கள் முதலியோராவர். பேதையுங் கொடிறும் போலக் கொண்டது விடாது முனைத்து நின்று தமிழ் மொழியையும் தமிழிசையையும் புறக்கணித்த கொடுஞ்செயலைத் தமிழ்நாடு கருத்தில் இருத்தி ஆவனபுரிய வேண்டுவதில்லையா? இத்தகையோரது மனப்பான்மையும், கொள்கையும் எவ்வாறாக இருப்பினும் Pro-chancellor அவர்களும், Vice-chancellor அவர்களும் இவ்வாதங்களின் நலந்தீங்குகளை அறிந்து இவர்களைத் தெருட்டி தமிழ் நாட்டின் நன்மதிப்பைப்பெற முயல வேண்டுவதில்லையா?

இசைக் கல்லூரியில் பயின்றுவரும் மாணவர்கள் கற்க வேண்டுவது அங்கிலமும் தெலுங்குமாமென்றும், கல்லாது ஒழிக்க வேண்டுவது தமிழ்மொழி என்றும் கல்விக்கழகத்தினர் (Acadamic Council) செய்த முடிபை ஆட்சிக் கழகத்தின் (Syndicate) ஆராய்ச்சிக்கு விடுக்கப்பட்டிருக்கின்றது. தமிழ் நலங்களை அறிந்த ஒரு சிலரும் இல்லாது அமைக்கப் பெற்றிருக்கும் ஆட்சிகழகத்தினரால் தமிழ்க் கல்வியும் தமிழ்க் கலையும் பேணப்படுமென எண்ணுவது எங்ஙனம்?



# சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி.



இச்சங்கம் கலைச்சொற்களை ஆங்கிலத்திலிருந்து தமிழில் ஆக்கும் பொறுப்பை மேற்கொண்டுள்ளது. அதன் முதற்படி இப்போது வெற்றியாக நிறைவேறியுள்ளது. சங்கத்தின் நூல் லாக்கக்கழகம் திருநெல்வேலியில் நாற்பத்தொருநாட்கள் இலைசத் தமிழ்ச்செல்வர் திரு. தி. இலட்சுமணப்பிள்ளையவர்கள் பி. ஏ., தலைமையில் மாநாடு கூடி 1. பூதநூல் (Physics), 2. இயைபு நூல் (Chemistry), 3. கணக்கு (Mathematics), 4. இயற்கை நூல் (Natural Science), 5. உடலியலும் நலவழியும் (Physiology & Hygiene), 6. தரைநூல் (Geography), 7. வரலாறு முதலியன (History etc ), ஆகிய கலைகளுக்குச் சொற்களை அமைத்திருக்கிறது.

சங்கம் வரும் 1936 செப்டம்பர் திங்களில் சென்னையில் ஒரு மாநாடு கூட்ட ஏற்பாடு செய்துவருகிறது; அதில் புலவர்களையும் ஆராய்ச்சியாளரையும் கூட்டி அச்சொற்களை மறுபடி ஆராய்ந்து முடிவு செய்யப்போகிறது. மாநாட்டுக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியராக இருந்த உயர் திரு.சாமி. விபுலானந்தர் B.Sc. அவர்கள் தலைமைதாங்க அன்புடன் இசைந்திருக்கிறார்கள்.

இப்போது அமைத்துள்ள கலைச்சொற்கள் அச்சாயிருக்கின்றன. பற்றுடையாருக்கு அவை அனுப்பப்பெறும். அவைகளை ஆராய்ந்து ஒப்புக்கொள்ளக்கூடிய திருத்தங்களை அனுப்புகிறவர்களில் முதன்மையானவர்களுக்குத் தக்கபரிசுகள் கொடுக்கப் பெறும்.

மாநாட்டின் அறிக்கைகள் தமிழ் நாட்டிலுள்ள கல்வி நிலையங்களுக்கும், அறிஞர் சங்கங்களுக்கும், புலவருக்கும் அனுப்பப் பெறும். பள்ளிக்கூட ஆசிரியரும், கல்வியாளரும் இவ்வியக்கத்திற் பற்றுடையாரும் மாநாட்டிற் கலந்துகொள்ள வேண்டுகின்றோம். பிற விவரங்கள் அமைச்சர், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி என்ற முகவரிக்கு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ்த்தாயின் வளர்ச்சியிலும், பள்ளிக்கூடங்களில் தாய்மொழி வழியாகக் கலைப்பயிற்சியிலும் ஈடுபட்டுள்ளவர் யாவரும் இச் சங்கத்தின் முயற்சிகளுக்கு இயன்ற துணை செய்ய முற்படவேண்டும்.



உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

### கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "பங்குனி" நன்கொடை.

| திங்கள் நன்கொடை. | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, R. கனகசபாபதி நாயகர் (Post Master) | ,, | 1 | 0 | 0 |
| ,, நே. அ. அனந்தவிசய முதலியார் | ,, | 1 | 8 | 0 |
| **ஆண்டு நன்கொடை.** | | | | |
| ,, Dr. சொக்கலிங்கம் பிள்ளை L. M. P. | ,, | 2 | 0 | 0 |

(ரூ. 12-ல் கடைசி தவணை.)

# நெல்லை வருக்கக் கோவை



இது, திருநெல்வேலியில் கோயில் கொண்டெழுந்தருளிய நெல்லை நாதரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு, அகப் பொருட் டுறைக ளமைய, மொழிக்கு முதலாம் வருக்க எழுத் துக்கள் ஒவ்வொரு காரிகையின் மொழி முதற்கண் முறையே வரத் தொடுக்கப் பெற்றிருத்தலின், **நெல்லை வருக்கக் கோவை** எனப் பெயர் பெற்றது. இதற்கு நெல்லைமாலை எனவும் பெயர் காணப்படுகின்றது.

இந்நூலை இயற்றியவர் அம்பிகாபதி என்பவர். இவர், பாண்டிநாட்டில் வீரையில் (வேம்பற்றூரில்) வேதியர் குலத்தில் பிறந்தவராவர். இவற்றினை, இந்நூலின் கடைசிச்செய்யுளாகிய "கண்ணூறு சாத்தும்" என்பதிற் காண்க.

இந்நூலிற் செய்யுட்கள் சிதைந்தும் பிழைபட்டும் இருத் தலின், அவற்றை ஒருவாறு செப்பஞ்செய்து அச்சிடலாயிற்று. இது, தஞ்சை சரபோஜி மகாராஜா சரஸ்வதிமால் என்ற புத்தகா லயத்திலுள்ள ஏட்டின்படியாகும்.

## காப்பு

தேரோடும் வீதியெல்லாஞ் செங்கயலுஞ் சங்கினமு
நீரோ டுலாவிவரு நெல்லையே—காரோடு
கந்தரத்த ரந்தரத்தர் கந்தரத்த ரந்தரத்தர்
கந்தரத்த ரந்தரத்தர் காப்பு.

## நூல்

### காட்சி

அமிழ்துங் கயலும் புயலுந் தனியரக் காம்பலுந்தே
னுமிழும் பொசியவெண் முல்லையு மாயொழி யாமறையுந்
தமிழுந் தெருமணக் குநெல்லை நாதர் தடஞ்சிலம்பிற்
கமழும் பொழில்வளர் வல்லிகண் டேகண் களிகொண்டதே. 1

## இரவினீட்டம்

ஆவியுங் காயமும் போலவொன் றாகி லவருடைய
நீவியஞ் சிற்றிடை போலரி தாய்நிற்கு நீங்கியநாள்
வாவியம் போருகஞ் சூழ்நெல்லை நாதர் வரையில்வல்லி
காவியங் கட்கடை போலற நீளுங் கருங்கங்குலே ௨

## விருந்து விலக்கல்

இளைக்கும் பிறைமுத்தர் நெல்லையஞ் சாரலி லீந்திலையால்
வளைக்குங் குடிவில் வதுவைசெய் வாய்முறை பார்க்கிலெங்கள்
கிளைக்கும் பழுதில்லை யிக்கண்ண லேவெள்ளி கீழ்த்திசையில்
முளைக்கும் பொழுதெழுந் தால்செல்ல லாறும் முதுநகர்க்கே 3

## குறி பிழைத்தழுங்கல்

ஈன்ற வளைத்தப்பி ஞாளியின் வாய்த்தப்பி யெம்முயிரைப்
போன்ற வளைத்தப்பிப் போந்ததெல் லாம்புர மூன்றெரியத்
தோன்ற வளைக்குஞ் சிலையாளர் நெல்லைச் சிலம்பினிலாக்
கான்ற வளைக்குலங் காள்சொல்லு வீர்வரிற் காதலர்க்கே 4

## தழை வியந்துரைத்தல்

உழைவேடக் கண்ணினுக் கஞ்சனமா மொற்றைச் சிந்துரமாங்
குழைவேட மாம்பல வேடங்களா முடல் கூனுஞ்சிலைக்
கழைவேட னெச்சிற் கருள்புரி வோர்நெல்லைக் கார்வரைப்பூந்
தழைவேட மாறிப் பலவேடங் கொண்டது தண்டழையே 5

## சேவலைப் பழித்தல்

ஊழிக் கருங்குல் நீக்கிவெய் யோனையிங் குள்ளழைக்குங்
கோழிக் குலத்தை வளர்த்ததெல் லாங்கொழுங் காவிமள்ளர்
மேழிக் கொழுமணக் கும்நெல்லை நாதர் வியன்சிலம்பிற்
பாழுக்கியான் வளர்த்தேன் கிளியோ டன்னம் பால்பகிர்ந்தே 6

## பருவங் கண்டழுங்கல்

எழுந்தாரை மாரிப் புனல்வெள்ள மோவெம்மை நீத்திருந்தார்
கொழுந்தாரை மாரிக் கயல்வெள்ள மோகொன்றை யாடகப்பூஞ்
செழுந்தாரைச் சூடும் பிரானெல்லைநாதர் சிலம்பிற் செந்தீக்
கொழுந்தாரை வேல்வல வாவெந்த மாரி கொழிக்கின்றதே 7

## இசையமறுத்தல்

எட்டிற் றிகழ்கொன்றை யார்நெல்லை நாதரை யீன்றகழைக்
காட்டிற் றருமுத்தமொன்று கண்டேர் கஞ்ச மொன்றமலர்
வீட்டிற் றருமுத்த மொன்றுண்டு மால்சங்க வெண்முத்தந்தோள்
சூட்டத் தகாதகண் டேரெமர் காணிற் ஞெழாதவரே 8

## வினவெதிர்மறுத்தல்

ஐயம் புகுந்திருக் கைகளென் றூனு மடியிணைகள்
வையம் புகுந்திரு மால்தொழு வோர்நெல்லை மால்வரைவேள்
கையம்பு தைத்த பசும்புண்ணி லேவைத்த காரமொக்குங்
கொய்யம் புயமனை யாளருட் பார்வைங் குளிர்சிங்கியே 9

## தன்றுயர் குமுதந் தாமரைக் குரைத்தல்

ஒருபோ துறங்குஞ் சரோருகங் காளுத யாதவன்றோய்
வருபோ தலரு மலர்நெய்தல் காள்வண்டு காலுழுதே
தருபோ தலரும் பசுங்கொன்றை யார்நெல்லைத் தண்சிலம்பி
லிருபோதுங் கண்ணுறங் கேனிமைப் போது மிமைப்புறவே 10

## நகை கண்டு வருந்தல்

ஓலைக் குழைக்குங் கழைக்குமென் பாகி னுடன்கலந்த
பாலைப் பழிக்கு மொழிக்கு மன்றேபிட்டின்பா....ட்ட
வேலைக் குழைக்கும் பிரான்நெல்லை நாதர் வியன்சிலம்பிற்
சேலைப் பழித்தகண் ணுள்நகைக் கேயுயிர் தேய்கின்றதே 11

### நெஞ்சொடு புலம்பல்

ஔவ்வவர் சீலம் பலகாலுஞ் சிலித் தறிந்தபின்னை
எவ்வெவர் நட்புங் கொளப்பெற்ற லோமிம வாரங்கை
வவ்விய கோலத்தர் நெல்லையஞ் சாரல் வரையில்வல்லி
நவ்வியங் கண்ணிணை போற்றடு மாறிய நன்னெஞ்சமே 12

### நினைவறக் கண்புதைத்தல்

கக்குங் கணப்பிறை நாவாயிற் செக்கர்க் கடுமறலி
யொக்கும் படிக்குவந் தாலென் செய்லேனுடல் கூனிவயி
றெக்கும் பிறைமுடி யார்நெல்லை மீதி விரைவிழுங்கி
விக்குங் குருகினங் காளுயிர் போகில் விழிபொத்துமே 13

### களிற்றிடை யுதவிக் கறத்தோடு நிற்றல்

காட்டானை வென்ற பொழுதந்த யானைக் கடுங்குரலைக்
கேட்டார் செவியினுங் கேட்குங் கொல்லோகழிக் கெண்டை
வாட்டானை யாப வடிவுடை பாள்வலப் பாகர்நெல்லை [யங்கண்
நாட்டா ரறிய மணமுர சாலிக்கு நல்லொலிபே 14

### செவிலி வேதியரை வினவுதல்

கிம்புரிக் கோட்டுக் களிற்றுளர் நெல்லைக் கிரியிலிரண்
டம்பிருக்குங் கன்னி யன்னைல்பின் னையழல் வாய்க்குகையிற்
செம்புருக்கிச் சொரிந் தாலன்ன பாலைச்சென் றாகம்வெந்த
வெம்புரிக் கொக்குமென் றூர்சென்ற வாறெங்கண் வேதியரே 15

### சுனை வியந்துரைத்தல்

கீற்றுப் பிறைமுத்தர் நெல்லையஞ் சாரற் கிரிபிலெங்க
ளூற்றுச் சுனையிற் குளித்துதைந் தாடியி ழுதைபட்டு
வேற்றுத் தலந்தொறும் *வேரியம் பாணமும் வெண்ணகையு
நோற்றுப் பிறந்தனை யேயணங்கே நல்ல நோன்பினையே 16

---

* வேர்விழியாமல் விரகில்வர.

## பொருள் மேற்பிரிதல்

குறைக்கோல வெண்டிங்கள் வேணியர் நெல்லைக் குளிர்சிலம்பில்
துறைக்கோல வண்டினங் காளன்னங் காள்துணைக் கைப்பிடித்து
நறைக்கோலங் கண்ட மலர்க்கண்க ளாலின்று நானிருந்த
சிறைக்கோலங் கண்டில ரேபொருண் மேலன்பு சென்றவரே 17

## எழுதியிரங்கல்

கூன்முகத் திங்க ளொருரேகை காண்கினுங் கொப்புளிக்குந்
தேன்முகத் தாம்பன் மலருங்கெட்டேன் செங்கண் மாலுங்கஞ்ச
நான்முகத் தோனுந் தொழுநெல்லை நாதர்நன் னுட்டிலிந்த
மான்முகத் திங்கள் புக்கு மலராதென் றன் வல்வினையே 18

## பாலனைப் பழித்தல்

கெங்கைச் சடாடவியார் நெல்லை நாதர் கிரிப்புயத்து
மங்கைத் தலத்துந் தவழ்ந்துசென் றே சென்று வாடவர்கைப்
பங்கப் பழம்புண் ணிடையே புதுப்புண் பரந்தவெங்கள்
கொங்கைக் குறியழிந்தா லைய ரெம்மைக் கோவிப்பரே 19

## அளி விலக்கல்

கேழற் பெருங்கொம் பணிநெல்லை நாதர் கிரியிற்கொங்கை
வாழப்பெறுத மருங்குகெட்டேன் வண்டு வாய் சுவைத்து
வீழக் கருங்கண் டிறக்குஞ் செங்காந்தளைக் காந்தளினஞ்
சூழப்பொறுது கண்டீர் பெற்ற தாயர் துயருறவே 20

## புனத்திடை யுருவெளி

கையுங் கவணு மிதணுங்கல் லோசையுங் காவல்செய்து
தொய்யும் புனமுமெய் தோன்றநிற்பீர் தொல்லை மாபுரமூன்
றெய்யுஞ் சிலைமுத்தர் நெல்லையஞ்சாலி வீச்செறிந்து
கொய்யும் புனமும் வைப்பா ரென்னமாய மிக்கோலங்களே 21

## புறந்தரல்

கொலைவேழ மொன்றுரித் தோர்நெல்லை நாதர் குளிர்சிலம்பிற்
கலைவேழந் தானெய்த காட்டிடையே யுமைக் கைப்பிடித்துத்
தலைவேழ முன்னிட்டன் றெம்மைப்பின்னால் விட்ட தண்ண
[ளிக்கோ
முலைவேழ முன்னிட்டின் றெம்மைப் பின்னாக முனிவுற்றதே 22

## கண்டோர் காதல்

கோணும் பிறைமுத்தர் நெல்லையஞ் சாரலிற் குன்றிவிந்நாள்
பேணும் புனமும் பிழைபட்டதால் பிறை வாயினம்பு
நாணுஞ் செறியுஞ் சிலைவேடரானு நம்மானு நல்லோர்
காணுங் கனித் தெய்வமே பிழையானதென் காதலர்க்கே 23

## முல்லையைப்பழித்தல்

கௌவைத் திரைக்கங்கை யார்நெல்லை மேற்கட னீர்விடுத்துச்
செவ்வைப்பட வளர்த்தே னிதற்கோ திங்கள் வெண்குடைக்கீழ்
பௌவத் திரைமுர சார்ப்பவில் வேளுக்குப் பாசறையாம்
மௌவற் றுனியரும்பிக் கணையாய் விட்ட வாறுநன்றே 24

## முகம் போதல்

சடைவிடு கங்கைக் களித்தோன் தென்னெல்லையிற் றுவியகட்
கடைவிட தாகுங் கனங்குழையீ ருந்தி கான்றகஞ்ச
மடைவிட தாகு மயன்றலை நாளி லனங்கனுக்குப்
படைவிடு வேணுமென் றேவெளி யாயிடை பாவித்ததே 25

## உண்டென மறுத்தல்

சாயின்ற பாவையன் னாளுக்கு வேலைமண் டாங்குரகன்
வாயின்ற மாணிக்கங் கொண்டுவந் தானு மணிமுடிமேற்
காயின்ற கொன்றை கமழுஞ் செம்பாதி கலந்தபச்சை
வேயின்ற முத்தன்றி வேறுமுண்டோ நெல்லை வெற்பிடத்தே26

### புனத்துடன் மொழிதல்

சினங்காலுஞ் சூலப் படையாளர் நெல்லைச் சிலம்பிலென்றன்
மனங்காளை பிற்செல்லச் செல்லுகின்றேன் வள்ளை பாடுங்கிள்ளை
யினங்காள் வெறுங்கவண்கா ளிதண்கா ளெம்மை யற்றவரும்
புனங்காளிங் கேது சொல்வீர் வந்துவாடும் புரவலர்க்கே 27

### பாலனைப் பழித்தல்

சீறுக் கருணையர் நெல்லையிலே யன்பர் சிந்தைதன்னை
மாறுக்கி விட்ட மதகளிறேவரிக் கெண்டை யங்கண்
ணூறுக்கி விட்டதும் போதாமல் வேங்கை யடைகிடந்த
தூறுக்கி விட்டனையே தமி யேனைத் துணைவருக்கே 28

### புனத்துடன் மொழிதல்

சுனைவிளை நீருண்டு யாம்புனங் காவற் றொழில்புரிந்தால்
தினைவினை வாமென் றுரைத்தசெல்லாந் தென்றற்கன் றுமுன்றில்
மனைவிளை யாடுந் திருநெல்லை நாதர் வரையில்வல்லி
வினைவிளை வாய் விட்டதே யிதுவோபின் விளைவதுவே 29

### சேவலைப் பழித்தல்

சூழிக் கரியுரித் தோர்நெல்லை மேற்குன் றந் தாள்படுத்துப்
பாழிச் சுடரிலை வேலன்வந்தால் திரைப்பாய் சுருட்டு
மாழிக் கதிரவனைக் கங்குல் யாமத்தழைக்க விந்தக்
கோழிக்கிது முறையோ தமியேனைக் குறை செய்வதே 30

### பருவங் கண்டழுங்கல்

செருவந்த சூலப் படையாளர் நெல்லைச் சிலம்பில்முன்னீர்க்
கருவந்தெழுந்த கருங்கொண்டல் காள் கலங் கிக்குமுறி
யுருவங் கருகிப் பரந்துகண் ணீர்சிந்தி யோடமுன்னாள்
பருவங் குறித்ததுண் டோவெம்மைப் போலொரு பைந்
[தொடியே 31

### குறங் கூறல்

சேலிற் றிகழ்விழி யாயிடகூ ழுன்பர் சேர்வரிந்த
சூலிக் கவுளி வலமுநன் றேதொல்லை யஞ்செழுத்தின்
மூலிக் கழைமுத்தர் நெல்லைக்குள் ளேமுன் முளைத்தெழுந்த
சாலிக் குறிபொய்க்கு மோகுறங் கூறல் தவறினுமே 32

### இல்லத்திருந்து சேவிலிவருந்தல்

சைவத் துறையன்பர் நெஞ்சினுள் ளார்நெல்லைத் தண்சிலம்பில்
மைவைத்த வேல்வைத்து வார்குழல் மேல்வைத்து மார்பில்
[வைத்து
மெய்வைத் திளகு முலைமுகத் தேவைத்து மேற்றெழுது
கைவைத்து வாங்குந் தழையைய நின்போலொன் றுங் கண்டிலமே

### அளி விலக்கு

சொரியுங் கதிர்ச்சுட ரன்றிச் சந்திரோ தயந் தோன்றமடல்
விரியுங் கமலமெங் கேபடைத்தீர் வெள்ளை வேதத்தனு
மரியுந் தொழுமரன் நெல்லையஞ் சாரல் வரையிருள்வாய்
வரியுங் கயல்விழி யிரெமை யாள வருவதற்கே 34

### தனக்குறி யுரைத்தல்

சோதிப்பிறை முத்தர் நெல்லையஞ் சாரற் சுரும்பிற்
விதிக் கடங்குமென் றேருவணிந்தீர் வெளிப்போந்த விந்த
வாதிப் பகிரண்ட மொன்றிரண்டாக வகுத்த விந்தப்
பாதிக் கடங்கு மல்லா லடங்காது பனைமுலையே 35

### வண்டோச்சி மருங்கணைதல்

சௌரியங் கொண்ட புயத்தா........தனித்திருந்து
கௌரிகொ ண்டாடும் பிரானெல்லை நாதர் கிரியிற்றென்றல்
கவுரிகொண் டாலு மிறுநுன் மருங்குலைக் கண்டுவண்டீர்
பவுரிகொண் டீர்குழன் மேலிசைக் காற்றுப் படப்படவே 36

### புறந்தரல்

ஞானந்திரண்ட திருமேனியார் நெல்லை நாட்டிற் றென்றல்
மீனங் கவரும் விழியணங் கேவண்டு மொய்த்தகுழற்
கானம் புகுந்துமென் காம விடாய்கெடக் கண்டதர
பானந் தரநினையிரினிப் போதும் பராமுகமே 37

### கழிக்கரைப்புலம்பல்

ஞெகிழிப் பொறிபட்ட சந்திரோ தயமின்ன மாரன்விட்ட
பகழிப் பசும்புண் படினென்செய் வேன்பொன்பரப்பிக்கொண்ட
புகழிற் றிகழ்கொன்றை வேயின் றமுத்தர் பொருப்பில் முன்னீர்
கழியிற் கரும்புள்ளு காளன்பர் வார்த்தையு மன்பற்றதே 38



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௰உ | தாது, வைகாசி | மலர் உ |
|---|---|---|

உ

## வல்வடுகு நான்கு

திரு. K. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B. A., B. L.,

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 1. பக்கம் 40)

செங்கமலதாஸ் பட்டத்திற்குரிய தகுந்த பிராயத்தை எய்தினன். இவன் நாகைப்பட்டினத்தில் வளர்ந்து வருவதைக் கேள்வியுற்ற, விஜயராகவ நாயக்கர் காலத்தே ராயம் வேலை (அஃதாவது அந்தரங்க காரியதரிசிவேலை) செய்துவந்த வெங்கண்ணா என்பவர் செங்கமலதாஸின் பரிதாப நிலையினை பீஜபூர் சுல்தானிடம் எடுத்துக்கூற, பீஜபூர் சுல்தான் மிகவும் மனமுளைந்து தன்னிடத்தே உயர்ந்த வேலையிலிருந்த வெங்காஜியை வெங்கண்ணாவுடன் அனுப்பி செங்கமலதாஸை அரசுகட்டிலில் ஏற்ற முயற்சி செய்யுமாறு கூறினான். வெங்காஜி பெரும் படையுடன் தஞ்சை மீது சென்றான். இதற்கு

முன்னரே இவரது வரவையும், பண்டையெடுப்பையும் கேட்டுணர்ந்து எதிர்பார்த்திருந்த அழகிரி நாயக்கர் சொக்கநாத நாயக்கரது உதவியை நாடினர். சொககநாத நாயக்கர் இவனுக்கு உதவிபுரியாது இவன்மேல் வெறுப்புக் கொண்டனர். வெங்காஜி அழகிரி நாயக்கரை முதுகிட்டுப் போர்க்களத்தினின்றும் ஓடும்படி துறத்தி செங்கமல தாஸுக்கு 1674-ல் பட்டம் சூட்டினர். செங்கமலதாஸ், வெங்காஜி தனக்குச் செய்தநன்றியை மறவாது அவரைக் குறுநில மன்னரைப்போல் ஒருயர்ந்த பதவியினை ஈந்து கும்பகோணத்தில் ஆண்டிருந்து வரும் வருட வாரியை வசூலிக்கவும் செலவழிக்கவும் தகுந்த உரிமையினை அவருக்குத் தந்தருளினர். வெங்காஜி, பீஜபூர் சுல்தான் இறந்தபின்னர் தானே தஞ்சையை ஆளவேண்டுமென ஓர் எண்ணங்கொண்டு பெரும் படையுடன் தஞ்சையினின்றும் செங்கமலதாஸைத் துறத்தி தஞ்சையை ஆளும் உரிமையினைத் தானே பெற்றனர். இவ்வாறு நியாயமின்றி தஞ்சையை கைப்பற்றிக்கொண்ட வெங்காஜியை முறியடிக்க அதுபோது மைசூரிலாண்ட நாயக்க மன்னர் பெரும் படையினை தஞ்சைக்கு அனுப்பினர். தஞ்சையில் எங்கு பார்த்தாலும் கலகமும் குழப்பமும் குடி கொண்டிருந்தன. இவ்வமயத்தே தக்ஷணத்தைப் படையெடுத்து வந்த சிவாஜி தஞ்சையின் கோட்டைகளை கைப்பற்றிக் கொண்டனர். வெங்காஜி யாவருக்கும் தெரியாவண்ணம் தஞ்சையைவிட்டு வெளிச்சென்றான். சிவாஜி, தன் இளையோன் சந்தோஜியினிடம் தஞ்சையை ஒப்பிவித்து விட்டு மீண்டும் வடக்கே சென்றார். சந்தோஜி தஞ்சையில் தனியேயிருக்கும் நிலைமையினைக்கேள்வியுற்ற வெங்காஜி தஞ்சையை படையெடுத்தான். இப்படை யெழுச்சியினால் வெங்காஜிக்கு ஒரு சிறிது நன்மையும் உண்டாகவில்லை. சந்தோஜி வெற்றியினால் தன் அரசுரிமையினை நிலை நிறுத்திக் கொண்டான். மராட்டியர்கள் தஞ்சையைத் தன் வசமே யாக்கிக் கொண்டபொழுது மதுரை நாயக்க மன்னர் மனமுடைந்து மராட்டியரோடு போர் புரிவாராயினர். கடைசியாக 1700-ம் வருடத்தில் தஞ்சை மராட்டியருக்கும் மதுரை நாயக்க மன்னருக்கும் பெரும் போருண்

டாகவே, இப்போரில் மராட்டியர்கள் வெற்றியின் மூலமாய் அரசாளும் நிலைமையைத் தஞ்சையில் நிலை நிறுத்திக் கொண்டனர். மராட்டியர்கள் தஞ்சையைத் தமதாளுகையில் வைத்துக்கொள்ளவே, தஞ்சை நாயக்க மன்னர் வம்சம் அடியோடு அழிவுற்றது.

## VI

**நாயக்க மன்னர்களது இறைமாட்சி.** தஞ்சையை நாயக்க மன்னர்கள் கைப்பற்றிக் கொண்ட பின்னர், தஞ்சையையும் தங்களையும் பகைவரினின்றும் காத்துக்கொள்ளப் பெரிய அகழ் சூழ்ந்து விளங்கும் கோட்டைகளைக்கட்டி மன்னுயிர்களைத் தம்முயிர்போன்றுக் காத்து நீதி தவறுதே செங்கோல் செலுத்தி உழவினாலும் வாணிபத்தாலும் நாட்டினது நீர் வளத்தினையும் நிலவளத்தினையும் சிறக்கச் செய்து இன்புற அரசாட்சி செய்தனர்.

தஞ்சையிலுள்ள இரு கோட்டைகளுள் சிறிய கோட்டையை சேவப்ப நாயக்கரும் பெரிய கோட்டையை விஜயராகவ நாயக்கரும் கட்டி வைத்தனர்.

நாயக்க மன்னர்கள் வைணவமதப் பற்றுடையவர்களாயினும் எம்மதமும் சம்மதமென்ற கொள்கையுடன் பிற மதங்களை வெறுக்காது அவைகளைக்காக்கும் முறையை நாடினார்கள். சேவப்ப நாயக்கர் தனது இராஜ்ஜியத்தில் அநேக வைணவக் கோயில்களைக் கட்டியும் சிவன்கோயில்களைக் கவனியாதிருந்தாரல்லர். இவர் திருவண்ணாமலையில் ஓர் திருக்குளம்தொட்டனர் கோயிலின் கோபுரத்தையும் புதுப்பித்தார். மற்றும் இவர் முகம்மதிய பக்கிரிகளுக்கு விசேஷ தானங்களும் செய்து அவர்களது மதத்தினைக் காத்தனர். அச்சுதப்பநாயக்கரும் சிதம்பரம் முதலிய தலங்களில் திருப்பணிகள் செய்தார்.

நாயக்க மன்னர்கள் இராஜ்ஜிய நிர்வாகம்செய்ய முழுவதும் திறமை வாய்ந்தவர்கள். இவர்கள் தங்களுக்குதவியாக ஓர் மந்திராலோசனை சபையைக் கூட்டி அச்சபையின் அங்கத்தினர்களோடு தீர்க்க ஆலோசனை செய்து நாட்டிற்கு நன்மையினை

பயக்கும் அரும்பெருங் காரியங்களைச் செய்தனர். மந்திராலோசனை சபையின் அங்கத்தினர் ஐவர்: அவர்கள் மந்திரி, பிரதானி, ராயசன், கணக்கன், ஸ்தானிகன் எனப்படுவர். மந்திரிகள் அரசனுக்கு நற்புத்தி புகட்டுவர்: சட்டங்களை ஏற்படுத்தி அரசனது அதிகாரங்கள் யாவும் தாமே அரசனது அனுமதியின் பேரில் செலுத்துவர். சில மந்திரிகள் தந்திரிகளாகவு மிருந்தனர். சேனைத்தலைவர்கள்தாம் தந்திரிகளெனப் படுவர். மந்திரி வேலையும் தந்திரி வேலையும் ஒருங்கே தெரியும் அதி நிபுணாதாம் தளவாய் எனப்படுவர். பிரதானி அரசரது வருவாயினையும் செலவினையும் நன்குணர்ந்து வருவாய்க்குத் தக்க படி செலவு செய்வான். அரசருக்குரிய அந்தரங்க காரிய தரிசியே ராயசன் என்றும், பண்டாரத்து வரவு செலவுகளைக் கவனித்துப்பார்ப்பவர் கணக்கர் என்றும் கூறப்படுவர். தூதரது தொழிலை இயற்றுபவர் ஸ்தானிகர் எனப்படுவர். இவர்கள் அரசனுக்குக் கருவிழி போன்றவர். வேற்றுருவமெடுத்து வேறு தேயம்புகுந்து ஆங்குள்ள இரகசியங்களைத் தெள்ளிதில் தெரிந்து வருவார். சேனாதிபதிகள் சில நாடுகளுக்குத் தனித்தலைவராய்ச் சிறந்து விளங்கினர். இவர்கள் ஒரு வருடத்திற்கு ஒரு முறையோ அல்லது இருமுறையோ தம் நாட்டினின்றும் வரும் வரியினை அரசரது பண்டாரங்களிற் செலுத்தி விடுவார்கள். மேலும் இவர்கள் போர்முனையில் தண்டத் தலைவர்களாயிருந்தும் போர் புரிவார்கள்.

நாயக்க மன்னர்கள் உழவே சிறந்த தொழிலெனவுன்னி அவ்வுழவுத் தொழிலை மேன்மை யுண்டாக்க ஆறுகள், ஏரிகள், வாய்க்கால்கள், குளங்கள் முதலியவைகளை வெட்டினார்கள். காவிரிக்குக் கல்லணையும் புதுப்பித்தனர்.

சேவப்ப நாயக்கர் தனது மந்திரி அய்யனைக் குறித்து ஞாபகச்சின்னமாக அய்யன் வாய்க்காலை வெட்டினர். வாணிபத்தையும் நாயக்க மன்னர்கள் கவனியாதிருந்தார்களில்லை. கைத்தொழிலைப் பெருகச் செய்ய அநேக தொழிலாளர்களை நாயக்க மன்னர்கள் தங்கள் நாட்டினில் குடியேறச் செய்தனர்.

நாயக்க மன்னர்கள் எவ்விதமாய் கல்வித் துறையினை மேம்படுத்தினரென்று அறிகுதும், இரகுநாத நாயக்கர் கல்வி கேள்விகளில் மிகச் சிறந்து விளங்கினர். இவர் இராமாயண சங்கிரகம் மகாபாரத சங்கிரகம், நளாப்பியுதம், அச்சுதாப்பிதயம், பாரிஜாதகரணம் முதலியவைகளை இயற்றினர். அச்சுதப்ப நாயக்கர் காலத்து அமைச்சுந் தொழிலை யுடையார் கோவிந்த தீக்ஷிதர், இவர் ஹரிவம்ச சார சரித்திரம் என்ற நூலை வெளியிட்டார். எக்ய நாராயண தீக்ஷிதர், ஸாஹித்ய ரத்னாகர காவியம், ரகுநாத பூபவிஜயம் என்ற நூற்களையும், ராஜசூடாமணி தீக்ஷிதர். சித்திரமஞ்சரி, ஸாஹித்ய சாம்ராஜ்யம், நியாயசூடாமணி என்ற நூற்களையும், பாஸ்கர தீக்ஷிதர் ஆத்மப் பரீட்சைக்ஷ, தப்தமுத்திரா வித்ராவணம் என்ற நூற்களையும் இயற்றினர். இவர்கள் நாயக்க மன்னர்களால் பெரிதும் ஆதரிக்கப் பட்டவர்கள். மேலும் இவர்களது காலத்தில் நாடகங்கள் சீர்பெற்று நின்றுலவின: அவைகள் பாரிஜாத ஹரண நாடகம், ஆனந்த ராகவம் இரகுநாத விலாசநாடகம் முதலியன. சங்கீத ஞானத்தினையும் பயிற்சியினையும் குறித்து கோவிந்த தீக்ஷிதர் சங்கீத சுதாநிதி என்ற நூலை இயற்றி யிருக்கின்றனர். ஒருமொழியை மறுமொழியில் பெயர்த்தெழுதல் அக்காலத்துப் புலவர்களுக்கு பேருவகையுண்டாக்கும் வழக்கமாயிருந்தது போலும். கோவிந்த தீக்ஷிதர் திருவையாற்றுப் புராணத்தை வடமொழியிலிருந்து தமிழ்மொழியில் பெயர்த்தனர். தெலுங்குபாஷையை நாயக்க மன்னர்கள் நன்னிலைமைக்குக் கொண்டுவந்தும் அவர்கள் தமிழ்மொழியினைக் கவனியாது விட்டாரில்லை. ஆகவே இதுகாறும் கூறியவாற்றால் தஞ்சை நாயக்க மன்னர்கள் குடிகளை ஓம்பி நீதிமுறை வழுவாது ஆட்சி செய்து வாணிபத்தையும் உழவினையும் கல்வித் துறையினையும் செவ்வனே சீர் திருத்தி நாட்டையாண்டனரென்பது போதரும்.

---

# கருதலளவைப் பகுதி

திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை

## 4-ம் அதிகாரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 1. பக்கம் 21.)

### 18. முதனிலை பிரதானமென்பது.

முதனிலை மற்றெல்லா நிலைகளிலும் சிறந்தது.

(அ) முதனிலை மாத்திரமே அந்நுவயக் காட்சியின் உரைமொழிக்கு அமைந்துளது.

(ஆ) முதனிலை மாத்திரம் உ ஊ ஏ ஏ என்னும் நால் வகைத் தாட்டாந்தங்களையும் நிரூபித்துக் காட்டும் வல்லமை உடையது.

(இ) முதனிலையில் உத்தரபதம் மத்தியபதம் பூருவபதம் தத்தம் நிலையில் நிற்பன. பொருள் விரியால் பூருவபதம் மத்திய பதத்தினும் மத்திய பதம் உத்தரத்தினும் விரிந்ததாக விருக்கும்.

(ஈ) சாத்திய வெழுவாய் சாதனத்திலும் எழுவாயாகவும் சாத்தியப் பயனிலை சாதனத்திலும் பயனிலையாய் நிற்கும்.

முதனிலை அந்நுவயக் காட்சியின் உரைமொழிக்கு அமைந் ததாகலின், அநேகசுத்தநிலை. சுத்தநிலை அந்நுவயத்துறைகள் பிரமாணங்களை நன்கு விளக்கிக்காட்டும். அரிஸ்தாதில் சுத்த நிலையே பூரண நிலையென வற்புறுத்தினர். சுத்தநிலை அந்நுவ யம் தமிழ் நாட்டு அந்நுவயத்தோடு ஒப்பாதலையும் உணர்க. சுத்த நிலை அந்நுவயங்களையே தமிழ் நூல்கள் கூறுகின்றன.

### 19. அந்நுவயக் காட்சியின் ஆதார உரைமொழி

கருதற்பொருள் எத்தன்மையதாயினும் கருதல் முறைக்கு ஆதாரமான ஒரு பிரமாணமொன்றை உரையாக அரிஸ்தாதில்

மொழிந்தனர். அவ்வுரை கருதலின் இலக்கணத்தை நன்கு வரையறுக்கிறது. ஒரு சிறப்புக் காட்சியை நிரூபித்தற்கு அச்சிறப்புண்மையை அடக்கியுள்ள ஒரு பொதுவுண்மை மேற்கோளாக எடுத்துக் காட்டி அதினின்று அச்சிறப்புண்மையை உணர்த்தலே அந்நுவயக் காட்சி.

சுத்த நிலையாகிய முதனிலையில் பூருவ சாதனம் மேற்கோளாகவும் உத்தர சாதனம் ஏதுவாகவும் நிற்கும். இவ்விரு சாதனங்களையும் உடன் நோக்கிச் சிந்தித்தலின் பயனாகிய காட்சி, சாத்தியப் பொருளை உணர்த்தும். அரிஸ்தாதில் தமது உரையை பின்வருமாறு அறைந்தனர். "யாண்டு ஒரு பண்பை உடன் பாடாகவேனும் எதிர்மறையாகவேனும் ஒரு வகுப்பு முழுவதற்கும் பயனிலையாக மொழிகிறோமோ ஆண்டு அப்பண்பை உடன்பாடாகவேனும் எதிர்மறையாகவேனும் அவ்வகுப்பைச் சேர்ந்த ஒவ்வொன்றிற்கும் மொழிகிறோம்." உரைமொழி மேற்கோளாகிய பூருவ சாதனத்தின் இயல்பை விளக்குகின்றது. உத்தர சாதனம் பூருவ சாதனத்தின் ஒரு சிறப்புக் காட்சியே புகையுடைமை தீயுடைமையைச் சுட்டுமென அறிந்தோமாயின் மலையினது புகையுடைமை மலையினது தீயுடைமையைக் குறிக்குமென்பது உள்ளங்கை நெல்லிக்கனி போற் புலப்படும்.

## 20 மில்லின் உரைகள்

பிற்காலத்தோர் அரிஸ்தாதிலினது உரை பொருள்விரியுள்ளுறை, மதந்தழுவி மொழியப்பட்டதென ஐயமுற்று உரையைக் கண்டித்தனர். மில்உரைமொழியைக் குற்றமுடையதென ஒதுக்கி பிரதியாக இருவேறு உரைகளைக் கூறினர். ஒரு உரை குண விரியுள்ளுறை மதந்தழுவுகின்றது. ஒரு பொருளின் கண் உடனிகழ்ச்சியாகவிருக்கும் இரு பண்புகள் ஒன்றுடன் வியாபகமாகவிருக்கும். எகரமும் விகரமும் ஒரு பொருளின் உடனிகழுங் குணங்களாயின் வியாபகமாகும். மற்ற உரை பொருள் விரிமதந் தழுவுகின்றது.

யாதேனும் ஒன்றைக் குறிக்கும் ஓர் குறி அவ்வொன்றை வேறோர் குறி குறிக்குமாயின் அக்குறியின் குறியாகும். விகரம் மகரத்தைக் குறிக்க, மகரம் எகரத்தைக் குறிக்குமாயின் விகரம் எகரத்தைக் குறிக்கும்.

ஒரு உரைக்குப் பதிலாக இருவுரை செய்தாமொழிப உரைமொழியை பிழையெனக் காட்டவில்லை என மாட்டினேனென்றும் ஆசிரியா மில்லைக் கண்டித்தனர். மில்லின் உரைகள் மிகை என்பதை வற்புறுத்தினர். சர்மானிய நாட்டுக் கான்ற் என்னும் தத்துவ நூலாசிரியர் அரிஸ்தாதிலது உரைக்கு நல்லுரை செய்தார் கான்றின் உரை வருமாறு.

ஒரு குறியினது குறி அக்குறியினது குறியின் குறியாகும். (whatever is a mark of a mark is the mark of that which the last was a mark of.) நான்கு மதத்தைச் சேர்ந்தோருக்கும் உரைமொழி உரையாகவிருக்கும். ஒவ்வொரு மதத்திற்கும் இசைந்தவாறு உரையை விளக்கலாம். பயனில்லை மதந்தழுவி உரை செய்கிறதே சிறப்பாகும். அவைகளுட் சிறந்தது கருத்தலளவை எனப்படும் வழியளவை. வழியளவையை நிலைநிறுத்தும் உரை அந்நுவயக் காட்சியின் உரை என்பதை அறிக.

## 21 நிலைமாற்றல். (Reduction.)

அந்நுவயக் காட்சியை நிலைநாட்டும் உரை முதனிலையை மாத்திரம் சுத்தனிலையாகக் காட்டுகின்றது. இரண்டாம் மூன்றாம் நிலைகள் பூரணமானவை அல்ல. இரண்டாம் மூன்றாம் நிலைகளின் துறைகளும் உண்மையாகும் என்பதைக் காட்டுதற்கு இந்நிலைத் துறைகளை முதனிலைத் துறைகளாக நிலைமாற்றிக் காட்டுவாம். இடமாற்றலே உடன் கருதல் முறைகளில் சிறந்ததாகலான் அதனையே அரிஸ்தாதில் நிலைமாற்றல் செய்யும்போது உபயோகித்தனர். நிலை மாற்றல் செய்யும்போது சாதனங்களைக் கீழ்மேலாக மாற்றியும் சாதனங்களை இடமாற்றியும் சாத்தியத்தின் மாறுகோளை முதனிலையாற் போலியெனக் காட்டியும் இரண்டாம் மூன்றும் நான்காம் நிலைத்துறைகளை

உண்மையென நிரூபிப்போம். இரண்டாம் நிலைத்துறை உ எ[இ] எ முதனிலை எ உ எ ஆகும்.

உ, ப—ம      உ, ப—ம
எ, எ—ம உத்தரசாதனத்தை இடம்மாற்றி எ, ம—எ

எ, எ—ப நான்காம் நிலையாக்கலாம்.

நான்காம்நிலைச்சாதனங்களைக் கீழ்மேலாக்கி முதனிலையாக்கலாம்

எ, ம—எ
உ, ப—ம

எ, ப—எ இச்சாதனத்தை இடமாற்றி எ, எ—ப வை நிரூபிக்கலாம்.

இ = இடமாற்று.      கீ = கீழ்மேலாகுதல்.
மா = மாறுகோள் நிலைமாற்றம்.

| | | | |
|---|---|---|---|
| இரண்டாம் நிலைத்துறை | உ எ[இ] உ | முதனிலை | எ உ எ ஆகும். |
| ,, | எ[இ] உ எ | ,, | எ உ எ ,, |
| ,, | உ ஒ ஒ[மா] | ,, | ———— |
| ,, | எ[இ] ஊ எ | ,, | எ ஊ எ ,, |
| மூன்றும் நிலைத்துறை | உ உ[இ] ஊ | ,, | உ ஊ ஊ ,, |
| ,, | ஊ[இ.கீ] உ ஊ[இ] | ,, | உ ஊ ஊ ,, |
| ,, | உ ஊ[இ] ஊ | ,, | உ ஊ ஊ ,, |
| ,, | எ ஊ[இ] ஒ | ,, | எ ஊ ஒ ,, |
| ,, | எ ஊ[இ] ஒ | ,, | எ ஊ ஒ ,, |
| ,, | ஒ உ ஒ[மா] | ,, | ———— |

நான்காம் நிலைத்துறைகளாகிய உ உ ஊ, உ எ எ, ஊ உ ஊ சாதனங்களைக் கீழ்மேலாக்கி சாத்தியத்தை இடமாற்றி முதனிலையாக்கலாம். நான்காம் நிலைத்துறைகளாகிய எ உ ஒ, எ ஊ ஒ என்பவற்றை இடமாற்றி நிலைமாற்றுக.

## 22. மாறுகோணிலை மாற்றம். (Indirect Reduction.)

அசுத்த நிலைத்துறைகளின் சாத்தியம் போலியெனின் சாத்தியத்தின் மாறுகோள் உண்மையாகும். இச்சாத்திய மாறுகோளை ஒரு சாதனமாகவும் ஆதிச் சாதனங்களில் ஏற்ற வாறு பூருவத்தையேனும் உத்தரத்தையேனும் மற்றச் சாதன மாகக்கொண்டு முதனிலைத்துறை ஒன்றை ஆக்குக. இங்ஙனம் கருதிப் பெறும் சாத்தியம் ஆதிச் சாதனம் ஒன்றைப் போலி யெனக்காட்டும். ஆதிச்சாதனங்கள் போலியல்லவாகலின் ஆதிச் சாத்தியத்து மாறுகோளாகிய சாதனமே போலியாதல் வேண் டும். அங்ஙனமாயின் இதன்மாறுகோளாகிய ஆதிச்சாத்தியம் உண்மை.

நிலைகள் குறையுடையனவல்லவாயின், நிலைமாற்றால் ஒரு சுகமுமில்லை. நிலைமாற்றம் நேர்நிலைமாற்றம் மாறுகோணிலை மாற்றமென இருவகைப்படும். மாறுகோணிலை மாற்றம் முறை வடிவக் கணிதத்தும் பயன்படுகிறது. உதாரணம் இரண்டாம் நிலை உ ஏ ஏ.

உ, ப—ம
ஏ, எ—ம ஆதித்துறை.

ஏ, எ—ப இச்சாத்தியம் போலியெனின் இதன் மாறு கோள் உண்மை.

உ, எ—ப
புதிய துறை உ, ப—ம ஆதிச்சாதனம்
உ, எ—ப சாத்திய மாறுகோள்.

முதனிலைச்சாத்தியம் உ, எ—ம
உ, எ—ம என்றும் சாத்தியம் ஆதிச்சாதனமாகிய ஏ, எ—ம வோடு மாறுகோளாதல் காண்க. உ, எ—ம போலியாதல் வேண்டும் போலியாக ஆதிச்சாதனம் உண்மையாகையால் உ, எ—ப போலியாதல் வேண்டும். உ, எ—ப போலியாக அதன் மாறுகோளாகிய ஆதிச்சாத்தியம் ஏ, எ—ப உண்மை யாகும்.

## 23. தொடையலியல் (Sorites.)

அந்ுவய முறையாக வாதிக்கும்போது மேற்கோள் வெளிப்படையாயின் அதை மொழியாது விடுதல் உண்டு. சில வேளைகளில் ஏதுவைக் கூறாமல் விடுதலும் உண்டு. பிரதிக்ஞை யை மொழியாது விடுதல் அணியொழியத் தருக்கமுறையன்று.

அந்நுவயங்களின் உறுப்பு எஞ்சி நிற்றலால், இவற்றினை எச்சவந்நுவயம் என்பேம். அந்நுவய எச்சங்கள் எல்லாம் முறையான அந்நுவயங்கள்.

(அ) பாரதயுத்தம் பெரியதோர் கொடும் யுத்தம், ஏனெனின் அது காப்பியங்களில் கூறப்பட்டுள்ளது. ஈண்டு யாது காப்பியங்களில் கூறப்படும் யுத்தமோ அது பெரியதோர் கொடும் யுத்தமென்னும் மேற்கோள் தொக்கு நிற்கின்றது.

(ஆ) காப்பியங்களில் கூறப்படும் யுத்தங்கள் எல்லாம் கொடும் யுத்தங்களாகையால் பாரதயுத்தம் பெரியதோர் கொடும் யுத்தம். ஈண்டு பாரதயுத்தம் காப்பியங்களில் மொழியப்படும் யுத்தமென்னும் ஏது தொக்கு நிற்கின்றது.

(இ) யாதியாது யுத்தம் காப்பியங்களில் மொழியப்படுகிறதோ அவ்வவ்யுத்தம் கொடும் யுத்தம். பாரத யுத்தம் காப்பியங்களில் மொழியப்பட்டுள்ளது. அந்நுவயங்கள் தொடையலாகவரும்.

| | | |
|---|---|---|
| முன்னந்நுவயம் | உ, | ம—ப |
| | உ, | எ—ம |
| | உ, | எ—ம |
| | உ, | த—எ |
| பின்னந்நுவயம் | உ, | த—ப |

இங்ஙனம் சாத்தியங்களை மறைத்து சாதனங்கள் பலவற்றைத் தொடையலாகக் கூறி ஒரு சாத்தியத்தைக் கூறுதல் தொடையல் எனப்படும். யவனர் முறை அரிஸ்தாதலால் கூறப்பட்டது. சர்மானியமுறை கொசிலினியருடைய முறை.

| யவனர் முறை. | | சர்மானிய முறை. |
|---|---|---|
| க = ங | சமன் | ஞ = ச |
| ங = ச | ,, | ச = ங |
| ச = ஞ | ,, | ங = க |
| ∴ க = ஞ | ,, | ∴ க = ஞ |

இக்கணித முறைகளை அந்நுவய முறைக்காட்சியாகக் காட்டுதும்

| | |
|---|---|
| க = ங உத்தரசாதனம் | ஞ = ச பூருவசாதனம் |
| ங = ச பூர்வசாதனம் | ச = ங உத்தரம் |
| ச = ஞ பூர்வசாதனம் | ங = க உத்தரம் |

உ, ங—ச பூருவம்
உ, க—ங உத்தரம்

உ, க—ச

உ, ச—ஞ பூருவம்
உ, க—ச உத்தரம்

உ, க—ஞ

உ, ச—ஞ பூருவம்
உ, ங—ச உத்தரம்

உ, ங—ஞ

உ, ங—ஞ பூருவம்
உ, க—ங உத்தரம்

உ, க—ஞ

யவனர் முறையில் முதற் சாதனம் உத்தர சாதனமாகையா லும் ஏனைய பூருவ சாதனமாகையாலும் முதற்சாதனம் மாத்தி ரம் சிறப்பாகலாம். முதலையும் ஈற்றையும் ஒழித்த சாதனங்கள் எல்லாம் உடன் பாட்டுப் பொதுவாகவே இருத்தல்வேண்டும். சர்மானிய முறையில் முதற்சாதனம் எதிர்மறையாகலாம். ஈற்றுச் சாதனம் சிறப்பாகலாம். ஏனையவெல்லாம் உடன்பாட் டுப் பொதுவாதல் வேண்டும்.

## 24. கணித முறைகளை அந்நுவய முறையாகக் காட்டேல்.

கணித முறைகளை அந்நுவயங்களாகக் காட்டவியலாதென ஐயுறுவர் சிலர். இக்கணித முறைகளும் அந்நுவயக் காட்சி யையே ஆதாரமாகவுடையன என்பது வெளிப்படை. கணித முறைகளை இலகுவாய்த் தருக்க முறையாக மொழியலாம். சில கணித முறைகளுக்கு மேற்கோள் கூறவியலாமல் சிலர் இடர்ப்படுதல் கூடும். தருக்கவாசிரியர் பிராட்லி (Bradley) என்பவர் இக்கணித முறைகளுக்குச் சில உரைமொழிகளை மேற் கோளாக மொழிந்தனர். க=ங=ச என்னும் கணித முறை யைக் கருதல் முறையாகக் காட்டுதற்கு, ஒரு பொருளுக்குச் சமனுகிய இரு பொருட்கள் தம்முட் சமன் என்னும் உரை யொன்றை மேற்கோளாக்கலாம். இது தொகைச் சமன் உரை. இங்ஙனம் தன்மைச் சமன் உரை எனப் பல உரைகளை பிராட்லி கூறினர்.

ஒரு பொருளுக்குச் சமனுகிய இருபொருள்கள் தம்முட்சமன்.
கவும் சவும் ங என்னும் ஒரு பொருளுக்குச் சமன்

ஆதலின் க = ச.

மேற்கோளில் ங என்னும் மத்திய மில்லையாகலின் இம்முறை குற்றமுடையதெனச் சிலர் ஆசங்கித்தமையால், பிராட்லி தனது முறையை மொழிந்தனர்.

(தொடரும்)

# வாழ் நாள்

திரு. வித்துவான், ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்

முற்றொடர்ச்சி துணர் 12 மலர் 1 பக்கம் 8.

இனி, டேவிட் என்பவர் மக்கட்கு வயது எழுபஃதென்றும், அவருள் உயர்குலமக்கட்கு ஐம்பதும், வணிகர் முதலிப் மடியிலா மக்கட்கு ஐம்பத்தைந்தும், உழப்பிற் காழ்த்த உடலுடையார்க்கு ஐந்து தலையிட்ட அறுபஃது என்றும், கைத்தொழிற்சாலையில் உழைக்கும் கருங்கை வினைஞர்க்கு எழுபஃது என்றும் வாழ் நாள் எல்லை வகுப்பர். மற்று, இவர் கூறிய ஆண்டெல்லை, மேலே துணிந்த நூறுண்டெல்லைக்கு முப்பஃது குறைதலும், அவலக் கவலை முதலியவற்றால் தவலா வாழ்வினர் பலர் இவர் கூறிய எல்லையின் மிக்குவாழ்தலுமுண்மையின், பொருந்தாமை எய்துகின்றது.

இனி, ஒரு சாரார் வாழ்வாவது இணைவிழைச்சுப் பெற்று இன்பநுகர்தற்குரிய நிலைமை யென்றும், அதற்குரிய காலமே வாழ்விற்குச் சிறந்த காலமாவது என்றும் கூறுவர். இந்நுண்ணுணர்வில்லார் இன்பத்தோடியைந்த வாழ்வு, இணைவிழைச்சின்பத்தோடியைந்த வாழ்வு இரண்டுநாளைய வாழ்வாயினும் அமையும் என்பர். உயிர்கள் வாழ்க்கைச்சாகாட்டையுகைக்குமிடத்து, விரையச்செலுத்தலுறின், இளமை, முதுமை முதலிய நிலைவகையல்லறப்பட்டு, ஏனை நிலைக்குரிய வலியும் திறனுமிழந்து, முதிரா முதுமையுற்றுப் பெரும் பிறிதுறுவர் என்பது அறிஞர்துணிபு. இத்துணிபினையுட்கொள்ளாராய், இப்பெற்றியோர், முதுக்குறைவும் இணைவிழைச்சும்பெற்று, முதுமையும், முடிவுநிலையாகிய சாக்காடும் விரையப்பெற்றுக் கழிவர். இது மேலேகூறிய கருங்கை வினைஞர்குழுவில் என்றும் காணப் பெறும் காட்சியாகும். பத்துமூன்றும் கடந்ததும் மகளிர் பருவ

மங்கையராய், அடுக்குமாண்டினில் அருமைத்தாயாராய், முப்பஃ தாண்டினில் முதுமையால் தாயர்க்குத் தாயராய் முதிர்ந்துகழி கின்றனர். ஆகவே, வாழ்நாளின் ஒரு பாற்பட்ட இணைவிழைச் சுக்குரியகாலமே வாழ்நாளாமென்றுணர்தல் அறியாமை யென் றறிதல் வேண்டும். இதுகாறும் கூறியவாற்றால், நம்மனோர்கண் டாங்கு உயிர்களின் வாழ்நாள் எல்லை வரையறுக்கப்படா தென்பது, மேனாட்டறிஞர் ஆராய்ச்சியும் ஓராங்கு நில்லாது பல் திறப்படுதலால் துணியப்படும். மக்கள் நூறாண்டின் மிக்கவாழ் நாள் உடையராதல்கூடும் என்பதும் இலக்கணம் காண்டற்குரிய அத்துணை இலக்கியமாக மிகப்பலர் உளராதலால் அறியலாம். ஆதலால் அந்நூறாண்டெல்லை ஒருதலையான வரையறையன் றென்பதே யாவரும் அறியவேண்டுவது. இதனைவிளக்கு முகத் தால் ஒருசில உண்மை நிகழ்ச்சிகளைக்கூறி இச்கட்டுரையினை முடிக்கின்றாம்.

1 கலாரியா சாப்பியாலா (Galaria Capiola) என்னும் பெரிய கூத்தர்மகளிருள் ஒருத்தி தான்பிறந்த தொண்ணூற் றென்பதுயாண்டுகட்குப் பின்னர், "நாடகப்பேரரங்கம்" என் னும் பெயர் நிலவுதல்காரணமாக பாம்பே (Pompey)என்னும் பேரரசன் சமைத்தநாடகப் பெருமேடையேறித் தன் ஆடல் பாடல்களால் அதனை மண்ணுறுத்தினள். அகஸ்டஸ் (Augustus) என்னும் மன்னர் பெருமான் றன் வாழ்வுநலமும், மெய்ந் நலமும் குறித்து நிகழ்த்தப் பெற்ற சிறப்புக்காலையினும் அந்நாடகமகள் மூன்றுமுறைப் போந்து நயம் வர நடித்தாள்.

2 பிரான்சு (France) தேயத்தில் வில்லியம் போஸ்டல் William Postel) என்பவர் நூற்றிருபதியாண்டு உயிரோடிருந் தனர். அந்நெடுவாழ்வில், அவர்தம் மீசைமயிருள் ஒன்றேனும் தன்கருமை நிறம் சிறிதும் குறைந்திலதெனின், அவர் உடல் வன்மைச் சிறப்பினை என்னென்பது! தலைமயிர் நரைத்தகாலை யும், தாடியும் கண்மயிரும் கறுத்திருத்தல் வியப்பன்று; மற்று, மீசை மயிர் வெளிறாதிருந்தமையே வியப்பாவது!

3 "வெஸ்பாசியன் என்னும் அரசன்காலத்தே, விதித்தற் கெடுத்த அந்நாட்டு அடங்கலில், நூறு வயதுடையார் ஐம்பத்து

நால்வரும், நூற்றுப்பத்தகவையர் ஐம்பதிற்றெழுவரும், நூற்றிருபத்தைந்தாண்டினர் இருவரும், நூற்றுமுப்பதுடையார் நால்வரும், நூற்று முப்பத்தைந்தாதல், ஏழாதல், உடையார் நந்நால்வரும் நூற்றுநாற்பது பெற்ருர் மூவரும் இருந்தனர்" என யவன ஆசிரியர் பிளினி (Pliny) என்பார் கூறுகின்றனர்.

4 அயோனிய நாட்டினையரசுபுரிந்த மன்னர் மன்னருள் ஆன்டனினஸ் (Antoninus) என்பார் ஒருவர். அவர் ஆட்சி காலத்து, மருத்துவ நூல்வல்ல காலன் (Galen) என்பார் நூற்றிநாற்பதியாண்டு உயிர்வாழ்ந்தனர். அவர் வாழ்க்கையில் இருபத்தெட்டாமாண்டில் ஒருநாளைப்பொழுது இவர் பிணியுற்றுக்கிடந்தனரேயன்றிச் சாகுநாள் காறும் நோய்முகங் கண்டிலர் என்ப. இவரே, "நோயின்றியன்றயாக்கையர்" என நக்கீரனுர் கூறிய மெய்மொழிக்கிலக்காகும் பான்மையர் என்க. இச்சீரிய வாழ்விற்கு அவர் உறுதியெனக்கொண்டன மூன்று என்ப. அவை "அளவறிந்துண்டலும், வேகாப்பண்டம் ஆகாவென வெறுத்தலும், செல்வுழியெல்லாம் நறுமணப் (Perfumes) தன்னெடுகொண்டேகுதலும்" ஆகும்.

5 புல்லர் (Fullre) என்னும் ஆங்கில நாட்டறிஞர் ஒருவர் எழுதிய நூற்கண், "ஹார்பாண் (Harbond) ஊரினரான ஜேம்ஸ் ஸான்ஸ் (James Sands) என்பார் நூற்றுநாற்பதுயாண்டும், அவர்மனைபாட்டி நூற்றிருபதுயாண்டும் வாழ்ந்தனர்; இவர் மணம் செய்துகொண்டபின், தம்நிலங்களை இருபத்தோருயாண்டு விழுக்காடு ஐந்துமுறைக் குத்தகை விடுத்தனர்," எனக்குறித்துள்ளார்.

6 ராலி (Raleigh) என்னும் பேரறிஞர் தாம் எழுதிய உலக வரலாற்று நூலில், "1589-ஆம் ஆண்டில் மன்ஸ்டர் (Munster) நாட்டில் வாழ்ந்த தேசுமாட்டியாரை (Countess Desmond) யான் அறிவேன். அவர் இங்கிலாந்து நாட்டையாண்ட எட்வர்டு IV மன்னர் காலத்தே திருமணம் செய்து கொண்டு பலஆண்டுகள் வாழ்ந்தனர் என்பது, அம்மஸ்டரில் வாழும் பலபெருமக்களும் அறிந்த செய்தியாகும். பேக்கன் பிரபு (Lord Bacon)

அச்சிமாட்டிக்கு வயது நூற்றுநாற்பதிற்குக் குறையாது; அவர்க்கு மூன்று முறை பற்கள் விழுந்து முளைத்தன,' என்று வரைந்துள்ளார்.

7 வின்னிங்டன் (Winnington) நாட்டு ஆல்பர்பரி (Alberbury) என்னுமிடத்தில் 1483 ஆம் ஆண்டில் ஜான் பார் என்பாருக்குத் தாமஸ்பார்(Thomas Parr)என்பவர் பிறந்து எண்பது ஆண்டுகாறும் மணவினையின்றியிருந்து பின், ஜேன் (Jane), என்னும் பெண்ணொருத்தியை மணந்து, அவரோடு முப்பத்திரண்டு யாண்டுகள் வாழ்ந்தார். அக்காலவெல்லைக்குள். அப்பெண் இரண்டுமக்களைப் பயந்தாள். அவற்றுள் ஒன்று ஒரு திங்களும், மற்றொன்று சிலயாண்டுகளுமிருந்து, பின்னர் இறந்தொழிந்தன.

பத்துயாண்டுகட்குப்பின், இவர்தம் நூற்றிருபதாம் ஆண்டில் காதரைன் மில்டன் (Catharine Milton) என்னும் குமரியைக்காதலித்து மணந்து, ஒருமகனைப் பெற்று, தம்நூற்றியைம்பத்திரண்டாமாண்டில் உயிர்துறந்தார். இவர் இறப்பதற்கு இருதிங்களின்முன் அருண்டேல் நாட்டுத்தலைவரான தாமஸ் (Thomas, Earl of Arundale) என்பார் வெஸ்டு மினிஸ்டர் (Westminister) என்னுமிடத்திற்குக் கொண்டு போந்தனர். இதனை நோக்க ஆசிரியர் நக்கீரனார் "அறுநான்கிரட்டியிளமை நல்லியாண்டு, ஆறினிற் கழிப்பிய அறன்நவில் கொள்கை" யரைக்கூறியதுபுனைந்துரையன்மைபுலனாம். அங்கு, இவர் பெரும்பாலானகாலத்தை உறங்கியே கழித்தார். அக்காலத்து இவரைக் காணப் போந்த மக்கள் மிகப்பலர்; தாம்தங்கிய விடமும், உண்ட உணவும் தம்முடலுக்கு ஒவ்வாமையின், விரைவில் 1635 ஆம் ஆண்டின் நவம்பர்த்திங்கள் பதினைந்தாம் நாள் விண்ணுலக நெடுவாழ்வை விரும்பி யேகினர். இவ்வகைய நீடியவாழ்க்கையர் அரியர் ஆகலின், இவருடல் வெஸ்ட் மினிஸ்டரைச்சார்ந்த இடுகாட்டுக் கோட்டத்தே இடம்பெற்றுளது.

8 "யார்க்ஷயர் (Yorkshire) நாட்டைச் சேர்ந்துள்ள போல்டன் (Bolton) என்னுமிடத்தே என்றிஜென்கின்ஸ் (Henry

Jenkins) என்னும் பெயருள்ள ஒருவர் இருந்தனர். அக்காலத்தே நீதிமன்றத்தில் நிலவழக்கொன்றின் பொருட்டுச் சான்று பகர்தல் வேண்டி இவர் போந்திருந்தார். இவருடன் அம்மன்றத்தே எண்பது வயது நிரம்பியசான்றோர் இருவர் வந்திருந்தனர். அக்காலை, நீதிபதி, ஹென்ரியை நோக்கி, "ஐயன்மீர், முதுமைமிக்க சான்றோர் இருவர் வேறே உளர் என்பதனைப்புட்கொண்டு, நீவிர் கூறுவதனை நன்கு நினைந்து கூறுமின்", என்றனர். என்றார்க்கு இவர், "அறிஞர் பெரும, அவ்விருவரையும் அவர்தம் இளமையினின்றே யறிந்துளேன்; அவர் பிள்ளைப்பருவத்தே துள்ளியாடியசெய்கை என்நினைவின்கண்நிற்கின்றது", என்று இசைத்தனர். அதுகேட்ட நீதிபதி, வியப்புற்று, அவ்விருவரையும் நோக்கினாராக, அவர்தாமும், "அறவோர்தலைவ, இப்பெரியார் யாம் அறிந்தவரே. யாங்கள் பள்ளிபிற்பயிலும் போதே, இவர் எம்மிற்பலயாண்டு மூத்துத் தோன்றினர்; எம்மின் மூத்துள யாண்டுகள் இத்துணைய வென்றலும் எங்கட்காகாது", என்று வலியமொழிந்தனர். இச்செய்தியைக் கூறும் தாங்க்ரைட் ராபின்சன் ( Tankrite Robinson ) என்னும் அறிஞரும், "ஹென்ரி ஜான்கின்சனுக்கு ஹென்ரி VIII என்னும் இங்கிலாந்து வேந்தனும், பிளாடன் பீல்டு (Flodden Field) என்னுமிடத்து நிகழ்ந்த போரும் நன்குதெரியும்; அக்காலத்து அவர்க்கு வயது பன்னிரண்டு; இவர் 1670 ஆண்டு டிசம்பர்திங்கள் எட்டாம் நாள் தம் நூற்றியறுபத்தொன்பதாம் ஆண்டில் எலர்ட்டன் அப்பான்ஸ்வேல் என்னுமிடத்தே தம் இம்மை வாழ்வுநீத்தார்,"

இனி, நம்நாட்டிலும் நீண்ட ஆயுளையுடைய மக்கள் இருந்திருப்பர் என்றதற்கு ஐயமில்லை, எனினும் எடுத்துக் காட்டுதற்குரிய சான்றுகள் கிடைத்தல் அருமையென்று கோடல் வேண்டுமேயன்றி, அப்பெற்றியோர் இருந்திலர் என்று கோடலாகாது. வீசை மயிரின் கருமை குலையாதிருந்த ஜாரன்பார் என்பாரைப்போல யாண்டுபலவாகியும் நரை திரையின்றி உடலுரங்கொண்டிருந்த பிசிராந்தையார், அருநெல்லிக்கனியுண்டு பலவாண்டுகள் வாழ்ந்த ஔவையார் முதலியபலரும் உளர் என்று உணர்தல் வேண்டும்.

"இன்றுளேம் நாளையில்லோம்," இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென் றெண்ணவோ திடமில்லை;" என்றெல்லாம் கூறியபெரியார் சொற்களின் கருத்தை உணராமல், "நாளைக் கிருப்பது நாமறியோம்" என்றுகூறி மடியுற்று, தாளாண்மை, கல்வியறிவுடைமை, ஒப்புரவுடைமை முதலிய நற்செய்கைகளைக் கைவிட்டுத் திரியாது, நாம் நூறாண்டினும் மிக்கயாண்டு வாழ்தல் கூடும் என்னும் உணர்வுடன் வாழ்தலே யாவரும் வேண்டுவ தாகும். ஆதுங்கால் வினைப்பயன்களின் பெருமை சிறுமைகட் கேற்பக்காலம் நீடலும் குறுகலும் உண்டென்பதனை யுட் கொண்டு, அதனால் பயன்நுகர்ச்சியை நெடிது துய்த்து, அத் துய்ப்புக்குத் துணையாகும் காலத்தை நல்வினையாக்கத்தே செல விடுதல் அயராவின்பம் அடைதற்குரிய ஆக்கமாம் என்றறிந் தமைதல் வேண்டும்.

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்."

---

# தமிழ்ப் பத்திரிகையின் வரலாறு

திரு. ப. கலியாணசுந்தரம் பிள்ளை, அவர்கள், B. A. (Hons.)

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 1. பக்கம் 16.)

இந்நாளில், கற்றார், கல்லாதார் என்னும் இருதிறத்தார் மனத்தையும் ஒருங்கே கவர்ந்து நிற்கும் தேசியப் பத்திரிகை களைப்பற்றிய சில சொற்கள் கூறுதல் இன்றியமையாததாகும். சுமார் ஐம்பதாண்டுகட்கு முன்னர் இந்நாட்டு மக்கள் அரசியல் முறைகளைக் குறித்தறியும் ஆர்வம் சிறிதும் அற்றவராய் அமைந்திருந்தார்கள், அக்காலத்தில் பொது ஜனங்களிடையே நிலைத்திருந்த அறியாமையென்னும் இருளைப் போக்கி அறிவுச் சுடர் கொளுத்தும் கடமையை அரசாங்கத்தினரே ஏற்று நடத் தியதாகத் தெரிகின்றது. சுதேச பாஷாபிவிருத்தி சங்கத்தின

ரால் பரிபாலிக்கப்பெற்ற ஜனவிநோதினி என்னும் பத்திரிகை சரித்திர சம்பந்தமான பொருள்களையும் அரசர், அறிஞர், வீரர் முதலியோர் வரலாறுகளையும் ஆங்கிலத்தினின்றும் மொழி பெயர்த்து தமிழ்மாந்தர்க்கு அறிவூட்டி வந்தது. கடினமான நடையை அறவே யொழித்து சிறுவரும் எளிதில் உணருமாறு நாடகக் கதைகளும் நவீனக் கதைகளும் இப்பத்திரிகையில் விளங்கினமையால் கற்றோர்க்கன்றி மற்றோர்க்கும் அது பயன் படுவதாயிற்று. இப்பத்திரிகையில் வெளிவந்த வியாசங்களைத் தொகுத்துப் புத்தகவடிவமாக்கி இக்காலத்திய மாணவர்க்குப் பயன்படுமாறு ஜனவிநோதினி என்னும் பெயரால் சென்னை நல்லாசிரியன் பத்திராசிரியர், நமச்சிவாய முதலியார் பதிப் பித்து வருகின்றார். இன்னும் சென்னையில் வெளிவந் துலவிய தினவர்த்தமானி என்னும் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்ட சிறந்த வியாசங்களை வீராசாமிச் செட்டியார் தொகுத்து விநோதரச மஞ்சரி என்னும் பெயரால் வெளியிட்டுதவினர். இந்நூலிற் காணப்படும் கம்பர் சரித்திரம், ஒட்டக்கூத்தர் சரித் திரம், புகழேந்திப்புலவர் சரித்திரம், ஏகம்பவாணர் சரித்தி ரம் முதலிய வியாசங்கள், இனிய எளிய தமிழ் நடையிலமைந்து கற்றுவல்ல பெரியார்க்கும், கல்வி பயிலும் மாணவர்க்கும் கழி பேருவகை விளைப்பனவாகும். மேற்கூறிய ஜனவிநோதினி என்னும் மாதப் பத்திரிகையும், தினவர்த்தமானி என்னும் வாரப் பத்திரிகையும், காலகதியால் இறந்தொழிந்தது வருந்தத் தக்கதேயாகும். இனி சென்னையில் சிறந்த தினசரிப் பத்திரி கையாக விளங்கும் 'சுதேசமித்திரன்' வரலாற்றை சுருக்கமாகக் கருதுதல் அவசியமாகும். இப்பத்திரிகை 1880ம் வருஷத்தில் G. சுப்பிரமணிய ஐயரும் அவர் நண்பர் ஒருவரும் சேர்ந்த கூட் டின் ஆதரவில், ஒரு வாரப் பத்திரிகையாகத் தொடங்கப்பட் டது. இவ்விரு நண்பருக்கும் ஏற்பட்ட கூட்டுக்கலைந்தபொழுது இப்பத்திரிகை திரு. சுப்பிரமணிய ஐயர் பொறுப்பிலே சிறப் பாக நடைபெறலாயிற்று. பத்திரிகையின் பண்பறியாத பாமர மக்கள் சமூகத்தில், சுதேசமித்திரனைப் பரப்புதற் பொருட்டு ஐயரவர்கள் பட்டசிரமம் மிகப்பெரிதென்பர்; மெய் வருத்தம்

பாராது, பசிநோக்காது, கண்துஞ்சாது, மதியாதார் வாசலி லும் சென்று பத்திரிகையின் அளவிறந்த பயனை எடுத்துரைத்து அறியா மக்களை சீர்திருத்த முன்வந்த ஐயரது ஆர்வம் அறிந்து போற்றுதற்குரியதாகும். ஐயரவர்கள் ஆதரவில் மித்திரன் வாரம் மூன்றுமுறை வெளிவரும் பத்திரிகையாக மாற்றப்பட்ட பின்னும் சிலகாலத்தில் தினசரிப் பத்திரிகையாயிற்று. ஐய ரவர்கள் 1915-ம் வருஷம் இம் மண்ணுலக வாழ்வை நீத்த பின் னர் அரங்கசாமி ஐயங்காரவர்கள் சுதேசமித்திரன் பத்திராசிரிய ராக அமர்ந்து மிக ஊக்கமாகவும், செவ்வையாகவும் அப்பத்தி ரிகையை நடத்தி வருகின்றார்கள். இவ்வாறு மெல்ல மெல்ல பத்திரிகைகள் பொது மக்கள் மனத்தைக் கவர்ந்து வரும் காலத்து, தென்னாப்பிரிக்காவில் போயருக்கும் ஆங்கிலேயர்க் கும் பெரும் போர் மூண்டது. இந்நாட்டில் உலாவிவரும் ஆங் கிலப் பத்திரிகைகளில் அப்போர் நிகழ்ச்சிகள் பெரிய கண் ணெழுத்துக்களால் பொறிக்கப்பட்டு, மக்கள் கண்ணையும் கருத் தையும் ஒருங்கே கவர்ந்தன. ஆங்கிலம் கல்லாத பொது ஜனங் களும் போயர் யுத்தத்தைப் பற்றிய செய்திகளை அறிய ஆவலுற் றார்கள். காலணா விலையில் பல தமிழ்ப் பத்திரிகைகள் வெளிவந் தன; பைப்பத்திரிகை என்னும் பெயரோடு ஒரு பைசா விலைக்கு விற்கும் ஒரு தினசரிப் பத்திரிகை சென்னையில் புறப்பட்டது. புதுவை என்று பெயர் பெற்ற புதுச்சேரியில், போயர் யுத்தத் தைக் குறித்து பலபடப் பேசும் பத்திரிகைகள் புலபுலெனப் புறப்பட்டன. புதுவை நேசன், புதுவை விநோதன் முதலிய பத்திரிகைகள் இவ்வகையைச் சேர்ந்தனவாம். இவ்வாறு போ யர் யுத்த காலத்தில், அதாவது இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய காலணாப் பத்திரிகை இக்காலத்தில் யாவர் கையிலும் காணப்படுகின்ற, சுதந்திரச் சங்கு, காந்தி, வெடிகுண்டு, விகட சக்கரம் முதலிய குறைந்தவிலைப் பத்திரி கைகளுக்கு வழிகாட்டியாக நின்றன. பொதுமக்களிடையே போயர் யுத்தத்தால் தோன்றிய ஊக்கமும் கிளர்ச்சியும் ஜப்ப னுக்கும் ருஷியாவிற்கும் நிகழ்ந்த பெரும்போரில் பின்னும் ஊற்றமுறுவதாயிற்று. விரிந்த பரந்த ருஷிய தேசத்தை சிறு

நாடாகிய ஜப்பான் வெற்றிபெற்ற செய்தியைப்படிக்கவும் கேட்கவும் பாமர மக்கள் ஆசையுற்றார்கள். சென்னையில் மட்டுமே யன்றி வெளியூர்களிலும் பல பத்திரிகைகள் தோன்றுவனவாயின. சர்வஜனமித்திரன் என்னும் சிறந்த பத்திரிகை, திருநெல்வேலியில் வெளிவந்தது. திரிசிரபுரத்து திருச்சி நேசன், அமிர்தவசனி முதலிய பல பத்திரிகைகள் தோன்றின. சேலத்தில் திராவிட அபிமானி எழுந்தது. இவ்வாறு ஆங்காங்கு தமிழ்நாட்டின் பல பாகங்களிலும் தோன்றிய பத்திரிகைகள் பொதுமக்கள் மனத்தில் சுதந்தர வேட்கையை மெல்ல மெல்ல எழுப்பி வளர்த்தன. இங்ஙனம் பத்திரிகை படிக்கும் பழக்கம் வளர்ந்து வரும்பொழுது பெரிய ஐரோப்பியப் போர், தொடங்கிற்று. பத்திரிகை நடத்துவதற்கு இன்றியமையாத பொருள்களெல்லாம் விலையேறினமையால், பல எளிய பத்திரிகைகள் அழிந்தொழிந்தன இந்நெருக்கடியான காலத்தில் தப்பிப் பிழைத்த பத்திரிகைகள் மிகச் சிலவேயாம்.

ஆயினும் சென்னைமா நகரில் ஓர் புதிய இயக்கம் தோன்றியதன் பயனாக, திராவிடன் என்னும் தினசரிப் பத்திரிகை பெருமுழக்கத்தோடு வெளிவந்தது. பிராமணரல்லாத பெருந்தொகையினர் அரசாங்கத்தில் தமக்குரிய பதவிகளைப்பெற்று உயரவேண்டு மென்னும் கொள்கையினை அடிப்படையாகக் கொண்ட இப்பத்திரிகை, பிறப்பினடியாகப் பிறந்த பழம் பெருமையைத் தகர்த்து எறியத்தலைப்பட்டது. சென்னையில் அமைந்துள்ள தென்னிந்திய மக்கள் சங்கத்தின் (South Indian peoples association) ஆதரவில் சென்ற பத்தாண்டுகட்கு மேலாக நிகழ்ந்து வரும் இப்பத்திரிகை தமிழ்நாட்டில் பல பாகங்களில் பரவி பிராமணரல்லாதார் சமூகத்தில் புதியதோர் உணர்ச்சியையும் கிளர்ச்சியையும் உண்டாக்கி வந்தது. இனி தேசீயத் தொண்டாற்றும் முறையில் இன்னும் இரு தினசரிப் பத்திரிகைகள் இப்பொழுது சென்னை மாநகரினின்றும் வெளிப் போந்துலாவக்காண்கின்றோம். தமிழ்நாடு என்னும் பெயரோடு சென்ற சில ஆண்டுகளாக இயங்கும் பத்திரிகை முதலில் வார வெளியீடாகத் தொடங்கிப் பின்னர் தினசரியாக வளர்ந்தது.

இனி, சில மாதங்களுக்கு முன் சென்னையில் தோற்றுவிக்கப்பட்ட 'இந்தியா' என்னும் பத்திரிகையும் சமத்துவம், சகோதரத்வம், சுதந்தரம் என்னும் முப்பொருளையும் குறிக்கோளாகக் கொண்டு இதுகாறும் மிக ஊக்கமாக நடைபெற்று வந்தது. தேசியப் பணியோடு தமிழ் மொழிக்கும் பணி செய்யும் நன்னோக்கத்தோடு இந்தியா வாரப் பத்திரிகையும் சில வாரங்களுக்கு முன்னர் தோன்றுவதாயிற்று.

இவ்வாறு நான்கு சிறந்த தினசரித்தாள்கள் தோன்றித் தொண்டு புரியும் சென்னைமா நகரில் சில சிறந்தவாரப் பத்திரிகைகளும் செவ்வையாய் நடைபெற்று வருகின்றன. பல்லாண்டுகளாக மாதப் பதிப்பாக தமிழ் நாட்டு மக்கள் மனத்தைக் கவர்ந்து மகிழ்வூட்டிய, ஆனந்த போதினி என்னும் பத்திரிகையை நடத்தும் ஆசிரியர் சென்ற மூன்றாண்டுகளாக ஓர்வாரப் பதிப்பும் வெளியிட்டு வருகின்றார். சுதேசமித்திரன் வாரப் பதிப்பும் கண்களைக் கவரும் சித்திரங்களோடும் கருத்தைக் கவரும் சிறுகதைகளோடும் எங்கும் உலாவி வருகின்றது. இவ்வாறே தமிழ் நாடென்னும் பத்திரிகையின் வார வெளியீடும் உண்டு. இனி தொழிலாளர் சார்பாகத் தோன்றி நிலவும் நவசக்தி என்னும் வாரப்பத்திரிகை செந்தமிழ்ப் பத்திரிகைகளுள் சிறந்தவொன்றாகும். அதன் ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், செந்தமிழ்மொழியில் செவ்விய நடை எழுதும் திறமை வாய்ந்தவராதலின் இப்பத்திரிகையில் தமிழ்மணம் சிறந்து வீசக்காணலாம். பெரும்பாலும் காந்தியடிகள் கொள்கைகளைத் தழுவி நிற்கும் இப்பத்திரிகை சிறப்பாகத் தொழிலாளர் நலங்கருதி உலையாத ஊக்கங்கொண்டு உழைத்து வருகின்றது.

இனி, மேற்கூறிய அறுவகையினுமடங்காது தன்னந்தனியாக ஒவ்வோர் துறைபற்றி முயலும் பத்திரிகைகளும் இந்நாட்டில் காணப்படுகின்றன. நூற்றுக்குத் தொண்ணூறு மக்கள் வேளாண்மைத் தொழிலியற்றும் இத்தமிழ்நாட்டில் பல ஆண்டுகட்கு முன்னரே 'கிருஷிகன்' என்னும் ஓர் மாதப் பத்திரிகை

தோன்றுவதாயிற்று. வேளாண்மைக்குரிய பல சிறந்த கட்டுரைகள் இப்பத்திரிகையில் வெளிவந்திருக்கின்றன. ஒரு நெல் விளையுமிடத்து பல நெல்லை விளைப்பதற்கு வேளாண் மக்களைத் தூண்டுமாறு எழுந்த பத்திரிகை இத்தமிழ் நாட்டில் அதிகமாகப் பரவாதிருத்தல் விசனிக்கத் தக்கதாகும். பழமையை விடாது பற்றும் பண்புவாய்ந்தவராகக் கருதப்படுகின்ற வேளாளர், உள்ளதே போதுமென்னும் உயரிய கொள்கையை மேற்கொண்டவராதலால், புதியமுறைகளைக் கையாளப், பெரும்பாலும் மனமற்றவர்களாகவே இருக்கின்றார்கள். இந்நாட்டில் தொன்றுதொட்டு நிகழ்ந்துவரும் வேளாண்மைத் தொழில் சீர்மையுற்றுச் சிறக்கவேண்டுமாயின் மேலைநாட்டு அறிஞர் ஆராய்ந்து கூறும் விவசாய முறைகளை, நாமும் நன்குணர்ந்து, கொள்ளத் தகுவனவற்றைக் கொண்டு அனுபவ முறையில் கையாதலால் அவசியமாகும். இனி இந்நாட்டிற்கு மிக அவசியமான கைத்தொழில்களைக் குறித்துப் பேசும் பத்திரிகளைும், மேலைநாடுகளில் நாளுக்குநாள் வளர்ந்தோங்கிவருகின்ற, பௌதிக சாஸ்திரக் கருத்துக்களை தமிழ்நாட்டில் தெள்ளத் தெளிய எடுத்துரைக்கும் பத்திரிகைகளும் இல்லாதகுறை ஓர் பெருங் குறையாகவே காணப்படுகின்றது.

நாகரிகமுற்ற மேலைநாடுகளில் புதிது புதிதாகத் தோற்றுவிக்கப்படுகின்ற மின்சாரவேலைகளும், கணிதநூலாராய்ச்சிகளும் விண்ணிலே இயங்கும் பொறிகளின் தன்மைகளையும், கருங்கச் செல்லுமிடத்து மேலைநாட்டுமக்கள் அறிவின் நுணுக்கத்தால் ஆராய்ந்து கூறும் பல தெள்ளிய உண்மைகளையும் நாம் தெளிவாக அறிந்து கொள்ளுதற்குரிய முறையில், தமிழ்ப் பத்திரிகைகள் தோன்றவேண்டும். தமிழ் மொழியில் தெள்ளிய கவி நலம் சான்ற நூல்களும், நுண்ணிய இலக்கணங்களும் உயிர்ப் பண்பை வளர்க்கும் உயரிய நூல்களும் அதிகமாகக் காணப்படினும், இக்காலத்தில் நாகரிமுற்ற நாடுகளில் வளர்கின்ற நற்கலைகள் நம்மொழியில் இல்லையென்னும் குறையை நாம் உணர்ந்து ஒப்புக் கொள்வதில் யாதும் இழுக்கில்லை. இக்குறையை நன்கறிந்த பாரதியார்

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள் தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டோர் அதை வணக்கம் செய்தல் வேண்டும்"

என்று முழங்குகின்ற மொழிகள் நம் செவிகளில் ஒலிக்கின்றன. இக்கவியில் 'மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை' என்னும் மூன்றாவதடியை மூன்றுமுறை கோடிட்டு பத்திராசிரியர்களும் நாமும் மனத்தில் பதிக்கவேண்டும். பழம் பெருமை பேசி மகிழும் நம் பழக்கத்தை நன்கறிந்த பாரதியார் அப்பழக்கத்தை அறவே ஒழிக்கக் கருதி இவ்வாறு பறை சாற்றுகின்றார். முன்னோர் பெருமையைப் பேசி மகிழும் பழக்கம் வரம்பிகந்து செல்லுமாயின், பிறர் பிறர் நகைத்தற்கே இடமாகும். 'கல்லா ஒருவன் குலநலம் பேசுதல் நெல்லினுட் பிறந்த பதராகும்மே' என்னும் அமுத வாக்கின் பொருளை நாம் நன்கறிந்து ஒழுகுதல் வேண்டும். இக்காலத்தில் எழுந்துலாவிவரும் தமிழ்ப் பத்திரிகைகளில் ஏதேனும் ஒன்றை எடுத்துப் பிரித்துப் பார்ப்போமாயின் தமிழ்மொழியின் பெருமை விரிவாக பேசப்பட்டிருக்கக் காணலாம். மேலைநாட்டுப் புலவர்கள் தம் மொழியின் செம்மையை ஒலியிலக்கண முறையிலும், தாதுப் பொருள் முறையிலும் ஆராய்ந்து தம் மொழிகளின் திட்பநுட்பங்களை பல்லோரும் அறிய விரித்துரைக்கும் பான்மையைக் காண்கின்றோம். ஆனால் நம் நாட்டு அறிஞர் தமிழின் நீர்மையை பேசத் தலைப்படும் பொழுது'தொண்டர்நாதனைத் தூதிடைவிடுத்தது,முதலையுண்ட பாலனை யழைத்தது, திருமறைக் காட்டில் கதவினைத்திறந்தது, பொருப்பிலே பிறந்தது, தென்னன்புகழிலே கிடந்தது, இன்னும் அதன்பெருமையை மதுரை மூதூர்நீரறியும் நெருப்பறியும் என்று இவ்வாறாகப் புகழ்ந்துரைக்கக் காண்கின்றோம். இப்புகழுரையெல்லாம் தமிழ் மொழிக்குப் பொருந்துமே யாயினும்

அதனை மீண்டும் மீண்டும் பன்னுவதால் நம் தமிழ்மொழி ஓர் அங்குலமளவும் வளர்ந்துவிடாதென்பது திண்ணம். டாக்டர் கால்ட்வெல், (Caldwell) முதலிய மேலைநாட்டுமொழி நூற்புலவர், தமிழ் மொழியை நன்காராய்ந்து அதன் செவ்விய இயல் ஒப்பிலக்கண வாயிலாக நன்குணர்த்திப் போந்தார்கள். அன்னார் வழியில் நின்று, தமிழ் மொழிக்குத் தொண்டு புரிவதே, தமிழ் இலக்கியப் பத்திரிகைகளின் தலையாய கடமையாகும்.

இனி இறுதியாக அருங்கலை வளர்க்கும் பத்திரிகைகளினவசியத்தைக் குறித்து இரண்டொரு சொற்கள் கூறி முடிக்கக் கருதுகின்றேன். மேலை நாடுகளில் ஓங்கிவளரும் நுண்ணிய கலைகளிற் பௌதிகம் ரசாயனம் பல நம் அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் போதிக்கப்பட்டு வருகின்றன. அச்செவ்விய கலைகளை ஆழ்ந்து பயின்ற அறிஞர் பலர் அண்ணாமலை நகரிலேயே வசிக்கின்றார்கள். இத்தகைய அருங்கலை விநோதர் ஒருங்கு சேர்ந்து வாழும் இடமே தமிழ் மொழி புத்துயிர் பெறுதற்குத் தக்க இடமாகும். மேலைநாட்டுக் கலைபயின்ற மேதாவிகளும் செந்தமிழின் திறமறிந்த செல்வரும் சேர்ந்துழைத்து நவீன ஆராய்ச்சியாளர் கருத்தை நல்ல தமிழின் வாயிலாக வெளியிடுதற்கு இதுவே ஏற்ற இடமாகும். தமிழகத்தின் இதயமாக விளங்கும் இந்நகரில் மேலை நாட்டு அறிஞர் ஆராய்ந்துரைக்கும் அருமருந்தன்ன உண்மைகளை செந்தமிழென்னும் செழுந்தேனில் குழைத்தூட்டும் ஓர் செவ்விய பத்திரிகை தோன்றத் திகழுமேயாயின் இப்பொழுது தமிழ் நாட்டை வருத்தும் இன்னல்கள், அறவே ஒழிதலோடு தமிழ் மக்களாய நாமும் புத்துயிர் பெற்று எத்திசையும் புகழ் மணக்க வாழ்வோம் என்பது ஒருதலையாம்.

# இந்தியாவும் சீனுவும்

T. S. நடராசன், வாணுதுறை, கும்பகோணம்.

[சீனப்பேராசிரியர் டான்-யுன்-ஷன் என்பார் சாந்திநிகேதனத்தில் நிகழ்த்திய ஆங்கிலச் சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு.]

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 1, பக்கம் 34)

இந்திய சீன நாகரிகக் கலப்புப்பற்றிய செய்திகள், 'சௌ' வின் விநோதங்கள்,' 'பேய்க்கதைகள்', 'புத்தர், லவோட்சு இவர்களது வரலாறுகள்', 'ஏழு குறிப்புக்கள்' முதலிய பல சீன நூற்களில் காணப்படுகின்றன. இச்செய்திகளெல்லாம் நம் நாகரிகக் கலப்பை முறையாகக் கூறுவனவென்று கொள்வதற்கில்லை. உலகில் நடந்த குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளையும் இருநாடுகளுக்குள் உண்டான உறவுபற்றிய செய்திகளையும் விளக்கமாகவும் விரிவாகவும் குறித்துவைக்கப்பெறும் வழக்கம் நெடுநாட்களுக்குப் பின்னர்தான் வந்துள்ளது. ஆதலின், நமது நாகரிகக் கலப்புப் பற்றிய உண்மை வரலாற்றுக் குறிப்புக்கள், புத்தமதம் சீனுவில் பரவிய காலத்திற்குப் பின்னர்தான் கிடைக்கின்றன. ஹான் மன்னனது மரபில் வந்த மான்-டியின் காலத்திலே, யங்-பிங் சகாத்தம் பத்தாவது ஆண்டில் அதாவது கி. பி. 67-ஆம் ஆண்டில் புத்தமதம் முதன்முதலில் சீனுவில் பரவிற்று என்றும் சக்கரவர்த்தியே அதனை வரவேற்றனரென்றும் கூறுகிறார்கள். ஆனால், யங்-பிங் சகாத்தம் பத்தாம் ஆண்டில்தான் புத்தமதம் சீனுவில் பரவிய தென்பதையும், அதன் பின்புதான் நமது நாகரிகக் கலப்பு உண்டாயிற்றென்பதையும் ஏற்றுக்கொள்ள முடியாது. அவ்வாண்டில்தான் அரசர் புத்த மதத்தைத் தழுவினரென்பதும் அதன் பின்பு நமது நாடுகளுக்குள் ஒன்றுக்கொன்று இருந்த உறவு முதிரத் தொடங்கியதென்பதும் உண்மைச் செய்திகளாகும். இதன் பின்னர், பெருமை வாய்ந்த இந்திய ஞானிகளும் கல்விமான்களும் சீனுவுக்கும், சீனுவிலிருந்த துறவிகளும்

அறிஞர்களும் இந்தியாவுக்குமாகச் செல்லுவாராயினர். இவர்களால்தான் நம் நாடுகளின் நாகரிகம், கலை இவற்றின் உறவு புத்தமதத்தின் மூலமாகப் மிகுதிப்படுத்தப்பட்டது. 'துறவிகள் வரலாறு' என்ற சீனநூலில், இருநூறு சீனத்துறவிகள் இந்தியாவில் மிகத்திறமையோடு பயின்றனர் என்றும் இருபத்து நான்கு இந்திய ஞானிகள் சீனுவில் பிரசாரம்செய்து புகழடைந்தனர் என்றும் கூறப்பட்டுள்ளன. செல்லும் வழியில் இறந்தவர்களும் தம்பெருமை பிற்காலத்தில் விளங்கவேண்டுமென்ற விருப்பமில்லாதவர்களும் மிகப் பலராவர் என்பது ஈண்டு அறியத் தக்கது. டாங் மன்னன் மரபினரது ஆட்சிக் காலத்திய துறவிகளைப் பற்றிக் கூறும் ஒரு நூலில், 'மேற்கு நோக்கிக் கல்வி கற்பதற்குச் செல்லும் நூற்றுவரில் பதின்மர்கூடத் திரும்புவதில்லை' என்னும் பொருளமைந்த ஒரு செய்யுள் இருக்கின்றது. இதிலிருந்து அக்காலத்தில் இந்தியாவுக்கு வந்த சீனர் மிகப் பலரென்பதும் சீனுவுக்குத் திரும்பிச் செல்லும் பேறு பெற்றவர் மிகச்சிலரே யாவரென்பதும் விளங்குகின்றன வன்றோ? சீனுவுக்குச் சென்ற இந்தியரது நிலைமையும் அவ்வாறே இருந்திருக்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை. அக்காலத்தில், அம்மக்கள் மத்திய ஆசியாவை நடந்து கடக்கவேண்டியிருந்தது; அங்கே, பாலைநிலங்களையும் பெரிய காடுகளையும் பனிமூடிய மலைகளையும் கடந்து செல்லவேண்டும்; காட்டு விலங்குகளாலும், பசி, குளிர் இவற்றாலும் உண்டாகும் துன்பத்திற்கு அளவில்லை. இவ்வாறு, அவர்கள் குறித்த இடம் போய்ச்சேரப் பல ஆண்டுகளாகும். சிறிது சிந்தித்தால் அவர்கள் முயற்சியில் எவ்வளவு இடையூறுகள் இருந்திருக்கவேண்டுமென்பது விளங்கும்; அன்பும் ஊக்கமும் உடையோரானமையின் துன்பங்களைச் சிறிதும் பொருட் படுத்தவில்லை. அஞ்சாமை, விடாமுயற்சி முதலிய உயர்குணங்கள் வாய்ந்தவர்களான அப்பெரியோர்களிடத்து, நாம் பெருமதிப்பும் அன்பும் உடையோராயிருக்கிறோம்; அவ்வுயர் குணங்கள் நம்மனோ சக்தியைப் பெருக்குவதோடு அத்தகைய முயற்சிகளிலும் நம்மை ஈடுபடச் செய்கின்றன.

இந்தியர்களது கலைகளினால் சீன நாகரிகம் அடைந்துள்ள உயர்வு இவ்வளவென்று சொல்ல இயலாது. 'வீ' (கி. பி. 220—264), ட்ஸின் (கி. பி. 265—419) ஆகிய மரபினர்களின் ஆளுகையில், 'கான்பூஸியஸ்', 'டாயோ' ஆகியோரது சீடர்களாகிய தத்துவ ஞானிகளின் கருத்துக்கள் இந்திய தத்துவநூற் கருத்துக்களோடு ஒற்றுமை யுடையனவாயிருந்தன; இந்திய தத்துவ நூற்கருத்துக்களின் கலப்பு, 'டாங் மரபினர் (கி. பி. 678—906), 'ஐவர் மரபினர்' (கி. பி. 907—956) ஆகிய இவர்களது ஆளுகையில் மிகவும் அதிகப்படுவதாயிற்று. கடைசியாக, 'சுங்' மரபினர் (கி. பி. 960—1276) ஆட்சியில், பழைய கொள்கைகளெல்லாம் அடியோடு ஒழிந்து 'புதிய ஏதுவாதம்' (New Rationalism) எனப்பெயரிய ஒரு மதம் உண்டாயிற்று. 'ட்ஸின்', 'டாங்' மரபினர்களின் ஆட்சிக் காலங்களில் உண்டான உரைநடைகளும் செய்யுள்களுமான சீன இலக்கியங்களிலும், 'சங்', 'மிங்', ஆகிய வம்சங்களின் (கி. பி. 1368—1643) ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்ட தத்துவ நூல்களிலும், இந்திய இலக்கியங்களின் நடையும் பொருளும் விரவியிருப்பதைக் காணலாகும். சீனர்களது நெடுங்கணக்குக்கூட இந்திய உறவினால் மாறுபடுவதாயிற்று. 'டாங்' மரபினரின் ஆட்சிக் காலத்திலிருந்தே 'ஷோவேன்' என்னும் பௌத்தஅறிஞர் வடமொழி எழுத்துக்களையே அடிப்படையாகக் கொண்டு முப்பத்தாறு எழுத்துக்களை ஏற்படுத்தியதோடு, சீன வார்த்தைகளின் உச்சரிப்பு, ஒலி, இயைபுத்தொடர் (Rhyme) முதலியவற்றிலும் முழுமாறுதலை உண்டு பண்ணினர். கோயில் கட்டுதல், உருவச்சிலை செய்தல், ஓவியம் முதலிய சிற்ப வேலைகளிலேயும், இந்தியாவினிடமிருந்து சீனு கற்றுக்கொண்ட முறைகள் பலவாகும். இந்திய இதிகாசங்கள் காவியங்கள் முதலியவற்றின் மொழி பெயர்ப்புக்களாகவுள்ள சீன நூற்கள், அவற்றின் அளவையும் நிறைவையும் நோக்குங்கால் உலக நாகரிக வரலாற்றிலேயே மிகப்பெருமை வாய்ந்தனவென்று மதிக்கற்பாலனவாம். இக்காலத்திய எங்நாட்டுமொழி பெயர்ப்பு நூல்களும், சீனமொழியிலுள்ளவற்றிற்கு உயர்விலும் அளவிலும் எத்துணையும் இணையாகமாட்டா. பௌத்த சமய

நூற்களேயன்றி இந்தியாவின் பற்பல இலக்கியங்களும் கலைநூற்களும் சீனமொழியில் பெயர்க்கப்பட்டிருந்தன. அத்தகைய நூல்களுள் 'சூ' மரபினரின் ஆட்சிக் காலத்தில் மொழி பெயர்த்தவற்றுள் சிலவற்றைக் கூறுவாம். 'பிரமன் வானநூல்', 'பிரமன் கணிதநூல்', 'பிரமன் மருத்துவநூல்', 'பிரமன் சோதிடம் என்னும் பஞ்சாங்கமும் கணிதமும்', 'ஜீவா அல்லது இருடியின் ஊழ்வலி (Rishis Fatalism', 'காந்தாரி அல்லது புராணமும் மந்திரநூலும்' என்பனவாம். இவ்வகையான தொகை நூற்கள் பல இறந்தனவாயும் ஒவ்வொரு தொகையும் நூற்றுக் கணக்கான நூற்களேயுடையதாயும் இருந்தன. இக்காலத்தில், தலைசிறந்தனவாய அந்நூற்பெருகுதிகள் பல மறைந்தொழிந்தமை இரங்கத்தக்கதாகும். மொழி பெயர்க்கப்பட்ட புத்தமத நூல்களில் கூட இந்தியரது தத்துவம், மதச்சடங்குகள், துறவறம் இவற்றோடு இந்தியர் வாழ்க்கைமுறை, நாகரிக நிலை ஆகியவற்றைப் பற்றிய குறிப்புக்களும் காணப்படுகின்றன. சுருங்கக் கூறுமிடத்து இந்தியாவின் கல்வி, எண்ணங்கள், முறைகள் சமய ஒழுகலாறுகள், பிற வழக்கவொழுக்கங்கள் முதலியனவெல்லாம் சீன மொழி பெயர்ப்பு நூல்களில் தோன்றியனவாகி சீன மக்களின் வாழ்க்கை முறையை மிகுதியும் மாற்றிவிட்டன. காரண காரியக் கோட்பாடு (The Theory of cause and effect) முற்பிறப்பு, மறுபிறப்பு, நல்வினை தீவினைகளின் பயனாகவுள்ள நன்மை தீமை ஆகிய இவைகளெல்லாம் சீனப் பாமரமக்களின் மனதில் வேரூன்றியனவாய் நிலைபெற்றுள்ளன.

ஆனால், சீனர்களது உறவு இந்திய நாகரிகத்தில் ஏதாவது மாறுதலை உண்டு பண்ணியதோவெனின், இல்லையென்றே கூறலாம். சீனுவில் இந்திய முறைகளைப் பின்பற்றிச் செய்யப்பட்டுள்ள பொருள்களையும் நிருமிக்கப்பட்டுள்ள கட்டிடங்களையும் எவ்விடத்தும் காணலாம். ஆனால், சீனநாட்டிற்குரியதான எதனையும் இந்தியாவில் காணக்கூடவில்லை. சற்று முன்பாக, விசுவாமித்திர ஆசாரியர் புத்தரிடம் பலநூல்களைக் கூறினரென்றும் அவற்றுள் ஒன்று சீனுவைப் பற்றியதென்றும் கூறினேன். அந்நூல் இப்போது இந்தியாவில் கிடைக்கக் கூடுமோ

என்னவோ யானறியேன். ஒரு சீன நூலில் ஹுவான்-ட்ஸாங் என்னும் பௌத்தப் பெரியார், லாவோ-ட்ஸி என்பவரால் எழுதப்பட்ட ஒழுக்கநூலை (Tao-Te-Ching-Classics of Virtue) வடமொழியில் மொழிபெயர்த்தனர் என்று கூறப்பட்டுள்ளது; அந்நூல் இதுபோது வடமொழியில் இருக்கிறதா என்பதை யான் அறியக்கூடவில்லை. இங்கு நம் ஆராய்ச்சிக்குரிய வினா ஒன்று எழுகின்றது. அது, 'இந்தியர் உறவினால் சீனா அடைந்துள்ள நன்மைகள் மிகப்பலவாயிருக்க, சீன நாகரிகத்தின் அறிகுறி ஒரு சிறிது தானும் இந்தியாவில் இல்லாதிருத்தல் ஏன்'? என்பதே. நம் இருநாடுகளின் நாகரிகச் சிறப்புக்களைத் தனித்தனி ஆராய்வோமாயின், இந்தியாவின் சமயமும், தத்துவ நூற்களும் உலகவரலாற்றிலேயே தலைசிறந்தனவாயும் இணையற்றனவாயும் இருக்கக் காண்டலோடு, சீனர்களது சிற்பமும், நீதி, ஒழுக்க நூல்களும் அத்தகையனவேயா யிருத்தலையும் அறிதல் கூடும். பிறமொழிகளில் மொழி பெயர்க்கத் தகுதியுடையவைகளான சீன நூற்கள் பல உள்ளன; அவைகளில் சிலவற்றை மொழி பெயர்த்தல் இன்றியமையாததே. இந்தியாவின் சிறந்த நூற்கள் சீனமொழியில் பெயர்க்கப் பெற்றமைக்கும் சீனாவின் அரிய நூல்கள் வடமொழியில் பெயர்க்கப் பெறாமைக்கும் உரிய காரணங்களை யான் எண்ணிப் பார்க்கும்போது அவைகளில் மூன்று பின் வருவனவாயிருக்கலாமென்று தோன்றுகின்றது. முதலாவது, சிறிது காலம் சீன நாகரிக உறவின் பயன் இந்தியாவில் ஏற்பட்டிருக்கக் கூடுமாயினும் காலம் செல்லச்செல்ல அதுமறைந் தொழிந்தது என்பது; இரண்டாவது, இந்தியர்களது சமயக் கருத்துக்கள் வளமுள்ளவையாயும் வேரூன்றியாவையாயும் இருந்தன என்பதோடு, தம்மதத்தைப்பரவச்செய்வதில் கண்ணும் கருத்துமுள்ள சமயவாதிகளைப் போலவே, இந்தியரும் தம்மத உண்மைகளைப் பிறர்க்கு எடுத்துக் கூறிப் பரப்புவதன்றி மற்றையோரது மத உண்மைகட்குச் செவி கொடாதிருந்தனர் என்பது; மூன்றாவது, சீனர்கள் எந்தச் சிறந்த நாகரிகத்தின் மேன்மைகளையும் வரவேற்று அவற்றை அறிந்து தம்முடையன வாக்கிக்கொள்ளுந் தன்மையோராயிருந்

தனரேயன்றித் தம் பெருமைகளைப் பிறர்க்கு எடுத்துக் கூறிப் பிரசாரம் செய்வதில் விருப்பமுடையோரா யிருக்கவில்லை என்பது. எப்படியும், சீன இந்தியாவிடமிருந்து கொண்டதே யன்றிக் கொடுக்கவில்லை என்று நான் அறிகிறேன். ஆதலின், இந்தியாவினிடம் நன்றியறிதலும் ஒற்றுமையும் உடையதாக இருத்தல் சீனவின் கடமையாகும்.

சீன, இந்திய நாகரிகத்திற்கு நேர்முகமாக இல்லாவிடினும் மறைமுகமாகவாவது தன் நன்றியறிதலைத் தெரிவித்துள்ளது; எப்படியெனில், அது, தான் பல காலங்களில் இந்தியாவினிடமிருந்து பெற்றவைகளைப் பாதுகாத்துப் பெருக்கி வளமுறச் செய்வதற்கு எடுத்துக்கொண்ட முயற்சியால் என்க. யான் முன்னர்க் கூறிய மொழிபெயர்ப்பு நூல்கள் பழைய இந்திய நாகரிகவரலாற்றின் ஒருபகுதிபற்றிய செயதிகளைத்தம்மகத்தே கொண்டுள்ளன வாயிருத்தலின், நாம் நம் பழைய, அன்பிற்குரிய இந்தியவைப் பற்றி முற்றிலும் அறிய வேண்டுமாயின் அவைகளை நன்கு ஆராய்தல்வேண்டும். இந்தியாவிற்கு வந்த சீன வழிப் போக்கர்கள் சீன மொழியில் எழுதியுள்ள நூல்கள் பழைய இந்தியவரலாற்று ஆராய்ச்சிக்குவேண்டிய அரியசெய்திகளையுடையன வாயிருக்கின்றன. அவை, பாஹியான் எழுதிய 'பௌத்தர்களைப் பற்றிய குறிப்புக்கள், (Fu-Kus-Chi), ஹீவான்-ட்ஸாங் எழுதிய 'மேற்கு இராச்சியங்களைப்பற்றிய குறிப்புக்கள், (Si-Yu-Chi) யி-ட்ஸேன் எழுதிய 'தேன்கடல் நாடுகளைப் பற்றிய செய்திகள், (Nan-Hai-Chi-Kuei-Chaun) என்பனவாம். பிரயாணக்குறிப்பு நூல்களாகிய இவைகள் இப்போது பலமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு, இந்தியாவின் பண்டை வரலாற்றை அறிவதில் மிகுந்த ஆவலுடைய அறிஞர்களாலும் வரலாற்றாராய்ச்சியாளர்களாலும் கற்கப்படுகின்றன. இந்தியரது பழைய நாகரிகச் செய்திகளைக் காலமென்னும் கள்வன் கவர்ந்து செல்லாதவாறு பாதுகாத்து அளித்தபெருமை இந்நூல்களுக்கே யெனின் அது சிறிதும் புனைந்துரையாகாது. ஆனல், இந்திய நாகரிகத்திற்குச் சீன செய்துள்ள சிறந்த பணியாவது பௌத்த சமயத்தின் வளர்ச்சிக்கு அது செய்துள்ள வேலையே யாகும்.

பௌத்த சமயம் இந்தியாவில் பிறந்து சீனுவில் வளமுற்றுப் பின்னர் உலகமுழுதும் பரவியது என்றுசொல்லலாம். யான் சிலவேலைகளில் பௌத்த சமயத்தை ஒரு பெண்ணாக உருவாகப் படுத்தி, இளமையும் அழகும் வாய்ந்த அவ் இந்தியப்பெண் சீனுவை மணந்து இன்பமான வாழ்க்கையை நடத்திப் பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் பேரர்களின் பிள்ளைகளும் அடங்கிய ஒரு இனிய குடும்பத்தை யுடையளாயினுள் என்று கூறுவதுண்டு. தனது பிறந்தகத்திற்கு வணக்கத்தைத் தெரிவிப்பதற்காக அப்பெண் பழைய இருப்பிடமாகிய இந்தியாவிற்குத் திரும்பி வரவேண்டுமல்லவா? சாஸ்திரி மகாசாயாவும் பேராசிரியர் க்ஷிதிமோகனும் 'அவள் தனது கணவனோடும் பிள்ளைகளோடும் வருதல்வேண்டும்' என்று அன்போடு கூறினுர்கள். இப்பேரறிஞர்கள் கூறியது எவ்வளவு பொருளாழமும் இனிமையும் உடையதாயிருக்கின்றது பாருங்கள்! ஆதலின், அப்பெண்மணியைத் திரும்ப அனுப்புவது சீனுவின் கடமையாகவும் வரவேற்பது இந்தியாவின் கடமையாகவும் இருக்கின்றன.

(தொடரும்.)



உ

கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.



## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "சித்திரை" நன்கொடை.



| திங்கள் நன்கொடை. | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| திருவாளர். க. நல்லமுத்து நாட்டாரவர்கள் கள்ளப்பிரம்பூர் | 50 | 0 | 0 |



## நகரணித் தென்றல்

ஞொள்கா னுடங்கு மிடைமட வீரும்மை நோக்கியமான்
வெள்கா வருந்துஞ் சுரங்கடந் தோமினி மேல்நடந்தால்
தெள்காவுந் தென்னன் திருவீதி யுஞ்சிந்து பூந்துறையுங்
கொள்காவும் வேய்முத்தர் கோபுர வாசலுங் கோவிலுமே 39

## முல்லையைப் பழித்தல்

தண்டோட் டிளங்கொன்றை யார்நெல்லை மீதிற் றரைபிளந்து
கொண்டோட்டும் வேரில்வெந் நீர்விட்டி லேன்வெளிக் கொண்டு
[சென்று
திண்டோட்டும் பூந்தள வேயும்மை மாஞென்று தின்பதையான்
கண்டோட்டி விட்டதற்கோ நகைத் தாய்யுன் கருத்துநன்றே 40

## பாங்கியோடு புலம்பல்

தாதக லாத சடையாளர் நெல்லையிற் றக்ககுழைக்
காதக லாத கயல்விழி யீர்கடுங் கூற்றன்விட்ட
தூதக லாத பிறைபோல மேற்றிசை தோற்றிச்சற்றுப்
போதக லாதிருப் பீருயிர் காணுமுன் போகின்றதே 41

## குரவோடு புலம்பல்

திரைப்பாவை சூடும் பிரானெல்லை நாதர் சிலம்பிற்செல்வி
பொரப்பாவை வேலன்பின் னேதனியே சிற்றில் போட்டு
[வெள்வேல்
பரப்பாவை யேகுதல் கண்டிருந் தேயுன் பசியகுரல்
மாப்பாவை யாதல் கண்டோ தடுத் தாயில்லை வாய்திறந்தே 42

## அன்னையர்க்குரைக்கென அந்தணர்க்குரைத்தல்

தீட்டச்சொல் லாமழுவார்நெல்லை நாதர் சிலம்பிற் கல்வி
நாட்டச்சொல் லீர்முல்லைப் பந்தர்க்குக் கால்நவ்வி நாபுலரா
தூட்டச்சொல் லீர்புனல் தேடுமென் பூவையுறங்கத் தொட்டி
லாட்டச்சொல் லீரந்த ணீர்பெற்ற தாய ரளவுஞ் சென்றே 43

## இரவுக்குறி நலம்பாராட்டல்

துள்ளிட்ட கங்கைச் சடையாளர் நெல்லைத் துணைவர்வைவேல்
நள்ளிட்ட கங்குல் வரத்தக்க தால்நடு நீர்மனையில்
கள்ளிட்ட தோட்டுக் கபாடம் புறப்படக் காவல்தச்சன்
உள்ளிட்டு வைத்தனனோ மணித்தாளை யுபாயஞ் செய்தே 44

## சென்றபேதைக்குச் செவிலி யிரங்கல்

தூதைக் கல்லுஞ் சிறுசோறுஞ் சிற்றிலுந் தோழியருந்
தாதைக் குரலு மறந்தன ளாயினுஞ் சங்கரிதன்
காதல் துணைவர்த நெல்லையிலே கை நெகிழ்நெலழும்
பேதைக் குரலெங்க னேமறந்தாள் சென்ற பேதையரே 45

## வளமை செல்வி யிளமைக் கிரங்கல்

தெருப்பைந் தமிழ்மணக்கு நெல்லைநாதர் சிலம்பிற் செல்வி
பொருப்பென்று சூட்டப் பொறுத்தன ளோபகற் போதுவிண்ட
மருப்புண்ட ரீகம் பறிக்கநெட் டோடையில் வந்துபுக்கு
நெருப்பென்று நின்றழு தாளந்த நாளிந்த நேரிழையே 46

## மாவோடு புலம்பல்

தேங்கோடு சிந்தும் பொழினெல்லை நாதர் சிலம்பிற்செல்வி
கோங்கோ டணைக்குங் குவிமுலை யீர்குட நீர்விடுத்துப்
பூங்கோடு சற்றுங் கருகாமற் போற்றி வளர்த்தவிந்த
மாங்கோடு பூக்கு மன்றேயன்பர் வார்த்தை வடுப்பட்டதே 47

## தழைகொண்டு தன்மையுரைத்தல்

ைதக்குங் கணைவிழிப் பங்காளர் நெல்லைத் தமரவண்டு
மொய்க்கும் பசுந்தழை வாங்குதி ரேமுலைப் பாரஞ்சுமந்
தெய்க்குங் கொடியிடை போலிளைத் தேற்கின்று நாளையென்று
பொய்க்கும் பொருள்சொல்லு வீருமைப் போலில்லை பூவையரே

## மாலைகண்டு மாலைகொள்ளல்

தொடைகிடக் குஞ்சடையாளர் நெல்லைத் துணைவர் வைவேற்
படைகடக் கச்சென்ற நாட்டில்லை யோபனிக் காலமெல்லாம்
புடைகிடக் கும்பெடையைச் சிறகால் மெள்ளப் போர்த்துவிடா
தடைகிடக் குங்குருகே செக்கர் வானமு மந்தியுமே 49

## அளிவிலங்கு

தோளிட்ட மாலைச் சுடரோன் கபாடப்பொற் றோடடைத்துத்
தாளிட்ட தாமரை யார்திறந்தார் சந்திரனுக் கொத்த
நாளிட்ட கொன்றைச் சடையாளர் நெல்லையி னள்ளிருள்வாய்
வாளிட்ட கண்மட வாய்வருந் தாமல் வருவதற்கே 50

## புனத்திடை யுருவெளி

தௌவல்செய் தாயில்லைத் தண்குர வேதழ லாலுடலங்
தெவ்வல்செய் யுங்கொடும் பாலையிலே திங்கள் வட்டநிலாக்
கௌவல்செ யும்பணிக் கங்கணத் தார் நெல்லைக் கார்வரையில்
மௌவல்செ யுந்நகை யாரடிப் போது வருந்திடவே 51

## தலைவன் வறும்புனங் கண்டு வருந்தல்

நல்லோசை கொண்ட தமருகத் தார் நெல்லை நாட்டெயினர்
வில்லோசை கேட்ட புனக்கிளி காளிதண் மீதிருந்தார்
சொல்லோசை யுங்குன் றொலியோ சையுமவர் சுற்றிவிட்ட
கல்லோசை யுந்தமி யேனென்று தானினிக் காண்பதுவே 52

## செழுந்தினைக் குரைத்தல்

நாப்பிட்ட பாம்பணி வோர்நெல்லை மேல்நறுங் காந்தள் விண்டு
தீப்பட்ட குன்றிற் செழுந்தினை காள்தின்னும் வேழமெனக்
காப்பிட் டினக்கிளி வீழாமல் கைக்கவண் வீசிநின்று
கூப்பிட்ட வர்க்கன்றி யுங்களுக் கேனிக் குரல்நெரிவே 53

## சிற்றில் விரும்பிச் சிறந்துரைத்தல்

நிறக்குழை யாய வலம்புரி யார்நெல்லை நாட்டிலென்றன்
பிறக்குழை பாயுங் கயல்விழி யீர்புனல் மூட்டிக்கிண்டி
யுறக்குழை யாமல் பதத்தே வடியு முலைமணற்சோ
றறக்குழைந் தானு மரிசியென் றூலு மதுபிழையே 54

...............

நீட்டிக் குறைக்குந் திருமேனியார் நெல்லைநாட்டி லண்ணல்
கூட்டிக் கொடுசெல்லும் பேதைக்கு யான்கொடும் பாலையழல்
மூட்டிப் புகையெழு விக்குமென்னுமல் முன்னுளிற் செம்பொன்
சூட்டிக் கொடுத்துவிட் டேன்கொடு போவென்று குன்றடிக்கே
55

## இல்லத்திருந்து செவிலி வருந்தல்

நண்டுளி மாரியும் வெற்பையும் போன்முலை நோக்கிவிழுங்
கண்டுளி மாரிகண் டாரிலை யேதெவ்வைக் காயங்கண்ட
மண்டுளி வாய்மழு வார்நெல்லை நாதர் வரையிலிந்தத்
தண்டுளி மாரிக்கு முன்வரப் போன தறுகண்ணரே 56

## பாலனைப் பழித்தல்

நூலார் மருங்கி லுமைபாகர் நெல்லையில் நோற்றுப்பெற்ற
பாலா பகலும்வந் தாரில்லை யேகையிற் பற்றியவேற்
கோலால் நெடும்புனத் திட்டமுள் வேலியைக் கோலிமெல்லக்
காலால் வழிதடவிக் கங்குல் வாய்வரக் கற்றவரே 57

## குறம்

நெறிப்பட் டவர்தொழும் நெல்லையஞ்சாரலி னின்று வந்தோம்
வெறிப்பட்ட வாய்மைக் குறத்தியல்லோம்நெல்லை வேந்தனுக்கு
மறிப்பட்ட கண்ணிம வானின் மகள்மற் றணங்கினுக்குங்
குறிப்பட்ட தும்பட்ட தாலணங்கே யிடுங்கூ ழெமக்கே 58

................

நேரிட்ட பாம்பணி யார்நெல்லை நாதர் நெடுங்கிரிமேற்
போரிட்ட வேழமும் புண்பட்ட வேலும் புடையடங்கா
வாரிட்ட கொங்கையுங் கண்களு மாயுரு மாறிவந்து
பேரிட்டு நின்றனவோ வணங்கே சொல்லும் பேதையர்க்கே 59

## கடல் மேற் பிரிதல்

நையும்வெண் ணூலும் வெளியும்மெய் சான்றவர் நாவறியாப்
பொய்யும் படைத்த விடைமட வீர்தண் பொருனைச்சங்கு
செய்யுந் தெருவுந் தவழ்நெல்லை நாதர்சிலம்பிற் கெட்டேன்
மெய்யுஞ் சொலக் கற்பரோ கடன்மேற் செல்விருப்பினரே 60

## கலங் கண்டழுங்கல்

நொந்திளைத் தீன்ற கழைமுத்தர் நாட்டில் நுரையுமுத்துஞ்
சிந்தும் பொருனைத் திரைமணற் பாவைக்குச் சில்கழங்கும்
பந்துந்தந் தாதரித்தென்பா லவர்தம்மைப் பார்த்து நொந்து
வந்துநின் றுரைக் கண்டோ பரிவாய்சொல் மரக்கலமே 61

## பாகனோடு வினுதல்

நோற்றுப் பிறந்த வுமைபாகர் நெல்லையி னுண்டுளிநீ
ரூற்றுப் புனல்முந்தி லென்செயு மோவென் றழுங்கித்தெவ்வர்
வேற்றுப் புனங்கண்டு பந்தியை நாட்டி விரைந்துபரிக்
காற்றுச் செலுமென்பரே வல்லவா வொன்றுங் கண்டிலமே 62

## செவிலி வேதியரை வினுதல்

நௌவியுந் தும்பையும் பூங்கொன்றை மாலையு நாண்மதியைக்
கௌவிய பாம்புந் தரித்தபிரான் நெல்லைக் கார்மயில்பூஞ்
செவ்விய பாலைக் குரிசில்பின் னேமுகச் செவ்விகன்ற
வெவ்விய பாலையி லேநடந்தா ளெங்ஙன் வேதியரே 63

## சிற்றில் விரும்பிச் சிறந்துரைத்தல்

பல்லாதவனை யுதிர்த் தோர் தென்னெல்லையிற் பண்டெவர்க்கு
மில்லாத நல்லற மெய்திநிற்பீ ரெமக்கில்லை யென்றுஞ்
சொல்லாமல் நீரிட்ட வெண்மணற் சோறு சுடினதனுட்
கல்லாய நேரமுண்டோ பசி காணுங் கடுகியதே 64

## மதங்க னெதிர்ந்து மறுமொழி கூறல்

பாதிப்பிறை முத்தர் நெல்லையஞ் சாரற் பரத்தையர்பால்
சோதித்து விட்டலவோ வறிவீ ருண்மை சொல்லுமெங்கள்
கீதத்த வீணை யுடைக்கவென் றேபைங் கிளிகடிந்து
சாதித்து நின்றதெல் லாமணங்கே யன்றுதண் புனத்தே 65

### மடலேறுவே னென்றல்

பிணங்குஞ் சடையு நெருங்கும்வெண் ணீறும் பிணங்குதசை
யுணங்குந் தனியென்பு மாலையு மாயெம் முயிர்பருகி
நிணங்கொண்ட வேல்விழி வல்லியபரே யுங்கள் நெல்லையில்நீர்
வணங்குங் கடவுளைப் போல்வரு வேனிந்த மன்றிடத்தே 66

### கொங்கையை வியந்து மங்கைக் குரைத்தல்

பீதாம்பரந் தொழு நெல்லையஞ் சாரலிற் பேதைகொங்கை
சூதாம்பருவத்திற் செய்கை கண்டால் துணைக் கோடடக்கிப்
போதாம் கமலத்தை வென்று பொன்மேருவைப் போல்
[வளர்ந்தா
லேதாம் புவனங் கெட்டே னிளைஞோர்மன மென்படுமே 67

### எழுதரி தென்றல்

புளகப்படா முலையுங் குழைத் தோளும் புருமதிமே
லளகப்படா முமெழு தினமாயினு மன்பிலர் நெஞ்
சுளகப்படா முக்கர் நெல்லையிலே யன்னுற் சொருகால்
இளகப்படா நெஞ்சை யெப்படி யோவிங் கெழுதுவதே 68

### அருமறைச் சடங்குக் காற்றுத் தலைவன்

பூக்கமழ் கோதையர் நெல்லையிலே வந்து புல்லென்றெம்மை
நீக்குமென் றுலதற் கேதுசெய் வேன்னெடு வானத்துள்ளே
தூக்கிய பாதத்தர் நெல்லையஞ் சாரற்சுரும்பிற் கெட்டேன்
ஆக்கிய தெய்வ மழிக்குமென் றுலெங்ங ஞறுவதே 69

### அன்றிற் புணர்ச்சி கண்டழுங்கல்

பெருகும் புனற்சிந்து பூந்துறையார் நெல்லைமேற் பெருந்துக்
கருகும் பெரியதடம் பெண்ணைமே லிரை காதலிக்கும்
அருகுங் கலவி யிணை பிரியா தலகோடலது
சொருங் குருகுகண்டேன் சொல்லுமோ மனஞ் சென்ற
[வர்க்கே 70

## மடவனப் பேடையோடு மங்கைக் குரைத்தல்

பேட்டிளங் கால்வண் டுழுதோறு மாடக வள்ளமொத்த
கோட்டிளங் கொன்றையு மில்லைகொல் லோகுனிக் காயெருக்குந்
தோட்டிளந் தும்பையும் சூழ்சடை யார்நெல்லை சூழுமந்த
நாட்டிளங் காலன்னங் காளன்பர் போகிய நாடெங்குமே 71

## சுரத்திடை யந்தணரை வினவல்

பைந்நீழல் நாகச் சடையாளர் நெல்லைப் பரமர்வெற்பில்
எந்நீழலை மறந் தேகின பாவைக் கங்கேயெயினர்
தந்நீழ றன்னி லடங்குமப்போ தவிப்பாறும் வண்ணம்
வெந்நீழ லன்றியுண் டோவந்த ணீரிந்த வெஞ்சுரமே 72

## பாலனைப் பழித்தல்

பொறிவைக்கும் பாந்தட்சடையாளர் நெல்லைப் பொருப்பில் [முன்னீர்க்
கறுவிக் கவரும் விழியெங்குமார் செவ்விக் காமனல்கு
செறிவிக்கு நான்பெற்ற தீவினை யேனுக்குஞ் செல்வருக்கும்
பிறிவுக் கிடு மருந்தே யிதற்கோவுனைப் பெற்றதுவே 73

## நகரணித் தென்றல்

போற்றிப்பத மிருதாளணங்கே புள்ளு மாவுஞ் செல்லா
வேற்றுத் தலமிது கானவ ரூரிது மேல்நடந்தால்
நேற்றைப் பிறைமுடி யார்நெல்லை நாடுநெட் டோடையும்பூந்
தாற்றுக் கதலியுந் தாமரைக் காடுந் தடாகமுமே 74

## சுனை வியந்துரைத்தல்

பௌவக்கடல் விடமுண்டோர் தென்னெல்லைப் பரமர் வெற்பில்
கொவ்வைக்கனி செய்த கோலத்தினுலுங் குரவை வண்டின்
கௌவைக் கருங்குழல் வாசத்தினும் கருத் தினுக்குச்
செவ்வைச் சுனையல்லவோ வணங்காடிய தீஞ் சுனையே 75

## சிற்றில் விரும்பிச் சிறந்துரைத்தது

மதம்பார்த்து வேழ முரித்தோர் தென்னெல்லையில் மாரனஞ்ச
கதம்பார்த் தெடுக்குங் கயல்விழி யீர்கனல் மூட்டிக்கிண்டிப்
பதம்பார்த் தெடுக்கும் வடித்தவெண் சோறு பசித்தவருக்
கிதம்பார்த் தளிக்கின்றி லீரிது வோவுங்க ளில்லறமே 76

## நாணிக் கண் புதைத்தல்

மாடஞ்செய் கோபுர வேய்முத்தர் நெல்லை மலர்ப்பொருட்டுப்
பீடஞ்செயு மணைப் பெண்ணமுதே பெரும் பாவிநெஞ்சைக்
கூடஞ்செயுங் கொங்கை யானையல்லாற் கொற்ற வேள்சுருதிப்
பாடஞ் செயுங்கண் கபாடஞ்செய் தாயென் பகருவதே 77

## பாங்கி கருத்துரைத்தல்

மிடியிட்ட நுண்ணிடை பங்காளர் நெல்லையில் வேதன்மட
லடியிட்டு வைத்தத னுற்பய னேதரம் தின்றவைவேல்
வடியிட்ட கண்ணி வடிவே யெழுதமருங் கொக்குமோர்
படியிட்டு வைத்தில னேவெளி யாகப் படைத்தவனே 78

## கண்டோர் காதல்

மீனுண் டிளங்குரு காலுநெல் வேலியர் வெற்பிலிந்தக்
கானுண்ட வேட ரறவும் பொல்லார்கங் குறங்குமிவ்வூர்
யானுண்டுமக்குற வாக நொந் தீரிளைப் பாறநல்ல
தேனுண்டு மாவுண்டு நீருண்டு போகச் சிறப்புமுண்டே 79

## நகைத் துரையாடல்

முடத்தேய் பிறைமுத்தர் நெல்லையஞ் சாரலின் மூச்சுடலம்
படத்தேயுந் தண்டழை கொண்டெய்தி னீர்பகற் போதிலடித்
தடத்தே செல்லாமற் புனங்காக்கும் பேதையர் தங்கள்
[கொங்கைக்
குடத்தேயுந் தேடுவ ரோகெடுத் தோமென்று குஞ்சரமே 80



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ௰௨ | தாது, ஆனி | மலர் ௩ |

உ

## கருதலளவைப் பகுதி

திரு. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை

### 4-ம் அதிகாரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 2. பக்கம் 60.)

### 25. அப்பியாசங்கள்.

பின் வருந்துறைகளின் உண்மைப் போலிகளை ஆராய்க.

முதலாம் அப்பியாசம்.

1. ஒவ்வொருநூலும் குறைவுடையது. ஒவ்வொருநூலும் மக்களின் ஆக்கப்பொருள். ஆகையால் மக்களின் ஆக்கப் பொருள்கள் எல்லாம் குறைவுடையன.

2. மனோபாவனையிற் குறைந்தோர் புலவராகார். மனோ பாவனையிற் குறைந்த சிலர் அளவைநூல் வல்லோர். ஆகையால் புலமையிற் சிறந்த சிலர் அளவைநூல் வல்லோரல்லர்.

3. சில கணிதநூலாசிரியர் அளவைநூலாசிரியர். அளவை நூலாசிரியர் ஒவ்வொருவரும் யவனருடைய அளவைமுறையிற் பழகினவராயிருப்பர். ஆகையாற் சில கணித நூலாசிரியர் யவன அளவைமுறையிற் பழகினவரே.

4. கொடுங்கோல் மன்னர் எல்லாரையும் கொலை செய்தல் தகுதி. சிலப்பதிகாரத்துப் பாண்டியன் கொடுங்கோலனல்லன். ஆகையால் அவனைக் கொலை செய்தல் கூடாது.

5. சொக்கிரெற்றிஸ் அடக்கமுடையவர்; ஏனெனில் எல்லா ஞானிகளும் அடக்கமுடையவர்.

6. அழகின்மை இயற்கையானது. இழிவு இயல்பாய் வருவதன்று. ஆகையால் அழகின்மை ஒருவனுக்குஇழிபாகாது.

7. மானி ஆராய்ச்சிநூல்களை நன்கு கல்லான். ஆகையால் நியூற்றன் கெப்பினர் முதலியோர் மானிகளல்ல.

8. மாணிக்கவாசகர் ஒரு சித்திபெற்ற அமைச்சன், அவர் ஒரு தத்துவஞானி. ஆகையால் தத்துவ ஞானிகள் எல்லாம் நல்லமைச்சர் ஆவார்.

9. அறம் பொருள் இன்பத்தைப்பற்றி மொழியும் நூல்கள் எல்லாம் புராணங்கள். திருக்குறள் புராணமன்று. ஆகையால் அது அறம் பொருளின்பத்தைப்பற்றி மொழியும் நூலன்று.

10. வெப்ப மிகுந்த தேசங்களில் மாத்திரம் திராட்சைக் கொடி வளர்கின்றது. உரோமநாடு வெப்பமிகுந்த தேசம். ஆகையால் அங்கே திராட்சைக்கொடியுண்டு.

11. யாது ஒருவனைக் கீழ்மையினின்றும் காப்பாற்றுமோ அது போற்றற்பாலது. செந்தமிழ் இலக்கியம் பகுத்தறிவின் இன்பங்களைக் கூறுவதால் அத்தன்மைத்து. ஆகையால் தமிழ் இலக்கியங்களைப் போற்றுமின்.

12. அதிகப் பொருளைத் தேட விரும்புவோன் கயவன். அதிகப் பொருளைத் தேடுவோன் துன்புறுவன். ஆகையால் கயவர் துன்புறுவர்.

இரண்டாம் அப்பியாசம்.

1. புல்லறிவாண்மை தீமை விளைக்குமாகையால் தருக்க நூலைக் கல்லாமை நன்று.

2. அவன் யுத்தக்களத்தில் வேற்படைக் கஞ்சினுனாகை யால் கோழையன்.

3. சில மூடருக்கு நல்ல ஞாபகசக்தி உண்டென உள நூலார் கூறுகின்றனர். எனக்கு ஞாபக சக்தியைக் கொடாத தற்காகக் கடவுளுக்கு நான் நன்றி செலுத்தவேண்டுமல்லவா?

4. எல்லாக் கணக்காயரும் புலவராவார், ஏனெனில் நக்கீரர் இரண்டுமாயிருந்தவர்.

5. அவன் தான் கொலை செய்தவனுயிருத்தல்வேண்டும், ஏனெனில் அவன் தான் மரணகாலத்தில் உடன் நின்றவன்.

6. அறிவீனர் மாத்திரம் கல்வியை இகழ்பவர். இவர் கல்விப் பயிற்சியைப் புகழ்கிறாராகையால் அறிவிற் சிறந்தோ ராவர்.

7. யாது வாயிற்காட்சியால் உணரப்படுகிறதோ அது உண்மைப்பொருள். கடவுளது உண்மை வாயிற் காட்சியால் பெறப்படாமையால் கடவுள் இல்லை என்பது நிச்சயம்.

8. மருத்துவனுற் பயனென்கொல்? சென்ற வருடத்து மருந்துசாப்பிட்டவர்கள் எல்லாருந் துஞ்சினாரல்லவா?

9. ஞானிகளல்லாதார் நல்லவரல்லர். நல்லோரல்லாதார் இன்புறார். ஆகையால் ஞானிகளல்லாதார் இன்புறார்.

10. கற்றதனுலாய பயனென்கொல்? ஒவ்வொரு நாளும் கற்றோர் சிலர் களவுக்குத் தண்டிக்கப்படுகின்றனர்.

11. எல்லாருக்கும் பொதுவாயுள்ள ஒரு இயற்கை நிகழ்ச்சியாகலால் சாவு ஒரு தீமையன்று.

12. ஒரு வாயிற் காட்சியின் விடயமே அப்பொருளினது உண்மையை நிரூபிக்கின்றது. எல்லாப் பொருள்களும் வாயிற் காட்சிகளின் சமுதாயமே. சமுதாயமாகவே ஒருபொருள்

விடயமாகின்றது. ஆகையால் ஒருபொருள் உண்மைப் பொருளாதற்கு வாயிற் காட்சியால் அறியப்படவேண்டும்.

## 26. வழியளவை குற்றமுடையதோ?

ஆங்கில நூலாசிரியர் யே. ஸ். மில் என்பவர் அந்நுவயம் ஒன்றனை ஒன்று புற்றுதல் என்னும் போலியுடைத்தென ஐயுற்றனர். மில்லின் ஆசங்கை வருமாறு:—

ஒரு அந்நுவயம் நிரூபிக்கும் உண்மை பூருவசாதனத்தில் அடங்கியுள்ளதென்றும் அவ்வுண்மையின் ஒரு சிறப்பு நிகழ்ச்சியை உத்தர சாதனம் எடுத்துக் காட்டுமென்றும், அங்ஙனம் சிறப்பு நிகழ்ச்சியினது உண்மை பூருவ சாதனத்தால் வலியுறுத்தப்படுமென்றும் அரிஸ்தாதில் அந்நுவயத்தின் இலக்கணத்தை மொழிந்தனர். நன்று. அந்நுவயத்தால் நிரூபிக்கப்படும் உண்மை பூருவ சாதனத்தால் காட்டப்படுமாயின் உத்தர சாதனத்தால் ஒரு பயனுமில்லை.

உ, எல்லாமக்களும் இறக்குந் தன்மையர்.

உ, சொக்கிரெற்றிஸ் ஒரு மனிதன்.

உ, சொக்கிரெற்றிஸ் இறக்குந் தன்மையர்.

பூருவசாதனம் உண்மையெனஅறியப்பட்டதாயின், உத்தர சாதனம் மிகையாகும். உத்தரசாதனம் கூறும் உண்மையை அறிந்த பின்னரே பூருவசாதனம் கூறும் உண்மையை நாட்டலாம். சாத்தியவுண்மையாகிய சொக்கிரெற்றிஸ் இறக்கும் தன்மையர் என்பது சாதனங்களால் பெறப்படவில்லை. பூருவ சாதனமே சாத்தியவுண்மை முழுவதையும் கூறுகின்றது. பூருவ சாதனமும் சாத்தியமும் ஒரு உண்மையைக் கூறுகின்றவையாகையால் ஒன்று ஒன்றனை நிறுத்தமாட்டாது. ஆகலின் அந்நுவயம் மேற்கோட் போலியுடைத்து. மேற்கோளொன்றுமே அந்நுவயத்தை நிரூபிக்கின்றதாகையால், ஏதுக் கூறுதலான் ஒரு பயனுமில்லை. சொக்கிரெற்றிஸ் இறக்குந் தன்மையவர் என அறிந்த பின்னரே எல்லா மனிதரும் இறக்குந் தன்மையர் என மொழியலாம். நிரூபிக்கவேண்டியதை மேற்கோளாக

மொழிந்தால், நிரூபித்தலென ஒரு முறையில்லை என்பது மலை யிலக்காகும்.

எல்லாமக்களும் இறக்குந்தன்மையர் என்பது ஒருபொதுத் தாட்டாந்தம். இதனுண்மையை அறிதற்கு சொக்கிரெற்றி சும் பிறரும் இறக்குந் தன்மையர் என அறிந்திருக்கவேண்டும். செக்கிரெற்றிஸ் இறக்குந் தன்மையர் என்பது எல்லாமக்களும் இறக்குந் தன்மையர் என்னும் பொதுத் தாட்டாந்தத்தில் அடங்கியிருக்கும் ஒரு சிறப்புத் தாட்டாந்தம். இச்சிறப்பின் உண்மை அறிந்த பின்னரே பொதுவின் உண்மை அறியப்பட்ட தாகலின், இச்சிறப்புண்மையை பொதுத் தாட்டாந்தவுண் மையை ஆதாரமாகக்கொண்டு வலியுறுத்தல் போலியாகும்.

பொதுத் தாட்டாந்தம் பல காட்சிகளின் ஒரு கூட்டுண் மையை மொழிகின்றது. ஒவ்வொரு காட்சியும் ஒரு சிறப் புண்மையாகுமாதலின் சிறப்புத் தாட்டாந்தங்கள் மொழியும் காட்சிகளைத் தொகுத்து ஒரு கூட்டுண்மையாக மொழிதலே பொதுத் தாட்டாந்தம்.

கருதல் என்பது ஒரு சிறப்புத் தாட்டாந்தத்திலிருந்து வேறோர் சிறப்புத்தாட்டாந்தத்தைத் துணிதலே. கூட்டுண்மை களைமொழியும் பொதுத் தாட்டாந்தமெல்லாம் பொதுத் தாட் டாந்தமல்ல. அவை சிறப்பே. எல்லா மக்களையும் எண்ண வியலாதாகலான் சொக்கிரெற்றிஸ் என்பவருக்கு முன்னிருந்த பலர் இறந்தாரென்பது உண்மை ஆதலின் சொக்கிரெற்றிஸ் என்பவரும் இறப்பர் எனத் துணிகின்றோம். சிறப்பிலிருந்தே சிறப்பைத் துணிகின்றோம்.

உதாரண முகத்தான் காட்டுதும். தீயைத் தீண்டிய குழந்தை தன் விரலைத் திரும்பவும் நெருப்பில்வையாது விடுதல் காண்கின்றோம். குழந்தை யாண்டுத்தீ ஆண்டுச்சூடு என்னும் மேற்கோளை அறிந்திலது.

ஞாபகசக்தி யுடையதாகையால் குழந்தை பொதுவுண் மையை அறிந்திலதாயினும்; இத்தீசுட்டது, ஆகையால் இத்தீ சுடும் என ஒரு சிறப்புத் தாட்டாந்தத்திலிருந்தே வேறோர்

சிறப்புத் தாட்டாந்தத்தைத் துணிகின்றது. மெழுகுதிரிச் சுவாலையும் நெருப்பாகையால் அதையும் தீண்டாது. எனது பிள்ளையும் இதுபோன்ற பிணியால் வருந்த, இம்மருந்தைக் கொடுத்து நோயை நீக்கினேன், ஆகையால் இம்மருந்தை இக் குழவிக்கும் கொடு என அயலாள் சொல்லுவாள். இங்ஙனம் சிறப்பிருந்து சிறப்பைத் துணிதலே கருதலென மில் தம் மதம் நாட்டினர்.

மில் என்பவருடைய மதத்தைச் சுருக்கிச் சொல்லுவாம்.

(அ) சிறப்புத் தாட்டாந்தத்திலிருந்து பிறிதோர் சிறப்புத்தாட்டாந்தத்தைத் துணிதலே கருதல்.

(ஆ) பொதுத் தாட்டாந்தமென்பது சிறப்புத் தாட்டாந்தங்களின் தொகுதி.

(இ) சாத்தியத்தின் உண்மை பூர்வ சாதனத்தில் அடங்கி இருக்கும்.

(ஈ) உத்தரசாதனம் பூர்வசாதனத்தில் அடங்கியவொரு சிறப்புப் தாட்டாந்தமாகையால் பூர்வ சாதனத்தையே நிரூபித்துக்காட்டவேண்டும். சாத்தியத்தை நிரூபிக்கவேண்டியதில்லை.

அந்நுவயம் மேற் கோட்போலி உடைத் தென்பதன் மறுதலை.

(அ) சிறப்புத் தாட்டாந்தத்திலிருந்து பிறிதோர் சிறப்புத் தாட்டாந்தத்தைக் கருதவியலாது.

(ஆ) சிறப்புத் தாட்டாந்தங்களின் தொகுதியே பொதுத் தாட்டாந்தமென்பது போலி. பொதுத் தாட்டாந்தம் ஒருகூட்டுண்மையை மொழியாமல் ஒரு காரண காரியத் தொடர்பையே மொழிகின்றது.

(இ) உத்தர சாதனம் ஒரு காரண காரியத் தொடர்பின் ஒரு சிறப்பு நிகழ்ச்சியை உணர்த்தும்.

(ஈ) ஒருசிறப்பு நிகழ்ச்சியைக்கூறும் சிறப்புத் தாட்டாந்தமொன்றை அச்சிறப்பு நிகழ்ச்சியின்காரண காரியத்தொடர்பைக்

கூறும் பொதுத் தாட்டாந்தத்தோடு ஒருங்கு சிந்தித்து ஒரு பொதுவுண்மையில் மேற்கூறிய சிறப்புண்மை உண்டென்பதைக் காட்டுதலே நிரூபித்தல். சிறப்புண்மை பொது வுண்மையில் ஒடுங்கியிருக்குமென்பது அரிஸ்தாதிலின் உரையால் அறியக் கிடக்கின்றது.

இரு சிறப்புத் தாட்டாந்தங்கள் ஒப்பாயின் ஒன்று ஒன்றிலிருந்து கருதப்படும். ஒப்பு ஒரு அந்நுவயக் காட்சியே. இத்தீ சுடுகின்றது ஆகலின் மெழுகுதிரித்தீ சுடுமென்பது ஒப்பு. ஈண்டு ஒருசிறப்புத் தாட்டாந்தத்திலிருந்து வேறோர் சிறப்புத் தாட்டாந்தத்தைத் துணிகிறோமெனச் சொல்ல வியலாது. சிந்தனை சிறப்பிலிருந்து சிறப்பிற்குச்செல்லவில்லை; பொதுத்தாட்டாந்த மூலமாகவே ஒருசிறப்பிலிருந்து வேறோர் சிறப்புத் தாட்டாந்தத்தைத் துணிகிறோம்.

ஒளி வீசுகின்றதும் அசைகின்றதும் பொன்னிறமாகவிருப்பதும் எனப் பல பண்புகளை உடையது எரியெனக் குழந்தை அறியும். மெழுகு திரிச்சுவாலை என்னுமித்தீ எரிகின்றது, பொன்னிறமானது, அசைகின்றது, ஒளிவீசுகின்றதென அறிந்தபின் இது தீயெனக் கருதுகின்றது. யாதி யாது எரிகின்றது அசைகின்றது ஒளி வீசுகின்றது, பொன்னிறமாயிருக்கின்றது அதுவது தீயென ஒரு பொதுத் தாட்டாந்த உணர்ச்சி குழந்தைக் குண்டு. குழந்தை அதைத் தாட்டாந்தமாக மொழிய மாட்டாதாயினும் குழந்தையின் மனத்தில் அப்பொதுக் காட்சியுண்டு. பொது மூலமாகவே சிறப்புண்மைகளைக் கருதுகிறோம் என்பதைக் காட்டினும்.

இனிப்பொதுத் தாட்டாந்தம் சிறப்புத் தாட்டாந்தங்களின் தொகுதியன்றென்பதையும் பொதுத் தாட்டாந்தம் நீக்கமின்றி நிற்கும் ஓர் காரண காரியத் தொடர்பை உணர்த்துகின்றதென்பதையும் காட்டுவாம். ஒரு கூட்டத்தினர் ஒவ்வொருவரின் சிறப்பியல்பை அறிந்தாலும் அக் குழுவினது பொது வியல்பை மொழியவியலாது. கூட்டுண்மை என்னும் தொகுதியுண்மை வேறு, பொதுவுண்மை வேறு. எ யாண்டும் வி என்புழி ஒருகூட்டுண்மையை இப்பொதுத் தாட்டாந்தம் உணர்த்தாது. எகரத்

திற்கும் விகாத்திற்கும் காரண காரியத் தொடர்பு உண்டென் பதே பொதுவுண்மை. நினைவுலகத் துண்மைகளாகிய வடிவக் கணிதப் பிரமாணங்களைப் பொதுத் தாட்டாந்தமாக மொழிகின் றேம். எல்லாமுக்கோணங்களும் 180° பாகையுடையன என்பது பொதுத் தாட்டாந்தம். இவ்வுண்மை சிறப்புத் தாட்டாந்தங் களைக் கூட்டிப்பெற்ற கூட்டுண்மையன்று. அ இ உ என்னும் முக்கோணத்தின் கோணங்கள் 180° பாகை, ப ம ய என்னும் முக்கோணத்தின் கோணங்கள் 180° பாகை, ய ர ல என்னும் முக்கோணத்தின் கோணங்கள் 180° பாகை எனப்பல காட்சி களைக்காட்டி முக்கோணத்தின் கோணங்கள் 180° பாகைக்குச் சமன் என ஒரு பொதுத் தாட்டாந்தமாக மொழிய வியலாது. அங்ஙனம் காட்டியே பெற்றதெனின் இனித் தோன்றும் முக் கோணம் 180° பாகையுடையவையாகத்தான் இருக்குமென வற்புறுத்த வியலாது. அன்றியும் உலகத்திலுள்ள முக் கோணங்களை எல்லாம் யாவர் அளந்து இக்கூட்டுண்மையைப் பெற்றவர்? இஃதொருபுறமாக கோணங்களை அளக்க வியலாது. என்னை! கோணங்கள் கோடுகளால் வரை யறுக்கப் படு பவை. கோடுகள் அகலமில்லாத பொருட்கள். எமது நிலவு லகக்கோடுகள் அகல முள்ளவையாகையால், எமது அளவை பிழையாகும். முக்கோணங்களை நுட்பமாக அளக்க முடியாது. முக்கோணத்தின் வரை விலக்கணத்தைத் தேர்ந்து காரணானு மான முறையாகவே முக்கோணம்180°பாகையுடையதென நிரு பிக்கிறேம். வாயிற்காட்சியை ஆதாரமாகவுடைய காரியகாரண முறையால் முக்கோணம் 180 பாகையுடையதாக வேண்டுமென வற்புறுத்த வியலாது. இவ்வாறு பொதுத் தாட்டாந்தங்கள் நீக்கமின்றி நிற்கும் காரண காரியத் தொடர்பையே மொழியும். 180 பாகையுடையவை முக்கோணங்களென அறிந்தோமாயின், இது முக்கோணம், ஆதலின் இது 180°பாகையுடையதெனத் துணிதலே கருதல். ஈண்டுக் கூட்டுண்மையினின்று ஒரு சிறப் புண்மை துணியப்பட்டதன்று.

மக்கள் இறக்குந் தன்மையர் என்பது யாக்கை நிலையாமை என்னும் ஒரு பொதுவுண்மையை உணர்த்திற்றெழிய ஒரு

கூட்டுண்மையை உரைக்கவில்லை. இப்பொது வுண்மையை மேற்கோளாக எடுத்துக்காட்டி: சொக்கிறேற்றீஸ் ஏனைய மக்கள் போல ஞாபகசக்தி முதலிய பண்புகளையுடைய மனிதனே என ஒரு ஏதுவை மொழிந்தால், சொக்கிறேற்றீஸ் இறக்குந்தன்மையர் என்பது புலப்படும். பொதுவுண்மை ஒன்றில் சிறப்புண்மை ஒன்றைக் காணுதலே கருதல். பொதுவுண்மையை மொழியும் பூர்வ சாதனத்தையும் சிறப்புண்மையை மொழியும் உத்தர சாதனத்தையும் ஒரு உண்மையாகக் காட்டலே நிரூபித்தல். பூருவ சாதனமாகிய மேற்கோளால் ஒரு பிரதிக்ஞையை நிரூபிக்க வியலாது. ஏதுவைக் கூறும் உத்தரசாதனமும் அவசியம் வேண்டப்படும். உத்தர சாதனத்தையும் பூருவ சாதனத்தையும் ஒருங்கு சிந்திக்கச் சாத்தியம் தோற்றும். இது தன்பொருட்டநுமாநம். ஆசிரியருக்கு அறிவெல்லாம் வகுத்தலறிவாகலான் பிறர் பொருட்டு அநுமிக்கும்போது அந்நுவயம் மேற்கோட்போலி உடையது போலத் தோற்றும். மாணவனுக்கு அறிவு புணர்த்தலறிவாகலான் வழியளவையில் போலியில்லை.

(தொடரும்)

---

# இந்தியாவும் சீனுவும்

---

T. S. நடராசன், வாணுதுறை, கும்பகோணம்.

---

[சீனப்பேராசிரியர் டான்-யுன்-ஷன் என்பார் சாந்திநிகேதனத்தில் நிகழ்த்திய ஆங்கிலச் சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு.]

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 2, பக்கம் 80)

இவ்வாறாக, நமது நாடுகளின் நாகரிகங்களிடையேயுள்ள நெருங்கிய பழைய உறவைப்பற்றிய சில உண்மைச் செய்திகளை யான் கூறினேன். ஆனால், சில நூற்றாண்டுகளாக அந்நெருங்கிய உறவு எக்காரணத்தாலோ தளர்வுற்றுப் போனதுமன்றி மனித வாழ்க்கையின் மாறுபாடுகளாலும் காலச் சக்கரத்தின் சுழற்சி

யினாலும் மறைந்தும் போய்விட்டதானது மிகவும் வருந்தத் தக்கதாகும். மேனாட்டு அறிவு நூற் (Science) பயிற்சியின் பயனாக ஏற்பட்ட மாறுதல்களும் உலகாயத மதமும் (Materialism) மிக்க வலிமை எய்தினவாய் மனித வாழ்க்கையாகிய கடலில் கைத்தொழிற் புரட்சி (Industrial Revolution) எனப் படும் கொந்தளிக்கும் அலையை உண்டு பண்ணின. ஐரோப்பிய நாகரிக வரலாறு மிகச் சுருங்கியதாதலின், அவர்களுடைய சமயமும் அறவொழுக்கக் கொள்கைகளும் கொந்தளிக்கும் இந்த அலையை அமைதிப்படுத்தற்குவேண்டிய முதிர்ச்சியை இன்னும் அடையவில்லை. மேனாட்டார் உற்பத்தி செய்யும் பொருள்களெல்லாம் அழிவை விளைக்கும் கருவிகளாக மாறியுள்ளமையால், அந்தோ! இனி எல்லோருக்கும் தீமையே விளையும். அவர்களுடைய பேராசையும் போர்விருப்பமும் பாவத்திற்கும் கொலைக்கும் ஏதுவான படைகளையும் போர்க் கருவிகளையும் கண்டு பிடித்தற்குரிய காரணங்களாகின்றன; அக்கருவிகள் அஞ்சத் தக்க போர்களையும் துன்பங்களையும் விளைக்கின்றன. ஒவ்வொரு நாடும் போர் வெறி கொண்டுள்ளது; ஒவ்வொரு செய்தியும் பிழைபாடுடையதாயிருக்கின்றது; ஒவ்வொரு இடமும் நிம்மதியின்றி இருக்கின்றது. அண்மையில் நடைபெற்ற உலகப் பெரும்போர் உலகாயதமதத்தின் முதிர்ச்சியாலேற்பட்ட முதல் விளைவாகும். மேனாடு வருந்துவதன்றிக் கீழ்நாடும் துன்புறுகின்றது. கீழ்நாடுகளிலேயும் மிகப் பழைய நாகரிகம் வாய்ந்த நம் நாடுகளே மிகுதியும் துன்புறுகின்றன. நாகரிகம் மிகுதியாக மிகுதியாக பகைமைக் குணம் வளர்கின்றது. நமது நாகரிகங்கள் இப்போது பிழைபட உணரப்பட்டுள்ளன; நம் நாடுகளின் முறைகள் முறிந்து போயின; நமது பொது வாழ்க்கை கீழ் நிலையை யடைந்துள்ளது; நம் மக்கள் வெறுத்து ஒதுக்கப் பட்டுள்ளனர். ஆகவே, நாம் உலகாயத மதத்தினரோடு உழலுவதிலும் நம் நாடுகளின் பொதுவாழ்வு பற்றிய விவாதங்களிலும் ஈடுபட்டுள்ளோமாதலின், நமது பழைய நாகரிக உறவைக் கவனித்தற்கு நேரமில்லை.

நமது தொடர்பு நடுவில் சிலகாலம் நீங்கியிருந்த போதிலும் ஒருவர் மற்றவரிடம் கொண்டுள்ள அன்பும் அனுதாபமும் எக்காலத்திலும் மாறுபட்டதில்லை. சமயம் நேர்ந்துழி நம் பழைய உறவைப் புதுப்பித்துக் கொள்வோமாக! நல்வினையின் பயனாகச் சென்ற 1924-ஆம் ஆண்டில் கவியரசராகிய குருதேவ இரவீந்திர நாததாகூர் பேராசிரியர்களாகிய க்ஷிதிமோகன் சேன், நந்தலால் போஸ், காளிதாஸ நாக் ஆகியவர்களோடு சீனவுக்கு எழுந்தருளினர். இவ் வருகை நம் பழைய நட்பைப் புதுப்பிப்பதன் முதல் அறி குறியாகும். சீனர்களாகிய எங்களிடையே கவியரசர் உண்டாக்கிய எண்ணமானது நமது முன்னோர்களாகிய பெரியோர்கள் உண்டாக்கியவையினும் சிறப்புடையதாகும். கவிதாகூரையும் காந்தியடிகளையும் இந்தியாவின் தற்காலப் புத்தர்களென்றே சீனர்கள் கருதுகின்றனர். குருதேவருடைய ஆங்கில நூல்களிற் பெரும்பாலன சீன மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன; 'திரியும் பறவைகள்' (Stray Birds), 'பிறைச் சந்திரன்' (CrescentMoon) ஆகிய பாட்டுக்கள் சீனயாப்பிலேயே ஒரு புதிய இனத்தை உண்டு பண்ணியுள்ளன. நமது தத்துவ ஞானியாகிய கவிதாகூர் சீனவுக்கு வந்தமையை நினைவு கூர்தற்காகப் 'பிறைச்சந்திரன் கழகம்' எனப்பெயரிய சங்கமொன்றும் 'பிறைச்சந்திரன் பத்திரிகை' என்னும் வெளியீடு ஒன்றும் டாக்டர் ஹூ-ஹி என்பவரால் தொடங்கப் பெற்று அவரது மேற்பார்வையில் நடைபெற்று வருகின்றன. ஆசிய நாகரிகங்களையும் கலைகளையும் ஒற்றுமைப்படுத்தல், இந்தியர் சீனர்களது நாகரிக உறவைப் புதுப்பித்தல் என்பனவாகிய கவியரசரது கருத்துக்களிலும் நம்பிக்கையிலும் சீனப் பேரறிஞர்கள் மிகுந்த அனுதாப முடையவர்களா யிருக்கிறார்கள். சிறந்த அறிஞர்களாகிய நம் தலைவர்களும் ஒருமித்த கருத்துடையவர்களாய் எண்ணியவற்றை நிறைவேற்றுவதில் மிகுந்த விருப்புடையோராயிருக்கின்றனர்; இந்தியாவுக்கும் சீனவுக்கும் தமது நாகரிக உறவைப் புதுப்பித்துக் கொள்ளுவதான காலம் இப்போது வந்து விட்டது.

இக்காலத்து உலகம் மிகுந்த குழப்பமுற்று ஒழுங்கற்ற நிலையில் உள்ளது. எவ்வளவுக்கெவ்வளவு நாடுகளுக்குள் இருக்க வேண்டிய அன்பு, அமைதிகளைப் பற்றிப் பேசப்படுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு பொறாமையும் பகைமையும் உண்டாகின்றன. நட்புக்காகப் பாடுபடுவதாக நடித்துக்கொண்டே தமது வாள்களை மிகவும் கூர்மையாக்குகின்றார்கள். போர்க் கருவிகள் வெளிப்படையாகவும் தயாரிக்கப்படுகின்றனவென்னும் செய்தியும் விரைவில் அழிவை விளைக்கத் தக்க கொடியபடைக்கலங்கள் நாடோறும் கண்டு பிடிக்கப் படுகின்றனவென்னும் செய்தியும் நினைத்தற்கு அச்சமாயிருக்கின்றது. அரசியல் வல்லுநர்களும் அரசியல் வாதிகளும் அவையெல்லாம் இராஜதந்திரவிஷயங்கள் என்கின்றனர்; பொருள் நூல் அறிஞர்களும் அரசிறைபதிகாரிகளும் அவையெல்லாம் பொருளாதார விஷயமென்கிறார்கள். ஆனால், அவையெல்லாம் உண்மையில் உலக நாகரிக விஷயமேயாகும். நாகரிகத்தின் பேரால் விரைவில் ஒரு வழி தேடாவிடில் உலகத்தில் பரவியுள்ள இந் நோயினையும் எதிர்காலத்தில் அது விளைக்கும் தீங்கையும் தடுப்பது இயலாத தொன்றாம். ஐரோப்பிய அமெரிக்கப் பேரரசுகள் தம்முயற்சி கைகூடாமல் தடுமாற்ற மடைந்துள்ளன; ஆதலின் கீழ் நாட்டார்களாகிய நாம் உலக மக்களைப் பாதுகாத்தலாகிய கடமையை மேற்கொள்ளல் வேண்டும். யான் இவ்வாறு கூறுவது அமெரிக்க ஐரோப்பிய நாடுகளின்மேல் சிறிதாயினும் உள்ள தப்பெண்ணத்தினாலும் வெறுப்பினாலும் அன்று; மேனாட்டு அறிவு நூற்களின் பயன்களாகவுள்ள உதவிகள் தீமை பயவாத வழிகளில் உபயோகிக்கப்படாமையும் உலகாயதக் கொள்கையுமே இப்போதைய நெருக்கடியான நிலைமைக்கும் உலகத்துக்கே ஏற்பட்டுள்ள ஆபத்துக்கும் ஏதுக்களாகின்றன. ஆதலின், மனிதவாழ்க்கைக்கு நன்மை பயப்பதான ஒருவழி, இந்திய சின நாகரிகத்திலிருந்து ஆராய்ந்தறியப் படல்வேண்டும். எல்லா மேனாட்டு அறிவுநூல்களையும் எறிந்து விடவேண்டுமென்று யான் சொல்லவில்லை. அறிவு நூற்களின் உதவிகொண்டு உற்பத்தி செய்யும் பொருள்களை, இந்திய சின நாகரிகங்களின் ஒழுக்கங்களாகிய அன்பு, உப

கார சிந்தை இவைகளை அடிப்படையாகக் கொண்டு வரையறை செய்தல் வேண்டும் என்பதும், அதனால் உலக அமைதியையும் நன்மையையும் கொள்கைகளாகவுடைய ஒரு புதிய நாகரிகம் உண்டாகி நிலை பெறும் என்பதுமே யான் கருதுவன வாகும். தமது கலை வளர்ச்சிகளின் பயனாய் விரைவில் உண்டாகக் கூடிய தீமைகளை யறிந்தவர்களான அமெரிக்க ஐரோப்பிய அறிஞர்கள் அத் தீமைகளைத் தடுப்பதற்குரிய வழிகளை நமது நாகரிகங்களி லிருந்து கண்டுபிடித்து வருகிறார்கள். ஆதலின், இந்தியர் சீனர் களாகிய நாம் விழித்தெழுந்து நம் பழைய உறவுகளைப் புதுப்பித் துக்கொள்ள வேண்டுமென்பது சொல்லாமலே யமையும். நமது நாகரிகங்களையும் கலைகளையும் ஒருவர்க்கொருவர் மாற்றிக்கொள் வதனால் அவைகளுக்குப் புத்துயிர் உண்டாகும்; புத்துயிர் பெற்ற நமது நாகரிகமே புதிதான உலக நாகரிகத்தை உண்டாக் கும்; அப் புதிய நாகரிகத்தால் உலகத்தின் துன்பம் நீங்கும். முற்காலத்தில் நம் இருநாடுகளும் உலக வாழ்வை ஒளி பெறச் செய்திருக்கும் போது, பிற்காலத்திலும் அவ்வாறு செய்தல் இயலாத தொன்றா?

(*The Modern Review.*)

---

## 'பரணர்' மறுப்பின் ஆராய்ச்சி

வித்துவான், ஐ. நடேச பிள்ளை, அவர்கள்,
தமிழ்ப்பண்டிதர், போர்டு ஹைஸ்கூல், பொன்னேரி

சென்னைப் பல்கலைக்கழகத்தார் வெளியிட்ட 'பரணர்' என்னும் நூலைக்குறித்து ஔவையார்குப்பம் 'வித்வான்' சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் 'தமிழ்ப்பொழில்' துணர் 11 மலர் 9, 10இல் எழுதியவற்றைப் படித்தேன். ஆராய்ச்சி யாளர் 'திருத்தமுடையதனையும் திருத்தமில்லாதபாடம் எனத் திரியக்கொண்டு, பொருத்தமில்லாதவுரை எழுதுகின்றார்' [1] என்று எழுதி ஒன்று காட்டியுள்ளார்கள். அஃதாவது:—

1. பக்கம் 355.

1. நற்றிணை 350-ஆம் செய்யுளில், "ஆகில் கலங்கழீஇ யற்றும்" என்றிருப்பதனை "ஆசி லகலங் கழீஇ யற்று" எனத் திருத்திக்கொண்டது பொருந்தாது[1] என்பது. பிள்ளையவர்கள், 'ஆகில் கலங்கழீஇ யற்றும்' என்பதற்கு, 'தீண்டற்காகாத கலத்தைக் கழுவிக்கொள்ளுதல் போல்வதாம்'[2] என்று பொருள் கூறி அதனை வலியுறுத்தற்கு,

' * * *

தொடுகலங் குறுக வாரல்

* * * *

நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே' (அகம் 196)

என்னும் அடிகளைக் காட்டி, 'இதன்கண், தலைமகன் குறுக வந்த வழி, அவன் தீண்டுதலால் "தோடுகலம்" தோடாக்கலமாய், இப் பாட்டுக் கூறும் "ஆகில் கல"[3]மாம் என்றார்கள்.

'தொடுகலங் குறுக வாரல்'

என்னும் அடியில் தொடுகலம் என்பது தொடேடம் என்னும் பொருளதாதலே யன்றி, தொடாக்கலம் என்னும் பொருளா தாகுமா? தொடுகலம் என்பதனை வினைத்தொகையாகக் கொள்ளி னும், தோடாக்கலம் என்னும் எதிர்மறைப்பொருள் தருதல் யாங்கு னம்? பிள்ளையவர்கள் கூறிய பொருத்தமான வுரையை அறிஞர் சிறிது நோக்குவாராக.

ஆயின், தலைமகள், தலைமகன் முன்னர்த் தன்செயலைப் பன்மை வினையாற் கூறுவாளோ எனின்,

'எம், முதுமை பெள்ளலஃதமைகும்' (அகம். 6)

என்று பரணர் செய்யுளிலேயே வந்திருத்தல் காண்க.

அன்றியும்,

'எந்நலந் தொலைவ தாயினும், துன்னலம்' (ஐங். 63.)

என்று பிறருங் கூறியிருத்தல் அறிக.

இனி 'ஆகில் கலங்கழீஇ யற்றும்' என்று பதிப்பித்திருப் பதனை, 'ஆசி லகலங் கழீஇ யற்று' என்று திருத்தியது தவறுல்

1. பக்கம் 374. 2. பக்கம் 376. 3. பக்கம் 373.

எனின், பதிப்பித்துள்ள பாடத்திற்குப் பொருள் பொருந் தாமையானும், ககர சகரங்களும் ககர நகரங்களும் வேறு பாடறிதற் கியலாதவாறு ஏடுகளில் எழுதப்பட்டிருந்தல் உண்மையானும் அங்ஙனம் ஊகித்துக் கொள்ளப்பட்டதாகும். திருவாளர் S. வையாபுரிப் பிள்ளையவர்களிடத்தில் இருக்கும் பழைய ஏடுகளில் 'ஆசி லகலம்' என்றே உளது. இதனால் பரணர் நூலாராய்ச்சியாளர் ஊகத்தின் அருமை நன்கு புல னாகும். 'கழிஇ யற்று' என்றிருப்பதுவும் 'தழீஇ யற்று' என்று இருக்கத் தகுவதே.

'பைத லொருகலெ' என்பது

'பைத லொருதலெ'[1] என்றும்

'தண்டுளிக் கேற்ற' என்பது

'கண்டுழிக் கொற்ற'[2] என்றும்

'கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்' என்பது

'கயிறரி பெருந்திறத் தழுந்துந் துறைவன்'[3] என்றும் பதிப்பிக்கப் பட்டிருத்தல் காண்க. ('யெருத்திற் கதழுந்' என் பதை, 'பெருந்திறத் தழுந்' என்று கொண்டமையின், சீர்கெடுத லால், 'துந்' என்பது சேர்க்கப்பட்டுளது என அறிக.)

பிள்ளையவர்கள், 'ஏட்டுப் பிரதிகளில் யை என்னும் எழுத் துச் சிலவிடங்களில் யகர ஙகரம் போலத் தோன்றுதல் உண் டாதலின், "மதுகையை" என்பதே மதுகையங் எனக் கருத நின்றதென் றுணர்க'[4] என்றார்கள்.

யை என்னும் எழுத்து, மை, பை என்னும் எழுத்துப் போலத் தோன்றுதல் கூடுமேயன்றி, யங் எனத்தோன்றுதல் கூடுமோ? யை என்பது யங் எனத் தோன்ற வேண்டுமாயின்,

ை என்பது—ய ஆகவும்

ய என்பது ங் ஆகவும்

அன்றோ தோன்றுதல்வேண்டும்? இவ்வாறு தோன்றுதல்

---

1. குறுந்தொகை 13. 2. குறுந்தொகை 382.
3. குறுந்தொகை 117. 4. பக்கம் 375.

உண்டோ? ஊகித்துத் 'திருத்திக் கொள்ளுதல் நம்மனோர்க்கு ஆகாத செயலாயிற்று' என்ற பிள்ளையவர்கள், யங் என்பதனை யை என்று திருத்தியது ஆகிய செயல் போலும். இனி, 'கலங் கழீஇ யற்றும்' என்று உம்மை பெற்றிருப்பதுவே பொருத்த மான பாடம் என்று பிள்ளையவர்கள் கூறுகிறார்கள். அவ்வாறு யின் உம்மையின் பொருள் யாது? அஃது எவ்வாறு முடி கின்றது?

2. 'பண்டையாசிரியர் ஒருவரால் தொகை நூல்கள் திணை வகுக்கப்பட்டன என்பது யாவரும் அறிந்தது'[1] என்று பிள்ளை யவர்கள் கூறுகின்றார்கள்.

பண்டையாசிரியரொருவர் யாரோ அறிகிலேன். தொகை நூல்களுள் பரிபாடல் பதிற்றுப்பத்து இவ்விரண்டு நூல்களிலும் திணைப்பெயர் குறித்திருத்தலைக் காண்கிலேன். ஐங்குறுநூறு, கலித்தொகை இவ்விரண்டிலும் ஒவ்வொரு திணையைக் குறித்த செய்யுட்கள் ஒவ்வொரு புலவரால் இயற்றப்பட்டன வாகலானும் அவற்றைத் தொகுத்தோரும் வேறு வேறு புலவராகலானும் அவற்றிற்குத் திணை வகுத்தவர் ஒருவராதல் இல்லை. நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு இம் மூன்று நூல்களிலும் உள்ள செய்யுட்களுக்கு ஓலையேடுகளில் திணை குறிக்கப்படவில்லை. இவற்றுள் அகநானூற்றுச் செய்யுளைத் தொகுத்த முறைமை 'வியமெல்லாம் விண்டேரியக்கம்' என்று தொடங்குஞ் செய்யுள் முதலியவற்றால் அறியப்படுதலின், பதிப்பாளர் அம்முறைப்படி திணைப் பெயர் குறித்துள்ளார். நற்றிணை குறுந்தொகைகளைப் பதிப்பித்தவர்கள் அந்நூல்களிற் செய்யுட்களின்[2] கீழ்க் குறித் துள்ள துறையையும் செய்யுளில் வருங் கருப்பொருளையுங் கொண்டு திணைப் பெயர் குறித்திருக்கிறார்கள் எனத்தோன்று கின்றது. மேற்குறித்த மூன்று நூல்களையுந் தொகுத்தவர் வெவ்வேறு புலவரல்லரோ? திணைப்பெயரே குறிக்கப்படாத நற்றிணை குறுந்தொகைகளுக்கும் பண்டையாசிரியரொருவர்

---

1. பக்கம் 353
2. செய்யுட்கட்கு மேற்காண்பது பதிப்பாளர் செய்த மாறுபாட்டானயது.

திணை வகுத்தார் என்றும், அதனை யாவரும் அறிவர் என்றும் பிள்ளையவர்கள் கூறியதற்கு ஆதாரம் யாதோ?

3. 'பரணர் பாட்டுக்களுள் குறிஞ்சியும் மருதமும் பெரும்பான்மையவாயினும் இவர் கருத்தின்படி அவை நின்றபாட்டினுள் சிறந்து நின்றது கருப்பொருளே என்றல் நிரம்பாது,[1] என்று பிள்ளையவர்கள் கூறியுள்ளார்கள்.

ஈண்டு, 'இவர்' என்றது பரணர் நூலாராய்ச்சி யாளரைக் குறிக்கின்றது. அவர், 'பாட்டுக்களுக்குத் திணை கூறுமிடத்து முதற் பொருளினுங் கருப்பொருளும், கருப்பொருளினும் உரிப்பொருளும் சிறந்த ஏதுக்களாகும். என்பது ஆசிரியர் தொல்காப்பியர் கொள்கையாகும்' என்று எழுதியிருத்தலின், அவர் கருத்து அதுவே யாதல் நன்கறியப்படும். (பிள்ளையவர்களும் அதனையே அவர் கருத்தென்று குறித்துள்ளார்கள்.) அதனால் குறிஞ்சித் திணைச் செய்யுளில் குறிஞ்சிக்குரிய உரிப்பொருளும் மருதத்திணைச் செய்யுளில் மருதத்துக்குரிய உரிப்பொருளும் சிறந்து நிற்றல்வேண்டும்என்பதுவே பரணர் நூலாராய்ச்சியாளரின் கருத்தென்பது அறியப்படுமன்றே? அங்ஙனமாகவும், 'இவர் கருத்தின்படி........................ சிறந்து நின்றது கருப்பொருளே என்றல் நிரம்பாது' என்று பிள்ளையவர்கள் கூறியிருப்பது சரியாமோ?

4. 'குறுந்தொகை, அகநானூறு என்ற இரண்டனையும் பதிப்பித்த ஆசிரியன்மார்களின் முயற்சியருமையினையும் கூறு தொழிந்தார்.'[2] என்பது.

அகநானூற்றைப் பதிப்பித்தோரைக் குறித்து, 'இத்தகைய அருஞ்செயலை யாற்றும் பேரறிஞரை நாம் உளமாரப் பாராட்டக் கடமைப் பட்டிருக்கின்றோம்' என்று பரணர் நூலாராய்ச்சியாளர் எழுதியுள்ளார். குறுந்தொகைப் பதிப்பில் பற்பல செய்யுட்களிற் பிழைகள் பல்கியிருத்தலானும், உரையும் தவறுடையதா யிருத்தலானும் அவர், நற்றிணைப் பதிப்பாளர் போல மதிக்கத் தக்கவராதலின்று. நடுநின்று கூறின் அவர்



1. பக்கம் 353. 2. பக்கம் 354.

குறுந்தொகையைப் பதிப்பித்தற்கும், அதற்கு உரையெழுது தற்கும் ஆற்றலில்லாதவர் என்று கூறுதல் வேண்டும். பரணர் நூலாராய்ச்சியாளர் இவ்வாறு வெளிப்படக் கூற விருப்பின்றி, அவரைப் புகழ்ந்துரையாது விடுத்தார் போலும்.

5. "கருப்பொருளை மட்டுமே நோக்கித் திணை வகுக்கப் பட்ட பாட்டுக்களும் உள்ளன" என்று கூறியவர் அவையித் துணையவென்று துணிந்து, அவற்றால் கோடற்குரிய இம்முடி பினைக் கூறுதொழிந்ததே இந்நிரம்பாமைக் கேதுவாதல் அறிக' என்பது. 'கருப்பொருளை மட்டுமே நோக்கித் திணைவகுக்கப் பட்ட பாட்டுக்களும் உள்ளன' என்று பரணர் நூலாராய்ச்சி யாளர் கூறியது நற்றிணை முதலிய தொகை நூல்களிற்காணும் பொது உண்மை. அந்நூல்களில் எல்லாச் செய்யுட்களையும் நோக்கின் அவ்வாறு திணை வகுக்கப்பட்ட செய்யுட்கள் இத் துணையவென்று அறிதல் கூடும். அங்ஙனம் எண்ணித்தொகை கோடல் தொகை நூற்செய்யுட்கள் எல்லாவற்றையும் ஆராய் வார் தொழிலாதலேயன்றிப் பரணர் செய்யுட்களைமட்டுமே ஆராய்வார் தொழிலன்று. என்பதறிக, நிற்க.

பிள்ளையவர்கள் எழுதியுள்ள கட்டுரையில் சிலவாக்கியங்கள் அமைதியின்றி யிருத்தலின் அவற்றின்பொருள் விளங்குதல் இல்லை. அஃது என் சிற்றறிவிற்கு விளங்கிற்றிலதுபோலும் என்றெண்ணிப் பேரறிஞர் சிலரிடமும் வினவினேன். அவர் களும் அவ்வாக்கியங்கள் பொருள் விளங்குமாறு எழுதப்பட வில்லை என்றார்கள். உதாரணமாக—'அவ்வாறு கூறப்பட்ட திணைகளுள்.......ஒரு தலையாய்க் கூறலாகாது.'[1] என்னும் வாக் கியம் பொருளுக்கியைய அமைந்திலாமை நோக்கிக் கொள்க.

---

1. பக்கம் 353.

# பண்டைத் தமிழர் மணமுறை

வித்வான். மா. இராசமாணிக்கம் அவர்கள்,
வண்ணாரப்பேட்டை, சென்னை.

பண்டைத் தமிழர் மணமுறையை ஆராயுமுன், அதனைத் தெள்ளிதிற் கூறும் தொல்காப்பியத்தின் காலத்தை ஆராய்ந்து அறுதியிடல் அவசியமாகும். அதன் காலத்தை அறியின், அதற்குப் பின்னர் வந்த அகநானூறு, குறுந்தொகை முதலிய அகநூல்களில் உள்ள உண்மைகளையும் பிறவற்றையும் நாம் கால வரையறை செய்ய இயலும்.

தொல்காப்பியர் தமிழ் நூற் கடலையும் வடநூற் கடலையும் நிலைகண்டுணர்ந்தவர் என்பது பாயிரம். அஃது 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியத்தின்' எனக் கூறுகின்றது. 'ஐந்திரம்' என்பது 'இந்திரன்' என்பான் செய்த முதல் வடமொழி இலக்கணம் என்பதை வடமொழி வல்லார் ஒப்புகின்றனர். யசுர் வேதத்தில் இஃது உண்மை எனக் கூறப்பட்டுள்ளது. எனவே, வேதகாலத்தில் 'ஐந்திரம்' பிரபல முற்றதாக இருந்திருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகிறதன்றோ? 'வேதகாலம் ஏறக்குறைய கி. மு. 2000த்திலிருந்து கி.மு. 1700 வரை இருந்திருக்கலாம்' என்பது சரித்திரப் பேராசிரியரான 'டட்' என்பார் கருத்து. எனவே, 'ஐந்திரம்' கி. மு. 2000த்திலிருந்து கி. மு. 1700க்குட்பட்ட காலத்தில் இயற்றப்பட்டுப் பெருஞ் சிறப்பெய்தியிருத்தல் கூடியதே என்பது புலனாகிறது. 'இந்திரனுக்குப் பிறகு 64 இலக்கண வித்வான்கள் தோன்றினார்கள்; அவர்கட்குப் பின்னரே 'பாணினி' என்னும் இலக்கணி தோன்றினான்' என்று, 'மாக்டோனல்' என்னும் பேராசிரியர் 'வடமொழி இலக்கியம்' (பக். 430) என்னும் நூலில் கூறியுள்ளார். எனவே, ஒவ்வோர் இலக்கணிக்கும் சராசரி 30 வயது வீதம் வைத்துக் கொண்டாலும், இந்திரனுக்குப் பின் 1800 ஆண்டுகள் கழிந்தே 'பாணினி' தோன்றிப் பெயர்பெற்ற வடமொழி இலக்கணம் இயற்றியிருத்தல்வேண்டும் அஃதாவது கி. மு. முதல் நூற்

றாண்டில் அல்லது கி. பி. முதல் நூற்றாண்டில் என்பது வெள்ளிடைமலை; அல்லது இந்த 64 இலக்கணிகளுக்கும் ஏறக்குறைய 1000 ஆண்டுகளை ஒதுக்கினும், பாணினிகாலம் டாக்டர் 'பேல்வல்கர்' கூறுகிறபடி, கி. மு. 7ம் நூற்றாண்டுக்கு முற்படாது. எனவே, பாணினிக்கு ஏறக்குறை 1000 ஆண்டுகட்கு முற்பட்டவன் 'இந்திரன்' என்பதும், அந்தக் காலத்திலேயோ அல்லது சற்றுப் பின்னாகவோ தொல்காப்பியர் இருந்திருத்தல்வேண்டும் என்பதும் பெறப்படுகிறது. இஃதன்றி, 'வேத வியாசர் ஆதி வேதங்களை நன்கு அமைப்பதற்கு முன் தொல்காப்பியர் இலக்கணம் செய்தனர்' என்பது நச்சினார்க்கினியர் கூற்று. வேத வியாசர் காலம் பாரதகாலத்துக்குச் சிறிது முற்பட்டது பாரத காலம் கி. மு. 5ம் நூற்றாண்டுக்குச் சிறிது முற்பட்டதென்பது சரித்திர நிபுணர் கொள்கை. எனவே, வேதவியாசர் காலம் கி. மு. 7, 6ம் நூற்றாண்டுகளாக இருத்தல்வேண்டும். எனவே, தொல்காப்பியர் வேத வியாசருக்கு மிக முற்பட்டவர், இந்திரனுக்குச் சமகாலத்தவர் அல்லது சிறிது பிற்பட்டவர் என்பன பெறப்படுகின்றன. எனவே, தொல்காப்பியர் ஏறக்குறைய கி. மு. 16, 17ம் நூற்றாண்டினர் என்பது தெளிவாவதோர் உண்மை. அதனால், தொல்காப்பியம் இற்றைக்குச் சற்றேறக் குறைய 3500 ஆண்டுகட்கு முற்பட்டதென்பது பெறப்படும். இது நிற்க.

தொல்காப்பியர் தம் சூத்திரத்தில் 'என்ப', 'என்மனார்,' 'என்றிசினோர்' என்று கூறிச்செல்லும் சொற்களைக் கூர்ந்து நோக்குழி, அவர்க்கு முன் தமிழில் இலக்கணப் புலவர் 'பலர்' இருந்திருத்தல் வேண்டும் என்பதும், அப்புலவர் இலக்கணஞ் செய்தற்குக் கருவியாக இலக்கியங்கள் பல இருந்திருத்தல் வேண்டும் என்பதும் வெள்ளிடைமலை. மிகவும் பண்பட்ட இலக்கண நூலாகிய 'தொல்காப்பியம், செய்தற்கு எத்துணை இலக்கண நூல்களும் எத்துணை இலக்கிய நூல்களும் அவர்க்கு உறுதுணையாக இருந்தன என்பது கூறத்தகாமன்று. ஆகவே, மிகப் பண்பட்ட அகப்பொருள் இலக்கியங்களும் புறப்பொருள் இலக்கியங்களும் அவற்றுக்குரிய இலக்கண நூல்களும் தொல்

காப்பியர் தோற்றத்துக்கு முன்னரே இத் தமிழ் நாட்டில் மல்கி இருந்திருத்தல் வேண்டும் என்பது நூலறிவோடு நுண்ணறிவுடையோர் நன்கறியக்கூடும் அன்றோ?

ஆகவே, தமிழர்க்கே உரிய பழக்க வழக்கங்களைக் கூறும் பண்டை நூல்களை ஐயந்திரிபறக் கற்றும், தம்காலத்தே இருந்த 'ஐந்திரம்' என்ற வடமொழி இலக்கண நூலைக் கற்றும் பழுத்த அறிவோடு தம் காலப்பழக்க வழக்கங்களையும் உளங்கொண்டு தொல்காப்பியர் நூல் செய்தவர் ஆவர் என்று கோடல் மிகையாகாது. தொல்காப்பியர் 'களவு, கற்பு' என இருவகை மணங்களைக் கூறியுள்ளார். களவென்பது ஒருவனும் ஒருத்தியும் முன்னர் அறியாது எதிர்ப்பட்டுக் கொள்ளும் உள்ள நெகிழ்ச்சியும் அதன் வழிப்பட்ட காதல் வாழ்க்கையுமாம். இது தலைவி, தலைவன், பாங்கன், பாங்கி என்னும் நால்வர் வயப்பட்டிருக்குங்கால் 'களவு' எனப்படும். பின்னர், இருமுதுகுரவர் கொடுப்ப ஒருவரை ஒருவர் (தலைவன், தலைவி) கோடல் 'கற்பு' என்பது. இக்கற்பு, பலர் அறிய நடப்பது. பலர் வருதலும், உண்டலும், மணமக்களை அலங்கரித்தலும், மகிழ்ச்சி கொண்டாடலும் போல்வன அக்காலத்தே நிகழ்தல் இயல்பல்லவா? இவற்றையே தொல்காப்பியர் 'கரணம்' என்றார். (பஞ்சாங்கப் பார்ப்பான் வந்து புத்தாடைபெற்று நிகழ்த்துஞ் சடங்கைத் தொல்காப்பியர் குறித்திலர் என்பது கவனிக்கத் தக்கது.) இப்பண்டை மணமுறை, தொல்காப்பியர் காலத்துக்கு முன்னும், அவர் காலத்திலும், அவர் காலத்துக்கு மிகப் பிற்பட்ட அகநானூற்றுக் காலத்திலும் நடைமுறையில் இருந்ததென்பது அறியத் தக்கது. பார்ப்பானை வைத்து மணமுடிக்கும் இக்காலவழக்கம் மிகமிகப் பிற்பட்ட காலத்திலேதான் இந்நாட்டிற் புகுந்திருத்தல்வேண்டும்.

அகநானூற்றில் பண்டைத் தமிழர் மணமுறையைச் செவ்விதாகக் கூறும் செய்யுள் இரண்டு உண்டு. அவற்றுள் முதலது பின் வருவது: "உணவுக் குவியல் கிடந்தது. பந்தற்கீழே புது மணல் பரப்பப்பட்டிருந்தது. வீட்டு விளக்குகள் சுடர்விட்டு ஒளிர்ந்தன. தலைவனும் தலைவியும் மாலைகளால் மாண்புறத்

நிகழ்ந்தனர். அழுகொழுகும் காலைநேரத்தில் நல்லோரையில் அழகிய பெண்கள் சிலர் தம் தலைமீது குடங்களை ஏந்தி நின்றனர்; சிலர் புதிய அகன்ற பாத்திரங்களை ஏந்தி நின்றனர்; அழகிய முதிய பெண்கள் பேச்சொலியோடு அப்பெண்கள் ஏந்தியிருந்த நீர்ப்பாத்திரங்களை வாங்கி ஒவ்வொன்றாகத் தர, பிள்ளைபெற்ற மகளிர் நால்வர்கூடித் தலைவியை, நோக்கி 'கற்பில் வழாது நல்லன செய்து உன் தலைவன் நலத்தைப் பேணுவா யாகுக' என்று கூறி, அரிசியும் அலரியும் கலந்த நீரால் நீராட்டினர். (இங்ஙனம் நீராட்டம் முடிந்த பின்னர், யாவரும் உண்டு மகிழ்ந்தனர்). அந்த இரவே பெருமனைக் கிழத்தியர் கூடித் தலைவியை அலங்கரித்து 'பேரில் கிழத்தி யாகுக' (பெரிய வீட்டுக்குரியாள் ஆகுக) என்று கூறிச் சதுர்த்திபறைக்குள் புக விட்டனர்."

" * * *

உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திறலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
'கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆகெ'ன
நீரொடு சொரிந்த விரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
'பேரில் கிழத்தி ஆகெ'னத் தமர்தர,
ஓரில் கூடிய உடன்புணர் கங்குல்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்
தொடுங்கினள்".

இச் செய்யுளின் அடியில் 'இதனுள் வதுவைக்கு ஏற்ற கரணங்கள் நிகழ்ந்தவாறும், தமர் தந்தவாறும் காண்க' என்று நச்சினார்க்கினியர் கூறுதல் கவனிக்கத் தக்கது. இதனால், 'கரணம்' எனத் தொல்காப்பியர் குறித்தது இன்னது என்பது தெளிவு.

அகநானூற்று 136-ம் செய்யுளும் இத்தகைய பண்டைத் தமிழ் மண முறையை விரிப்பதேயாகும். அதன் சுருக்கம் வருமாறு: "வெண்சோறு நெய்யிட்டு பெரியோர்க்கு வழங்கப் பட்டது. புள் நலம் நன்றாக இருந்தது. வானம் ஒளிர்ந்தது. மணவீடு செவ்வனே அலங்கரிக்கப்பட்டிருந்து. மணவீட்டார் கடவுளை வணங்கினர். பல் இயங்கள் ஒலித்தன. மணப்பெண் நீராடி ஆடையணிகளால் அழகுறத்திகழ்ந்தாள்; அவளைப் பெண்டிர் பலர் இமை கொட்டாது பார்த்து நின்றனர். மண மக்கள் வழிபடப் பாவை ஒன்றை அலங்கரித்துப் பந்தரில் வைத்தனர். மணமங்கை புதுமணல் பரப்பப்பெற்ற பந்தலின் கீழே அமர்ந்திருந்தாள். அப்போது (பாவை வழிபாடு நடந்த பின்னர்) கொடுப்போர் கொடுப்பக்கோடற்குரியோர் பெண்ணைப் பெற்றனர்." இதனைக் குறிக்கும் செய்யுள் தருவது மிகை யாதலின், விடப்பட்டது.

இப் பண்டைக்கால மணமுறையைப் பற்றிக் குறிக்கு மிடத்துக் காலஞ் சென்ற திரு. பி. டி. சீனிவாச ஐயங்கார் அவர்கள், "இத்தகைய பண்டைத் தமிழ் மண முறையில் ஆரியக் கலப்புடையது ஒன்று மில்லை; எரி வளர்த்தல் இல்லை; தீவலம் வருதல் இல்லை' 'தட்சணை' பெறப் புரோகிதன் இல்லை; இது முற்றிலும் தமிழர்க்கே உரிய மண முறை" என்று 'தமிழர் சரித் திரம்' என்னும் தமது ஆங்கில நூலில் (பக். 80) கூறியிருத்தல் கவனிக்கத் தக்கது.

"பண்டைத் தமிழர் களவு மணம் மிகவும் பழமையானதும் சிறந்ததுமாகும். நீடித்த வாழ்க்கை ஒப்பந்தத்துக்கு மிகவும் இயற்கையா யமைந்த சாதனமாகும். அதில் வீரம், தாமே வாழ்க்கைக்குரியாரைத் தேர்ந்தெடுத்தல், வாக்குறுதியை நிறை வேற்றல், மதம் யாவும் ஒன்றுபட்டு ஒளிர்கின்றன. ஒருவரை ஒருவர் தாமே தேர்ந்து பழகுதல் களவில் சிறிது காலம் இருக்க வழியாகின்றது. ஆனால் அது விரைவில், அவரவர் பெற்றோர் விருப்பத்தின்மீது மகிழ்ச்சிக்குரிய மண வாழ்க்கையாக மாறு கின்றது" என்று பேராசிரியர் ஆர். அரங்காச்சாரியார் அவர்கள்

(பிரஸிடென்ஸி காலேஜ்) தாம் எழுதிய கட்டுரை ஒன்றில் கூறி யிருத்தலும் கவனிக்கத் தக்கது.

இனி, 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப,

என்னும் கற்பியல் சூத்திரத்துக்கு உதாரணமாக நச்சினார்க் கினியர், நாம் முன்னர்க்கூறிய அகநானூற்று 136-ம் செய்யுளைக் காட்டியுள்ளார். எனவே,'நாம் முன்னர்க் கூறியாங்கு, அங்கி யங்கடவுள் அற்ற-புரோகிதன் அற்ற-அம்மி முதலியன அற்ற-மணமே, 'கரணமொடு புணர்ந்த மணம்—தொல்காப்பியர் கூறிய மணம்' என்பது நன்கு உணரத்தக்கது. இதுகாலை நாம் செய் வன பண்டைத் தமிழர்வழி வந்த மணமன்று என்பதையும் நன் கறிதல் கனி சிறந்தது. இது நிற்க.

இவ்வனம் நடுநிலைமையும் பகுத்தறிவும் உடையோரால் பாராட்டப்பெற்ற இப்பண்டைக் களவு மணம், மிகத் தூய்மை வாய்ந்தது என்பது,

"பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயிர் அம்மே" அகநானூறு, 12.

என்னும் அடிகளாலும்,

"யாக்கைக்(கு), உயிரியைந் தன்ன நட்பின், அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரி யோளே"
—அகநானூறு, 339.

என்னும் அடிகளாலும், நன்கறியத்தக்கது.

இத்துணைப் பேரன்புடைய காதலர் இருவருள் தலைவி, கள வினுமாதல் கற்பினுமாதல் தன்வேட்கையைத் தானே உணர்த் தல் இல்லை என்பதும் அறியத் தக்கதே. மணந்த திருவளர் நங்கை ஒருத்தி தன் முன்கையில் கிள்ளையை ஏந்தி அதனை நோக்கி, "பிரிந்து சென்ற தலைவர் இன்று வருவரோ, கூறு என்று கேட்கத் தொடங்கினவள், இல்லத்தில் இருந்தோர்க் கஞ்சி, மெல்லப் பேசினாள்" என்பதிலிருந்து அக்காலத் தமிழ்ப்

பெண்களின் நாணுடைமையும் அடக்க முடைமையும் இனிது விளங்கும்:

"செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி
'இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்தெ'ன,
இல்லவர் அறிதல் அஞ்சி, மெல்லென
மழலை இன்சொல் பயிற்றும்
நாணுடை அரிவை." —அகநானூறு, 34.

இதனையே தொல்காப்பியனார், 'தன் உடம்பும் உயிரும் தேய்ந்து புணர்ச்சியின்றி இருந்த காலத்தும் இவை என்ன வருத்தமுற்றனசொல் என்று தனக்கு வருத்தம் இல்லாததுபோலக் கூறுவதல்லது தலைவி தானே தலைவனைச் சேர்தல் இருவகைக் கைகோளினும் இல்லை' என அறுதியிட்டுக் கூறலானார்:

"உடம்பும் உயிரும் வாடியக் காலும்
'என்னுற் றனசொல் இவை' எனின் அல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை."
—தொல். பொருளியல், சூ. 9.

இன்னணம், கலந்த பொழுதிருந்து களவு கற்பின் வழிநடந்த காதலர்,

"அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்குங் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொ டோராங்கு முயங்கி"
—அகம், 225.

இல்லறப் பேரின்பம் பெரிதும் துய்த்தனர் என்பது அப் பண்டைக் காலப் பனுவல்களால் அறியப்படும் இன்பச் செய்தியாம்.

# பாண்டியர் வரலாறு

திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தார் அவர்கள்
தமிழ்ப்பண்டிதர் வாணாதுறை ஹைஸ்கூல் கும்பகோணம்

(முற்றொடர்ச்சி துணர் 11, மலர் 12, பக்கம் 473)

## IX

### தென்பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்த பிற்காலப் பாண்டியர்கள்.

கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதிமுதல் பதினேழாம், நூற்றாண்டின் பிற்பகுதிவரையில் தென்பாண்டி நாட்டில் சில பாண்டிய அரசர்கள் ஆட்சிபுரிந்துள்ளனர். கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அன்னோர் பெயர்களை யுணர்த்துமளவினுள்ளனவேயன்றி வரலாற்றுண்மைகளை விளக்கக்கூடியனவாக இல்லை. அவர்கள் தலைநகர் யாது என்பதும் நன்கு தெரியவில்லை. ஆயினும், கொற்கை, தென்காசி, கரிவலம் வந்தநல்லூர் ஆகிய ஊர்கள் அவர்கள் தலைநகரங்களாக இருந்திருத்தல் வேண்டும் என்பது உய்த்துணரப்படுகின்றது.

பதினான்காம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தென்பாண்டி நாட்டில் அரசு செலுத்திய பாண்டியர்களுள், பராக்கிரம பாண்டியன் என்ற பெயருடையார் மூவர் இருந்தனர்[1]. அம்மூவருள் கி.பி. 1387 ல் திருக்குற்றாலத்தில் திருப்பணி புரிந்தவன் ஒருவன்; கி. பி. 1384 முதல் 1415 வரையில் அரசாண்டவன் மற்றொருவன்; கி. பி. 1401 முதல் 1434 வரையில் ஆட்சி புரிந்தவன் மற்றையோன். அன்றியும், அக்காலப் பகுதியில் சடையவர்மன் குலசேகர பாண்டியன், சடையவர்மன் விக்கிரம பாண்டியன், என்ற வேறிரண்டு மன்னரும் இருந்தமை அறியத்தக்கது. இவர்களுள் குலசேகர பாண்டியன் கி. பி. 1395 ல் பட்டம் பெற்றவன். இவன் கல்வெட்டொன்று கரிவலம்வந்தநல்லூரில் உள்ளது. அஃது இவ்வேந்தனது ஆணைத்திருமுகமாகும்[2]. விக்கிரமபாண்டியன் கி.பி. 1401 முதல் 1422 வரையில் அரசு செலுத்தியவன்.

---

1. The Pandyan Kingdom pages 246 and 248.
2. Travancore Archaeological Series Vol. I page 45

இவன் கல்வெட்டுக்கள் திருக்குற்றாலத்திலும் திருப்புத்தூரிலும் உள்ளன[1]. இவர்கள் எல்லோரும் தென்பாண்டி நாட்டில் எவ்வெவ்விடங்களிலிருந்து எவ்வெப் பகுதிகளை ஆட்சி புரிந்தனர் என்பது புலப்படவில்லை.

சடையவர்மன் பராக்கிரம பாண்டியன்:—பிற்காலப் பாண்டியர்களுள் இவ்வேந்தன் மிகுந்த பெருமை வாய்ந்தவன் ஆவன். இவன் கி. பி. 1422 முதல் 1463 வரையில் அரசாண்டவன்; செந்தமிழ்ப் புலமையும் வடமொழிப் பயிற்சியும் உடையவன். இவனைப் பொன்னின் பெருமாள்[2] எனவும் மானகவசன்[3] எனவும் அந்நாளில் வழங்கியுள்ளனர். தென்காசிக் கோயிலிலுள்ள 'பூமிசைவனிதை நாவினிற் பொலிய' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி[4] இவனது போர்ச் செயல்களையும் திருப்பணிகளையும் குணச்சிறப்பையும் நன்கு விளக்குகின்றது.

இம்மன்னன், சங்கர நயினார்கோயில், திருக்குற்றாலம், முதலைக்குளம், வீரகேரளம் புதூர் முதலான ஊர்களில் தன்பகைஞரைப் போரில் வென்று புகழெய்தினான் என்று இவன் மெய்க்கீர்த்தி கூறுகின்றது. இவன் திருக்குற்றாலப்போரில் சேரனை வென்றான் என்பது தளவாய் அக்கிரகாரச் செப்பேடுகளால் வெளியாகின்றது.[5]

இவன் விந்தனூர்[6] முதலான ஐந்தூர்களில் அகரங்கள் அமைத்து அந்தணர்களுக்கு அளித்தமையும், திருக்குற்றாலம் திருபுடை மருதூர் இவற்றிலுள்ள சிவாலயங்களில் மண்டபங்கள் அமைத்தமையும், திருநெல்வேலியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு அர்த்தயாம வழிபாட்டிற்கு நிபந்தங்கள் விட்டமையும் இவன் மெய்க்கீர்த்தியால் அறியப்படுஞ்செய்திகளாம்.

---

1. The Pandyan Kingdom page 248.
2. Travancore Archaeological Series Vol. I page 97.
3. Do Do
4. Do Do page 91.
5. Do Do pages 126 & 133
6. செங்கோட்டை தாலூகாவிலுள்ள இவ்விந்தனூர்க்குப் பராக்கிரம பாண்டியச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயரும் முற்காலத்தில் இருந்தமை உணரத்தக்கது.

இற்றை நாளிலும் காண்போர் கண்களைக் கவரும் சிற்ப நுட்பமும் வனப்பும் வாய்ந்த தென்காசிப் பெருங்கோயிலை இவ்வேந்தன் எடுப்பித்தது இவனது சிவபத்தியின் மாண்பினை இனிது புலப்படுத்தா நிற்கும். இவ்வாலயத்திற்கு நாள் வழி பாட்டிற்கும் ஆண்டு விழாவிற்கும் தேவதான இறையிலியாகப் பல ஊர்கள் இவ்வரசனால் அளிக்கப்பெற்றுள்ளன[1]. சிவபெருமான், ஒரு நாள் இவ்வரசன் கனவில் தோன்றி வடகாசியிலுள்ள தம் திருக்கோயில் அழிவுற்ற நிலையிலிருத்தல் பற்றிச் சித்திரா நதியின் வடகரையில் தென்காசியும் அதில் ஓர் ஆலயமும் அமைக்குமாறு கூறியருளியதே, இதனை இவன் கட்டுவித்தமைக்குக் காரணமாகும். இச்செய்தி, தென்காசிக்கோயிற் கோபுரத்தின் முன்னர் நிற்கும் ஒரு கற்றூணில் வரையப்பெற்றுள்ளது[2] இக்கோயிலின் திருப்பணி முடிவுபெறுதற்குப் பதினேழாண்டுகள் ஆயின என்பது அக்கல்வெட்டால் தெரிகிறது. ஆனால், இவன் தொடங்கிய ஒன்பது நிலைக்கோபுரத் திருப்பணிமாத்திரம் இவன் ஆட்சியில் முடிவெய்தவில்லை. இவ்வாலயத்தில் எழுந்தருளியுள்ள இறைவன்பால் இவன் கொண்டிருந்த பத்தி அளவிட்டுரைக்கத் தக்கதன்று. எத்தகைய குறைகளுமின்றி இக்கோயிலைப் பாதுகாத்துவருமாறு சிவனடியார்களையும் தன்வழித் தோன்றல்களையும் இம்மன்னன் வேண்டிக்கொண்டிருப்பது குறிப்பிடற்பாலதாகும். அவ்வேண்டுகோளும் சில செந்தமிழ்ப் பாடல்களாக உள்ளது. கன்னெஞ்சமுடை யாரையும் உருக்கும் இயல்புடையனவும், எந்நிலையினரையும் பிணிக்குந் தன்மை வாய்ந்தனவும் ஆகிய அப்பாடல்கள் இவ்வரசன் இயற்றியனவே யாகும். அவற்றைத் தென்காசிக்கோயிற் கோபுரத்தில் இன்றும் காணலாம்[3]. இப்பெருங் கோயிலிற் பிற்காலப் பாண்டியர்கள்

---

1. Travancore Archaeological Series Vol. I p. 91, 92, 93, & 101
2. Travancore Archaeologieal Series Vol. I pages 99 and 100
3. (1) 'மனத்தால் வகுக்கவு மெட்டாத கோயில் வகுக்கமுன்னின்
றெனைத்தான் பணிகொண்ட நாதன்றென் காசியை யென்றுமண்
நினைத்தா தரஞ்செய்து தங்காவல்பூண்ட நிருபர்பதந் [மேல்
தனைத்தாழ்ந் திறைஞ்சித் தலைமிதி யானுந் தரித்தனனே'.

எல்லோருக்கும் முடிசூட்டுவிழா நடைபெற்று வந்தமை உணரற்பாலதாகும்.

இவன், தன்னுட்சியில் விசுவநாதப்பேரேரி என்ற பெயருடைய ஏரி ஒன்று வெட்டுவித்திருப்பது குடிகளது நலத்தின் பொருட்டு இவன் புரிந்த அரிய செயல்களுள் ஒன்றாகும்[1]. சிவபத்தியிலும் செங்கோன் முறையிலும் சிறந்து விளங்கிய இவ்வேந்தன் கி. பி. 1463 ல் விண்ணுலகடைந்தான் [2].

**சடையவர்மன் குலசேகர பாண்டியன்:**—பராக்கிரம பாண்டியன் தம்பியாகிய இவ்வரசன் கி. பி. 1429 முதல் 1473 வரையில் ஆட்சிபுரிந்தவன். எனவே, இவன் தன் தமையனுடன் சேர்ந்து தென்பாண்டி நாட்டை அரசாண்டவனாதல் வேண்டும். பராக்கிரம பாண்டியன்காலத்தில் தொடங்கப்பெற்று முடிவு பெறுமலி

---

(2) 'ஆராயினு மிந்தத் தென்காசி மேவும் பொன் னாலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வேயொழித் துப் புரப்பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே'.

(3) 'சேலே றியவயற் றென்காசி யாலயத் தெய்வச்செய
லாலே சமைந்ததிங் கென்செய லல்ல வதனையின்ன
மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர்தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்ரம பாண்டியனே'.

(4) 'சாத்திரம் பார்த்திங் கியான்கண்ட பூசைகள் தாம்நடத்தி
யேத்தியன் பால்விசுவ நாதன்பொற் கோயிலென்றும் புரக்க
பார்த்திபன் கொற்கைப் பராக்ரம மாறன் பரிவுடனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே'.

Travancore Archaeological Series Vol. I p 96 & 97.

1. 'நாம் நவமாகக் கண்ட விசுவநாதப்பேரேரி' Do. Do. page 51.

2. இவ்வேந்தன் இறந்தஞான்று ஒருபுலவர் பாடியுள்ள பாடலை அறிக.
'சோதற்ற பத்தியலுபத்து மூவர்தம் கூட்டத்திலோ
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத்தோ செம்பொ னம்பலத்தோ
வேதத்திலோசிவ லோகத்திலோவிசுவ நாதனிரு
பாதத்திலோ சென்று புக்கான் பராக்ரம பாண்டியனே.'

Travancore Archaeological Series Vol. I page 97.

ருந்த ஒன்பது நிலைக்கோபுரத் திருப்பணியை இவன் முடித்தமை அறிதற்குரியதாகும்[1].

அழகன் பெருமாள் பராக்கிரம பாண்டியன்:—இவன் சடையவர்மன் குலசேகர பாண்டியன் புதல்வன்; கி. பி. 1473 முதல் 1506 வரையில் அரசு செலுத்தியவன். இவன் காலத்தில் பராக்கிரம பாண்டியனான குலசேகர தேவன் என்ற வேறொரு மன்னன் இருந்தனன் என்பது சில கல்வெட்டுக்களாற் புலப்படுகின்றது[2]. அவன் கல்வெட்டுக்கள் கி. பி. 1479 முதல் 1499 வரையில் உள்ளன. அவன் யாவன் என்பது தெரியவில்லை.

இனி, அபிராம பராக்கிரம பாண்டியன், ஆகவராமன் என்ற உடன்பிறப்பினர் இருவர் இருந்தமை புதுக்கோட்டைச் செப்பேடுகளால் அறியப்படுகின்றது[3]. இவர்களைப்பற்றிய செய்திகள் கிடைத்தில.

சடையவர்மன் சீவல்லப பாண்டியன்:—இவன் ஆகவராமன் புதல்வன்; கி. பி. 1534 முதல் 1543 வரையில் அரசாண்டவன். இவனுக்கு 'இறந்தகாலமெடுத்தவன்'[4] 'பாண்டியராச்சியதாபனாசாரியன்'[5] என்ற பட்டங்களும் உண்டு. இவன் காலத்தில் திருவாங்கூர் இராச்சியத்திலிருந்த உதயமார்த்தாண்டவர்மன் என்ற சேரமன்னன் ஒருவன், தென்பாண்டி நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அச்சேரன் கல்வெட்டுகள் பிரமதேசம், சேரமாதேவி, அம்பாசமுத்திரம், களக்காடு ஆகிய ஊர்களில் உள்ளன.[6] ஆகவே, இப்பகுதி அவனது ஆளுகைக்கு உட்பட்டிருந்தது என்பது திண்ணம். தன்நாட்டை இழந்த சீவல்லப பாண்டியன், விசயநகர வேந்தனாகிய அச்சுத தேவராயனிடம்

---

1. Travancore Archaeological Series Vol. I page 103
2. Do Do 60
3. Do Do 83
4. Do Do 47
5. Do Do 54
6. Do Do 55

முறையிடவே, அவனும் பெரும் படையோடு தென்னாட்டிற்கு வந்து உதயமார்த்தாண்டவர்மனைப் போரில் வென்று அவன் கைப்பற்றியிருந்த தென்பாண்டி நாட்டைப் பிடுங்கிப் பாண்டியற்குக் கொடுத்தனன்[1]. விசயநகர வேந்தன் இங்ஙனம் விரைந்து செய்தமைக்கு மற்றொரு காரணமும் உண்டு. அது சேரமன்னன் சில ஆண்டுகள் அவனுக்குக் கப்பஞ் செலுத்தாதிருந்தமையேயாம்.

அச்சுததேவராயன் இத்தகைய அரிய உதவி புரிந்தமை பற்றிச் சீவல்லபன் தன்மகளை அவனுக்கு மணஞ்செய்து கொடுத்து மகிழ்ச்சியுற்றான்[2]. இந்நிகழ்ச்சியினால் பாண்டியர் குலத்திற்குப் பழைய பெருமையும் சிறப்பும் மீண்டும் உண்டாகுமாறு தான் செய்துவிட்டதாக எண்ணி 'இறந்தகாலமெடுத்தவன்' 'பாண்டியராச்சியதாபனாசாரியன்' என்ற பட்டங்களை இவன் புனைந்து கொண்டனன்போலும்.

சடையவர்மன் பராக்கிரம குலசேகர பாண்டியன்:—இவன் அபிராம பராக்கிரம பாண்டியனுடைய முதற் புதல்வன். இவனுடைய கல்வெட்டுக்கள் கி. பி. 1543 முதல் 1552 வரையில் உள்ளன. இவனைப்பற்றி யாதும் தெரியவில்லை.

நெல்வேலிமாறன்:—இவன் அபிராம பராக்கிரம பாண்டியனுடைய இரண்டாவது புதல்வன்; கி. பி. 1552 முதல் 1564 வரையில் ஆட்சிபுரிந்தவன். இவனுக்கு வீரபாண்டியன், குலசேகர பாண்டியன், பொன்னின் பாண்டியன், தர்மப் பெருமாள், அழகன் பெருமாள் என்ற வேறு பெயர்களும் உண்டு. இவன் புலவர்கள் பாடிய வீரவெண்பாமாலை கொண்டவன் என்று தென்காசியிலுள்ள ஒரு கல்வெட்டு உணர்த்துகின்றது[3].

சடையவர்மன் அதிவீரராம பாண்டியன் இவன் நெல்வேலி மாறன் முதல்மகன்; கி. பி. 1564 முதல் 1604 வரையில் அரசு

1. Travancore Archaological Series Vol. I Page 55
2. Do Do 56
3. Do Do Ins. No. VII

செலுத்தியவன். இவனை அழகன் சீவலவேள் எனவும் வழங்குவர். தன் தந்தையாகிய நெல்வேலிமாறனை நினைவு கூர்தற் பொருட்டுத் தென்காசியில் குலசேகரமுடையார் ஆலயம் ஒன்றை இவன் எடுப்பித்திருப்பது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்[1]. இதன் அண்மையில் இவன் எடுப்பித்த விண்ணகரம் ஒன்றும் உளது. இவன் செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கியவன் என்பது இவன் பாடியுள்ள சில தமிழ் நூல்களாற் புலப்படுகின்றது.

வடமொழியில் ஹர்ஷன் இயற்றியுள்ள நைஷதம் என்ற நூலை இவன் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளான். அது நைடதம் என்று வழங்கப்படுகிறது. அந்நூலை மொழி பெயர்த்தற்கு இவனுக்கு உதவி புரிந்தவர் நைஷதம் இராமகிருஷ்ணர் என்ற வடமொழிப்புலவர் ஆவர்[2]. இவன் பாடியுள்ள பிறநூல்கள் கூர்மபுராணம், வாயு சங்கிதை, காசிகாண்டம், இலிங்கப் புராணம், நறுந்தொகை என்பன. இவன் சிவபெருமானிடத்தில் மிகுந்த ஈடுபாடுடையவனாக ஒழுகி வந்தனன் என்பது இவன் இயற்றியுள்ள சைவபுராணங்களால் நன்கு விளங்கும்.

**வரதுங்க ராமபாண்டியன்:**—இவன் பராக்கிரம குலசேகர பாண்டியனுடைய இரண்டாவதுமகன்; கி. பி. 1588ல் முடிசூட்டப் பெற்றவன். அபிராம சுந்தரேசுவரன் எனவும் வீரபாண்டியன் எனவும் செப்பேடுகளில் இவன் குறிக்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கது[3]. அதிவீரராம பாண்டியன் ஆட்சிக்காலத்தில் தென்பாண்டி நாட்டிற் சில பகுதிகளைக் கரிவலம்வந்தநல்லூரிலிருந்து இவன் அரசாண்டவனாதல் வேண்டும் என்பது சிலகுறிப்புக்களால் அறியப்படுகின்றது[4]. இவன் வில்லவனை வென்றான் என்றும் வல்லமெறிந்தானென்றும் தென்காசியிலுள்ள ஒரு கல்

1. Travancore Archaeological Series Vol. I page 50
2. Do Do page 85
3. Do Do pages 115 & 133
4. Do Do page 125

வெட்டு உணர்த்துகின்றது[1]. இவனால் வென்றடக்கப் பெற்ற சேரமன்னன் யாவன் என்பதும் வல்லத்தில் இவன் யாருடன் போர்புரிந்தான் என்பதும் புலப்படவில்லை.

அதிவீரராமபாண்டியனைப்போல் இவ்வேந்தனும் தமிழ் மொழியில் பெரும்புலமைபடைத்தவன் என்பது இவன் இயற்றியுள்ள தமிழ்நூல்களால் நன்கு துணியப்படும். அவை பிரமோத்தரகாண்டம், கருவைக் கலித்துறையந்தாதி, கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி, கருவை வெண்பா அந்தாதி என்பன. இவ்வந்தாதிகள் அதிவீரராமபாண்டியன் பாடியவை என்றுஞ் சிலர் கூறுவர். அது தவறாகும்.

இம்மன்னனும் சிவபெருமானிடத்து ஒப்பற்றபத்தியுடையவனாயிருந்தனன், என்பது இவன் இயற்றியுள்ள நூல்களால் இனிது புலனாகும். அதிவீரராமபாண்டியற்குச் சுவாமிதேவரும் வரதுங்கராம பாண்டியற்கு வேம்பற்றூர் ஈசானமுனிவரும் ஞானாசிரியர்களாக இருந்திருத்தல் வேண்டும் என்பது இவர்கள் தம் நூல்களிற் கூறியுள்ள குருவணக்கங்களாற் பெறப்படுகின்றது.

(தொடரும்)

---

1. 'பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் காசளிக்கும்
கொற்ற முயர்க்குமறங் கூறுமே—விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள்.'

திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள தென்காசியில் வாழ்ந்த கலியன் கவிராயர் என்பவர் வரதுங்கராம பாண்டியன் முடிசூட்டு விழாவில் நாண்மங்கலமும் குடைமங்கலமும் வாண்மங்கலமும் பாடி அரசனைப் பாராட்டியுள்ளனர். அவற்றுள், இப்பாடல் வாண்மங்கலமாகும் ('கல்வெட்டுக்களால் அறியப்படும் சில தமிழ்ப் புலவர்கள்' என்ற என் கட்டுரையில் இவற்றைக் காணலாம். தமிழ்ப் பொழில் துணர் 5-பக்கங்கள் 379-385).

# திருவாதவூரர் திருவாய்மொழி

வித்துவான், வீ. குமாரசாமிஐயர், தமிழாசிரியர், உயர்தரப்பள்ளி, மேலூர்

நூல்கள் அறம் பொருள் இன்பம் வீடென்னும் பொருள் பற்றிக் கூறுந்திறத்தால் நால்வகைப்படும். அவற்றுள், அறம் பொருள் இன்பமென்னும் மும்முதற் பொருள்பற்றிக் கூறும் நூல்கள் உலகமக்கள் இம்மையில் நல்வாழ் வுறுதற் கேதுவாயிருத்தலான் அவற்றை உலகநூலென்றும், தோற்றமுடையனயாவுந் நிலையுதலிலவாந் தன்மையறிந்து, செல்வத்தின் கண்ணும் யாக்கையின் கண்ணுமுள்ள பற்றினைவிட்டு, இறைவனோதிய வீட்டு நெறியே நன்னெறியென மனத்துட் கொண்டு, "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ், செம்பொருள் காண்பதறிவு." என்னும் மெய்யுணர்வுபெற்று வீடுறுதற் கேதுவாயிருத்தலான் வீட்டுநூலை அறிவநூல் என்றுமுரைத்தல் பொருந்தும்.

"வீடென்பது சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்." (திருக்குறள்-உரைப்பாயிரம்) என்று ஆசிரியர் பரிமேலழகரும், "அகத்தியனாரும் தொல் காப்பியனாரும் வீடுபேற்றிற்கு நிமித்தங்கூறுதலன்றி, வீட்டின் தன்மை இலக்கணத்தாற் கூறாரென்று உணர்க. அஃது 'அந்நிலை மருங்கின்.......என்பதனான் உணர்க. இக்கருத்தானே வள்ளுவநாயனாரும் முப்பாலாகக்கூறி மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறினார்." (தொல்—சிறப்புப்பாயிரம்.) என்று ஆசிரியர் நச்சினார்க்கினியரும் உரைப்பர். பின்னர், "அந்நிலை மருங்கி னறமுத லாகிய, மும்முதற் பொருட்டு முரியவென்ப." என்னுஞ் சூத்திரவுரையுள், "வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின் அறமுதலென்பது புறப்பாட்டெல்லையாகக் கூறினானென்பார் நான்கு பொருளுந் தழீஇ யுரைப்ப. இனி பொரு சாரார் மும்முதற்பொருட்கு முரிய வென்பதனை எச்சப்

படுத்திக் கொள்ப. அற்றன்று, உலகியற்பொருண் மூன்றனையுங் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான்; அவையின்றி வீடு பெறு மாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினானென்பது. அல்லாதார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறானென்ப. அங்ஙனங் கருதின் அறமுதற்பொருளுஞ் செய்யுட் கண் வாராவென மறுக்க." எனப்பேராசிரியரும், "மும்முதற் பொருளெனவே, அவற்றது துணைப் பொருளாகிய அறநிலையின்மையும் பொருணிலையின்மையும் இன்பநிலையின்மையும் அடங்குமென்ப. உலகியற் பொருண் மூன்றனையும் இவையெனக் கூறி அவற்றை விடுமாறுங் கூறவே, வீடுங் கூறிற்றாம்." எனநச்சினார்க்கினியரும் உரைப்பர்.

இவ்வுரை யாசிரியர்தங் கூற்றையாராயின் செய்யுட்கண் வீட்டின்றன்மையினையும், வீடுற்றாருறு மின்ப நிலையினையும் இற்றெனவுணர்த்த லரிதென்ப தூஉம், மும்முதற் பொருள்பற்றிக் கூறும்நூல்கள் உளவாதல்போல் வீடென்னும் பொருள்பற்றிக்கூறும் நூல்களும் உளவென்பதூஉம் பெறப்படுகின்றன.

அன்றியும், தமிழ் மொழியில் 'தனக்குத் துணையில்லாத வீட்டின்ப மேதுவாக அறம் பொருள் இன்பமாகிய பொருட் பகுதியானும் அவற்றுப் பகுதியாகிய உயிரும் யாக்கையும் செல்வமும் இளமையும் முதலியவற்றானும் நிலைபேறில்லாத உலகியற்கை பொருந்திய நன்னெறியை' யுணர்த்தும் காஞ் சித்திணைக்கும், அத்திணையுள் அப்பொருளை விரிக்கும் துறைகளுக்கும் இலக்கண இலக்கியங்களுள வாதலானும், "நாற் பொருள் பயக்கு நடை நெறித்தாதல்." பெருங்காப்பிய விலக் கணத்து ளொன்றாதலானும், சிவஞானசித்தியார் சிவஞான போதம் திருவாசகம் திருக்கோவையார் தேவாரம் மணிமேகலை முதலிய வீட்டு நூல்கள் இன்று முளவாதலானும் தமிழ்மொழி யில் மும்முதற் பொருள்பற்றிக் கூறும் நூல்களேயன்றி வீடென் னும் பொருள்பற்றிக் கூறும் அறிவனூல்களு முளவாதல் திண்ணம்.

ஆதலின், திருவாதவூரடிகளருளிய திருவாசகம், திருக்கோவையாரென்னும் அருந்தமிழ்ப் பனுவல்கள் அறிவனூலாதலை நோக்குவாம்.

திருவள்ளுவர் வீடுபேற்றிற் கேதுவாய துறவற நிலையை மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்னும் பொருளீருகப் பதின் மூன்றதிகாரங்களிற் கூறியதையொட்டி யதன் மேலெஞ்சிய பொருளை அடிகள் மெய்யுணர்தல் முதலாகக் கொண்டு அருளுவதாலும், நூலகத்துள், "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு." "வைத்தநிதி பெண்டிர் மக்கள்குலங் கல்வியென்னும் பித்தவுலகு." "வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்வேண்டேன் மண்ணும் விண்ணும், வேண்டேன் பிறப்பிறப்புச் சிவம் வேண்டார்தமை நாளுந்திண்டேன்." "பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும் மெய்யாக் கருதிக் கிடந்தேனை." "பேராசையாமிந்தப் பிண்டம்." "சிவார்ந் திமொய்த் தழுக்கொடு திரியுஞ்சிறுகுடி லிதுசிதையக் கூவாய்கோவே." எனப் பலவாறு உலகியலை நிலைபெற்ற வீட்டின்ப மெய்துதலைக் குறித்து வெறுத்தருளுவதாலும், "திருவடிக் கீழ்ச், சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தினுள்ளார் சிவனடிக் கீழ்ப், பல்லோருமேத்தப் பணிந்து." என்று நூற்பயன் மொழிவதாலும் திருவாசகத் திருமறை வீடுபற்றிக் கூறும் அறிவனூலே யாம்.

திருக்கோவையாரோவெனின், உலகியல் நோக்குவார்க்கு இன்ப நூலெனப் படுமாயினும், வீட்டின்பங் கருதினார்க்கு "ஆரணங்காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின், காரணங்காணென்பர் காமுகர் காமநன் னூலதென்ப, ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர், சீரணங்காய சிற்றம் பலக் கோவையைச் செப்பிடினே." என்றவாறு வீட்டு நூலாய் விளங்கலானும், உலகவின்பப் பொருளைப் பலவாறு இழித்துரைக்குமடிகள் அதனையே சிறப்பித்துக் கூறினரெனல் ஒவ்வாமையானும், இந்நூலுரையாசிரியர், "திருவாதவூர் மகிழ் செழுமறை முனிவர், ஐம்பொறி கையிகந்தறிவா யறியாச், செம்புலச் செல்வ ராயின ராதலின், அறிவனூற் பொருளு முலகநூல்

வழக்குமென, இருபொருளு நுதலி யெடுத்துக்கொண்டனர்." எனக் கூறலானும், உலகநூல் வழி நுதலிய வுரையுள்ளும் ஆங்காங்கே உண்மைப் பொருளொளி வீசலானும் இஃதும் அறிவனூலேயாம்.

இந்நூல்கள் பிறர் கூற்றைக் கொண்டு கூறும் ஆசிரியர்தம் நூல்கள் போலல்லாமல் உலகப்பற்றால் உயிருறுமின்னலேயும், இறைவனருள் பெற்றஞான்று அஃதெய்து மின்பநிலையினையும் தங்கூற்றினைக் கொண்டே உலகிற்கு விளக்க அருளப்பட்டமையான் ஆசிரியருள்ளத்தை ஆடியினிழலெனச் செவ்விதினுணர்த்தும் இலங்கியச் சுவைசான்ற செய்யுள்களை யுடையனவாய் விளங்குகின்றன.

அவற்றுள் சில ஈண்டு நுகரப்படுவன.

உலகத்தில் மக்கள் தங் கண்ணிற்குப்புலனாகும் பொருள்கள் பல. அவைகளைப் பற்றிய எண்ணங்கள் காண்போர் தம் உள்ளறிவிற்குத்தக உதிக்கின்றன. ஒவ்வொருவருடைய உள்ளறிவும் ஒத்திராமையின் காணும் பொருளைப் பற்றிய எண்ணங்களும் ஒத்திருப்பதில்லை. இதனை ஓர் உவமை வாயிலாக அறிவாம்.

ஒரு பரந்த பசும்புற்றரையை ஒருழவன், ஓர்சிறுவன், ஓர் துறவியாகிய மூவர் நோக்கினர். அவர்கள் முறையே அதனைத் தனது ஓய்ந்த எருது மேய்தற்குரிய புலமாகுமென்றும், விளையாடுதற்கேற்ற களமாகுமென்றும், கல்லறை யமைத்தற்கேற்ற இடமாகுமென்றுங் கருதிப் போந்தனர். ஈண்டு நோக்கப்பட்ட பொருள் ஒன்று. நோக்கினோர் தம் உள்ளத்தெழுந்த எண்ணங்கள் பலவாயின. இதனால் பொருள் புலப்பாடாதல் தத்தம் உள்ளறிவைப் பொருத்ததென்பது புலனாம்.

அவ்வாறே நூலியற்றும் புலவன்றன் உள்ளறிவிற் கேற்றவாறே அவன் கூறும் இயற்கைப் பொருள் வர்ணனைகளும் அமைந்திலங்குவனவாம்.

நம் பெருமான் "தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும், பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ், சூலமுந்

தொக்க வளையுமுடைத் தொன்மைக், கோலமே" நோக்கும் பொருளெனக் கொண்ட உளத்தராதலின் உலக இயற்கைப் பொருள்களும் இறைவி இறைவர்தம் திருவுருவமாகவே அவர்தம் கட்புலனுக்குப் புலனாகலான் அவ்வாறு வர்ணித்தல் காணத்தக் கதாம்.

1. ஒரு பொய்கையை வர்ணிக்கும் அடிகள், அதன்கண் குவளைமலர்களும், நேமிப் புட்களும், செந்தாமரை மலர்களும், பாம்பினங்களு மிருத்தலான் அவைகள் முறையே உமையின் நீலத் திருமேனியினையும், நகிலினையும், சிவபெருமான் றன் செம் பவளத் திருமேனியினையும், அவனுக் கணியாயுள்ள பாம்பினங் களையுமொத்து விளங்கலானும், உடல் மாசகற்றுவார் படிந் திருத் தல் மனமாசகற்றும் அடியார் சார்ந்திருத்தலையு மொப்பதானும் அஃது எம்பிராட்டியையும் எங்கோனையு மொக்குமென் றருளிய,

பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.

(திருவெம்பாவை—13. செ.)

என்னும் இச்செய்யுள் உள்ளப்படாத திருவுருவை யுள்ளிய அடிகள் தம் உளச்சாயலாய் விளங்குகின்றதன்றோ!

(தொடரும்.)

## புத்தக மதிப்புரை

தனிப்பா மஞ்சரி:—இது வானமாமலை மடத்து வித்துவான் தென்திருப்பேரைத் திருவாளர் அனந்த கிருஷ்ணையங்கார் அவர்கள் இயற்றிய நூல். இவர் புகழ்மிக்க புலவர் மரபில் தோன்றியவர். இவர் கருவிலே திருவுடைய மதுரகவி என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவர் இயற்றிய பிரபந்தங்கள் பலவும் தமிழுலகில் பரவி அன்பர்களின் உள்ளத்தை இன்புறுத்தும் பெற்றியன. சிலேடை, யமகம், திரிபு, ஆசுகவி, சித்திரகவி ஆகிய சொல்லலங்காரப் பாக்களைப் பாடுவோர் இற்றை நாளில் இல்லையென எண்ணுவது தவறெனஇந்நூல் தெரிக்கிறது. சொல்லழகும், பொருட் பொலிவும், பாடலின் எளிமையும், நூலாசிரியரின் மதி நுட்பத்தையும், கவித்திறனையும் செவ்வே விளக்குகின்றன. இந்நூலைப்படிப்பவர் பண்டைக் காளமேகமே புத்துயிர்பெற்றுக் கவிமழையால் தமிழுலகை மகிழ்விக்க வந்தனரோவெனக் கருதுவர்.

தனிப்பாமஞ்சரி என்னும் இந்நூலை உருவாக்கி தமிழ் கூறு நல்லுலகிற்கு உதவிய பெருமை சிவைகுண்டம், வழக்கறிஞர் திருவாளர் S. T. பொன்னம்பல முதலியார் அவர்களுக்கே உரியதாகும்.

புலியூர்ப் புராணம்:—தெல்லிப்பழை வித்துவான் திருவாளர் சிவானந்தையர் அவர்கள் இயற்றியது. சூதசங்கிதை ஆதிய வடநூற் புராணங்களைத் தழுவி, தில்லையம்பலத்திலே கோயில் கொண்டிருக்கும் பெருமானார் மீது நூலாசிரியர் வைத்த பத்தியினால் உளங்கொண்டு பாடியது. ஆசிரியரது தமிழ்ப் புலமையும், சிவபத்தியும் சொன்னயம் பொருணயம் மிக்க பாடல்களால் நன்கு விளங்குகின்றது. நூல் முற்றுப்பெறுதற்குள் ஆசிரியர் காலமானது வருந்தத்தக்கது.

இந்நூலை ஆக்கித்தருமாறு ஆசிரியரவர்களை ஊக்கிய தெல்லிப்பழை வழக்கறிஞர் திருவாளர் க. தம்பையபிள்ளை அவர்கள், இதனைக் கணவரின் நினைவுமலராகப் பதிப்பித்து வெளியிடச்செய்த திரு. தம்பையபிள்ளையவர்களின் மனைவியார் பவளநாயகியார், ஆகிய இருவரின் தமிழ்த்தொண்டும் யாம் போற்றுதற்குரிய அருஞ்செயல்களாகும்.

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

### கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "வைகாசி"

### நன்கொடை

| திங்கள் நன்கொடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் (சித்திரை, வைகாசி) | அவர்கள் | 10 | 0 | 0 |
| ,, க. நடராசன் B.A., B.L., (மாசி) | ,, | 5 | 0 | 0 |
| ,, ரே. அ. அனந்தவிசய முதலியார் (சித்திரை, வைகாசி) | ,, | 3 | 0 | 0 |
| ,, L. மார்க்கசகாயம்பிள்ளை B.A., (பங்குனி) | ,, | 1 | 8 | 0 |
| ,, இராச ரத்தனம்பிள்ளை B.E., Overseer (மாசி) | ,, | 1 | 0 | 0 |

ஆயுள் நன்கொடை.

| | | | |
|---|---|---|---|
| ,, பொன்னுசாமிநாடார் அவர்கள் (ரூபாய் ஆயிரத்துக்கு முதல் தவணை.) | 50 | 0 | 0 |



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ௰உ | தாது, ஆடி | மலர் ௪ |

உ

## பரணர் என்னும் ஆராய்ச்சிநூல்



திரு. வித்துவான், ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்



பரணர் என்னும் ஆராய்ச்சிநூல், "பரணர் பாட்டுக்கள்" என்ற பகுதியின்கண், செய்த ஆராய்ச்சிகளுள் சில பொருந்தா என்பது, "வெண்ணெலரிநர்" என்று தொடங்கும் நற்றிணைப் பாட்டினை யாப்பாயுமுகத்தால், முன்னைய கட்டுரைகளில் (மலர் ௬ ம) காட்டப்பட்டது அறிஞர்கள் அறிந்ததாகும். இனி, அக் கட்டுரையின் முடிப்புரையில் தோற்றுவாய் செய்தவாறு, இந் நூல் ஆராயும் "இலக்கண வேறுபாடு" என்னும் பகுதியினை ஆராய்வாம். அறிஞர்கள் ஈண்டுக் கூறுவனவற்றைச் சீர்தூக்கி உண்மை துணிந்து உரைப்பார்களாக.

இந்நூலாசிரியராகிய திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள், "பெரும் புலவராகிய பரணர் தம் செய்யுட்களின் அமைதி, தொல்காப்பியத்திற்கு மாறுபடுகின்றது..........உயர் திணைப் பெயர்களில், இரண்டாம் வேற்றுமையுருபு விரிந்தே வருதல் வேண்டும் என்பது 'உயர் திணைமருங்கின் ஒழியாது வருதலும்' (தொல். தொகை. 15) என்னும் இரண்டாம் வேற்றுமைச் சிறப்பு விதிச் சூத்திரத்தால் பெறப்படும். அங்ஙனமாகவும், பரணர் செய்யுட்களில் 'வேந்த ரோட்டிய எந்துவேல் நன்னன்' (நற். 270) என இரண்டாம் வேற்றுமை யுருபு தொக்குவந்துளது.......'உருவக் குதிரை மழவரோட்டிய' (அகம். 1) என்று மாமூலர் பாடியிருப்பதும் இது போன்றதே. இவ்வாறு வருதலைக் கண்டே நன்னூலார், 'உயர் திணையிடத்து விரிந்தும் தொக்கும்' என்று இலக்கணம் அமைப்பாராயினர்" என்று கூறுகின்றார்கள்.

கூறவே, ஆசிரியர் தொல்காப்பியனார், இரண்டாம் வேற்றுமை யுருபாகிய ஐயுருபு, உயர் திணைப் பெயரிடத்து விரிந்தே வருதல் வேண்டும் என்று விதித்தார் என்பதும், பரணர், மாமூலர் முதலிய நல்லிசைப் புலவர், அவ்விலக்கண விதிக்கு மாறுபட்டு, உயர்திணைப் பெயரிடத்து அவ்வுருபு தொக்கு வரச் செய்யுள் செய்தனர் என்பதும் பெறப்படும். மேலும், அவ்வாறு வருதலே நேரிது; தொக்குநின்றவழிப் பொருள் இனிது விளங்காது என்பது திரு. ரெட்டியாரவர்கள் கருத்து. இது, "வேந்த ரோட்டிய எந்துவேல் நன்னன்" என்னும் அடியைப் படிக்கும் பொழுது, வேந்தரையோட்டிய நன்னன் எனப் பொருள் தோன்றுதல் அரிது" என்று கூறுவதால் அறியப்படுகிறது. அன்றியும், தொல்காப்பியனார் கூறுதற்கு மாறாகப் பரணர் முதலியோர் செய்யுள் செய்தாராயினும், அச்செய்கை பிற்காலத்தார்க்கு இலக்கணமாம் என்னும் கருத்தினால், நன்னூலார், "உயர் திணையிடத்து விரிந்தும் தொக்கும்" வரும் என எடுத்துக் கூறினர் என்பதும் இவர் கூறியவாற்றால் தெளியப்படும். இக் கூறியவாற்றால், பரணர் செய்யுட்கள், தொல்காப்பியத்துக்கு மாறாகவும், நன்னூலிலக்கணத்துக்கு ஒப்பவும் நிற்றல் பெறப்படும்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் "உயர்திணைமருங்கின் ஒழியாது வருதலும்" என எழுத்ததிகாரத்து விதித்தவர், சொல்லதிகாரத்து, "ஆடூஉவறிசொல், மகடூஉவறிசொல், பல்லோரறியும் சொல்லொடுசிவணி, அம்முப்பாற்சொல் உயர்திணையவ்வே" (சூ.உ) என்றும், பொருளதிகாரத்து, "தன்னும் அவனும் அவளும் சுட்டி" (சூ.36.) என்றும் கூறிய சூத்திரங்களுள், உயர்திணைப் பெயரிடத்து ஐயுருபு, தொக்குவரக் கூறியிருக்கின்றனர். எழுத்ததிகாரத்து வகுத்த விதிக்குமாறுகப் பிறண்டுத் தாமே கூறுதல், விதியும் செய்கையும் ஒவ்வாமை கூறலாகிய குற்றம் ஆசிரியர் தொல்காப்பியனார்பால் எய்துவதாயிற்று. திரு. ரெட்டியாரவர்கள் அடிக்குறிப்பில் (Footnote) "ஆடூஉவறி சொல் என்று ஆசிரியர் கூறியிருத்தலின் இஃது அமையும் என்பர்" என்று குறித்தனர் (பக். 162.) இதன்கண், "என்பர்" எனப் பிறர்மேல் வைத்துக் கூறியிருத்தலின், அஃது அவர்க்கும் உடன்பாடன்று என்பது துணியப்படும். மேலும், அவ்வாறு தொக்கு நிற்பக் கூறுதல் சிறவாது என்பது தமக்குக் கருத்து என்பது எய்தவே திரு. ரெட்டியாரவர்கள் 'வேந்தரோட்டிய எந்துவேல்' நன்னன் என்பதைப் படிக்கும்பொழுது வேந்தரை யோட்டிய என்றும் பொருள் தோன்றுதல் அரிதாகின்றதென்று கூறினர் என்பதும் அறியப்படும். படவே, ஐயுருபு உயர்திணையிடத்து விரிந்து வருதலே நேரிது என்பதும், தொக்குவர ஆசிரியர் தொல்காப்பியனாரே கூறினும், அஃது அவ்விலக்கண விதிக்கு முரணியதே என்பதும் திரு. ரெட்டியாரவர்கள் கருத்தாம்.

இனி, நன்னூலார் ஐயுருபு உயர்திணையிடத்து விரிந்தும் தொக்கும்வரும் என்று கூறியது நேரிது என்று திரு. ரெட்டியாரவர்கள் கருதுவர். நன்னூலார் கூற்றின் தகுதி நிலையினை ஆராயாது, "உயர்திணையிடத்து விரிந்தும் தொக்கும் என்று இலக்கணம் அமைப்பாராயினர்" என்று கூறியொழிந்தமையே, அவர்க்கு அது கருத்தென்பது துணியப்படும். ஐ முதலிய வேற்றுமையுருபுகள் தம்மையேற்கும் பெயர்களின் ஈற்றில் விரிந்தும் தொக்கும் தம்பொருளையுணர்த்தும் என்பது பண்டைய ஆசிரியன்மார் அனைவர்க்கும் ஒப்ப முடிந்தது. இது

வேற்றுமைகளின் பொது விலக்கணமாகும். ஆகவே, ஐயுருபு தானும், இவ்விலக்கண நெறியால், தன்னையேற்கும் பெயரது ஈற்றில்விரிந்தும் தொக்கும்வரும் இலக்கணத்ததாகலின், இஃது "உயர்திணையிடத்து விரிந்தும் தொக்கும்" வரும் என்று நன்னூலார் எடுத்துக் கூறுவதால் பயன் என்னை? அஃறிணையிடத்தும் இப்பெற்றியாகவே வரும் இலக்கணத்ததாகிய இதனை உயர் திணைக்கே உரியது போலக் கூறுதல் குற்றம் அன்றோ? "சொல் பல நாட்டைத் தொல்கவி னழித்த" (பதிற்.43) என அஃறிணை யிடத்து ஐயுருபு விரிந்தும், "காரெதிரகானம் பாடினேமாக" (புற. 144) எனத் தொக்கும் வருதல் காண்க.

ஆகவே, உயர்திணையிடத்து ஐயுருபு விரிந்தே வரும் என்று விதித்த ஆசிரியர் தொல்காப்பியனார் ஏனை நூற்பாக்களில் (சூத் திரங்களில்) அது தொக்குவரக் கூறியதனால், விதியும் செய்கை யும் ஒவ்வாமையாகிய குற்றம் அவர்பாலும், இருதிணைப் பெய ரிடத்தும் விரிந்தும் தொக்கும் வரற்பாற்றாகிய ஐயுருபு, உயர் திணையிடத்து விரிந்தும் தொக்கும் என வரைந்து கூறிய குற்றம் நன்னூலார் பாலும் கிடைக்கின்றது என்பது இவ்வாராய்ச்சி யால் பெறப்பட்டமையின், இவற்றுள், தொல்காப்பியத்தின் உண்மை நிலையினை ஈண்டு ஆராய்வாம்.

மக்களுடைய மனவுணர்வு நாளும் வளர்ந்து விரியும் இயல் பிற்று; அதனை வெளிப்படுக்கும் சிறப்புடைக் கருவியாகிய சொற்றொகுதியும் விரிந்து பல்கும் இயல்பினதாகும். ஆகவே, அதன் முடிபு வகைகளும் பலவாய் விரிதல் பெறப்படும். அவற்றை வரைந்து, திணிந்த முடிபுவகைக்கண் அடக்கலுறின், அவ்வளர்ச்சி குன்றும். ஆகலின், அவ்வாறு பெருகிப் பல்கும் முடிபுவகைகள் அவ்வளர்ச்சி கெடாது அடங்குதற்கேற்ப, அவற்றை ஒரெல்லைக்குள் நிறுத்தி, அழகுறவமைக்கும் இலக் கண விதிகள், "பலவகையானும் பயன் தெரிபுடைய"வாய் அமைந்திருத்தல்வேண்டும். அவை, இலேசு, உத்தி என்பன முதலாகக் கூறப்படும். அவற்றிற்கு உரைகாணப்புகும் புலவர் பெருமக்கள், அவ்வமைதியின் ஒட்பம் தேர்ந்து வேண்டுமாற் றால் அமைப்பது கடனாகும். இவ்வமைதி "அளக்கலாகாவரும்

பொருட்டாகிப், பல்வகையானும் பயன் தெரிபுடையது, சூத்திரத் தியல்பு'' என்றும், ''சூத்திரத்துப் பொருளன்றியும் யாப்புற, வின்றியமையாதியைபவை யெல்லாம், ஒன்றவுரைப்பது உரையெனப்படுமே'' என்றும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுமாற்றால் உணரப்படும். படவே, உயர்திணையிடத்தும் விரிந்தும்தொக்கும் வரும் இயல்பிற்றாகிய ஐயுருபு, தொக்குநின்ற வழித் தன்பொருளைத் தெள்ளிதின்உணர்த்தும் சீர்ப்பாடின்மை கருதி, ''உயர்திணையிடத்து ஒழியாது வருதலும்'' என்றாராயினும், தொக்குநின்று முன்னும் பின்னும் அடுத்துவரும் சொற்றொகுதியால், தன் பொருளையுணர்த்தும் சீர்ப்பாடு எய்துமாயின், அது விலக்கப்படாதாம். ஆகவே, அதனையும் அடக்குமாறு சூத்திரம் அமைந்திலதாயின், அதன் இயல்பு குன்றுதலின், அதுவும் அடங்குதற்கு, விரிந்தே வருதலும் என்னாது, ''ஒழியாது வருதலும்'' என்று ஆசிரியர் கூறுவாராயினர். ஆகவே, அவர்பால் முன்கண்ட குற்றமின்மை பெறப்படும். அவ்வுண்மை தோன்றவே, சொல்லதிகாரத்தும், பொருளதிகாரத்தும் ஒரு சில சூத்திரங்களுள் உயர்திணையிடத்து ஐயுருபு தொக்குவரக் கூறினர் எனக் கோடல்வேண்டும்.

இப்பெற்றித்தாய அமைதியொடுதிகழும் இலக்கணநெறியின் இயற்கை நலங்களை முற்றவுணர்ந்த ஆசிரியர் பரணர் முதலாயினர், தம் பாட்டுக்களில் ஐயுருபு தொக்குவரவும் பாடினர் என வுணர்தல் வேண்டுமேயன்றி, அவர் கூறியன, இலக்கண முடிபு காட்டும் தொல்காப்பியத்துக்கு மாறுபட்டனவாம் என்றல் நிரம்பாதாம். இந்நெறிமையின் ஒட்பங்களை யுணர்ந்தே உரையாசிரியன்மாரும், இன்னோரன்னவற்றை இலேசினானும் உத்தியானும் பிறவற்றானும் அமைத்துக் காட்டுவாராயினர். இவ்வியல்பு காணமாட்டாத ஆராய்ச்சியாளர் சிலர், ''சூத்திரத்துட் கூறுவனவே பொருளாவன; உரையாசிரியன்மார் உரையிற் கொணர்ந்து காட்டுவன ஆகா'' என்று கருதுவர். இக்காலத்து நம் நாட்டில் வழங்கும் வழக்குநூல் (Civil, Criminal, Constitutional and other laws of our Country) களின் அமைப்பினையும், அவற்றின் பொருள் காணும் திறங்களையும் தெரிந்துணர்ந்த

அறிஞர், இலக்கண நூல்கட்கு உரைகாரர்கள் காட்டும் உரைத்திறம் அறிவின் இயற்கைநிலையோடு இயைந்ததென்றே கூறுவர். இலக்கணமும் வழக்கு நூலேயாகும்.

ஆகவே, தமிழ்ச்சொற்றெருகுதிக்கட்படும் முடிவுவகை பலவும் தன்பால் அடங்கியமையுமாறு தொல்காப்பியமாகிய பேரிலக்கணப் பெருமணி நின்று திகழ்கின்றமையின், அம்மணியொளி கொண்டு, சொற்பொருளின் நுட்பங்களை நுனித்துணர்ந்து தேர்ந்து நல்லிசைப்புலமை நிரம்பிய ஆசிரியர் பரணர் முதலாயினரது உள்ளம், அந்நூல் நெறியே பயின்ற பயிற்சி வன்மையுடையதாகலின், அதன்கட்டோன்றும் சொன்முடிபுகள் அந்நூன் முடிபுக்குமாறுதல் கூடாமையின், அவர் உள்ளத்துப் பிறந்து சொல் வடிவுபெற்றுப் போதந்த அவர் செய்யுட்களின் சொற்பொருள் முடிபுகளும், தொல்காப்பிய இலக்கணங்கட்கு மாறுபட்டன என்று கோடல் நிரம்பாதென்பது உணரப்படும்.

இனி, பரணர் என்னும் இவ்வாராய்ச்சிநூல் கூறும்வேறோர் இலக்கண வேறுபாட்டினை யாராய்ந்து காட்டி, இக்கட்டுரையின் இப்பகுதியினை முடிக்கின்றாம்.

"பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கை" (அகம். 148) என்னும் அடியில் பனைத்திரள் என்பது பனந்திரள் என வருதலே யமைதி. இது, "பனையும் அரையும்" (தொல். உயிர். 81) என்னும் சூத்திரத்தால் அறியலாகும். ஆயின், 'ஐகாரவிறுதிப் பெயர்நிலை முன்னர், வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகுமே, (உயிர். 78) என்னும் பொது விதியான், பனைத்திரள் என வந்ததால் எனின், ஆசிரியர் பனையென்னும் சொல்லைக் குறித்து' மூன்று சூத்திரங்களில் (உயிர் 81-83) சிறப்புவிதி கூறுகின்றாராகலானும், பொதுவிதி சிறப்புவிதியால் கெடுமோகலானும், அஃது அமையாது என்க. அன்றியும், ஆசிரியர் பனைக்கொடியென வருதல் கண்டு, அதனை, 'கொடிமுன் வரினே ஐயவண் நிற்பக், கடிநிலையின்றே வல்லெழுத்து மிகுதி' (உயிர். 83) என்று விதி கூறி அமைத்தாற்போல, பனைத்திரள் என வருதலைக் கூறியமைத்தாரல்லர். இதனால், பனைத்திரள் என வருதல் ஆசிரியர்

கருத்தன்மையுணர்க. 'பனந்துணி' (புறம். 35), 'பனங்குடை' (புறம். 177) என வருதல் ஈண்டு அறியத்தகும்" என்று திரு. ரெட்டியாரவர்கள் கூறுகின்றார்கள்.

இதனால், பனைத்திரள் என்பதனைப் பொதுவிதியால் முடித்தலினும், சிறப்புவிதியால் முடித்தலே அமைதியென்பதும், பனைத்திரள் என்பது ஆசிரியர் கருத்தன்று என்பதும் அவர் கருத்தாதல் பெறப்பட்டது.

பனைத்திரள் என்பது பொதுவிதியால் முடிந்ததென்றல் அமையாது என்பது திரு. ரெட்டியாரவர்களின் மேற்கோள். இதற்கு அவர் கூறும் ஏது, "ஆசிரியர், பனையென்னும் சொல்லைக் குறித்து மூன்று சூத்திரங்களில் (உயிர். 81-83) சிறப்பு விதி கூறுகின்றார்" என்பதும், "பொதுவிதி சிறப்புவிதியால் கெடும்" என்பதுமாகும்.

"இவர் காட்டும் பொதுவிதி, "ஐகார விறுதிப் பெயர்நிலை முன்னர், வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகுமே" என்பது. ஐகார வீற்றுப் பெயர்ச் சொற்களின் முன், வேற்றுமைப் புணர்ச்சிக்கண் வல்லெழுத்துமிக்கு முடியும் என்பது இதன் பொருள். "பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும், நினையுங் காலை அம்மொடு சிவணும், ஐயென் இறுதி அரைவரைந்து கெடுமே, மெய்யவணொழிய என்மனார் புலவர்" என்பது ஒரு சிறப்புவிதி. பனை, அரை, ஆவிரையென்னும் சொற்கள் அம் முப்பெற்று முடியும் என்பதும், அதுபோது, இவற்றுள், அரையென்பது ஒழிய, ஏனைய இரண்டின் ஈற்று ஐகாரம், தான் நின்ற மெய்யொழித்துக் கெடும் என்பதும் இதன் பொருளாகும். "பனையின் முன்னர் அட்டுவருகாலை, நிலையின்றாகும் ஐயென் உயிரே, ஆகாரம்வருதல் ஆவயினான" என்பதுவேறொரு சிறப்புவிதி. பனையென்னும் சொல்முன் அட்டுஎன்னும் சொல் வந்து புணரின், பனையின் ஈற்று ஐகாரம் நில்லாது என்பதும், அவ்விடத்து, ஆகாரவுயிர் வந்து, பனா அட்டு என முடியும் என்பதும் இதன் பொருளாகும். "கொடிமுன் வரினே ஐயவண் நிற்பக், கடிநிலையின்றே வல்லெழுத்து மிகுதி" யென்பது மூன்றாவது சிறப்புவிதி. பனையென்னும் சொல் முன் கொடியென்னும்

சொல் வந்து புணரின், பனைக் கொடியென வல்லெழுத்துமிக்கு முடிதல் நீக்கப்படாது என்பது இதன் பொருளாகும்.

இனி, இவ்விதிகள் செய்யும் செய்கையினை யாராய்வாம். "ஐகாரவிறுதி" யென்னும் பொது விதியாற் போந்த வல்லெழுத்துமிகுதி, "பனையும் அரையும்" என்னும் சிறப்புவிதியால் கெட, பனையென்னும் சொல் அம்முப்பெறுதலும், ஐகாரம் கெடுதலும் பெறுதல் எய்திற்று. இச்சொல், "அட்டுவருகாலை" யென்னும் சிறப்புவிதியால், முன்பெய்திய ஐகாரக்கேடும், (அம்முப்பேறு விலக்கி,) ஆகாரப்பேறும் பெறுதல் எய்திற்று. எய்தவே, "பனையும் அரையும்' என்னும் சிறப்பு விதியால் எய்திய அம்முப்பேறு, ஐகாரக்கேடு என்ற இரண்டனுள், பின்னர்ப் போந்த சிறப்புவிதி, அம்முப்பேற்றை விலக்கியவாறு காண்க. "கொடி முன்றரினே" என்னும் சிறப்புவிதி, முன்னைய சிறப்பு விதிகளாற் போந்த, ஐகாரக்கேடு, அம்முப்பேறு' ஆகாரப்பேறு ஆகிய மூன்றையும் விலக்கி, பொதுவிதியால் எய்தும் வல்லெழுத்து மிகுதியினையே வற்புறுத்துவதாயிற்று. ஆகவே, ஒன்றனையொன்று விலக்கிப் போதரும் சிறப்பு விதிகள் தாமும் முடிவில், பொதுவிதி கூறும் முடிபினையே வற்புறுத்துதலின், அவை வருமொழி நோக்கியவாயும், நிலைமொழிக் குரியவாயும், வந்தனவாயினும், பனையென்னும் சொல் பொது விதியால் முடிபு பெறுதலை நீக்கும் வன்மையிலவென்பது பெறப்படும். படவே, பனையென்னும் இச்சொல், பொதுவிதியால் முடிதல் அமையாது என்றல் நிரம்பாதாம்.

(தொடரும்)



# கருதலளவைப் பகுதி

ஸ்ரீ. த. இராமநாதபிள்ளை அவர்கள், சாவகச்சேரி, இலங்கை

## 5-ம் அதிகாரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 3. பக்கம் 89.)

## சம்பா வித அந்நுவயங்கள் Conditional Syllogisms.

### 1. சம்பா வித தாட்டாந்தம்.

இதுகாறும் சுத்தசுயம் பித அந்நுவயங்களைப்பற்றி விளம்பினும். சுயம்பித தாட்டாந்தமென்பது இயன் மொழியாக மொழியுந் தாட்டாந்தங்கள். அவை இயல்புத் தொடர்பையே உணர்த்துவன. இனிக் காரண காரியத் தொடர்பை உணர்த்தும் சம்பவ தாட்டாந்தங்களையுடைய அந்நுவயங்களை ஆராய்வாம்.

சம்பவ தாட்டாந்தம் எ—வி ஆனல் எ—வ ஆகும். ஒரு முக்கோணம் மூன்று சமகோடுகளால் ஆக்கப்பட்டதாயின் அதன் மூன்று கோணங்களும் சமன். எ—வி ஆனல் வ—ல ஆகும்.

மழை பெய்தால்—நெல் விளையும்.

பிராணிகள் ஒருஅண்டத்தில் உண்டாயின் அங்கே பிராண வாயு உண்டு.

ஐயத்தை உணர்த்தும் தாட்டாந்தம் வியோக தாட்டாந்தமெனப்படும்.

எ—வி அன்றேல் வ: எகரம் விகாரமாகவேனும் வகரமாக வேனும் இருக்கும். எ—வி அன்றேல் வ—ல. எகரம் விகாரமாக வேனும் வகரம் லகரமாகவேனும் இருக்கும்.

### 2. சம்பாவித அந்நுவயங்கள் மூவகை.

(அ) பூருவ உத்தர சாதனங்கள் ஆகிய மூன்றும் சம்பாவிதமாயின், சுத்த சம்பாவிதமாகும்: இவற்றால் ஒரு பயனுமில்லை.

(ஆ) பூர்வ சாதனம் சம்பாவிதமாகவும் உத்தரம் சுயம்பித மாகவும் இருப்பன. இவற்றை ஈண்டு ஆராய்வாம்.

(இ) சம்பாவித தாட்டாந்தங்களையும் வியோக தாட்டாந் தங்களையும் உடையன. இவை இருதலைப்படுதல். சம்பாவித தாட்டாங்கள் எல்லாம் பொதுத் தாட்டாந்தங்கள்:

1. எ—வி ஆகின் வ—ல ஆகும்

எ—வி ஆகின்றது வ—ல ஆகும்

காரணம் உண்டெனின் காரியம் துணியப்படும்.

2. எ—வி ஆகின் வ—ல ஆகும், வ—ல அல்ல.

எ—வி அல்ல காரியம் இல்லை ஆதலின், காரணமும் இல்லை. ஈண்டுக் காரணமும், காரியமும் நீக்கமின்றி நிற்கும் முன் னிகழ்ச்சி பின்னிகழ்ச்சியாக எண்ணப்பட்டன. ஒரு காரணம் ஒரு காரியத்தையே உண்டாக்கு மென்பதும் ஒரு காரியத்துக்கு ஒரேயொரு காரணமே உண்டென்பதும் கொள்கைகளாக அநு சரிக்கப்பட்டன. சம்பாவித அந்நுவயங்களில் சாத்தியத்தைத் துணிதற்கு முன்னிகழ்ச்சியை உண்டென்று உடன்பட்டும் பின் னிகழ்ச்சி இல்லை என மறுத்தும்: கருதவேண்டும்.

3. எ—வி ஆகின் வ—ல ஆகும். எ—வி அல்ல.

சாத்தியம் ஐயம்.

மேற்கூறிய கொள்கையை அநுவதிப்பின் வ—ல அல்ல எனத் துணியலாம். ஆனால் ஒரு சாரார் பல வேதுக்கொள் கையை அநுவதிக்கின்றிலர். ஒரு காரியத்திற்குப் பல கார ணங்கள் உண்டாதல் கூடும். எ—வி அல்லவென அறிந்தும் சாத்தியத்தைத் துணிபவியலாது. என்னை? வ—ல ஆதற்கு வேறோர் முன்னிகழ்ச்சி நிகழ்ந்திருக்கலாம். அம்முன்னிகழ்ச்சி யின் பயனுய் வ—ல ஆதல் கூடும்.

4. எ—வி ஆகின் வ—ல ஆகும். வ—ல ஆகிற்று.

சாத்தியம் ஐயம். பலவேதுக்கொள்கையை அநுவதிப்போர் வ—ல ஆதற்கு பலமுன்னிகழ்ச்சி (காரணங்கள்) உண்டென்பா ராகலின், எ—வி என்னும் முன்னிகழ்ச்சிதான் நிகழ்ந்ததெனத் துணிபவியலாது.

பலஎதுக்கொள்கையை அறுவதியாதோர் நான்கு அந்நுவயங்களுக்கும் சாத்தியம் உண்டென்பர். அது பெருத்தமாகும்.

## உதாரணங்கள்.

முதலாவதற்கு உதாரணம்:—பிராணவாயு செவ்வா யண்டத்தில் உண்டாயின், அங்கே சீவ பிராணிகள் உண்டு. பிராணவாயு அங்கு உண்டு. ஆகையால் செவ்வாயண்டத்தில் சீவ பிராணிகள் உண்டு.

இரண்டாவதற்கு உதாரணம்:—செவ்வாயண்டத்தில் சீவ பிராணி வளர்வது கூடுமோயின், அவ்வண்டத்தில் சீவபிராணிக் கேற்ற வெப்பம் உண்டாகும். ஆனால் அங்கே வெப்பமில்லை. ஆகையால் அங்கே சீவ பிராணிகளில்லை.

மூன்றாவதற்குதாரணம்:-(யெவன்ஸ் கூறியது) தருக்கநூல் ஏனைய ஆராய்ச்சி நூல்கள் போல இயற்கைப் பொருட்களின் உண்மையைக் கற்பிக்குமாயின், கற்கத்தகுந்த நூலாகும். தருக்க நூல் இயற்கைப்பொருட்களைப்பற்றி யாதொன்றுஞ்சொல்லாது; ஆகையால் தருக்கநூலைக் கற்கக் கூடாதென மொழிதல் போலி யாகும். கற்றற்குரிய நூலாவதற்குப் பல பூதப்பொருட் குணங் களை எடுத்தோதவேண்டியதில்லை. சிந்திக்கும் முறைகளில் புத்தி யைப் பயிற்சிக்குமாயின் அது கற்றற்குரிய நூலாகும்.

நாலாவதற்கு உதாரணம்:—கயவர் அறச் செயல்களில் செலவுசெய்யார். இம்மனிதன் அவ்வாறு செலவுசெய்கிறானில்லை. ஆகையால் இவன் கயவன் என்பதுபோலி. கயமை காரணமாக அன்றி வேறோர் காரணமாகவும் செலவு செய்யாமல் இருக்க லாம், பொருள் இல்லாமலும் ஏற்போர் தகுதியற்றோராகவும் இருக்கலாம்.

### 3. வியோக அந்நுவயங்கள் Disjunctives.

அ. எ—வி அன்றேல், ல, எ—வி ஆகவேனும் ல ஆக வேனும் இருக்கும். எ—வி என்பதை அறிவோம். சாத்திய மில்லை, எ—ல ஆகவும் இருக்கலாம். எ—வி அன்றேல், ல எ—ல சாத்தியமில்லை அன்றேல் என்பது நடுவை நீக்காதசொல் எ—வி யாகவும் ல வாகவும் இருத்தல்கூடும் எ—வி அன்றேல்,ல.

ஆ. எ—வி அல்ல அ—ல ஆகும். எ—வி அன்றேல் ல எ—ல அல்ல எ—வி யாகும். அன்றேல் என்பது இரண்டில் ஒன்றை நீக்காது அல்லது என்பது. இரண்டில் ஒன்றை நீக்கும் வியோக அந்வயங்களையும் சம்பாவித அந்துவயங்களையும் சத்த சுயம்பிதமாக முதனிலை அந்துயங்களாக மொழியலாம்.

எ—வி ஆகின் ல வாகும் எ—வி ஆகும். எ—ல ஆகும் இவ் வந்துவயத்தை. வி யாகும் எ எல்லாம் ல ஆகும் எ—எல்லாம் வி ஆகும் எ—எல்லாம் ல ஆகும் எ—வி அன்றேல் ல எ—வி அல்ல எ—ல இவ்வந்துவயத்தை. வி யாகாத எ எல்லாம் ல ஆகும் எ—எல்லாம் வி ஆகா எ—ல ஆகும்.

## 4. இருதலைப்பாடு Dilemma

இருதலைப்படுதல் அந்நுவயக் காட்சியாகும். பூருவ சாதனம் ஒருகாரணமுடையதாகவும் இருகாரியமுடையுதாகவும் இருகாரணமும் இருகாரிய முடையதாகவும் இருத்தல் கூடும். உத்தரசாதனம் ஒரு வியோக தாட்டாந்தமாக இருக்கும். சாத்நியம் சுயம்பிதமாகவேனும் வியோகமாக வேனும் இருக்கும்.

அ. தனியுடன் பாட்டு இருதலைப்பாடு. த—ந ஆக வேனும் ப—ம ஆகவேனும் இருப்பின் வ—ல ஆகும். த—ந அன்றேல் ப—ம என்பது உண்மையாகும். வ—ல உண்மை.

17ம் நூற்றூண்டில் மேனுட்டார் நீதி செலுத்தும் முறை ஒன்றைக் கூறுவாம். ஒருத்தி விஞ்சையளோ (மந்திரகப் பெண்ணோ) அல்லளோவென நிச்சயிக்கும் முறை.

*நீரில்தாழ்ந்தால் இயற்கையாகஇறப்பாள்; நீந்தினுல் மாந்திரிகப் பெண்ணெனக் கொல்லப்படுவாள்.*

தாழ்தல் நீந்தலில் ஒன்று நிகழும் ஆதல் அவள் சாதல் நிச்சயம்.

ஆ. தனி எதிர்மறை இருதலைப்பாடு. த—ந ஆகின் ப—ம ஆகவும் வ—ல ஆதலும் உண்டு. ப—ம அல்ல அன்றேல் வ—ல அல்ல என்பது உண்மை த—ந என்பது உண்மை. ஒரு பட்டினத்திற்குச் செல்வோனுக்கு வழிச் செலவும் உணவுச் செலவும்

வேண்டும். வழிச் செலவுக்கும் உணவுச் செலவுக்கும் பணமில்லை ஆகையால் பட்டினத்திற்குப் போகான்.

இ. உடன்பாட்டு இருதலைப்படுதல். த—ந ஆகின் ப—ம ஆதலும் ய—ர ஆகின் வ—ல ஆதலும் உண்டு. த—ந அன்றேல் ய—ர உண்மை ப—ம அன்றேல் ய—ர உண்மை ப—ய அன்றேல் வ—ல உண்மை. எரியும் வீட்டினுள் இருந்தானாயின் வெந்து சாம்பலாவான். சாளரத்தால் பாய்ந்தானாயின் உறுப்பு நொடிந்து இறப்பன் இரண்டில் ஒன்றுசெய்வான். ஆதலில் இறப்பான்.

த—ந ஆயின் ப—ம; ய—ர ஆகின் வ—ல உண்டு ப—ம அல்ல அன்றேல் வ—ல அல்ல த—ந அல்ல அன்றேல் ய—ர அல்ல ஒருவன் விவேகியாகின் தன் பிழையை உணர்வன். நன்மகனாயின் மனந்திரும்புவன். இரண்டுஞ் செய்யவில்லை ஆதலில் விவேகியல்லன் அன்றேல் நன் மகனல்லன்

## 5. போலி இருதலைப்பாடு

உடன்பாட்டு இருதலைப்படுதலை வேறோர் உடன்பாட்டு இருதலைப் படுதலால் மறுக்கலாம். இவ்விரு விரோத இருதலைப் பாடுகளும் போலி. எதெனஸ் நகரத்து வசிக்கும் பெண் தனது மகனை அமைச்சனாகாதேயென பின்வருமாறு புத்திமதிகூறினாள்.

நீதியாக ஒழுகினாயாகின் மக்கள் பகைப்பர்; நீ அநீதியாய் ஒழுகினாயாகின் தேவர் பகைப்பர், இரண்டில் ஒன்று செய்வாயாகின் பகைக்கப்படுவாய். இதன் மறுதலையாக மகன் பின்வருமாறு கூறினான். நீதியாக ஒழுகினால் தேவர் நேசிப்பார். அநிதியாக ஒழுகினால் மக்கள் நேசிப்பர். இரண்டில் ஒன்று செய்வேனாகையால் நேசிக்கப்படுவேன்.

நீதி அநீதி பகைநேசம் என்பன மாறுகோட் பதங்களல்ல. இரண்டில் ஒன்று செய்தல் என்பது நடு நீக்கா வியோகம். நடு நீக்காத வியோகம் கருதலின் ஒரு குற்றமாகும்.

ஓமர் என்னும் துருக்கவேந்தன் அலெச்சாந்திரிபா நகரத்து வாசக சாலையில் இருதலைப்பட்டு ஆசங்கித்தவாறு காண்க. இவ்

வாசகசாலையில் உள்ள நூல்கள் கோரான் என்னும் மகமதிய வேதத்தோடு உடன்பாடாயின் மிகையாகும்; வேற்றுமையாயின் தீயவையாகும். உடன்பாடாகவேனும் வேற்றுமையாகவேனும் இருத்தல்வேண்டும். ஆதலின் இவ்வாசகசாலையில் ஒரு பயனுமில்லை, ஈண்டு ஒமார் மக்களுக்குவேண்டிய அறிவெல்லாவற்றையும் மகமதிய வேதம் அடக்கியுள்ளதென்று நினைத்தனர். மகமதிய வேதம் மொழியாத பல பொருட்களைப்பற்றி ஏனைய நூல்கள் மொழியுமென்பதை ஒமார் அறிந்திலர். இனி இரண்டு பொருட்கள் பேதமல்லவாகவும் அபேதமல்லவாகவும் இருத்தல் கூடும்.

பின்வரும் கட்டுரையிலுள்ள இருதலைப்பாட்டை ஆராய்க. நீரில் நீந்தி விளையாடும் சிறுவனை முதலை ஒன்று இழுத்துச் சென்றுழி, சிறுவனைத் தருதியென சிறுவனின்தோழன் ஒருவன் வேண்டினனாக, முதலையும் இரங்கி; சிறுவனை விழுங்குவேனோ என்னும் வினாவிற்கு உண்மையாகும் விடையளிப்பாயானால் தருவேனென மறுமொழி கூறியது. தோழன் விடை தெரியாது கலங்கினான். நன்று கலங்கினாய் நீ எவ்விடை கொடுத்தாலும் உனது உரையே சிறுவனைத் தருதற்குத் தடையாகும்; விழுங்குவாய் என்றிரோ உன்னுரை சரியாதற்கு நான் விழுங்க வேண்டும்; விழுங்காய் என்றிரோ உன்னுரை போலியாகுமென மொழிந்து முதலையும் மறைந்தது.

சில போலிகள், வழூஉச்சொற் புணர்த்தல், இரட்டுறமொழிதல், மயங்கவைத்தல், முதலியபோலிகள் இலக்கணப்போலிகள். அளவைநூல் விதியினின்று வழுவுதல் அளவைப் போலியாகும்; உடன்கருதற் போலிகள், வகுத்தற்போலிகள், கருதற்போலிகள் முதலியவற்றை ஆண்டாண்டுக் கூறினும். வேதனைக் காட்சிகளில் நிகழும் காட்சிப் போலிகளை வேதனுமானப் பகுதியில் கூறுவாம். ஈண்டுச் சில சிறந்த போலிகளை எடுத்துக்காட்டுவாம்.

## தோகுதிப் போலி (Composition)

அ. இப்போலி பதங்களின் ஈதல் பற்றியது, ஒரு தொகுதிப் பதத்தை முன்னர் ஈந்தும் பின்னர் ஈயாதும் உபயோகித்

தல்போலி உதாரணம். இதைத் தூக்குவாயோ? ஆம் இதையும் தூக்குவாயோ? ஆம். இதையும் தூக்குவாயோ? ஆம். ஆகலால் இவை எல்லாவற்றையும் நீ தூக்குவாய், மில் தம்மொழுக்க நூலில் மொழிந்த நியாயம் போலி.

மக்கள் பெரும்பாலும் இன்பத்தையே நாடிநிற்பர். எல்லா மனிதரும் துன்பத்தை வெறுத்து இன்பத்தையே விரும்புகின்றனர். ஆகையால் எல்லாரும் இன்பத்தையே விழைதலால் மக்கள் சனசமுகமும் இன்பம் விழைவதெனத் துணிதல்போலியாகும்.

## பகுதிப் போலி (Division)

ஆ. ஒரு தொகுதிப் பதத்தை முன்னர் ஈயாதும் பின்னர் ஈந்தும் உபயோகித்தல் போலி. நாலும் மூன்றும் ஏழுக்குச் சமன். ஆகையால் நாலு ஒன்றுக்கும் மூன்று ஆறுக்கும் சமன். தமிழர் விவேகிகள் என்புழி தமிழ்ச் சாதியார் பொதுவாக விவேகமுடையவர் என்பது பொருள். ஒவ்வொரு தமிழனும் விவேகியெனக் கருதல்போலி.

## கிழமைப் போலி

இ. பிளேற்றோ வேறு. சொக்கிறேற்றிஸ் வேறு. பிளேற்றோ ஒரு மனிதன் ஆகையால் சொக்கிறேற்றிஸ் மனிதனல்ல. நீ ஒருமிருகம் கழுதை ஒருமிருகம் ஆகையால் நீயொரு கழுதை. இஃது ஈந்திராமத்தியெனக்காட்டலாம்: கிழமையைப் பண்பாக மயங்குதல் குற்றம். செம்மறிபால் சுரவாது ஆதலின் ஆடுபால் சுரவாது சிறப்புப் பதத்திலிருந்து பொதுப்பதத்திற்கு கருதல் போலி.

## ஒன்றனை ஒன்று பற்றுதல்

ஈ. ஒன்றனை ஒன்று பற்றுதல் நிரூபித்தற்குரிய பிரதிக்ஞையை மேற்கோளாக எடுத்துக் காட்டிப் பின்னர் அப்பிரதிக்ஞையை அம் மேற்கோளாதாரமாக நிலைநாட்டல் போலி. மேனுட்டார் கடவுள் உண்டென நிரூபிக்கும் முறை இப்போலியுடையது.

இவ்விநோதமான அமைப்புப் பெற்ற பூமி. முழுதுணர்ந்த அநாதி முத்த சித்துருவாகிய கடவுளால்தான் ஆக்கப்படலாம். பூமி உண்டு ஆகையால் கடவுள் உண்டு. விலைநூலார் ஒரு பண்டத்தின் விலை அதன் தேவையோடு ஏற்றத் தாழ்ச்சியாக மாறுதல் அடையும் என்புழி விலையும் தேவையும் ஒன்றனை யொன்று பற்றி நிற்கும். குணவிரிகுறைதலை பொருள்விரிமிகுதலி விருந்து நிருபிக்க வியலாது குணவிரி பொருள்விரி குறைதலும் மிகுதல் ஒன்றனை ஒன்றுபற்றி நிற்கும்.

## மற்றொன்று மறுத்தல்

உ. ஒன்றை மறுத்தற்கு அதன் மாறுகோளைக் கூறாமல் வேறொன்றை நாட்டல் போலி. வட மொழிக் கல்வி பயனுடைத்தென்போர் கூறும் நியாயம் ஒன்றிருப்ப, அவர் மொழியாத நியாயமொன்றை மறுத்தல் வடமொழிக் கல்வியால் பயனில்லை என்பதைக் காட்டாது. வடமொழிக்கல்வி புத்தியைப் பயிற்சிக்கிறது, ஆகையால் அதில்பயிலுதல் நன்று. வடமொழிக் கல்வியால் பயனில்லை என்போர் வடமொழிக் கல்வியால் புத்தியாதொரு பயிற்சியையும் பெறமாட்டாதெனக் காட்டல் வேண்டும். அஃதன்றி திரவியங்கேடற்கு அதனால் பயனில்லையென நாட்டல் பொருந்தாது. இது மற்றொன்று மறுத்தலாகும். இனி வடமொழி போன்ற ஏட்டு வழக்குமொழிகளில் பழகுதல் தமிழர்க்கு அவசியமில்லை என்பார் தமிழ்நூலே, அந்தகைய பயிற்சியைத் தருகின்றதெனக் காட்டவேண்டும்.

மேனாட்டு வழக்கறிஞர் நீதிவிசாரணைசெய்யும் நீதிபதியின் முன்னிலையிலும் வழக்கு ஒன்றற்குப் போதிய சான்று இல்லையாயின் எதிரியை இழுத்துப் பேசுதல் வழக்கம். குற்றவாளி தன் எதிரி துர்க்குணமுடையவனானதால் தான்சுத்தன் என்பது தவறு. மற்றொன்று மறுத்தலோடு சோம்பல் நியாயம் ஒப்பாகின்றது. மருத்துவனை அழைத்து மருந்துபெற்றாலும் அழையாது மருந்து பெறாதிருந்தாலும் நோய்நீங்குவது விதியாயின் நீசுகமடைவாய். ஆதலின் மருத்துவனை அழைக்க வேண்டாம். ஈண்டுவிதி மருத்துவன் மூலமாக நிகழக் கூடுமென்பதைச் சிந்தித்திலர்.

கேள்விப் போலி (வினவழு)

௯. நீ அளவுகடா தொழுகிறாயா? ஆமென்றேனும் இல்லையென்றேனும் விரைவாக விடையளி. இல்லையென விடையிறுத்தால் நீ முன் அளவு கடந்தாய் என்றும் ஆமெனின் நீதூர்த்தன் என்றும் துணியப்படும்.

காகதாலிய நியாயம் (ஒன்றன் முன்னிகழ்ச்சி ஆதலின் காரம்)

எ. (Post Hoc Ergo Propter hoc) இது வேதனைக் காட்சிப்போலி. முன்னிகழ்ச்சிகள் பின்னிகழ்ச்சிகளுக்குக் காரணமல்ல. பனம்பழம் விழுவதற்குக் காரணம் ஒன்றிருப்ப, காகம் அப்பழத்தின்மேல் குந்தியதால் விழுந்தது என்பதுபோலி. காரணம் நீக்கமின்றி நிற்குந் தொடர்பு.

# திருவாதவூரர் திருவாய்மொழி

வித்துவான். வீ. குமாரசாமிஐயர், தமிழாசிரியர், உயர்தரப்பள்ளி, மேலூர்

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 3, பக்கம் 118)

2. பின்னர், முகில்கள் நீரைப் பொழிதலை நோக்கிப் புனைந்துரைக்குந் திறனைக் காண்பாம்.

முகில்கள் நீரைப் பொழியுங்கால் மின்னல், இடிமுழக்கம், வானவில் ஆகிய இவைகளுண்டாதல் இயல்பாகும். வெண்முகில்கள் கடலைச்சார்ந்து அந்நீரையுண்டு கருநிறமுற்றனவென்றல் கவிமரபு. இதனைப் புலவர்கள் பலவாறு சிறப்பித்துக் கூறுவர். நம் ஞானப் பெருந்தகையார், "கடலின் கண்ணுள்ள நீரைக் கவர்ந்தெழுந்து அம்மையின் திருமேனிபோல் (நீலநிறமுற்று) விளங்கி, அவளுடைய நுண்ணிய இடைபோல மின்னலைச்செய்து, எம்பிராட்டியின் திருவடிக்கண்ணுள்ள பொற்

சிலம் பொலித்தல்போல (இடி) முழக்கஞ்செய்து, அவளுடைய திருப்புருவம்போல வானவில்லிட்டு, எம்பெருமானின் பழுத்த மனத்த பழவடியார்க்கு முற்பட்டு வழங்கும் அவளது அருள் போல மழை பொழியாய்." என்னும் பொருளமைத்து,

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையா ளிட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமா னன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கு மின்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்
(திருவெம்பாவை-16. செ.)

என்றருளிய உவமை நயஞ்செறிந்த இச்செய்யுளோவியம் பெருமான் மனத்துட் கொண்ட அம்மையின் திருவுருவத்தை எழிலுறக்காட்டித் திகழ்கின்றதல்லவா! அன்றியும், இதன்கண் விரவியுள்ள உடையாள், எம்மையாளுடையாள், நந்தம்மையாளுடையாள், எம்பிராட்டி, எங்கோமான் என்னும் பொருள் பொதிந்த பொன்மொழிகள் அம்மையப்பரின் தலைமையினையும் அடிகள் அவர்மாட்டுக் கொண்டுள்ள உரிமையினையும் விளக்காநின்றன.

3. மற்றும், பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும் களவொழுக்க முடையராய் உடன்போக்கு நிகழ்த்திய காலத்துச் செவிலி தலைவியை நாடிச் செல்லும் நெறியிடை எதிர்வருவாரை மான்போலு நோக்கினையும் மயில்போலுஞ் சாயலினையு முடையாள் ஒரேந்தலோடு நுங்கள் எதிரேவரக் கண்டீரோவென வினவ, அவர் நீ கூறுநின்றவரைக் கண்டோம். அவ்விருவரும் தம்முளியைந்து செல்லாநின்றன ரெனக்கூறும், 'இடைபெடுத் துரைத்தல்' என்னும் அகப் பொருள் துறைக்கு அடிகள் அருளிய செய்யுள்:-

மின்றெத் திடுகழ லூபுரம் வெள்ளைசெம் பட்டுமின்ன
வொன்றெத் திடவுடை யாளொடொன் றும்புலி யூரனென்றே

நன்றேத் தெழிலைத் தொழவுற்றன மென்னதோர் நன்மைதான்
குன்றத் திடைக்கண் டனமன்னை நீசொன்ன கொள்கையரே.
என்பதாகும். (திருக்கோவையார்-246.செ.)

இதன்கண், "அன்னாய்! நீ கூறிய கோட்பாட்டை யுடையாரைக் குன்றத்திடைக் கண்டேம். அவ்விருவருமியைந்து சேறலின், மின்றாளுண்டாகாநின்ற அவனது கழலும், அவளது சிலம்பும், அவனது வெண்பட்டும், அவளது செம்பட்டும் விளங்க ஒரு வடிவை யொத்தலான் எல்லாவற்றையு முடையளாகிய தன் காதலியோ டொருவடிவாய் விளையாடும் புலியூரனென்றே கருதி யாங்களெல்லாமொத்துப் பெரிது மவ்வழகைத் தொழ நினைந் தோம். அந்நன்மை யெத்தன்மையதோர் நன்மைதான்! அது சொல்ல லாவதன்று." என்று தலைமகனுக்குச் சிவபெருமானை யும் தலைவிக்கு உமையம்மையாரையு மொப்பிட்டுரைத்தலோடு அவர்களியைந் திருத்தற்குப் பெண்ணொரு பாகமுற்ற பெருமானை யுவமைப்படுத்திப் பிறர் கூற்றாகக் கூறுமிடத்தும் தம் மன நிலையை வெளிப்படுத்திக் காட்டல் வியக்கத்தக்கதாம். நெஞ்சின் மிக்க பொருளை வாய்சோர்ந்து முரைத்தல் இயல்பாகு மல்லவா? மேலும், இச்செய்யுள்,

"சிலம்புஞ் சிறுநுதலுஞ் சில்குழலும் பல்வளையு மொருபாற்
[றோன்ற
அலங்கலந் திண்டோளு மாடெருத்து மொண்குழையு மொரு
[பாற்றோன்ற
விலங்க லருஞ்சுரத்து வேறுருவி னொருடம்பாய் வருவார்க்
[கண்டே
யலங்க லவிர்சடையெம் மண்ணல் விளையாட்டென் றகன்றேம்
[பாவம்"

என்னும் ஆன்றோர் செய்யுளை ஞாபகப் படுத்துகின்றது.

4. பின்னர்,

தோழியால் சேட்படுத்தப்பட்ட தலைமகன் தனக்கு அன்று
தோழியைக் காட்டினமை நினைந்து கண்ணினைப் புனைந்துரைப்
[பன்.

அதனைக் 'கண்ணயந்துரைத்தல்.' என்பர். அதற்குக் கூறியுள்ள செய்யுள்:-

ஈசற்கி யான்வைத்த வன்பி னகன்றவன் வாங்கியவென்
பாசத்திற் காரென் றவன்றில்லை யின்னொளிபோன் றவன்றோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன்பூங்கழல் யாம்
பேசத் திருவார்த் தையிற்பெரு நீளம் பெருங்கண்களே.

(திருக்கோவையார்-109.செ.)

என்பதாகும். இதன்கண் என்றாற் காணப் பட்டவளுடைய பெரிய கண்கள் ஈசனிடத்து யான் வைக்கப்பட்ட அன்புபோல அகன்றும் அவனல் வாங்கப்பட்ட எனது பாசம் போலக் கறுத்தும், அவனது தில்லையி னொளியை யொத்தும், அவன் றோள் களிற் சாத்தும் அத்திருநீறுபோல வெளுத்தும், அவனது பூப் போலிருக்குந் திருவடிகளை யாம் பேசும் அத் திருவார்த்தை போல மிகவும் நெடியன வாயிருந்தனவென்று கண்ணினது அகலம், கருமை, ஒளி, வெண்மை, நீள முதலியவற்றை இத் தகைய உவமைவாயிலாக விளக்குந்திறன் எவர்மாட்டுங் காணப் படாததொன்றல்லவா? "கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின் வெண்மை கருமை செம்மை யகலம், நீள மொளியென நிகழ்த் துவர் புலவர்." என்னுமிலக்கணத்தில் 'செம்மை' இச்செய்யுளிற் கூறப்படாததை "அவன்றோளிற்பூசத் திருநீறென்றதனாற் சிவப் புஞ் சொல்லியதாயிற்று. அது செம்மையாற் றோன்றும் வரி யென வறிக." என்று கூட்டியுரைக்கும் உரையாசிரியர் மதிநுட் பமும் ஈண்டு நோக்கத் தக்கதாகும்.

மேலும், இச்செய்யுள் அடிகள் இறைவனிடத்து வைத் துள்ள பேரன்பினையும், அவன் புரிந்த பேரருளினையும் காட்ட லோடு நீறணிந்த கோலம் அன்பர் நெஞ்சகத்து நீங்கா துறை தலையும் விளக்காநிற்கும். இத்தகைய உவமைகள்பல ஆங்காங்கே இன்பம் பயப்பன காண்க.

பெருமான் அருளிய திருவாசகம், திருக்கோவை யாரென் னும் முழுமுதற் றமிழ்ப்பனுவல்கள் இத்தகைய உவமை வாயி லாகவும் பிறவாற்றாலும் அடிகள்தம் உளப்பான்மையை விளக் கிக்காட்டலோடு அவர்தம் வரலாற்றினை விரித்துரைப்பனவாயும்

அறிவ னூல்களியற்றுவார்க்கோர் வரிச் சட்டமாயும், எழுத்துச் சொல்லி லக்கணங்கட்கோ ருறைவிடமாயும், அகம் புறமாகிய பொருளிலக்கணத் துறைகளை விரித்துத் தமிழிலக்கியங்களைப் பெருக்க வழி காட்டுவனவாயும், கூறும் பொருளுக் கேற்ற மெய்ப்பாடு பயக்குஞ் சொல்லோசை யுடையனவாயும், அறிவுக் கண்ணு லோர் வார் தம் மனத்தைக்கவரும் திருவுடையனவாயும் இலங்குகின்றன. வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்ட முதனூற் பொருளை முடிவுறக் கூறல் எம்மனோர்க் கெளிதாமோ!

இக்கட்டுரையாற் போந்த பொருளாவன:- தமிழ்மொழியில் வீட்டுநூல்கள் உளவென்பதூஉம், திருவாசகம் திருக்கோவை யாரென்னும் அரிய நூல்கள் அவற்றின்பாற்படுவன வென்ப தூஉம், இந்நூல்கள் ஆசிரியருள்ளத்தைத் தெளிவுறக் காட்டித் திகழ்கின்றன வென்பதூஉம் பிறவுமாம்.



## பெருங்காற்றும், மின்னலும், இடியும்



திரு. K. கோவிந்தன், மாணவன், ஔவைத்தமிழகம், திருவத்திபுரம்.



பெருங்காற்றும், மின்னலும், இடியும் வெயிற்காலத்து யாவரும் கண்டதிசயிக்கும், கானல், பூகம்பம், சூறாவளிபோன்ற இயற்கைத் தோற்றங்களின்பாற்படும். பெருவலியும், பெருஞ் செயலு முடையவாய் உலகிடைத் தோன்றும் இவற்றிற்குத் தோற்றக் காரணமும், தோற்றத்திற்குரிய முறைமையும் உண் டென்பதை, உலகிடையுலவும் ஒவ்வொருபொருட்கும் தோற்றக் காரணம் உண்டு என்பதைத் துணிந்து யாவரும் உணர்வர்.

சூடுமிகுந்த நாடுகளில், மழைதோன்றும் பொழுதெல்லாம், மின்னலும், இடியும் உடன் தோன்றுதல் இயற்கை. 'தென் னமரிக்காவில், பூ நடுவரையின் (Equator) அருகிலுள்ள

ஊர்களில், நுண்ணிய ஒலி (Sound) யினையும் விரைவில் உணரும் பொறி (Machine or tool) யுடையார் யாவரும், தம்மைச்சூழ்ந்து நிற்கும் காற்றிடையே, எஞ்ஞான்றும் இடியோசை யுண்மையை யுணர்வர்' எனப் பாசிங்கால்ட் (Boussingault) என்பார் கூறுகின்றனர்.

ஆப்பிரிக்காவில் உள்ள அபிஸீனியா நாட்டில் தாம் வதிந்த நான்கு ஆண்டைய எல்லைக்குள், ஏறக்குறைய 1900 இடியோடு கூடிய புயல் நிகழக் கண்டதாகவும், அவைதாமும், கோடை காலத்தே, நாட்காலத்து நண்பகல் கழிந்த பின்றையே நிகழ்ந்ததென்றும், அவைகளில், நள்ளிரவு முற்பகலாகிய இருபோதினும் கண்டன இருபத்திரண்டே என்றும், டி. அப்பாடி (D. Appadie) என்பவர் கூறுகின்றனர்.

குளிர்ந்த நாடுகளில், இவற்றின் நிகழ்ச்சி மிக அரிது. ஸ்பிட்ஸ்பர்க்கன் (Spitsbergen 78. O. N. 15. OE.) என்னும் தீவின்கண் வதிந்த நால்வர், தாம் வாழ்ந்த ஆறுண்டைய எல்லையில் ஒரு முறையே இடியோசை கேட்டனராம். ஆப்பிரிக்காவில் உள்ள கேப்காலனி, நேட்டால் என்ற இருநாட்டினும், நேட்டால் நீர் வளமிக்கதாகலின், கேப்காலனியில் நிகழும் இடியினும், அதன்கண் நிகழ்தல் மிகக்குறைவு என்று சர்ஜான் ஹர்ஷல் (Sir John Hershel) கூறுகின்றனர்.

இதுகாறும் கூறியவாற்றால், பெருங்காற்றும் மின்னலும் இடியும், சூடுமிகுந்தநாடுகளில், கோடைகாலத்தே, நாட்காலத்து நண்பகல் கழிந்த பின்றையே நிகழும் என்பதும், குளிர் நாடுகளில், அவற்றின் நிகழ்ச்சி மிக அரிது என்பதும் கூறப்பட்டன.

1752-ஆம் ஆண்டில்(Franklin) பிராங்க்லின் என்பவர் புயல் வீசும் காலத்தில் ஒரு காற்றாடியில் இருப்பாணி ஒன்றைக் கட்டி, வானத்தே பறக்கவிட, அதன்கண் ஒளியுடைப் பொறிகள் பல இருக்கக் கண்டு அவற்றை யாராய்ந்து அவை மின்சாரப் பொறிகள் எனத்துணிந்தனர். மின்னலுக்குரிய ஒளியும் வலியும், மின்சார காரியமென்ற உண்மையைப் பிராங்க்லின் துணிந்த

ஓராண்டிற்குப் பின்னர் இதனைப் பல புலவர் பெருமக்கள் ஆராயத் தொடங்கினர். அட்ரியாடிக் கடற்கரைக்கண் நிற்கும் டியினோ என்னும் பேரகத்திருந்து (Duino castle) பலர் இவ்வுண்மையை ஆராய்ந்து வந்தனர். ஆங்கே, நெடிய இருப்புப் பாரை ஒன்றை நிறுத்தி கூரிய மழுவேந்திய ஒருவனை அவண் நியமித்து மின்னெழும் பொழுது அம்மழு நுனியைப் பாரையின் முடியிற்பட நிறுத்துமாறு பணித்தனர். அவன், இடிமின்னுக்களின் பயனாக, அவற்றின்கண் தீப்பொறி பறக்கக் கண்டு காணுந்தோறும் தன் கைம் மணியை இயக்குவன். இங்ஙன் புயலிடைப் பெறப்படும் வளி மின்சாரத்தைப் (Atmospherical-electricity) பெரிதும், ஆராய்ந்துகண்ட பேராசிரியர் கிராஸ்(Prof. Crosse) என்பவராவர்.

கட்புலன் செறியத் தோன்றுங்கால், பற்பல கதிர்களாகப் பிரிந்து பாய்ந்து எழும் மின்னுக்கள், வளியிற் செறிந்துள்ள அணுக்களின்வழியே வெளிப்போதருவனவாம். அவ்வளியணுக்கள் ஒரு நெறியினவன்றிக் கோணி வளைந்துகிடத்தலின், மின்னலும், முறுக்குண்டு மிளிரும் பூங்கொடி போலத் தோன்றுவதாயிற்று. மழையினம், இமைப்பது போலவும், அங்காப்பது போலவும் தோன்றும் அகனிலை மின்னல்கள், மிக்க சேய்மைக்கண் உடலும் புயன் மின்னலின் நிழலென அறிக.

முழவொலிபோல உருண்டோடும் முழக்கினையுடைய இடியேற்றொலி, முகிலனஞ் செய்யும் எதிரொலி (Echo) யாகும். இதன் வன்மை மென்மைகள், எதிரொலி செய்யும் எழிலித்திரளின் இயல்பின் அமைந்தன. சுவிட்சர்லந்திலுள்ள ஒரு மலைக்குவட்டுமிசை சென்ற இருவர், தாம் நின்றவிடத்தே வலிய முகிலினம் தழுவி மறைத்துக் கோடல்கண்டு தம் கையகத்திருந்த துப்பாக்கியை வெடித்தனர். வெடித்தார்க்கு, அவ்வெடியொலி, முகிற்குழாங்களால் எதிரொலிக்கப்பட, பேரிடியேற்றின் பெரு முழக்கென முழங்கி அம்மலையகமெங்கும் விதிர்ப்புறச் செய்ததாம். பின்னர், அவர், துப்பாக்கி வெடிகளைக் கிளப்பிய வண்ணமே இறங்கி வந்தனர்; வரவர, வெடியோசையின் எதிரொலியும் குறைந்து வரலாயிற்று.

நிலப்பரப்பின்மேல் இயங்கும் வளியில், குளிர்ந்தனவும், வெப்பவுமாகிய காற்றுக்கள் தம்மிற்கலந்து இயங்குங்கால், மின்னும், இடியும் தோன்றுகின்றன. வேனிற்காலத்து வெயி லெரிபகலில், தட்பமும், வெப்பமுமுடைய, காற்றுக்கள் தம் மொடு தாம் தாக்குண்டு இயங்குகையில், தண்கால், வெப்ப முற்று, நெகிழ்ந்து, பரந்தோடும் சுடுசாலுள் நுழைந்து வழி செய்து விரைந்து போதர முயலுங்கின்றுழி வெம்மையும், தண் மையும் முரணுவனவாய் இம்மின்னலும், இடியும் எழுகின்றன.

இயற்கையில் நிகழும் ஒவ்வொரு பெருஞ் செயற்கும் முன்னம் உணர்த்தும் முன்னிலைகள் பல உள. புயல், நிகழ்வ தற்கு முன்னர், வளிநிலைகாட்டி (Barometer) தன்கண் நிற்கும் பாதரசவுயர்வு குறைந்து காட்டுமென்று பிரஞ்சுக்காரர் முன் னரே யுணர்ந்துளர்.

மின்னும், இடியும் மக்கள் வாழும் கட்டிடங்களைத் தாக்கி யழிக்காவகை இடிகவர் பொறிகளும், மின்னுக்கவர் குற்றியும் அறிஞர்கள் ஆக்கியுளர். கடற்கட் செல்லும், கலங்களினும் இக்கருவிகள் இருத்தலின், மின்னுப்பொழி மேகம் மேல் வந்து நிற்கிலென்? கடுந்திறல் இடிபேறு கடுத்துப் போந்து இடிக்கி லென்? அறிவுத்துணையால் ஆவன செய்து கொண்டேமுக்கு அவற்றால் ஆம் திங்கொன்று மில்லையென்க.



# ஏமநல்லூர் என்னும் வைப்புத் தலம்

திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்
ஆசிரியர், திருவையாறு.

தேவாரத் திருப்பதிகங்களில் புகழ்ப்பெற்ற சிவதலங்கள் பல இத் தமிழ் நாட்டிலுள. தமக்கெனத் தனிப்பதிகம் பெற்றவை பாடல்பெற்ற தலங்களெனவும், பிறபதிகங்களைப் பாடிய பாடல்களினகத்தும், பொதுப் பதிகங்களினகத்தும் வைத்துக் கூறப்படுவனவாய்த் தமக்கெனப் பதிகங்களில்லாதவை வைப்புத் தலங்க ளெனவும் பெயர் பெறும்.

அத்தகை வைப்புத் தலங்களிற் பல இக் காலத்தில் பண்டைப் பெயர் சிதைந்தும், வேறுபெயர் பெற்றும் அவை யாண்டுள என அறிதற்கு மியலாதிருக்கின்றன. அவற்றை ஆராய்ந்து அறிந்து கொள்வதற்குக் கல்வெட்டுக்கள் பெரிதும் உதவிசெய்கின்றன.

திருநாவுக்கரசரது தலத் திருத் தாண்டகம் நான்காம் திருப்பாட்டில் ஏமநல்லூர் * என்ற தலம் ஒன்று வைக்கப் பட்டுள்ளது. அது யாண்டையதென ஆராய்வுழி ஒருகல்வெட்டு அதனைப் புலப் படுத்துகின்றது.

தஞ்சாவூர் சில்லா கும்பகோணந் தாலூகா திருப்பனந் தாளுக்கு அருகில் திரைலோக்கி என்று ஓர் ஊர் உள்ளது. அவ்வூருக்குக் கிழக்கே யொன்றும் மேற்கே யொன்றுமாக இரு சிவன் கோயில்கள் உள. அவைகளுள் கிழக்கில் உள்ள கோயிலில் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டுக்களுள் முதலாம் இராச ராசமன்னனது அருமை மகனாகிய கங்கை கொண்ட சோழனது

* எச்சில் இளமர் ஏம நல்லூர் இலம்பையங் கோட்டூர் இறையான் சேரி
அச்சிறு பாக்க மளப்பூர் அம்பர் ஆவடு தண்டுறை யழுந்தூர் ஆறை
கச்சினங் கற்குடி கச்சூர் ஆலக் கோயில் காவீரங் காட்டுப் பள்ளி
கச்சிப் பலதளியும் ஏகம் பத்துங் கயிலாய நாதனையே காணலாமே.

பதினாறாவது இராச்சிய ஆண்டில் தீட்டப்பட்டதே பழமையான தாகும். அதில் இவ்வூர் "ராஜேந்திர சிம்ஹ வளநாட்டு மண்ணி நாட்டு, திரைலோக்கி மகாதேவி சதுர்வேதி மங்கலம்" என்று குறிக்கப்பெற்றுள்ளது.

இவ்வூரைக் குறிப்பிடும் தஞ்சை இராசராசேச்சுரத்தில் பொறிக்கப் பட்டுள்ள முதலாம் இராசராசன் கல்வெட்டொன்றில் * "ராஜேந்திர சிம்ஹ வளநாட்டு மண்ணிநாட்டு

---

* S. I. I. Vol. II part III page 317. line 7.

"ராஜேந்திர சிம்ஹ வளநாட்டு மண்ணிநாட்டு ஏம நல்லூராகிய திரை லோக்கி மகாதேவி சதுர்வேதி மங்கலத்து சபையார் இடக்கடவ திருப் பரி சாரகஞ் செய்யும் மாண் இரண்டு."

இராசேந்திர சிங்க வளநாடு:— முதலாம் இராச ராச மன்னன் காலத்தில் சோழமண்டலம் ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந் தது. அவற்றுள் இராசேந்திர சிங்க வளநாடு என்பது ஒன்றாகும். இது காவிரிக்கும் வெள்ளாற்றிற்கும் (சிவா) இடையிலுள்ள பெருநிலப் பரப்பா கும். இம்மன்னன் காலம் முதல் அதிராச ராசன் காலம் முடிய இதற்கு இப்பெயர் வழங்கி வந்தது. இவ் அதிராச ராச மன்னனுக்குப் பின்னர் பட்டமெய்திய முதற் குலோத்துங்கன் இவ்வள நாட்டை இரண்டாகப் பிரித்து, கீழ்ப் பகுதிக்கு விருதராச பயங்கர வளநாடு என்றும், மேற்குப் பகுதிக்கு உலகுய்ய வந்த வளநாடு என்றும் பெயரிட்டனன். இம்மேற்குப் பகுதியோ விக்கிரம சோழன் காலத்தில் விக்கிரம சோழவளநாடு என்று பெயர் எய்திற்று.

மண்ணிநாடு:—மேற்கூறிய இராசேந்திர சிங்க வளநாடு, மண்ணிநாடு, இன்னம்பர்நாடு, பொய்கைநாடு என்பனவாகப் பலநாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அவற்றுள் மண்ணிநாடு என்பது ஒன்றாகும்.

ஏமநல்லூராகிய திரைலோக்கி மகாதேவி சதுர்வேதி மங்கலம், இடை வை, காட்டார்மங்கலம், பனந்தை (பனந்தாள்) வேம்பற்றூராகிய ஆவணி நாராயண சதுர்வேதிமங்கலம், திருக்குடித்திட்டை (திருக்களத்திட்டை) திருவிசலூர் ஆகிய இவ்வூர்கள் இம்மண்ணி நாட்டைச் சார்ந்தனவென்று தஞ்சை இராச ராசேச்சரத்துக் கல்வெட்டுக்களால் புலப்படுகின்றன.

ஏமநல்லூராகிய திரைலோக்கி மகாதேவி சதுர்வேதிமங்கலம் என்ற தொடர் காணப்படுவதால் இக்காலத்துத் திரைலோக்கி * என வழங்கப்படும் ஊரே ஏமநல்லூர் என்னும் தலமென்பது வெளிப்படுகிறது.''

முதலாம் இராச ராச மன்னன் தன்மனைவியின் பெயரை அவ்வூருக் கிட்டுத் திரைலோக்கி என மாற்றினான் போலும்.

# பெண்ணின் பெருமை

திருவளர் செல்வி R. மங்கையர்க்கரசி
ஒன்பதாவது வகுப்பு

## தஞ்சை விநாயகர் தமிழ்க் கழகத்தின் ஆண்டுவிழாவில் நிகழ்த்திய சொற்பொழிவு

தலைவர் அவர்களே! பெரியோர்களே! என் உடன் பிறந்தோர்களே! உங்கள் அனைவர்க்கும் என் பணிவான வணக்கம்.

பெண்மை எனப்படுவது யாது? இன்பநிலை என்று சொல்லலாமன்றோ? அடக்கம், பொறுமை, தியாகம் முதலியன பெண்மையின் உறுப்புக்கள். அவ்வுறுப்புக்கள் சேர்ந்த இன்பம் பெண்மையின் உடல்; அவ்வின்ப உடல் நுண்ணியதாகலின், [Abstract] அதற்கு என்புதோல் போர்த்த ஒரு பரு உடல் இறைவனால் அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வடிவம், 'பெண்', 'பெண்' என்னும் பெயரால் வழங்கப்பட்டு வருகிறது. பெண்மையே இன்பமாயின், பெண்மையே அழகுமாகும். பண்டைத் தமிழ்மக்கள் பெண்ணை அழகென்றே கொண்டார்கள்.

* குறிப்பு:—'கோடைத் திரைலோக்கிய சுந்தரனே' என்று திருவிசைப்பாவில் இருப்பதால் கோடை என்ற ஊரே, திருவிசைப் பாக் கொண்ட தலமாகும். இத்திரைலோக்கி, திருவிசைப்பாப் பெற்றதன்று.

நீலவானத்தில் திங்கள்போலவும், பசுங்கொடியில் மலர்போல வும், மலரில் நிறம்போலவும், பறவைகளில் மயில் போலவும், விலங்குகளில் மான்போலவும், பெண்ணென்னும் அழகு இவ் வழகிய உலகை அழகு செய்கிறது. பெண்ணில்லையேல் உலகில் அழகேது? பெண்ணழகிலுள்ள தெய்வத்தன்மையை உணர்ந்து, அவ்வழகை எத்துணைக் கவிவாணர் எழுத்தால், எழுதி, எழுதி, இன்பம் நுகர்ந்தார்! எழுதி எழுதி எழுத்துக்கு முடிவு கண் டாரேயன்றி அழகுக்கு முடிவு கண்டாரில்லை. அழகுக் கடவு ளுக்கு முடிவேது? அழகாகிய பெண்ணிற்கு முதன்மை கொடுத் துப் பெருமை பேசுதல் தவறாகுமா?

அன்பர்களே! பெண்ணின் வாழ்க்கையை ஊன்றி நோக்கு வோமாயின், பெண் பிறவியின் உன்னதநோக்கம் நன்கு புலனா கும். இவ்வுலகஆக்கமும், அழிவும் பெண்ணிடத்திலிருக்கின்றன. தன்வயிற்றிற் பிறக்கும் பிள்ளை, பெருங்கல்வியாளனாய், வீரனாய், அன்பனாய், நல்லவனாய், உலகில் வாழவேண்டும் என்னும் எண் ணத்தையே தாய்கொள்வது வழக்கம். பிள்ளை கெட்டொழிய வேண்டுமென்று தாய் ஒருபோதும் நினையாள். அவள் வயிற்றிற் பிறந்து, அவளால் வளர்க்கப்பெறும், பிள்ளைகளாலல்லவோ பின்னைய உலகம்? எனவே உலகம் தாயிடத்தன்றோ இருக்கின் றது? அவ்வுலகம் காக்கும் தாய்மையுடைய பெண்ணின் பெரு மையை என்னென்று கூறுவது? பெண்ணின் பெருமை உணர்ந் தன்றோ திருவள்ளுவனார் "பெண்ணிற் பெருந்தக்கயாவுள" என்று உலகிற்கு அறிவுறுத்தினர்.

அழகு, அடக்கம், பொறுமை, தியாகம், பொதுநலம், இரக்கம், வீரம் முதலிய குணங்கள் பெண்மைக்குணங்கள். கரடு, முரடு, அவா, பொறாமை, தன்னலம், சிற்றம் முதலியன ஆண்மைக்குணங்கள். ஆண்மகன், கரடும், முரடும், சுருளும், பிளவும், நிரம்பிய பட்டைகள் போர்த்த வலிய மரம் போன்றவன். பெண்மகள், கரடு, முரடு, முதலிய கொடுமைகளை ஒடுக்க, மரத்தைச்சுற்றி, மனதுக்கினிய பசுமை வழங்கும் மெல்லிய பூங்கொடி போன்றவள். ஆண்வடிவில், பெண்மைக் குணம் பெற்றமக்களே, உலகில் அடியார்களென்றும், அறிஞர்

களென்றும், வீரர்களென்றும் பாவலர்களென்றும் சொல்லப்பட்டுவருகிறார்கள். பாட்டிற்சிறந்த "ஷெல்லி" வீரஞ்செறிந்த "நெப்போலியன்", பொறுமையிற் சிறந்த காந்தி அடிகள், இவர்களது திரு உருவப்படங்களை உற்று நோக்குவோம். அவர்கள் முகத்தில் மனதைக் கவரும் பெண்மை என்ன அழகாகப் பொலிகிறது? புத்தர், கிறிஸ்து, அப்பர் முதலியோர் படங்கள் நமக்குக் கிடைக்குமானால் அவர்கள் முகத்திலும் பெண்மை பார்க்கலாம். நாடே, நீ ஒரு அன்னை! மொழியே, நீ ஒரு பெண்! மலையே, நீ ஒரு நங்கை! ஆறே, நீ ஒரு செல்வி! கலையே, நீ ஒரு மகள்! என உலகிலுள்ள, காணும், அறியும், உயிர்க்கும், பொருள்கட்கெல்லாம் பெண்மைத் தன்மை வழங்கி தெய்வங்களாக நம் நாட்டினர் போற்றி வந்துள்ளார்கள் எனின் பெண்ணின் பெருமையைப் பேசவும் வேண்டுமோ? அர்மட்டுமா? பார்வதி பாகன், லட்சுமி நாராயணன், வள்ளி மணாளன், முதலிய வழக்குகளை நோக்குக. பெண்ணையே தேவியென்று அழைக்கின்றார்களேயன்றி, ஆணைத் தேவன் என்று சொல்லும் வழக்கம் நம்நாட்டில் இல்லை. இவ்வாறு பெண்ணிற்கு முதன்மை வழங்கிய நாடு, இதுபோழ்து அம்முதன்மை மறுக்கும் நிலையிலிருக்கிறது. தாய்மையுடைய பெண்ணிற்கு முதன்மை வழங்க மறுப்பது அநாகரிகம். "ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்" என்றும், "சக்தியாய்ச் சிவமாகி" என்றும், பெரியோர்கள் பெண்ணிற்கு முதன்மை வழங்கியிருக்கிறார்கள். பெண்வயிற்றிற்பிறந்த நாம் பெண்ணை முதலாகக் கொள்வோமாக.

யான் பெண்ணின் வயிற்றில் தோன்றினேன். பெண்ணுடன் பிறந்தேன். பெண்ணுடன் வாழ்கின்றேன். யான்தொழும் அன்புத்தெய்வம் பெண். யான் பேசும்மொழி எனக்குப் பெண் இன்பம் தருகிறது. எல்லாம் பெண்மயமாக என்னைச்சூழ்ந்து, என் உயிருக்கும் உடலுக்கும் கலந்திசைகின்றன, இத்தகைய பெண்தெய்வத்தை முதன்மையாகப் போற்றுகிறேன். வணங்குகிறேன், வாழ்த்துகிறேன். பெண்ணே முதன்மையுடையவள்.

அன்பர்களே! எல்லாவற்றிலும் முதன்மை பெற்று விளங்கும் பெண்ணிற்கு உரிமை வழங்கவேண்டுமா வேண்டாமா

என்ற ஆராய்ச்சியும் உலகில் சில இடங்களில் நடைபெற்று வருகிறது. உரிமை என்பது ஒருவர் கொடுப்பதன்று மற்றொருவர் வாங்குவதுமன்று. அஃது எவரிடத்தும், எல்லாவிடத்தும் இயல்பாய் அமைந்து கிடப்பது. சிலர் தமக்குள்ள வன்மையால் பிறர் உரிமையை மறித்தும், பறித்தும் வருகிறார். பெண்ணுரிமைக்குக்கேடு எவ்வுலகில் விளைந்திருக்கிறது? அஃறிணை உலகிலா? ஆறறிவுடைய மக்கள் உலகிலா? வெட்கம்! வெட்கம்!! புல், செடி, கொடிகளில் ஆணினம், தன் பெண்ணினத்தின் உரிமையைத் தடுத்திருக்கிறதா? பறவையோ அன்றி விலங்கோ தன் இனத்தின் பெண் உரிமையைக் கெடுத்திருக்கிறதா? அஃறிணை உலகில் பெண் உரிமைக்குப் பழுது நிகழ்ந்ததில்லை. பாழான ஆறறிவுடைய உயர்திணை உலகிலேயே அவ்வுரிமைக்குப் பழுது நேர்ந்திருக்கிறது. இவற்றிற்கெல்லாம் காரணம் ஆணுலகின் தன்னலமேயாகும். ஆண்மகன், பெண்மகளை தனக்குரிய காமப் பொருளாகவும், பணியாளாகவும்கொண்ட நாள்தொட்டு, பெண்மகள் உரிமை இழக்கலானாள். வலிய ஆண்முன், மெலிய பெண் என் செய்வாள்? பண்டைக் காலத்திலே நமது நாட்டுப் பெண்மணிகள் எல்லாத்துறைகளிலும் உரிமை பெற்றிருந்தார்கள். கல்வியாளர்களாய், வீரத்தாய் மார்களாய் அரசிகளாய் எவ்வினையும் ஆற்றவல்லவர்களாயிருந்தார்கள். அந்நாளில் நம்நாடு உற்றிருந்த செழுமைக்கு ஓர் அளவில்லை. வேதகாலத்திலே, தலைவன் வேள்வி செய்யும்போது தலைவியும் உடனிருப்பாள். மந்திரத்திலாதல், சுரத்திலாதல் தலைவன் பிழை நிகழ்த்துவனேல், உடனே திருத்தமாகத் தலைவி அதைச்சொல்லி ஒழுங்குசெய்வது வழக்கம். வேதகாலங் கடந்த பன்னூறு ஆண்டுகட்குப் பின்னரும், கணிதத்திற் சிறந்த லீலாவதியும், வான சாஸ்திரத்தில் பேர்பெற்ற கானையும், புலமைமிக்க இரோஜேஸ்வரியும், நம் நாடு குறிக்கத் தக்க பண்டிதைகளாவர். இதிகாச காலத்தில், சீதை நிறையும், சபரி தவமும், குந்தி வீரமும், காந்தாரி அரசும், திரௌபதியின் அருஞ்செயலும், அக்காலத்திய பெண்மணிகளின் உரிமைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. பழந்தமிழ் நாட்டிலே, பெண்மகள் தனக்கினிய

கணவனைத் தானே தெரிந்தெடுத்து வந்த வழக்கம் ஒன்றே, அந்நாளைய பெண்ணுரிமைக்குப் போதிய சான்ருக நிற்கிறது.

அன்பர்களே! பழந் தமிழ்நாடு ஆண்புலவர்களோடு பெண் புலவர்களையும் அணிந்திருந்தது. வெள்ளிவீதியார், ஔவையார் பெருங்கோப்பெண்டு, பாரிமகளிர் முதலியோர் அந்நாளில் தமிழ் வளர்த்தபெண்மணிகள். கல்வியிற்பெரிய கம்பன் காலத்திலும், நம் தமிழ் நாட்டுப் பெண்மக்கள் கல்வியில் தேர்ச்சியுற்றிருந்த காட்சியை கண்ட புலவர், அதை கோசலத்தில் அமைத்துப் பாடியுள்ளார்.

நாயன்மார், ஆழ்வார் காலத்திலும் பெண் கல்வி தமிழ் நாட்டில் நிலவியிருந்தது. காரைக்கால் அம்மையாரும், ஆண்டாள் அம்மையாரும் பாடிய அருட்பாடல்கள் நம்மெதிரில் நிற்கின்றன. பெண்மக்கள் பாட்டிற்கிரங்கி ஆண்டவன் அருள் செய்யா தொழிந்தனனே? ஆண்டவனுக்கு ஆண் பாட்டாயிருந்தா லென்ன? அவனுக்கு வேண்டற்பாலது கல்வியின் பயனாகிய அன்பு. அவர்களது அன்பு நிலையை அளந்துகூறுதல் முடியுமா? அத்தகைய அன்புக் கவிமணிகளைப்பெற்றது நம் தமிழ்நாடு.

பண்டைத் தமிழ்நாட்டில், பெண்ணுரிமையும், உரிமைக்கு உயிரனைய கல்வியும் இருந்தமையால், அந்நாளையப் பெண்மக்கள் வீரத்தாய்மார்களாகவும், வீரப்பெண்மணிகளாகவும் விளங்கி நின்றனர். அவர் தம் வீரச்செயல்கள் பலவுள, ஒன்று கூறுகிறேன். ஒரு பெண்மணியின் கணவன் போர்க் களத்தில் மறப்போர் புரிந்து, இன்னுயிர் துறந்தான். அவன் உயிர்துறந்த மறுநாள், மாற்ருர் செருப்பறைகேட் டாள். கேட்டதும், தன் ஒரே மகனை அழைத்துத் தலைமயிர் நீவி ஞள். போருடை புனைந்தாள். வேல்கைத்தந்து, "போர்க்களம் போய்வருக." என்று மகிழ்ச்சியோடு வழிகூட்டி அனுப்பினுள். அம்மம்மா! இதுவன்ருே தமிழர்வீரம். இவளது வீரம் கணவன் பிரிவையும் மறக்கச்செய்தது. கண்ணகி என்னும் கற்புக் கடவு ளின் வீரத்தை அறியாத தமிழரெவர்? இத்தகைய வீரத் தாய் மார்கள் பலர் வாழ்ந்தநாடு இத்தமிழ்நாடு. இவ்வீரத்திற்கு

அடிப்படை. அந்நாளில் பெண்மக்களுக்கிருந்த உரிமையேயாகும். உரிமை இல்லாவிடத்தில் வீர எழுச்சி ஏது?

பின்னர், இடைக் காலத்திலே பெண்மக்கள் உரிமை நம் நாட்டில் கடியப்பட்டது. பெண் கல்வி வாயில் மண் அள்ளி இட்டனர்; எல்லா முறையிலும் ஆண்மகனை ஒத்தும், சிலவற்றில் மேம்பட்டுமிருக்கும் பெண்மகள், கல்விபெறலாகாதென கட்டுப்பாடிட்டனர்; பெண் மக்களை விலங்காக்கித் தங்கள் வழியில் அட்டவேண்டுமென எண்ணங்கொண்டனர். இவை ஆணுலகங் கொண்ட தீய எண்ணமேயன்றி வேறென்ன? "விலங்கொடு மக்களனையர் இலங்குநூல் கற்றாரோ டேனையவர்" இந்நாளில் நமது நாட்டில், வான்மீகிகள், நக்கீரர்கள், திருவள்ளுவர்கள் தோன்றாமைக்குக் காரணமென்னை? தாயைக் கல்வி இழக்கச் செய்து அவள் உரிமை கடிந்ததன்றி வேறென்னை?

ஆண் மக்களைப்போல், பெண்மக்கள் படிக்கலாகாது என்னுங் கட்டுப்பாடு எற்றுக்கு? கல்விப் பயிற்சிக்குரிய மூளை பெண் மக்கட்கில்லையோ? "நுண்ணிய பொருளை, மிகவிரைவில், உணரும் ஆற்றல் பெண்மக்கட்கே அதிகம்" என்பதைத் தற்புகழ்ச்சியாகக் கருதாது, அறிஞரால் ஒப்பப்பட்ட உண்மையென உணரும்படி வேண்டுகின்றேன். கல்விக் கடவுளைப் பெண்ணெனக்கொண்ட நமது நாடு, பெண் கல்வியை மறுப்பது பொருளற்றதொன்றாகும். கல்வித்துறை, பெண்மக்கட்கு இயற்கையில், அரண் செய்வதன்றி, முரண் செய்வதில்லை; பெண் கல்வியை மறுப்பது, இறைவன் படைப்பு நோக்கை இடர்ப்படுத்துவதாகும்.

பின்னைநாளில், ஆண் மக்கள் பெண் மக்களின் கல்வியுரிமையைமட்டுமா கெடுத்தார்கள்? பிறப்புரிமைகளையும் பறித்தார்கள். எத்தனை கட்டுப்பாடுகள்? எத்தனை விதிகள்? எத்தனை தண்டனைகள்? என்ன, என்ன, உள்ளம் உருகுகிறது. அக்கால அறிஞர்களின் வன்கண் இருந்தவாறென்னே! பிறப்பில் ஆணாகப் பிறந்தால் எல்லாம் செய்யலாம்—பெண்ணாகப் பிறந்தவர்கட்கு மட்டும் விதிகள்! கட்டுப்பாடுகள்! தண்டனைகள்! ஆண்டவனே! கொடுமை பொறுக்க முடியவில்லை. உன்னைநோக்கி முறையிடு

கின்றேன். ஒரு பாதியாயுள்ள பெண்ணின் சிறுமை, மற்றொரு பாதியாயுள்ள ஆணையுந்தாக்கி, முடிவில், வாழ்வையும், நாட்டையும் குலைக்கும் என்பதை ஆணுலகம் இனியாதல் உணர்ந்து நடக்கட்டும். பெண் ஒழுக்கங் காக்கவேண்டுமென்பதை ஒரு முறைக்குப் பன்முறை யான் வலியுறுத்துகிறேன். அவ்வொழுக்கம் ஆணுலகிற்கும் வேண்டற்பாலதென்று அவ்வளவில் வலியுறுத்துகிறேன்.

இம்மட்டுமா பெண் மாயையாம்—அவளுடன் வாழ்தல் அஞ்ஞானமாம்—அவ்வாழ்வு துறத்தலே மெய்ஞ்ஞானமாம். இவ்வாறெல்லாம் ஞானம் பேசுகின்றனர். அறிஞரே! நீவிர் யாண்டிருந்து முளைத்தீர்? நுமது தந்தை ஒருபெண்ணுடன் கூடி வழாதொழிந்திருப்பரேல் நீவிர் இப்போது இந்த ஞானம் பேச முடியுமோ? பெண்ணின் வயிற்றிற் பிறந்து ஞானம் பேசும் ஒருவர், அப்பெண்ணை: மாயை—அஞ்ஞானம்—பிரவர்த்தி —என்று பேசுவது எத்தகைய நன்றி அறிதல்! எத்தகைக் கைம்மாறு! வெட்கம்! வெட்கம்!!

பெரியோர்களே! உரிமை எல்லோருக்கும் பொதுவானது வானத்தில் மேகந் தவழ்வதுபோலவும், கடலில் அலை எழுவது போலவும், பறவை அழகிய சிறகை வீசிப்பறப்பதுபோலவும், பெண் தன் உள்ளத்தெழும் விருப்பவழி நடக்கும் உரிமையுடையளாதல்வேண்டும். பெண் அடிமை வாழ்வு நடத்தினால், அவள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளை அடிமையுணர்வுடன் பிறக்கும். பெண்ணுரிமை பிடுங்கப்பட்ட நாடும் உரிமை இழந்த நாடாகும், இதற்குச் சான்று நமது நாடு.

பெண், ஆணை அடக்கப் புகுவதுந்தவறு. ஆண், பெண்ணை அடக்கியாள்வதுந் தவறு. இருவரும் ஒத்துநடத்தலே இன்பம். உயர்வு, தாழ்வு, போராட்டம் முதலிய எண்ணங்களின்றி, ஓருயிர் ஈருடலென, பெண் ஆணுடன் ஒன்றி வாழ்வு நடாத்தி உலகை வளர்ப்பாளாக. இது பெண்ணின் பெருமை.

பெண்மை என்பது அமைதித் தன்மை. அமைதிநிலை இறைமையென்பது. அவ்விறைமையுடைய தாயை வெறும்பெண்

ஒன்று கூறுவது? கூடாது. அவளைப் பெண் தெய்வமென்று போற்றுதல் வேண்டும். பெண்—தெய்வம்! பெண்—தெய்வம்! பெண்—தெய்வம்! முழுமுதற்பொருள், தண்மை வெம்மை யெனும் இரண்டு சக்திகளாக உலகை இயற்றுகிறது. அத் தண்மையின் கூறு பெண்ணுலகு. பெண், பிறந்து, உலகவளர்ச் சிக்குத் துணைபுரிந்து மீண்டும் அத்தண்மை தெய்வமாகிறாள். பெண் மகளாகத் தோன்றினாள்; மனைவியாக வாழ்ந்தாள்; தாயாகத் தொண்டுசெய்தாள். இப்பொழுது தெய்வமாக காட்சி யளிக்கிறாள். உலகீர்! அக்காட்சி காணுங்கள்; தெய்வம் தெய்வ மென்று எங்குதேடுகிறீர்? நூற்களை ஏன் ஆராய்கிறீர்? பெண்மை என்பது என்பு தோல்போர்த்த உடலன்று. அவ்வுடலுள்ளே யுள்ள தண்மை யிறைமை பெண்மை என்க. அத்தகைப் பெண் மைவாழ்க. ஆண்மக்களே! உங்கள் பெருமை பெண்ணுடன் பொருந்தி நிற்பது. உங்களைப் பெற்றவள் பெண்; உங்களை வளர்ப்பவள் பெண்; உங்களோடு வாழ்பவள் பெண்; உங்களைப் பெண்ணாக்குபவள் பெண்; நீங்கள் பெண்ணாகாது, அதாவது பெண்மை நிலைபெறாது, அதாவது அமைதி நிலையெய்தாது, விடு தலையடைய இயலாது. பெண்ணால் நலனடையும் நீங்கள் பெண்ணுலகையா வெறுப்பது? துறப்பது? நன்றிகொல்லாதே யுங்கள்; தாய்நன்றி கொல்லாதேயுங்கள்; "எந்நன்றி கொன்றார்க் கும் உய்வுண்டாம் உய்வில்லை—செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்னும் பொய்யாமொழியை நோக்குங்கள். பெண்ணிற்கு மதிப்புக்கொடுங்கள்; உரிமைகொடுங்கள்; வணக்கம் செலுத்துங் கள் பெண்ணை மதித்துப் போற்றலே நாகரிகம். அவளைக்கட்டுப் படுத்தல்—அடிமைப்படுத்தல்—கொடுமையாக நடத்தல்-அநாக ரிகம். பெண்ணலன் உங்கள்நலன்! உங்கள் நாட்டுநலன். அப் பெண்மக்கள் கண்ணீர்விடும் நாடு வறுமை நாடாகும்; அடிமை நாடாகும். அந்நாடு எரிந்துபோகும்; கரிந்துபோகும். ஒரு பெண்ணுக்கு ஸ்ரீராமபிரான் எவ்வளவு முயன்றார்; எத்துணை இடுக்கணுற்றார்; எத்தனை போர் புரிந்தார். ஒரு பெண்ணின் பொருட்டு பாரதப் பெரும்போர் நடந்தது. பெண்ணின் துயர் தீர்ப்பது ஆண்மகன் கடமை. பெண் துயர்தீர்க்க இயலாதமகன் ஆண் மகனல்லன். பெண்சிறுமை போக்க உயிரையுந்துறத்தல்

வேண்டும். பெண் பெருமை காக்கவே ஆண்மகன் பிறந்திருக்கிறான். பெண்ணில்லையேல் உலகேது? உயிரேது? அன்பேது? கடவுளேது? எல்லாம் பெண்ணால்; எல்லாம் பெண்ணில். அத்தகைப் பெண்ணை—தாயை—தெய்வத்தைப்—போற்றுங்கள்; போற்றுங்கள்: எங்கணும் பெண்மை பெருகுக; எங்கணுந் தாய்மை யோங்க; எங்கணும் இறைமை வாழ்க.



# செருத்துணையாரும் புகழ்த்துணையாரும் அவதரித்த திருப்பதிகள்

திரு T. V. சதாசிவப்பண்டாரத்தார் அவர்கள்
தமிழ்ப்பண்டிதர், வாணாதுறை ஹைஸ்கூல் கும்பகோணம்



## I

அறுபான்மூன்மை நாயன்மார்களுள் செருத்துணையார் என்பவர் ஒருவர். இப்பெரியார் தஞ்சாவூரில் அவதரித்து, திருவாரூர் என்னும் திருப்பதியை அடைந்து சிவபத்தியும் அடியார் பத்தியும் மிக்குடையவராய்த் திருத்தொண்டு செய்து வந்தனர். அந்நாளில், திருக்கோயில் வழிபாட்டிற்கு அங்கு வந்த பல்லவர் கோனாகிய கழற்சிங்கரது மனைவியார் பூமண்டபத்தின் பக்கத்திற்கிடந்த ஒரு பூவை எடுத்து மோந்துபார்க்க, அச்செயலைப் பொறாத செருத்துணையார் அவ்வம்மையாரின் மூக்கை அறுத்தனர். அஞ்சா நெஞ்சம் படைத்த இவ்வடிகள் ஆரூரிறைவற்கு மலர்மாலை தொடுக்கும் தொண்டினைப் பன்னாள்புரிந்து, இறுதியில் அப்பெருமானது திருவடி நீழலையடைந்தனர். இவ்வடியாரது வரலாற்றைத் திருத்தொண்டர் புராணம் எனப்படும் பெரிய புராணத்திற் காணலாம்.

இவ்வடிகள் பிறந்த திருப்பதி தஞ்சாவூர் என்பது 'தஞ்சை மன்னவனாஞ் செருத்துணை தன்னடியார்க்கு மடியேன்' என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவாக்கினால் அறியப்படுகின்றது.

தஞ்சாவூர் என்ற பெயருடைய மூன்று ஊர்கள் நம் தமிழகத்தில் உள்ளன. பாண்டி மண்டலத்தில் தென்காசிக்கருகில் ஒரு தஞ்சாவூர் உளது என்பது, தென்காசிக் கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டால் புலப்படுகின்றது.[1] சோழமண்டலத்தில் அப்பெயர் வாய்ந்த இரண்டு ஊர்கள் இருக்கின்றன. எனவே, இம்மூன்றனுள் செருத்துணையாரது திருப்பதி யாது என்பது ஆராய்தற்குரியதாகும்.

நம்பியாண்டார் நம்பியருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில் உள்ள ஒரு பாடலும், சேக்கிழாரடிகளது பெரிய புராணத்தில் செருத்துணை நாயனார் புராணத்தில் உள்ள ஒரு பாடலும், இவ்வடிகள் பிறந்தருளிய திருப்பதி எந்நாட்டில் உள்ளது என்பதை நன்கு விளக்குகின்றன.

அவை,

'கழிநீள் கடல்நஞ் சயின்றார்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்கழற் சிங்கன்றன் றேவிமுன் மோந்தனளே
எழில்நீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவரால்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே'

திருத்தொண்டர் திருவந்தாதி, பா—66

'உள்ளும் புறம்புங் குலமரபி னொழுக்கம் வழுவா வொருமைநெறி
கொள்ளுமியல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாந்
தெள்ளுந்திரைகண் மதகுதொறுஞ் சேலுங்கயலும் செழுமணியுந்
தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருக னாட்டுத் தஞ்சாவூர்'

பெரிய புராணம்-செருத்துணைநாயனார்புராணம், பா-1.

என்பன. இவற்றால் செருத்துணையாரது திருப்பதி சோழ மண்டலத்தில் உள்ள மருகல் நாட்டுத் தஞ்சாவூர் என்பது வெளியாதல் காண்க.

இனி சோழமண்டலத்தில் தஞ்சாவூர் என்று வழங்கப் பெற்றுவரும் இரண்டு ஊர்களுள், ஒன்று விசயாலயன், முதற் பராந்தகன், முதல் இராசராசன் முதலான சோழமன்னர்கள் வீற்றிருந்து செங்கோலோச்சிய திருவுடைமாநகரமாகும்.

1. Travancore Archaeological Series Vol I, Pages 92 & 110.

இம்மாநகர், தஞ்சாவூர்க்கூற்றத்தில் உள்ளது என்பது 'பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீ இராஜராஜேச்சுவரமுடையார்க்கு நாம் கொடுத்தன..........'[1] என்னும் தஞ்சைப் பெரியகோவிற் கல்வெட்டால் புலப்படுகின்றது. ஆகவே, தஞ்சாவூர்க் கூற்றத்திலுள்ள இத்தஞ்சாவூர் செருத்துணைநாயனாரது திருப்பதியன்று என்பது திண்ணம்.

சோழமண்டலத்தில் க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டின் உள்நாடுகளுள் ஒன்றாகிய மருகல் நாட்டில் ஒருதஞ்சாவூர் உளது என்பது 'க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுமருகல் நாட்டு மருகல் சபையார் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும்.......... இந்நாட்டு வைப்பூர் ஊரால் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும் இந்நாட்டு தஞ்சாவூர் ஊரார் இடக்கடவ திருமெய்காப்பு ஒன்றும் என்ற கல்வெட்டினால் தெரிகின்றது. (South Indian Inscriptions Vol II, Ins No 70.)

இச்செய்தி மற்றொரு கல்வெட்டாலும் உறுதியெய்துகின்றது. அது, (1)'திருவாய்க்கேள்வி முன்னாக திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 2-ஆவது ஆடிமாசம் செவரன்மேடான அகரநகரீசுவரச் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீ மூலஸ்தான முடையார் கோயிலிற் செம்பாதி காணியுடைய (2) சிவப்பிராமணன் காசிபன் இருஷப தேவ பட்டனேனும் இந்த ஸ்ரீ மூலஸ்தான முடையார் கோயிலில் மற்றைச் செம்பாதி காணியுமுடைய இக்குடி மகாதேவபட்டனுள்ளிட்ட அனைவோமும் சோழமண்டலத்து மருகல் நாட்டுத்தஞ்சாவூர் தஞ்சாவூர் கிழவன் உலகளந்தா (3)ன் அகமுடையாள் உய்யகொண்டாள் பக்கற் காணி ஒகரியிலே நாங்கள் கொண்ட பழங்காசு ௩ இக்காசு மூன்றுக்கும் பலிசை நிசதிச் செலவாக இத்தேவர்க்கு அந்தியம் போது ஏற்றி இச்சந்தியிற் பேரமுது செய்த இத்தனையுஞ்செல்ல நாங்களும் எங்கள் சந்தானத்தாரும் சந்திராதித்தவரை........(4)திதல் ஒருசந்திவிளக்கு எரிக்கக் கடவோமாகச் சிலாலேகை பண்ணிக் கொடுத்தோம்.

---

1. South Indian Inscriptions Vol II, Ins No 1.

இவ்வனைவோம் இவர்கள் பணிக்க எழுதினேன் இவ்வூர்க் கரணத்தான் சிவதாசன் ஆட்கொண்டானான நூற்று நாற்பத்தெண்மனேன் இவை என் எழுத்து இப்படிக்கு இவை இருஷபதேவ பட்டன் எழுத்து இப்படிக்கு இவை மகாதேவபட்டன் எழுத்து' என்பதாம். (S. I. I. Vol. VII Ins No 44.) எனவே, நம்பியாண்டார் நம்பியும் சேக்கிழாரடிகளும் கூறியுள்ள மருகல் நாட்டுத் தஞ்சாவூர், இவ்விரு கல்வெட்டுக்களிலும் குறிக்கப் பெற்றுள்ள தஞ்சாவூரே யாதல்வேண்டும் என்பது ஒருதலை.

இந்நாளில் நம்மாகாணத்திலுள்ள தாலுக்காக்கள்போல, சோழமண்டலத்தில் பல உள்நாடுகள் முற்காலத்தில் இருந்துள்ளன. அவற்றுள் மருகல் நாடு என்பதும் ஒன்றாகும். இது திருமருகலைச் சூழ்ந்துள்ளநாடு என்பது இதன் பெயரால் அறியப்படுகின்றது. இந்நாடு மிகவும் தொன்மை வாய்ந்ததொன்றாம். ஆளுடைய நம்பிகளும் தமது திருநாட்டுத் தொகையில் 'மருகல் நாட்டு மருகலே' என்று இம்மருகல் நாட்டைக் குறித்திருப்பது அறியத்தக்கது திருமருகல்,[1] வைப்பூர், பூதனூர், இடையாற்றங்குடி, தஞ்சாவூர் முதலான ஊர்கள் இந்நாட்டில் உள்ளன என்பது சில கல்வெட்டுக்களால் வெளியாகின்றது. ஆகவே, இந்நாடு முற்காலத்தில் தஞ்சைஜில்லா நன்னிலம் தாலுக்காவில் இருந்திருத்தல்வேண்டும். எனவே, இந்நாட்டில் உள்ள தஞ்சாவூரும் நன்னிலம் தாலுக்காவில் இருத்தல்வேண்டும் என்பது திண்ணம். மாயூரத்திலிருந்து திருவாரூர்க்குச் செல்லும் இருப்புப்பாதையில் வெட்டாற்றிற்கு வடகரையில், திருவிற்குடி என்னும் புகைவண்டி நிலையம் ஒன்று உளது. இதற்குக் கிழக்கே சுமார் ஐந்துமைல் தூரத்தில், தஞ்சாவூர் என்ற ஊர் ஒன்று இருக்கின்றது. நன்னிலம் தாலுக்காவில் உள்ள இத்தஞ்சாவூரே, நம்பியாண்டார் நம்பியும் சேக்கிழாரடிகளும் கூறியுள்ள மருகல் நாட்டுத் தஞ்சாவூராகும். இதுவே, செருத்துணை நாயனார் அவதரித்த திருப்பதி என்பது நன்கு துணியப்படும்.

(தொடரும்)

---

1. ஒருவணிகனுக்குத் திருஞானசம்பந்த சுவாமிகளால் திருமருகலில் விடந்தீர்க்கப் பெற்று மணஞ் செய்விக்கப்பெற்ற வரலாற்றில் வரும் வைப்பூர் இதுவேயாகும், (பெரியபுராணம்-திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் புராணம், பா-480.)

# ஒரு துயரம்

திருவாளர். திவான்பகதூர். சர். தி. கெ. சிவஞானம்பிள்ளை B.A., அவர்களது பிரிவு :—நமது தமிழ் நாட்டினில் தன்னலமில்லாத் தகைமையாளராகப் பொதுமக்கள் தொண்டினில் ஈடுபடுபவரது குழுவிலிருப்பதற்கு உரியவராகிய நமது பெரியார், கி. பி. 1861-ஆம் ஆண்டினில் திருநெல்வேலி மாநாட்டிற்பிறந்து உரிய பருவத்தே கல்வியிற்றேர்ந்து 1882-ஆம் ஆண்டிலிருந்து அரசாங்கப் பணிபூண்டு தமக்குற்ற அரசியற்றுறையில் திறம் பெற முயன்று, துணைத் தண்டத்தலைவர் (Dy. Collecter) பதவி வரையிலுயர்ந்து திவான்பகதூர் என்ற பட்டமும் பெற்று, 1919-ஆம் ஆண்டினில் அரசாங்கவூழிய ஒய்வு பெற்ருர். பிறகு, அவர்கள் ஒய்வு நாட்களை வீணே கழிக்காமல், உலகத் தொண்டாற்றக் கருதியபோது, அவர்கள் திருநெல்வேலி வளநாட்டின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர். மேலும் பொதுத் தொண்டில் சிறந்து விளங்கியதின் பயனுல், அவர்கள் சென்னை மாநில அரசாங்க சட்டசபை உறுப்பினராகி அதன் வளர்ச்சி நெறிப்பிரிவில் அமைச்சராக 1923—26வரையிலிருக்கும் பேறும் பெற்ருர்.

திருவாளர் பிள்ளையவர்கள் தமிழினிடத்து மிகவும் ஆர்வங் கொண்டவர்களாவார்கள்; அதைப்புரப்பவருள் அவர்களும் ஒருவராவர் என்பது வெள்ளிடை மலையாகும்: கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டுவிழாவின்போதும், மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையின் ஆண்டுவிழாவின் போதும், தமிழ்ப் புலவர்மாநாட்டின்போதும், திருநெல்வேலித் தமிழ்ச் சங்கத்திற்கும் தலைவராக இருந்து தொண்டாற்றியதே இதற்குப் போதிய சான்ருகும்.

திரு பிள்ளையவர்கள்; பொறுமைக்கு உறைவிடமாகும். ஆரவாரம் இல்லாதவர்கள்; பெருந்தகைமை மிகுதியுங் கொண்டவர்கள். அவர்கள் நோய்வாய்ப்பட்டு கடந்த 1936-ஜுன்-13ம் நாள் யாவரும் வருந்த மண்ணுலகைவிட்டு விண்ணுடு புரக்கச் சென்ருர்கள். அவரது இன்னுயிர் இறையடி நீழலில் பேரின்பம் எய்துமாக.

உ

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "ஆனி" நன்கொடை

| | | | | |
|---|---|---|---|---|
| திங்கள் நன்கொடை | | ரூ. | அ. | ப. |
| திரு. க. நடராசன் B.A., B.L., (பங்குனி) | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, L. மார்க்கசகாயம் பிள்ளை B.A., (சித்திரை) | ,, | 3 | 0 | 0 |
| ஆயுள் நன்கொடை | | | | |
| ,, ஆ. பொன்னுசாமிநாடார் அவர்கள் (ரூபாய் ஆயிரத்துக்கு 2-வது தவணை.) | | 50 | 0 | 0 |
| ஆண்டு நன்கொடை | | | | |
| ,, அண்ணாசாமி நாய்க்கர் அவர்கள் மிராசுதார், பெருமாக்கநல்லூர் | | 25 | 0 | 0 |
| ,, T. A. பாலகிருஷ்ணபிள்ளை அவர்கள் Retired Head Accountant சேர்வைகாரன்தெரு | | 5 | 0 | 0 |



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௰௨ | தாது, ஆவணி | மலர் ரு |
| --- | --- | --- |

உ

## பரணர் என்னும் ஆராய்ச்சிநூல்

திரு. வித்துவான், ஒளவை, சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரக்கலாசாலை, திருவத்திபுரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 4. பக்கம் 128.)

இந்நிலையில், விதிகளின் இயல்பினைச் சிறிதாராய்தல் இன்றியமையாதாகின்றது. "விதியெல்லாம் எய்தாததனை யெய்துவிப்பதூஉம், ஒருகாலெய்தி ஒருகாலெய்தாதாகற்பாலதனை அவ்வழியும் இகந்துபடாமற் காத்து நியமமாக எய்துவிப்பதூஉம், ஈரிடத்தும் எய்தற்பாலதனை ஒருமருங்கு மறுப்பதூஉமென மூவகைப்படும்" என்பர் ஸ்ரீமாதவச் சிவஞானமுனிவர். பொது, சிறப்பு எனவரும் இருவகையும் அடங்க "விதியெல்லாம்" எனப் பொதுப்படக் கூறியது காண்க. இம்முறைப்படியே,

"ஐகாரவிறுதிப் பெயர்" என்னும் பொதுவிதி, "வேற்றுமையல் வழி" (தொகை.16) என்புழி எய்தாத வல்லெழுத்து மிகுதியினை எய்துவித்ததாக,'விசைமரக்கிளவியும்'(உயிர்.79)என்னும் சிறப்பு விதி, அவ்வாறெய்திய வல்லெழுத்து மிகுதியினை விலக்கிற்று. இவ்வாறு எய்தியதனை விலக்கி, "பனையும் அரையும்" என்னும் சிறப்புவிதி அம்முப்பேறும், ஈற்றுஐகாரக்கேடும் விதிப்ப அதன் பின்தோன்றிய "பனையின் முன்னர்" என்னும் சிறப்புவிதி,ஐகாரக் கேட்டை இகவாமற்காத்து, அம்முப்பேற்றை விலக்கி, எய்தாத ஆகாரப்பேற்றினை விதித்தது. பின்பு, "கொடிமுன்வரினே" என்னும் சிறப்புவிதி, முன்னைச்சிறப்பு விதியால் காக்கப்பட்ட ஐகாரக்கேட்டையும், ஆகாரப்பேற்றையும் விலக்கி, பொதுவிதி யால் எய்தியதனை இகந்துபடாமற் காத்தது; இவ்வாறு, பொது விதியால் முடிந்ததனையே, குறித்துவருகிளவி மேல்வைத்து முடித்ததனாற் பயன், பனையென்னும் சொல், இக்கூறிய சிறப்பு விதிமுடிபேயன்றி, பொதுவிதியால்முடிபு பெறினும் அமையும் என்பதாம். இப்பொருள்கோள், எடுத்தோத்தும், இலேசும் இவ்வழி உத்திவகைபாலும் பிறவாற்றாலும் அமைக்கப்படும் மரபு கருதி. "பனைத்திரள்" என முடிவதனை "கொடிமுன் வரினே" என்ற சூத்திரத்து, "அவண்" என்றஇலேசினால் உரைகாரர்கள் அமைத்து முடித்தனர். இந்நெறியெல்லாம் ஆசிரியர் தொல்காப்பியனார் முதலாயினார் காலத்தேயே நம் நாட்டில் நிலவி வந்தனவாகலின், பரணர் முதலிய நல்லிசைப் புலவர்க்கு உடன்பாடேயாம். ஆதலின், அவர்கள், இவ்விலக்கண நெறிக்கு மாறுபட்ட முடிபு வருத்தல் கூடாமையின், "பனைத் திரள்" எனப் பரணர் கூறியது தொல்காப்பியத்துக்கு மாறு பட்டதன்றாம் என்று கொள்ளல்வேண்டும்.

இனி, திரு. ரெட்டியாரவர்கள், "பொதுவிதி, சிறப்புவிதி யால் கெடும்" என்று கூறுகின்றனர். மேலே ஆராய்ந்துகாட்டிய வற்றால், சிறப்பு விதிகளால் பொதுவிதி கெட்டழியாது, ஒராற் றால் வற்புறுத்தப் பெற்றமை புலனுமாகலின், அவர் கூறுவது பொருந்தாமை பெறப்படும். மேலும், சிறப்பு விதிகளால், பொதுவிதிகள் கெடுவது உண்மையாயின், ஆசிரியன்மார் பொது

விதி வகுத்துக் கூறல் பயனில கூறலாம். அல்லதூஉம், பொது விதிகள் பொருள் பலவற்றிற்குப் பொதுவாகிய இலக்கணம் கூறுவனவாகலின், ஒவ்வொரு பொருளினும் தனித்தனிநிற்கும் சிறப்பிலக்கணம் கூறிச்சேறல் முடியாதாம். ஆகவே, அவற்றைத் தெரிந்துணர்தற்காகவே சிறப்பு விதிகள் தோன்றுகின்றன. பொதுவிதி கூறும் பொதுவிலக்கணம் இலக்கியமெங்கும் பொதுவாய் நிரம்பி நிற்றல்போல, சிறப்பிலக்கணம் நிரம்பி நில்லாது என்பது இலக்கண அறிஞர் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த வுண்மையாகும். ஆகவே, பொதுவிதி பரந்த பண்புடையதென்றும், சிறப்புவிதி அன்னதன்றென்றும் தோன்றுதலின், சிற்றெல்லைத்தாகிய சிறப்பு விதியால், பேரெல்லைத்தாகிய பொதுவிதி கெடுமென்று கூறல் நிரம்பாமை பெறப்படும். அல்லதூஉம், மேற்காட்டிய விதிகள், எய்தாததனை எய்துவித்தலும், எய்தியதனை ஒருமருங்கு விலக்குதலும், எய்தியது விலக்கிப் பிறிதொன்று வகுத்தலும், முன்னர் விலக்கியதனையே ஓராற்றால் எய்துவித்தலும் செய்யக் காண்கின்றோமேயன்றி, பொது விதியைக் கெடுத்து, அது தனக்குரிய இலக்கியங்களின்மேற் செல்லாவாறு தடுப்பதனைக் காண்கிலோம். சிற்றெல்லைத்தாகிய சிறப்புவிதி, பொதுவிதியை விலக்கலுறின், தன்னெல்லைக்கண் அஃது எய்தாவாறு விலக்கி, ஒழிந்தவற்றின் மேற்சேறற்கண் அதனை விலக்குதல் கூடாமையின், பொதுவிதி சிறப்புவிதியாற் கெடும் என்றல் அமையாமை காண்க. ஆசிரியர் ஸ்ரீமாதவச் சிவஞானமுனிவரும், "பொதுவிதி ஆயிரம்கூடினும், விதந்தெடுத்தோதும் சிறப்புவிதி ஒன்றனை விலக்கப்பட்டு, அஃது ஒழிந்தவற்றின் மேற்செல்லும்" என்றே கூறியருளினர். ஈண்டும் முனிவர் பெருமானர், பொதுவிதி சிறப்பு விதியால் விலக்கப்பட்டுக் கேடும் என்னாது, "அஃது ஒழிந்தவற்றின் மேற் செல்லும்" என்றே கூறியிருத்தல் காண்க.

இனி, திரு. ரெட்டியாரவர்கள் "கொடிமுன் வரினே" என ஆசிரியர் விதந்தோதியதுபோல, திரள் என்பதனையும் ஓதாமையின் பனைத்திரள் என்று வருதல் அமைதியன்று என்கின்றனர். "பனையின்முன்னர்", "கொடிமுன்வரினே" என்ற

சிறப்பு விதிகள், வருமொழி நோக்கி எழுந்த செய்கை கூறுவன வாகலின்,"பனையுமரையும்" என்னும் சிறப்புவிதி நிலைமொழிக்கே யுரித்தாயிற்று. ஆகவே, அச்சிறப்புவிதிக்கண், "நினையுங்காலை அம்மொடு சிவணும்' என்பதற்கு, "வினை யெனப்படுவது வேற்றுமைகொள்ளாது நினையுங்காலைக் காலமொடுதோன்றும்" (சொல்.வினை.1.) என்றவிடத்து, ஆசிரியர் சேனாவரையர் "நினை யுங்காலை" என்பது பற்றிக் கூறியது போல, ஈண்டு, பனை யென்னும்சொல் அம்முப்பெறாது முடிதலும் உண்டு; அதுவும் ஆராயுங்கால், அம்முப்பெற்று முடிதற்கண் நீக்கப்படாது என்றற்கு "நினையுங்காலை" என்றார் என்று கூறிக்கொள்ளல் வேண்டும். கொள்ளவே, "பனைத்திரள்" "பனைப்போழ்" (புறம்.22) என்பன பனந்திரள், பனம்போழ் எனமுடிவது தோன்றும். தோன்றவே பொதுவிதியால் அம் முப்பெறாது வல்லெழுத்துமிக்கு முடிவனவும், அது பெற்று முடியும் என எய்திபதனை ஒருமருங்கு விலக்குதற்கு வருமொழி குறித்த சிறப்புவிதி யெழுந்தனவாகலின், அவ்வுண்மை காணாது, திரள், போழ் என்பனஎடுத்தோதாமையின், தொல்காப்பியத்துக்கு மாறுபட்டன என்றல் நிரம்பாதாம். நச்சினார்க்கினியரும், நன்னூலாரும், உறழ்ச்சி முடிபு கூறுதல் காண்க. "இரும்பனை வெண்டோடு" (புறம்.45) "பனைநுகும்பு" (புறம்.249) எனப் பிறாண்டும், பனையென்னும் சொல், அம்முப்பெறாமை முடிதல் காண்க. இவையனைத்தையும் ஆசிரியர் எடுத்தோதாமையின், தொல்காப்பியத்துக்கு மாறுபட்டன என்றல்வேண்டும். அன்றி, ஆசிரியர் தொல்காப்பியனார், பரந்துபட்ட வழக்கினவாய்வரும் இம்முடிபுகளை அறியாது கூறினர் என்றல் வேண்டும். பெரும் புலவர்கள் இலக்கணவிதிகட்கு அடங்கியிராது, தம்கருத்தின்படி செய்யுள் செய்வர் என்னும் துணிபு கொள்வதாயின், அக் கொள்கை சிறுபான்மையாமேயன்றிப் பெரும்பான்மையன்மை, வரலாற்று நெறிக்கண் இனிது உணரப்படுதலின், பெரும்பான் மைத்தாகிய இம் முடிபு அந் நெறியின் பாற்படும் என்று கோடலும் பொருந்தாதாம். மேலும், குறித்து வருகிளவிகள் அனைத்தையும் எடுத்தோதி அமைக்கலுறின் இலக்கண விதிகள் வரம்பின்றிப் பல்கும். ஆகவே, எடுத்தோதாமைபற்றி, இதனை

மாறுபட்டதெனக் கோடல் நிரம்பாமை பெறப்பட்டது. "பனைக் கைமும்மதவேழம் உரித்தவன்" எனத் திருநாவுக்கரசு சுவாமிகளும் கூறுதல் காண்க.

இக்கூறியவாற்றால், பொதுவிதியின் பாந்தபண்பின்கண் அடங்கி, சிறப்புவிதிகளின் சிற்றெல்லையைக் கடந்து நிற்கும் இலக்கிய நெறிபற்றி ஆசிரியர் பரணர் முதலாயினர் காட்டிய சொன் முடிபுகளை, தொல்காப்பிய இலக்கணவிதிக்கு மாறுபட்டனஎன்று கோடல் நிரம்பாதென்பது கூறியவாறும். இவ்வுண்மை இக்காலவழக்கு நூல் விதிகளின் அமைதியினை அவ்வப்போது உயர்நீதி மன்றங்களில் (High courts) சான்றோர் வகுத்துக்காட்டும் நெறிபற்றி ஆராய்வார்க்கு இனிது புலனாகும். இனி, "பனையும் அரையும்" என்னும் விதி, அம்முப் பெறுதனவும் பெற்று முடிதலையே சிறப்பித்தமையின், அவை அது பெறாது முடிதற்குரிய இயைபு, "கொடிமுன்வரினே" என்றசூத்திரத்து, சிறந்து நின்றலின், உரையாசிரியர், "ஐயவண் நிற்ப" என்புழி, "அவண்" இலேசினால் முடித்தனர் என்று கொள்ளல்வேண்டும். உயர்நீதி மன்றத்துச் சான்றோரும், ஒரு முடிபு கருதுமிடத்து, விதிகள் இரண்டு உளவாயவழி, ஒன்று பொதுவாயும், ஏனையது சிறப்பும், நேர்மையும் உடையதாயுமிருப்பின், அவற்றுள், பின்னதே கோடற்குரித்து என்கின்றனர். ( "When there are two articles which may possibly govern a case, the one more general and the other more particular and specific, the latter ought to be applied" H. C. Mitras Indian limitation Act. 7th Ed n page. 5.)

இனி, இக்காலத்து ஆராய்ச்சியாளர் சிலர், மேனாட்டறிஞரின் அறிவு நெறியினைப் பின்பற்றிச்செல்லும் விழைவு மிகுதியால், சில பொருந்தாமுடிபினை மேற்கொள்ளுகின்றனர். ஒன்று கூறுவேம். மேனாடுகளுள், ஆங்கிலநாட்டு மொழிக்குத் தொல்காப்பியம்போல, வழக்குஞ்செய்யுளும் குறைவற ஆராய்ந்து முடிபு வகுக்கப்பட்டதோர் இலக்கணநூல் இன்று. "வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும் பெருவழக்குக்கு இழுக்குமுண்டோ" என்னும் பொருளுரை அவர்மொழி மரபுக்கு

அமைந்ததாகும். அவர் நாட்டுச் சான்றோர் செய்யுட்கள்பொருளும், ஓசையும், பிற நலங்களும் செவ்வையாய் அமைந்து விளங்கி, அவர் வழங்கும் மொழியிலக்கண நெறிக்கு மாறுபட்டு நிற்பவாயின் அம்மாறுபாடு நோக்காது, அவற்றைத் தழீஇக் கோடல் அந்நாட்டவர் மரபு. மக்கள் உள்ளத்தெழும் எண்ணங்கட்கேற்ப மொழியும், அவற்றிற்கேற்ப, காலநிலை மாறினும், பெரும்பான்மையும் தம் இயற்கைநிலை மாறாதவகையில் இலக்கணமுடிபுகளும் இயல்பாகவே வாய்க்கப்பெற்ற நம் நாட்டுச் சான்றோர், அவ்வாறு மாறுபடுவனபோலத் தோன்றுவனவற்றையும் இலக்கணத்துள் இடமும், நெறியும் அறிந்து அமைத்துக் கொள்வர்; அவ்விலக்கண விதிகளும், எதிர்காலத்துப் பிறக்கும் சொன் முடிபுகள் இயல்பாகவே தம்பால் அடங்குமாறு அமைந்திருக்கும். மேலும், இலக்கணவமைதிகடந்து செல்வன ஒரு நெறிப்படாது, பல நெறியினவாய்ச் சென்று வரம்பின்றிநிற்கும் என்பதும். அந்நிலையில் சான்றார், சாலார் ஆகிய இருதிறத்தார் மாட்டும் வேற்றுமையின்றி வரிசையிழந்து நிற்கும் என்பதும் பிறவும் பண்டைக்காலத்துப் பெரியோர் உட்கோளாகும். பண்டைச் சான்றோர் வரிசையறிந்து செய்யப்பெறும் சிறப்பினையே சிறப்பாகக் கொண்டிருந்தனரென்பது அவர் பாடிய பாட்டுக்களால் இனிது விளங்கும். ஆதலின், மேனாட்டு அறிவுநெறி வேண்டற்பாலதேயாயினும், அந்நெறி வகையினுள், நம்நாட்டு அறிவு நெறிக்கும், மொழி யமைதிக்கும், இயற்கை நிலைக்கும் ஏற்பனவே கோடற்பாலனவாம்.

இனி, இந்நூற்கண், அறிஞர் மனத்தைக் கவரத் தக்க நிலையில் அமைந்து இன்பஞ்செய்யும் பொருள் நலங்கள் அடுத்த கட்டுரையில் ஆராயப்பெறும்.

# செருத்துணையாரும் புகழ்த்துணையாரும் அவதரித்த திருப்பதிகள்

திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தார் அவர்கள்
தமிழ்ப்பண்டிதர், வாணாதுறை ஹைஸ்கூல் கும்பகோணம்

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 4, பக்கம் 158)

## II

சிவனடியார் அறுபத்து மூவருள் புகழ்த்துணை நாயனர் என்பவரும் ஒருவர். இவர் செருவிலிபுத்தூரில் ஆதிசைவ மரபிலே தோன்றிச் சிவபெருமானை முறைப்படி அருச்சித்து வரும் நாட்களில், கொடிய பஞ்சம் உண்டாக, அதனைச் சிறிதும் பொருட்படுத்தாமல் தளர்ச்சியுற்ற நிலையிலும் தம் தொண்டினைக் குறைவறச் செய்துகொண்டு வந்தனர். நாள்தோறும் வறுமையால் மெலிவுற்றுவந்த புகழ்த்துணையார், ஒருநாள் சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாட்டும்போது, அவ்விறைவன் திருமுடி மீது திருமஞ்சனக் குடத்தை உடல் தளர்ச்சியினால் தாங்க முடியாமல் போட்டு விட்டார். உண்மைத் தொண்டராகிய இவ்வடிகளது வறுமை ஒழியுமாறு, பஞ்சம் நீங்கும் வரையில் சிவபெருமான் நாள்தோறும் இவருக்கு ஒரு பொற்காசு அளித்து வந்தனர். படிக்காசு பெற்ற புகழ்த்துணையார் இறைவன் திருவருளை நினைந்து நினைந்து மனம் உருகித் தம் திருத்தொண்டை முட்டின்றிச் செய்து வந்தார். பஞ்சமும் நீங்கிற்று. எந்நாளும் திருத்தொண்டை வழாது புரிந்துவந்த இவ்வடிகள், இறுதியில் சிவபதம் எய்தினர். இவ்வரலாற்றைப் பெரிய புராணத்திற் காணலாம்.

திருத்தொண்டர் திருவந்தாதியின் ஆசிரியராகிய நம்பியாண்டார் நம்பியும், பெரிய புராணத்தின் ஆசிரியராகிய சேக்கிழாரடிகளும், புகழ்த்துணைநாயனர் அவதரித்துத்தொண்டு புரிந்து இறைவன் திருவடியையடைந்த திருப்பதி செருவிலிப் புத்தூர் என்று தம் நூல்களில் கூறியுள்ளனர்.

இதனை,

'செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
உருவலி கெட்டுணா வின்றி உமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியா
தருவரை வில்லி அருளின் நிதியது பெற்றனனே.'

திருத்தொண்டர் திருவந்தாதி. பா. 67.

'செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார்
அருவரைவில் லாளிதனக் ககத்தடிமை யாமதனுக்
கொருவர்தமை நிகரில்லார் உலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்துணையார் எனும்பெயரார்'

பெரியபுராணம் புகழ்த்துணைநாயனார் புராணம் பா. 1.

என்ற பாடல்களால் இனிதுணரலாம். புலவர் பெருமான்களாகிய இவ்விருவரும் இங்ஙனம் கூறியிருக்க, சந்தானசாரியருள் ஒருவராகிய கொற்றங்குடி உமாபதிசிவனார், தாம் இயற்றியுள்ள திருத்தொண்டர் புராண சாரத்தில் புகழ்த் துணையாரது திருப்பதி அழகார் திருப்புத்தூர் என்று குறித்துள்ளனர்.[1] எனவே, செருவிலிபுத்தூர்க்கு அழகார் திருப்புத்தூர் என்ற பெயரும் உண்டுபோலும். ஆனால், செருவிலிபுத்தூர் என்ற பெயருடைய ஊர் இந்நாளில் யாண்டும் காணப்படவில்லை. நாயன்மார்கள் அவதரித்தருளிய திருப்பதிகளை யாவரும் அறிந்துகொள்ளுமாறு மிகத் தெளிவாகக் கூறிச்செல்வது, சேக்கிழாரடிகள்பால் காணப்படுந் தனிச் சிறப்புக்களுள் ஒன்றாகும். இவ்வுண்மையை, ஆனாய நாயனாரது திருப்பதி மேல்மழநாட்டில்

---

1. புண்ணியர்கள் புகழ்அழகார் திருப்புத்தூர்வாழ் புகழ்த்துணையார் [அகத்தடிமைப் புனிதர்சின்னாள்
மண்ணிகழ மழைபொழியா வற்காலத்தால் வருந்துடலம் நடுங்கிடவு [மணிநீரேந்தி
அண்ணல்முடி பொழிகலசம் முடிமேல்வீழ அயர்ந்தொருநாள் [புலம்பவரன் அருளாலீந்த
நண்ணலரும் ஒருகாசுப்படியால் வாழ்ந்து நலமலிசீர் அமருலகம் [நண்ணினாரே

திருத்தொண்டர் புராணசாரம்-பா-61

உள்ள மங்கலம் எனவும், திருநாளைப்போவாரது திருப்பதி மேற்காநாட்டில் உள்ள ஆதனூர் எனவும், குறும்ப நாயனரது திருப்பதி மிழலை நாட்டுப் பெருமிழலை எனவும், செருத்துணை யாரது திருப்பதி மருகல் நாட்டுத் தஞ்சாவூர் எனவும் அடிகள் கூறியிருத்தலால் நன்கறியலாம். இத்தகையார், புகழ்த்துணை யாரது திருப்பதியாகிய செருவிலிபுத்தூர் எந்நாட்டில் உள்ளது என்பதை உணர்த்தாமைக்குக் காரணம் புலப்படவில்லை. இந் நிலையில், உமாபதி சிவனர் அஃது அழகார் திருப்புத்தூர் என்று எவ்வாறுணர்ந்தனரென்பது ஆராய்தற்குரிய தொன்றாகும்.

இனி, ஏழாந் திருமுறையில் புகழ்த்துணையார் வரலாற் றைக்கூறும் பாடல் ஒன்று உளது. அது சைவசமய குரவாரகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய அரிசிற்களாப்புத்தூர்ப் பதி கத்தில் உள்ளது. அஃது,

'அகத்தடிமை செய்யு மந்தணன்தான் அரிசிற்புனல்கொண்டுவந் [தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையு நம்முடிமேல் விழுத்திட்டு [நடுங்குதலும்
வகுத்தவனுக்கு நித்தற்படியும் வருமென் றொருகாசினை நின்ற [நன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார் திருப்புத்தூர்ப் [புனிதனீரே.'

என்பதாம். இப்பாடலில் கூறப்பெற்றுள்ள புத்தூர், அரிசில் என்னும் ஆற்றின் தென்கரையிலிருத்தலால் அரிசிற்களாப் புத்தூர் என்ற பெயரையும் எய்தியுள்ளது. அன்றியும், இதனை அழகார் திருப்புத்தூர் என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் வழங்கி யுள்ளனர் என்பது, 'அரிக்கும்புனல்சேர் அரிசிற்றென்கரை அழகார் திருப்புத்தூர் அழகனீரே' என்னும் அவ்வடிகளது திருவாக்கினுல் அறியப்படுகின்றது. எனவே, புகழ்த் துணை யாரது திருப்பதி அழகார் திருப்புத்தூர் என்று உமாபதி சிவனர் தம் திருத்தொண்டர் புராண சாரத்தில் குறித்தமைக் குக்காரணம், சுந்தரமூர்த்தி சுவாமிகளது அரிசிற் கரைப் புத்தூர்ப் பதிகமேயாகும். இந்நாளில், அழகார் திருப்புத்தூர்

22

என்பது அழகாத்திரிப்புத்தூர் எனவும், அழகாப்புத்தூர் எனவும் வழங்கப்படுகின்றது. இது, கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில் நான்குமைல் தூரத்தில், குடவாயிலுக்குச் செல்லும் பெருவழியில் அரிசில் ஆற்றின் தென்கரையில் இருக்கின்றது. இத்திருப்பதியில் அவதரித்துத் திருத்தொண்டு புரிந்து இறைவன்பால் படிக்காசு பெற்ற புகழ்த்துணையாரைத் தம்பதிகத்தில் வைத்துச் சிறப்பித்துள்ள சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'அரிசிற் புனல்கொண்டு வந்தாட்டுகின்றான்' என்று அரிசிலாற்றையும் குறித்திருப்பது உணரற்பாலதாகும். திருஞானசம்பந்த சுவாமிகளும் தமது அரிசிற்கரைப் புத்தூர்ப் பதிகத்தில்,

'அலந்த அடியான் அற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே'

என்று புகழ்த்துணையார் இத்தலத்திற்செய்த திருத்தொண்டைப் பாராட்டியுள்ளனர். ஆகவே, சைவசமய குரவர்களாகிய திருஞானசம்பந்தராலும், சுந்தரமூர்த்திகளாலும் குறிக்கப் பெற்றதும், இக்காலத்தில் அழகாப்புத்தூர் என்று வழங்கப் படுவதும் ஆகிய அரிசிற்கரைப்புத்தூரே அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய புகழ்த்துணைநாயனாரது திருப்பதி என்பது நன்கு விளங்குதல் காண்க.



# திருக்குறளுதலிய நெறிமுறை



K. சோமசுந்தரம்பிள்ளை B.A., B.L., தஞ்சாவூர்

(முற்றொடர்ச்சி துணர் 11 மலர் 4 பக்கம் 215)

இனி இல்வாழ்வான் மனத்தின்கண் மாசில்லாததற்கு மனத்தின் கண்ணே நிகழும் வெகுளியை நீக்க முயலல் வேண்டும். இவ்வெகுளியே நகையையும் உவகையையும் கொல்லும் சினம். இஃது கேடு மிகவும் பயப்பதினுன், சினத்தைக் காத்து அதனைத் தமக்கு அடிமையாக்கி அஃது என்றும் தம்மிடம் தோன்ருது செய்திடல் வேண்டுவது இல்வாழ்வானுக்குரிய கடமையாகும். 'தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற், றன்னையே கொல்லுஞ்சினம்' என்பது முதுமொழி. தீய பிறத்தல் சினத்தாலாகுதலான் யார்மாட்டும் வெகுளியை மறத்தல் இன்றியமையாதது. சினம் செல்லுமிடத்து எழும்பாமல் தடுப்பவனே அச்சினத்தை அருளினுல் தடுப்பவனுவான். ஒருவன் எத்தகைய இன்னு செய்யினும் அவன் வெகுளியை மட்டும் உள்ளானெனின் அவன் உள்ளியவெல்லாம் ஒருமிக்கப் பெறுவான் என மறைநூலார் கூறியிருக்கின்றனர்.

தீய எண்ணங்களையும் தீய சொற்களையும் களைய எண்ணங்கொண்டு தம்மிடத்து வசையொழிய வாழ்வார் தீயசெயலும் அறவே ஒழிப்பரென்பது ஒருதலை. பிறருக்கு இன்னுசெய்தல் ஒருவருக்கு உய்யா விழுமம் தருதலான் அதனைச் செய்யாமை நன்று. மனத்தானும் துன்ப மியற்றுபவைகளை எனைத்தானும் செய்யாதிருப்பது சீரிய அறமென்பது தெய்வப்புலவரது துணிபாகும், ஆதலான் இன்னுசெய்தார் எப்பொழுதும் துன்பத்திலழுந்தி உழல்வாராதலான், தன்னுயிர்க்குத் துன்பமில்லாமையை விரும்புவோர் துன்பம் செய்யாரென்பதைத் தெளிவாக ஆசிரியர், 'நோயெல்லா நோய் செய்தார் மேலவாநோய் செய்யார், நோயின்மை வேண்டுபவர்' என்ற குறளான் தெரிவித்திருக்கின்றது நோக்கற்பாலது. ஒருவருக்கு இன்னு முற்பகலில்

செய்யின் அஃது தானே பிற்பகலில் இன்னா செய்தானுக்கு வரும் என்று 'பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமேவரும்' என்ற குறளான் பொய்யில் புலவர் பிறண்டும் கூறியிருப்பது அறியத்தக்கது.

ஒருவர் ஒருயிர்க்கு இன்னா செய்தலி னிமித்தம் என்றும் துன்பப் படுவரென்று மறைநூல் மொழியா நிற்க மற்றும் அதனைக் கொல்வார்க்கு அம்மறைநூல் யாது புகல்கின்றதெனை ஆய்வோம். 'நல்லாறெனப் படுவதி யாதெனின் யாதொன்றுங் கொல்லாமை சூழுநெறி' என்று நாயனார் அருளினமையால் கொல்லாமையே சிறந்த அறமென்று அவர் அறிவுறுத்தினர். கன்னெஞ்சங்கொண்டு இறைவனது ஆணையால் வாழுகின்ற பிற உயிர்ப் பொருள்களைக் கொன்று வருபவர் இறைவனது படைப்பின் நோக்கத்தைக் கெடுத்தலான் அவர்கள் எக்காலத்தும் இறைவனதருளைப் பெறாது துன்பக் கடலுட்பட்டு வருந்துவர். பிற உயிர்ப் பொருள்களைக் கொன்று அதனால் எய்தற்குரிய ஆக்கம் பெரிதெனினும் அவ்வாக்கம் கருதி கொலைபுரிதல் பெருங்கேட்டினை விளைவிப்பதாகுமென்று 'நன்றாகுமாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக் கொன்றாகு மாக்கங்கடை' என்ற குறட்பாவில் தெய்வப்புலவர் விளக்கியுள்ளதைக் காண்க. உயிர்க்கொலை வேள்வியால் வரும் ஆக்கத்தினும் கொல்லாமையால் வரும் அறம் சாலச் சிறந்ததென 'அவி சொரிந்தாயிரம் வேட்டலினொன்ற, னுயிர்செகுத் துண்ணாமைநன்று' என்ற குறளால் நன்குணரப்படும். கொல்லாமையாகிய அறம் கொண்டொழுகுபவரிடம் உயிருண்ணும் கூற்றும் செல்லாதெனில் கொல்லாமை எத்தகைய அறமென ஒருவாறு புலனாதல்கூடும், 'கொல்லா நலத்தது நோன்மை' என்று நாவலர் பெருமானாகிய திருவள்ளுவர் கூறியிருப்பது கவனிக்கத் தக்கது; மற்றும் 'அருளல்லதியா தெனிற் கொல்லாமை' என்று தெய்வப்புலவர் குறித்திருப்பதினான் அருளாட்சி ஊனுண்பவர்க்கு இல்லையாதல் பெற்றாம். செயிரிற்றலைப் பிரிந்த காட்சியர், புலால் பிறிதொன்றின் புண்ணெனவோர்ந்து உயிரின் தலைப்பிரிந்த ஊனை உண்ணார்; அவ்வாறு ஊனைத்தின்று ஊனைப்பெருக்கும் வழக்கம்

மக்கள் கைக்கொண்டிருப்பின் எங்ஙனம் உலகில் அருள்நிலை பெற்று நிற்குமென செந்நாப்போதார் வருந்தி, பின் தன்னுயிர் போல் மன்னுயிரையும் எண்ணி அன்புநெறியால் உலகம் சிறக்க வேண்டுமென வுன்னி 'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறி, தின்னுயிர் நீக்கும்வினை' என அருளியதுநோக்கி இன்புறத் தக்கது. உயிர்க்குறுகண் செய்யாமை சிறந்த அறமாதல்பற்றி பொய்யாமை என்ற அறத்தினிற்கும் சிறந்தது கொல்லாமை ('ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய் யாமை நன்று') எனக்கொண்டு, கொல்லாமை என்ற அறந் தாங்கிய அறிவு வலிமை படைத்தார்க்கு எல்லா வலிமையுமுண் டாகுவதுபோன்று உயிர்க்கொலை செய்து ஊன்பொதி தாங்கி ஞர்க்கு யாதொரு வலிமையு முண்டாகாதென்று 'அறிவுடை யார் எல்லாம் உடையர்' எனக்குறிப்பால் அறிவுறுத்தியது போற்றற்குரியது.

இவ்வாறு பிறர் துயர் களைவான் நோக்கங்கொண்டு ஏனைய வுயிர்களின்பால் இரக்கமும், அன்பும், அருளும் செறிந்த நல் லொழுக்க முடையார், ஏனைய மக்களின் இனிய வாழ்க்கையைக் கருதி இன்னா செய்தார்க்கு இனியவேசெய்து, பிறர் தமக்கு செய்த தீமையைப் பொறுத்து சான்றாண்மை யுடையவராவர். இத்தகைய நற்குணங்கள் ஒருங்கே நிரம்பிய மனத்தின்கண் மாசிலாது தூயவராயிருப்பவர்தாம் சான்றோரெனப்படுவர். இத்தகைய சான்றோரது சால்பின் தன்மைகளைக் கூறவந்த முதற்பாவலர்

'கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு' எனப் பொதுவகை யான் கூறி பின்னர் சிறப்பின் வகையாக

'அன்பு நாணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்து சால்பூன்றிய தூண்';..............'பிறர்தீமை, சொல்லா நலத்தது சால்பு'; 'ஆற்றுவாராற்றல் பணிதலது சான்றோர், மாற்றாரை மாற்றும்படை'; 'சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி, துலையல்லார் கண்ணுங் கொளல்'; 'இன்னா செய்தார்க்கு மினி யவே செய்யக்கா, லென்ன பயத்ததோ சால்பு' எனக் கூறியுள்

ளார். சுற்றத்தார் மேலல்லாது பிறர்மேலும் மனம் கசிந்த அன்பும், பழியினை தன்மேலேற்றுக் கொள்ளவும், தீயவும்செய்ய நாணலும், யாவரிடத்தும் கைம்மாறு கருதாது தன்னாலியன்ற கடமைகளைக்கடைப்பிடித்துப்புரிதலும், எவரிடத்தும் எவ்விடத்தும் மெய்ம்மை பேசுதலும், பிறர் தீமை எடுத்தியம்பாதும், ஓர் நற்கருமத்தை முடிக்கும்போது யாவரையும் தாழ்வெனும் தன்மையுடன்வேண்டி துணைக்கொள்ளலும், தம்மின் துலையல்லார் கண்ணும் தம்மைக் குறைந்தவராகக் காட்டிக்கோடலும், இன்னா செய்தார்க்கு மாறாக இனியவே செய்தலும் ஏனைய பிறவும் சான்றோர்பால் காணும் சிறப்புச் செயல்களென நாயனார்கூறி 'கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக் கோடாமை' யும், 'சமன் செய்து சீர்தூக்குங் கோல்போலமைந் தொருபாற் கோடாமை'யும் அன்னவருக்கு அணியாக வைத்து எடுத்துக் காட்டியிருக்கின்ற மேன்மையினைக் கண்டு கொள்க. இத்தகைய குணங்களைக் கைக்கொண்டு இசைபட நின்றவன் அறவியலோடு இல்லறத்தில்வாழ்பவனாவன். இவ்வண்ணம் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப் படும்.' ஆதலின் முறைப்பட இல்லறநெறியில் வழா தொழுகுவோர் அறப்பயன் பெறுதல் கூடுமெனவுமறிக.

மக்களுள் உயர்வு, தாழ்வு அறிவு விளக்கத்தின் பாலமைகின்றதாயிருப்பினும் அறிவுடையொருவன் உலகத்தாருடன் முறை தெரிந்து ஒழுகானாயின் அவன் அறிவீனனாகவே கருதப் படுவன். இதனை 'உலகத்தோடொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லாரறி விலாதார்' என்ற குறளால் நன்குணரப்படும். இவ்வாறு உலக மக்களொடுகூடி ஒழுகுங் காலத்து, 'நிலத்தியல் பானீர் திரிந்தற்றாகு மாந்தர்க், கினத்தியல்பதாகுமறிவு' என்றதினான், சிற்றினஞ் சேராது நல்வழியினிலே செலுத்தும் பெரியோரைத் துணைகோடல் வேண்டும். ஏனெனின் 'நல்வினத்தினூங்குந் துணையில்லை தீயினத்தி, னல்லற் படுப்பதூஉமில்' என்பது பற்றியே. நல்லினத்தோடு சேராவியல்புடையான் தன் அறிவின் துணைகொண்டு 'குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா இனனுமறிந்து' யாம், அவர், எனும் வேற்றுமையுணர்ச்சி

யின்றி நட்டல்வேண்டும். ஏனெனின் 'நாடாது நட்டலிற் கேடில்லை,' இத்தகைய நட்பு பண்புடையாளரிடமும் அறிவுடை யாரிடமுமிருக்குமேல் அஃது பல நன்மைகளை விளைவிக்கும். நட்பு செய்வதில் குடிப்பிறந்தாருடைய நட்பை விலைகொடுத் தாயினும் பெறல் சிறந்ததெனக் 'குடிப்பிறந்து தன்கட் பழி நாணுவானைக், கொடுத்துங்கொளல் வேண்டுநட்பு' என்ற குறளில் விளக்கியுள்ளார். 'பிறந்தோருறுவது பெருகிய துன்பம்' என்றபடி மக்களுக்குத் துன்பமுண்டாதலியல்பே. ஊழ்வலியானும் அறிவின் திறத்தானும் ஒருவனுக்கு இடுக்கண் வந்திடின் அதனுள் அல்லலுற்றமிழ்ந்து கரைகாணாது வருந்தும் போது காக்க வல்லுநர் உணர்ச்சியொத்து நிகழும் நட்புடை யாளரே. எனவே நட்பு இன்றியமையாததொன்றேயெனப் பெற்றும். இதுபற்றியே பொய்யில் புலவரும் 'செயற்கரிய யாவுள நட்பினதுபோல், வினைக்கரிய யாவுள காப்பு' எனப் புகன்றனர். இத்தகைய நட்பின் பயனைக் கருதாது, முகநக நட்பித்து, அறிவினை வேறுபடுத்தி இருமையும் கெடுக்கும் இயல் பினரது உணர்வில் கேண்மை தீங்கு பயப்பதலான் அதனைக் கடிந்தொதுக்குதல் வேண்டுமெனத் திருவள்ளுவர்கூறி தீநட்பின் பயனை

(i) மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீத்து
ஒருவுக வொப்பிலார் நட்பு.

(ii) செய்தே மஞ்சாராச் சிறியவர்புன் கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

(iii) ஊதியமென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்

என்ற குறட்பாக்களால் நன்கு வலியுறுத்துவது அறியற்பாற்று.

நட்டற்குரிய நல்லோரிணக்கம் வாய்க்கப்பெற்று அவரால் சில நன்மையினை ஒருவன் அடைந்தால் அவன் அந்த நன்றியை மறப்பது நன்றன்று, ஒருவன் செய்த நன்றியினை மறவாதே நம் மனத்துட் கொள்வோமாயின் அவன் நமக்கு முன்னராற்றிய இடுக்கண்கள் இருந்தால் அவை யாவும் நம் மனதை விட்டகலும் அதனானே இடுக்கண் செய்ததி னிமித்தம் அவன் மீதிருந்த

பகையுமழியும், இதனை செந்நாப் போதார் 'கொன் றன்ன வின்ன செயினு மவர்செய்த, வொன்று நன்றுள்ளக்கெடும்' என்ற குறளில் விளக்கி யுள்ளதைக் காண்க. மற்றும் 'எந் நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்றமகற்கு' என்ற குறள் நன்றி மறவாமையே உணர்த்தப் படுவதை தெளிவு படுத்துகின்றது. எனவே யாவரானும் புகழ்பட வாழ்பவன் பிறர் செய்த நன்றியினை மறவாது பெரி யாரைப் பேணி ஒழுகி, தனக்குத் துன்பம் வந்துற்ற விடத்தும் அப்பெரியாரது நட்பினை என்றும் விடாதிருக்க முயலுவர்.

இவ்வாறு பெரியாரைத் துணைகொண்டு உலக மக்களொடு ஒழுகுங்காலத்து தம்தம் நிலைமைக்கேற்ப முன்னோரால் வகுத் துக்கூறப்பட்ட முறையினை நழுவவிடாது அவைகளின்படி ஒழுகுதல்வேண்டும். இத்தகைய ஒழுக்கமானது யாவருக்கும் சிறப்பைத் தருதலான் அதனை உயிரைக்காட்டிலும் பன்மடங்கு சிறந்ததாகக் கருதி அதற்கிடையூறில்லாது நடந்து கொள்ள வேண்டுமென்பதை அறிந்தவர்களே ஒழுக்கமுடையவர்கள் இஃதுபற்றியே, 'ஒழுக்கம் உயர் குலத்தினன்று' எனவும் 'ஒழுக்கம் விழுப்பந்தரலானொழுக்க, முயிரினு மோம்பப்படும்' எனவும் ஆன்றோர் வாக்குகள் எழுந்தன.

'பரிந் தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந் தோம்பித் தேரினுமஃதே துணை' என்றலான், இம்மைக்கும் மறுமைக்கும் துணையாய் நிற்கும் இவ்வொழுக்கத்தினை எவ்வகையானும் கெடா மற்பேணிக் காப்பாற்றல் நம் கடமையாகும். 'நன்றிக்கு வித் தாகும் நல்லொழுக்கம்,' 'ஒழுக்கமுடைமை குடிமை' என்றதி னான் எவரெவர் எந்தெந்த நிலைமையில் நிற்கின்றனரோ அவ ரவர்கள் தங்கள் தங்கள் கடமைகளை நெறிபிறழா வண்ணமியற் றுதல் நல்லொழுக்கமென மறைநூல் நவில்கின்றது.

பெறுதற்கரிய யாக்கையினைப் பொலிவுபெற விளங்கவைப் பது நல்லொழுக்கமேயாதலின், அவ்வொழுக்கத்திற்கு இன்றி யமையாதது அறிவே. அறிவுக்குப் பயன் ஒழுக்கத்தைத்தவிற பிறிதல்ல. அறிவாவது சொல்வாரது இயல்பைக் கருதாது

அவர் கூறும் பொருளின் பயனைநோக்கி வேண்டப்படுவதைக் கொண்டும் வேண்டப்படாததை நீக்கியும் ஒழுகுதலாம். சொல்வார் பலதிறத்தினராதலான் அவரது இயல்பு நோக்காமை வேண்டும். ஏனெனின் நமக்கு வேண்டப்படுவது பொருளேயன்றிப் பிறிதன்று. இதனைக் குறித்தே

(i) எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

(ii) எண்பொருளவாகச் செலச்சொலித்தான் பிறர்வாய்
நுண்பொருள் காண்பதறிவு.

(iii) எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

எனத் தமிழ் மறையும் முழங்குகின்றது. இவ்வாறே சொல்வாரது பொருளின் பயனைக் காணாதே ஒழிதல் அறியாமையின் பால் படுவதினாலும், அவ்வறியாமையின் பயன் துன்பந்தருதலானும் இதனை அறவே நீக்க முயலல்வேண்டும். மாந்தர் இனத்தியல்பதாகும் அறிவு என வழங்கப்படுதலான் மக்கள் முதற்கண் அறிவுடைய உயர்ந்தோர் கூட்டத்தை உறவாய்க் கொண்டொழுகின் அவ்வறியாமை தேய்வுறும்; ஆய்ந்துபார்க்கின் மக்கள் பிறந்த ஞான்று யாவும் அறியு மாற்றலில்லாதிருந்து பின் பிறருதவியால் உலகப்பொருளின் தன்மையினை அறிந்து வருதல் நாம் என்ஞான்றும் காண்கின்றோம். ஆகவே, அறிவு அனுபவ முதிர்ச்சியினையுடைய பெரியாரின் கூட்டுறவாலே விளங்கப்பெறும் எனப் பெறற்றாம். இஃதொன்றுமேயல்லாது அப்பெரியார் நற்றுறையிலே நின்று இயற்றப்பெற்றுள்ள நூல்களைக் கற்றலானே அறிவு மேம்பட்டு நுட்பமும் பெருக்கமும் எய்துகின்றதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இதனுண்மையினை 'தொட்டனைத் தூறுமணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறுமறிவு' என்ற குறட்பா வலியுறுத்துகின்றது காண்க. அறிவு பெருக்கமெய்தல் கற்பாரின் நோக்கமாகையால் கல்விக்குப் பயன் அறிவெனவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமெனவும், அவ்வொழுக்கத்தினை யுணர்ந்து நடக்கக் கல்லாதவர்கள் பலநூல் கற்றும் அறிவிலாரே எனவும் பெறற்றாம்.

கற்ற கல்வி ஒருவர்க்கு கேடில் விழுச்செல்வமாதலான், அவர் 'ஒருமைக்கட்டான் கற்ற கல்வி எழுமையுமே மாப்புடைத்து.' ஊழ்வயத்ததாகிய துன்பம் வந்துற்ற காலையிலும் கற்றவர் கல்வியின் பயனுல் அதனை முன்னறிந்து காக்கும் வல்லமை யுடையராவர். கல்வியிலாரோ அத்தகைய துன்பங்களை ஒல்லும்வகையால் அறியாது இன்னல் பல தாமே தமக்காக்கிக் கொள்வர். இதனை 'அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை செறுவார்க்குஞ் செய்தலரிது.' என்ற பொருளுரையால் கண்டு கொள்க. அறிவு கற்றலினுல் பல்குதலாதல்பற்றி, கற்றறி வுடையார் கல்வியின்பயனைக்குறித்து கற்ருரை விரும்பிப்பெரும் புகழும் ஒளியும்பெற்று, தாம் கற்றறியும் பொருள் நுட்பங் களைத் தேருங்காலத்தும் தம்மகத்தே விளைந்த அப்பேரின்பத் தைக்கண்டு தாமே களித்திருப்பது மனிதத் தன்மையன்றென, அதனைப் பிறர்க்கும் விளைவித்து உலகமின்பமடையக் கண்டு விரும்புவர். இஃது பற்றியே தெய்வப் புலமைத் திருவள்ளுவர் 'தாமின்புறுவதுலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந்தார்,' என்றும், மீண்டும் கல்வியால் விளையும் இன்பம் எத்தகையதென விளக்க, பண்புடையாளரிடம் வாய்த்துக் கொள்ளும் நட்புப் பழகுந்தோறும் இனிதாகுமென்பதற்கு உவமையாக 'நவிறொறு நூனயம்போலும் பயிறொறும், பண்புடையாளர் தொடர்பு' எனவும் கூறியருளியது அறியத்தக்கது. கல்வி இன்பம் பயக்கு தலல்லாது மெய்யுணர்வினையும் வளரச் செய்யும்; வீடு பேற் றிற்குக் காரணமாய்நிற்பது மெய்யுணர்வாகலான் கல்வியும் வீடு பயக்குமென்று கூறுதல் பிழைபடாது. இதனை

'கற்பக்கழி மடமஃகு மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணரும் கோளுணர்ந்தால்
தத்துவமான நெறிபடரும் மந்நெறி
இப்பாலுலகத் திசைநிறீஇ யுப்பால்
உயர்ந்த வுலகம் புகும்'

என்ற நான்மணிக் கடிகைச் செய்யுளான் ஓர்ந்துணரப்படும். தெய்வப் புலவர் திருவள்ளுவரும் வீடுபேற்றுக்குக் காரணமா யுள்ள மெய்யுணர்வுகல்வியானெய்தற்பாலதெனுங்கருத்துடைய

ராய் வீடடைதற்கு சிறந்த சாதனங்களையும் காட்டுவது அறிந்து இன்புறத்தக்கது. அவை

(i) நில்லாதவற்றை நிலையினவென் றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(ii) யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்

(iii) பொருளல்லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

(iv) அவாவில்லார்க் கில்லாகுந்துன்ப மஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்,

என்பனவாகும். மாண்பொருளவாகியநாற்பொருளடைதற்குரிய கருவி கல்வியே யாதலான் கற்றவழி கற்றவர் ஒழுகாராயின் அவர்களினும் றனிபேதையில்லை; 'ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத் துந் தானடங்காப் பேதையிற் பேதையாரில்' என்பது பொது மறை.

அறத்திற்குக் கருவியாகிய கல்வியினைப் பெற்றவர் வாலறி வன் நற்றாள் வணங்காராயின் கல்வியினாலுண்டான பயன்களை அவர் சிறிதும் வாய்க்கப்பெறார். 'கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவ, னற்றாடொழாஅ ரெனின்' என்பது வள்ளுவர் வாய்ச்சொல்; நூல்களைக் கற்றவர் கல்வி யறிவினாலாய பயனைப் பெற விரும்புவாராயின் அவர்கள் இறை வணக்கமுடையவராய் யொழுகல்வேண்டுமென திருவள்ளுவர் கூறி பின் அவ்விறைவனை யடையும் நெறியினையும் அருளியது நோக்கத்தக்கது. மற்றும் உண்மைநூற் கல்வி நல்லொழுக்கத்திற்கு அரணாக விருந்த போதிலும் நல்லொழுக்கமும் இறைவழிபாடும் ஒன்றற்கொன்று இன்றியமையாதனவாயிருக்கின்றன என்பதையும் திருவள்ளுவர் புலப்படுத்துகின்றார். நல்லொழுக்கமும் இறைவனது திருவடித் தாமரைகளைப் பெறுதற்கு சீரிய நெறியாதலான் நல்லொழுக் கத்திற்கு உறுதுணையாயுள்ளது கடவுள் வணக்கமே என தெய் வப்புலவர் கருதி 'கடவுள் வாழ்த்து' எனும் அதிகாரத்தில் இறைநலம் பற்றாத வாழ்க்கை பயனற்றதென்னும் குறிப்பு

வகையான் வற்புறுத்திக் கூறுவதையு மறிக. காணப்பட்டதாகிய உலகம் ஒருவனால் உண்டாக்கப்பெற்றிருக்கவேண்டுமெனவும், அவனும் முற்றறிவுடையனாகவும் முடிவிலாற்றலுமுடையனாகவுமிருத்தல் வேண்டுமெனவும் நோக்கங் கொண்டு

அகர முதல வெழுத் தெல்லாமாதி
பகவன் முதற் றேயுலகு

என்ற குறளில் கடவுளிருப்பை நாட்டி.,

'கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ
னற்றொடொழாஅ ரெனின்'

என்ற குறளால் கல்வி கேள்விகளையுடைய மக்கள் இவ்வுலகில் விரும்பி உழல்வதெல்லாம் இறைவனை அடைதற்பொருட்டேயாதலான், அதற்காக இறை பணி நிற்றல் சிறந்ததெனவலியுறுத்தி

மலர்மிசையேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார்,
வேண்டுதல் வேண்டாமையிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பையில,
இருள் சேரிருவினையுஞ் சேராவிறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார்மாட்டு
பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ்வார்,

என்ற குறள்களில் இறைவனை அடையும் நெறிகூறி

தனக்குவமை யில்லாதான்றாள் சேர்ந்தார்க்கல்லான்
மனக்கவலை மாற்றலரிது
அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லாற்
பிறவாழி நீந்தலரிது,
கோளில்பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத்தலை
பிறவிப் பெருங் கடனீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேராதார்

என்ற குறள்களால் அந்நெறியில் நில்லார் அடையும் ஏதம்

பலவும் கூறியருளினார் பெருநாவலர்; எனவே கற்றறிவு வாய்ந்தவர் இறை பணியே இன்ப இறுதி நிலையினை அடைவிக்குமென அறிந்து மெய்யுணர்வையடைய முயலல்வேண்டும். இம்முயற்சியே ஒருவனுக்கு எழுமையும் உதவும் கல்வியாகும். இறை பணி தவிர்த்து இறைவனை இகழ்ந்துரைத்தலை மேற்கொள்ளுவார் உலகில் காணப் படுவதோர் பேயென்று ஒதுக்கித் தள்ளுக வெனத் திருவள்ளுவர்

'உலகத்தாருண் டென்பதில்லென் பான்வையத்
தலகையா வைக்கப்படும்'

என்ற குறளின்கண் அருளிச்செய்ததைக் காண்க.

கற்றவர்களின் ஒழுக்கத்தைத் தெளிவிக்க வந்த முதற் பாவலர் கல்லாதாரின் ஒழுக்கம் யாதெனக்கூற முன்வந்ததும் நோக்கத்தக்கது. கல்லாதவர் மானிடப்பிறவியில் பயன்படாமையினை 'விலங்கொடு மக்களனையரிலங்குநூல், கற்றாரோடேனையவர்' என நாயனார் நவின்றும், கல்லாதார் கற்றவர் முன் யாதொன்றும் சொல்லாதிருத்தலே அவர்களது சீரிய ஒழுக்கமெனவும் அதனானே அவர்களை ('கல்லாதவரு நனிநல்லர்') 'நனி நல்லர்' எனவும் பொதுமறையில் அருளியிருப்பது உணரற்பாலது. இலங்குநூலைக் கற்றதனாலாய பெரும்பயனைக் கல்லாதவர் இழந்து போகின்றாராதலின், அவர்களும் பிறவியாலடையும் பெரும் பயனைப் பெறுதல் பொருட்டு, அவர்கள் கற்கக் கூடா விட்டாலும் அறிவிற் சிறந்த நல்லோராகிய மிக்கோர் சொல் பவனவற்றைக் கேட்டலாவது செய்தல் அவர்களுக்கு இன்றியமையாததெனத் திருவள்ளுவர் 'கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற், கொற்கத்தி னூற்றாந்துணை' என திருவாய் மலர்ந்தருளியதனாலும், 'கல்வி' என்ற அதிகாரத்திற்குத் தொடர்பாக 'கேள்வி'யும் வைக்கப்பட்டுள்ள வைப்பு முறையானும் நிறுத்த முறையானும் ஆசிரியர் கருத்து வெளிப்படக் கிடத்தல் அறியற்பாலது. கேள்வி கல்வியே போன்று அறிவு மட்டுமன்றி ஒழுக்கத்தையும் அளிப்பதென 'நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய, வாயினராதலரிது' என்னும் அருமைத் திருக்குறளில் குறிப்பாகத் திருவள்ளுவர் அருளியதையுங்

காண்க. இத்தகைய கேள்விச் சுவை நூல்களின் புலனின்பம் தருவதோடமையாமல் தளர்ச்சி வந்துற்றவிடத்தும் ஊற்றாந் துணையாக நின்று உள்ளத்தையும் சீர்படுத்தி உறுதி பயக்கு மாதலான் அஃதே சிறந்ததெனை மீண்டும் 'செல்வத்துட் செல் வஞ் செவிச் செல்வ மச்செல்வஞ், செல்வத்துளெல்லாந் தலை' என்ற குறளில் தேவர் அமைத்திருப்பதையும் கல்லாதவர்கேட்டு அகமகிழ்க. மற்றும் 'கேள்வி முயல்' என்றும், 'கற்றலிற் கேட் டலே நன்று' என்றும் 'கற்றதுங் கேட்டதுந் தானே' என்றும் தமிழகத்துச் சான்றோர் கூறியிருத்தலின், இவற்றைப் பொய்யில் புலவர் புகழுரையுடன் ஒப்ப நோக்கி சிந்திக்கற் பாலன. ஆகவே இழைத் துணர்ந் தீண்டிய கேள்வியர், கற்கக் கூடாவிட்டாலும், கற்றறிவின் மிக்க நல்லாரோடும் ஒழுக்க முடையராய் ஒப்பாவார் எனப்பெற்றாம்.

---

# நெடுந்தொகைக் குறும்பொருள்

திரு. வித்துவான். முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்பள்ளி, ஆரணி

(முற்றொடர்ச்சி துணர் 11, மலர் 11, பக்கம் 433)

பா. கூ. பாலை. கல்லாடனார்.

(வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.)

கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்புநுனை யேய்ப்ப அரும்பிய இருப்பைச்
செப்படர் அன்ன செங்குழை அகந்தோ

றிழுதின் அன்ன தீம்புழல் துய்வா
யுழுதுகாண் டுளைய வாகியார் கழல்
பாலி வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவி
னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்
கொடு நுண்ணோதி மகளி ரோக்கிய
தொடி மாணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோடி ரட்டுங்
குன்றுபின் னொழியப் போகியுரந் துரந்து
ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவி
னெம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா
ணோங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள்பெற நசைஇச் சென்றவென் னெஞ்சே.

பொருள்:—கொற்றொழில் பொலிவு பெற்ற கூரிய குறிய புழுகாகிய வில்லுடையோர் அம்புறுத் தூணி பெருகப் போகட்ட (மல்லிகை மொட்டு) அம்பின் முனையை ஒக்க அரும்பிய இருப்பை மரத்தின் செப்புத் தகட்டைப் போன்ற செய்ய தளிரினிடந்தோறும் நெய்யிழுது போன்ற (வெள்ளிய) இனிய துளையையுடைய துய்வாய (=பஞ்சு பொருந்திய வாயையுடைய) வாகிய பூக்கள் தாள் நீக்கிக் காணுந் துளையையுடையவாகி ஆர்க் குக் (குடுமி) கழன்று, வானினின்று விழும் ஆலி போலக் காற் றூற் சிதறிப் பவழத்தையொத்த செவந்த மேட்டு வழியிற் குருதியை மேலிற்கொண்டுள்ள நிணத்தினைச் சூழும் அருஞ்சுர

நெறிக்கண் பொருந்திய அழகிய குடிகளையுடைய சிறிய ஊரி டத்து வளர்ந்த நுண்ணிய கூந்தலையுடைய பெண்டிர் எடுத்த பூண் மாட்சிமைப்பட்ட உலக்கையாற் குத்துகின்ற (போது பாடும்) உரல் வள்ளை(ப்பாட்டானது) நெடிய பெரிய மலையிடத் துப் பேராந்தையின் குரலோடு இரட்டும் குன்று பின்னிடச் சென்று வலியாற் செலுத்திப் பகலவன் மேற்கடற்கண் மறைந் தாலும் (போதற்குரிய) ஊரானது சேய்மைக்கண்ணது என்று கருதாமல், விரைந்து செல்லுங் குதிரையைப் பின்னும்முடுக்கும் துஞ்சாச் செலவினையுடைய எம்மினும் மிக விரைந்துற்றுப், பல கட்டு மாட்சிமைப்பட்ட நல்ல மாளிகையின் ஒருபுடை நின்று, நல்ல பக்கத்தில் பல்லி சொற்படுந்தோறும் வழுத்தி, ஆன்கன்று புகும்மாலையில் நின்றவளைச்சென்றடைந்து குறுகிக்கைகவித்துக் கண்புதைத்துப் பிடி (பெண் யானை)யின் கைபோன்ற முறுக்கி முடித்த கொண்டையைத் தொட்டு வளையணிந்த கைதடவுதல் வரத்தழுவிற்றுக்கொல்? நாணத்தொடு கூடிய கற்பினையும் ஒளி பொருந்திய நுதலினையும் அழகிய இனிய சொல்லினையும் உடைய சிறிய மங்கையின் மெல்லியதோண் முயக்கத்தை அடைய விரும் பிப் போய என் உள்ளம்.

முடிவு:—நாணொடு மிடைந்த கற்பையும் வாணுதலையும் தீங்கிளவியையும் உடைய குறுமகளின் தோள்பெற நசைஇச் சென்ற என் நெஞ்சு எம்மினும் (ஊரை) மிக விரைந்து எய்திப் பின்னர் இல்லின் ஒருசிறை நிலைஇப் பரவி நின்றோளைச் சென்று எய்திக் கைகவித்துக் குறுகிக் கண்புதைத்துப் பின்னகந் தீண் டிக் கை தைவரத் தோய்ந்தன்று கொல்? என்க.

புழுகின் அப்பு என்றியைத்து இன் அல்வழிக்கண் வந்த தாகக் கொண்டு புழுகாகிய அப்பு என்க. புழுகு-குப்பி, மொட் டம்பு. தூணிவீங்க வில்லோர் பெய்த அப்பு. அப்புநுனை யேய்ப்ப அரும்பிய இருப்பைத் துய்வாய் (-பூ). இருப்பை என் பது பூ என்னும் பொருட்டாய் நின்றதுய்வாய் என்பதனோ டியையும். குழை என்பதனோடியைதலுமாம். செப்படரன்ன செங்குழை. குழையகந்தோறும் துய்வாய் (-பூ) காணப்படுதலை

புணர்த்தினர். இழுது, துய்வாயிற் கொண்டுள்ள பூவிற்கு நிறம், மென்மை முதலியவற்றால் உவமையாயிற்று.

துய்வாய் என்பது பூ என்னும் பொருளதாய் நின்று தீம் புழல் என்ற அடைகொண்டது. வண்டுகள் மூக்காலுழுது தாள் நீக்கித் துளைகாண்டலை புணர்த்துவார் 'உழுதுகாண்டுளைய வாகி' என்றார். ஆர்—ஆர்க்கு. பூக்கள் ஆர்க்கு நீங்கிச் சிதறிப் பவழம் போன்ற செம்மேட்டு வழிக்கண் தோன்றுங் காட்சி, குருதியொடுமிடைந்த நிணம்போல விளங்கும் என்றதறிந்து மகிழ்க. நண்ணியவூர் சீறூர் மகளிர் ஒக்கிய உலக்கை. உலக்கைத் தூண்டுரற்பாணி. பாணி குடிஞையோடு இரட்டுங் குன்று. குன்று ஒழியப் போகித்தரந்து ஞாயிறுபடினும் ஊர் சேய்த்து எனாது பரிதரக்குந் துஞ்சாச் செலவினையுடைய தலைவன் 'எம்' என்றது தன்மைப் பன்மை. அவ்வூரை அடைய அத்தலைவன் விரைதலினும் வல் விரைந்து எய்துதல் நெஞ்சின் றொழிலாகும். 'எய்தி' என்பவற்றுள் முன்னதுஊரையும் பின்னது தலைவியையும் நெஞ்சு சார்தலைக் குறிக்கும். பல்மாண் ஓங்கிய நல் இல்—பலகட்டு மாட்சிமைப் பட்டோங்கிய நல்ல மாளிகை. இல்லின் ஒரு சிறை நிலைஇப், பல்வி படுதொறும் பரவிக் கன்று புகும் மாலையில் நின்றோளைச் சென்று எய்திக் கவியாக் குறுகிப் புதையாப் பின்னகந் தீண்டிக் கை தைவரத் தோய்ந்தன்றுகொல்? என்க. வல்விரைந்து என மாற்றி மிக விரைந்து எனப்பொருள் கூறுக.

'வல்விரைந்து கடவு' (ஐங்குறு. 482).

நாணுங் கற்பும் உடைய மகள். நுதலுங் கிளவியுமுடைய மகள் மகளின் மென்றோளைப்பெற நசைஇச் சென்ற என் நெஞ்சு தோய்ந்தன்று கொல் என்க. எய்தி நின்றோள் என மாற்றுதல் இனிதன்று. 'பெறநசைஇ' என்றும் பாடமுளது. அதற்குப் பெறுதலை விரும்பி எனப்பொருள் கூறுக.

'கொல்வினை........அத்தம்' என்பது வழியருமையும், 'அத்தம்........குன்று' என்பது குன்றத்து நிலையும், 'குன்று............ விரைந்து' என்பது தலைவனது கடும்போக்கும், 'வல்லெய்தி........

நின்றோள்' என்பது தலைவி தலைவனையெதிர் நோக்கலும், 'எய்தி .......தோய்ந்தன்று கொல்' என்பது தலைவனது நெஞ்சிற்குள்ள விரைவும், 'நாண்........மகள்' என்பது தலைவியின் மாண்பும், 'மென்றோள்........நெஞ்சு' என்பது தலைவனது நெஞ்சு தலைவியிடம் விரைந்து போதற்கேதுவும் விளக்கி நிற்றல் காண்க. இவ்வகையில் இச்செய்யுள் தலைவன் விரைந்து சேறலையும், அவனினும் அவனது நெஞ்சுவிரைந்தோடுதலையும், அங்ஙனம் அஃது ஓடுதற்கேதுவையும், அவன் போகும் வழிக்கடுமையையும், அவ்வழிக்கண் அவ்வேளையில் அவனை அச்சுறுத்தற்பாலதொரு நிகழ்ச்சியையும், அவன் தனது நெஞ்சு தலைவியினிடமேகி யின்னது செய்திருக்குமென்றையுற்றதையும், அவளது சிறப்பையும் செயலையும் அழகுற விளக்குதல் யாவரானும் அறிந்து சாலவும் இன்புறற் பாலதாகும்.

இப்பாட்டினை ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருளதிகாரத்து நூற்று நாற்பத்தாறுவது நூற்பாவின்கண் வரூஉம் "மீட்டு வரவாய்ந்த வகையின் கண்ணும்" என்ற பகுதிக்கு உரை வகுத்த விடத்து, இரட்டுறமொழிதல், என்பதனாற் செய்வினைமுற்றி மீண்டு வருங்கால் வருந்தி நெஞ்சொடு கூறுவனவும் பிறவுங் கொள்க எனக் கூறிப், 'பிறவும்' என்றதற்குக் காட்டாக எடுத்துக் காட்டினார். இதன் ஈற்றிலுள்ள அடிகள் ஆறனையும் காட்டி 'உறுப்புடையது போலுவந்துரைத்தது' என்றார் அவர். (ஷை 196 உரை.) ஆசிரியர் பேராசிரியர் 'அறனளித் துரைத்தல்' என்பது அறக்கிழவனை அன்பு செய்தல். அது 'பாங்கர்ப்பல்லி படுதொறும் பரவிக்கன்று புகுமாலை நின்றோளெய்தி' எனவரும் என்றார். (ஷை 270. உரை) அவரே இப்பாட்டின் முதலொன்பா னடிகளையும் காட்டிப் 'பயனிலை புரிந்த வழக்கு' (ஷை. 309. உரை) என்று குறித்து, இந்நிலத்து மக்கள் அம்பினை உவமையாக்கி ஆண்டையவாகிய இருப்பையின் பூங்கொத்தை உவமிக்கப்படும் பொருளாக்கியும் உவம நிலத்திற்கேற்ற வெண்ணெய்த் திரளோடு கழன்ற பூவினை உவமஞ் செய்தும் அந்நிலத்தியல்பு கூறினமையின் அது பயனிலை புரிந்த வழக்கெனப்பட்டது என விளக்கி

யுள்ளார். (ஷை. 309. உரை) பின்னும் இதனை முழுதுங்காட்டிக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்றபொருள் தத்தம்மரபிற்றாய் வந்தன பலவுங்கண்டு கொள்க என்றார். (ஷை 392. உரை.) "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு மானோடைந்துங் கன்றெனற்குரிய" என்பதனுரைக்கண், (ஷை. 570) 'கன்றுபுகுமாலை நின்றோளெய்தி' என்று காட்டி 'ஆன்கன்று' எனக் குறித்தார் அவர்.

'இருப்பை........துய்வாய்' என்னும் பகுதியோடு 'அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத் துய்த்த வாயதுகணிலம் பரக்க' (அகம். 15) 'பொரிகாற் பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற வாலியொப்பின் தூம்புடைத்திரள் வீ..........எண்கின் இருங்கிளை கவரும் சுரம்' (ஷை 95.) என வரூஉம் பகுதியை ஒத்திடுக.

கொடு நுண்ணோதி=வளைந்த பனிச்சை.
ஒடுங் கீரோதி=சுருள் (பதிற்றுப்: 14. உரை)

'மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலை நீ வாழி பொழுது'. (குறள். 1221)

'தோற்றஞ்சால் செக்கருட் பிறைநுதியெயிறுகாற்றிசையும் நடுக்குறூஉம் மடங்கற்காலைக் கூற்று நக்கதுபோலும் உட்கு வருகடுமாலை' (கலி. 120)

'நீசெல்லின், புல்லென்மருண் மாலைப்போழ் தின்று வந்தென்னைக் கொல்லாது போதலரிதால் அதனொடியான் செல்லாது நிற்றலிலேன்' (கலி. 145)

'அகன்ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாகப், பகல்நுங்கியது போலப்படு சுடர்கல்சேர, இகல்மிகு நேமியான் நிறம்போல இருள்இவர, நிலவுக் காண்பதுபோல அணிமதி ஏர்தரக், கண்பாயல் பெற்றபோற் கணைக்கால மலர்கூம்பத், தம்புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச, முறுவல் கொள்பவை போல முகையவிழ்பு புதல்நந்தச், சிறுவெதிர்ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் திம்மெனப், பறவை தம்பார்ப் புள்ளக் கறவை தம்பதிவயிற், கன்றமர் விருப்பொடு மன்று நிறைபுகுதர,

மாவதிசேர மாலை வாள் கொளா, அந்தி அந்தணர் எதிர்கொள அயர்ந்து, செந்தீச் செவ்வழல் தொடங்க வந்ததை, வாலிழை மகளிர் உயிர்பொதி அவிழ்க்குங், காலை யாவ தறியார்,

'மாலை யென்மனார் மயங்கி யோரே' (கலி. 119.)

மாலைநீ கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்மன், நலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்கண், அலந்தவர்க் கணங்காதல் தக்கதோ நினக்கு'

'பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்,
திருந்தாத செயினல்லால் இல்லையோ நினக்கு' (கலி. 148)

'ஒன்றேயெ யிற்றதொரு பெரும்பேயுலகம் விழுங்கவங்காந்து
நின்றாற்போல நிழலுமிழ்ந்து நெடுவெண்டிங்க ளெயிறிலங்க
வின்றேகுருதி வானவாயக் காந்தென்னை விழுங்குவா
னன்றேவந்த திம்மாலை யளியேனாவி யாதாங்கொல்'(சீவக.1660)

'விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளுங் காட்டலால்
அரியவட் கனல்தரும் அந்தி மாலையாங்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினான்'
(கம்ப. மிதிலை.62)

'கூற்றங்கரந்து கொடியபுன் மாலை வடிவுகொண்டு
தோற்றுஞ் சிறுபிறைபே எயிறாகத் துறையிருந்து
தேற்றந்தரும் பெடையன்னமுஞ் சேவலுஞ் சேக்கைபுகும்
ஆற்றுந்திறம் அறிபேன் அவரோசென் றகன்றனரே'
(அம்பிகாபதிக்கோவை.164)

என்பவற்றால், மாலைக்காலம் கணவனைப்பிரிந்த மகளிர்க்கு மிக்க வருத்தஞ்செய்தலும், புணர்ந்தவர்க்கு இன்பந் தருதலும் உண்டென விளங்கும்.

ஆதலின், பிரிந்தவள் தன் நாயகனை எதிர்நோக்குங்காலம் அதுவாதல் கூறுதேபமையும். அதனை இவ்வகப்பாட்டில், 'பன் மாண்ஓங்கிய நல்இல் ஒருசிறை நிலைஇப் பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக் கன்று புகுமாலை நின்றோள்' எனக் குறித்தாள் ளமை யாலறிக.

பல்லியிசைத்தலும் மகளிர்க்கு இடக்கண் துடித்தலும் வலக்கண் துடிக்கலாதிருத்தலும் நன்னிமித்தம் என்பது உலகியல். (இதனை அகம். 88, 151, 289, 351, 387 நற்றிணை 246, 333. ஐந்திணையெழு. 41. கைந்நிலை. 18. திணைமாலை. 80. சீவக. 1909. கலி. 11. 101. முதலியவற்றில் காண்க.)

செப்படரன்ன செங்குழைப் பிண்டி எனப் பெருங்கதை (2. 14. 25) யினும் வந்துளது தொடிமாணுலக்கைத் தூண்டுரற் பாணி—உலக்கைப்பாட்டு. இஃது உரற்பாட்டு, வள்ளை, வள்ளி, வள்ளைப்பாட்டு எனவுங் கூறப்படுதலுண்டு. இதில் தலைமகனது மலை, திறம் முதலியனவும் பிறவும் வாழ்த்தப்படும். (கலி. 40. 41. 43. உரைக்குறிப்பு) 'குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளை' (தொ. பொ. 63.) 'தினைகுறு மகளிர் இசைபடு வள்ளை' (மலைபடு. 342.) 'மனையளகு வள்ளைக் குறங்கும் வளநாட' (திருவள்ளுவ மாலை. 5) 'வள்ளியோர் மனைச்சிலம்புவ மங்கல வள்ளையே' (கம்ப. நாட். 31.)

அம்பின்றுனை இருப்பை யரும்பிற் குவமை. குடிஞை = பேராந்தை. இஃது இழுகுபறையின் ஓசையைப் போன்று 'குத்திப்புதை' 'சுட்டிக்குவி' என்னும் பொருள் தோன்ற இசைக்கும் என்பர். குடிஞையைப் பற்றிப் பிறாண்டுங் கூறியிருத்தல் மேல் வருவனவற்றால் அறிக.

'உருள்துடி (உருமிடி எனவும் பாடம் உண்டு) மகுளியிற் பொருள் தெரிந்திசைக்குங், கடுங்குரற் குடிஞைய நெடும் பெருங் குன்றம்' (அகம். 19). 'உருத்தெழு குரலகுடிஞைச் சேவல், புல் சாய் விடரகம் புலம்பவரைய, கல்லெறி இசையி னிரட்டும்' (ஷை. 89). 'துடிக் குடிஞைக் குடிப்பாக் கத்து' (பொருந. 210). 'விரலூன்று படுகண் ஆகுளி கடுப்பக், குடிஞை இரட்டும் நெடு மலை'. (மலைபடு. 140—1) 'விரல் தீண்டுகின்ற முழங்குங் கண்ணை யுடைய சிறு பறையை ஒக்கப் பேராந்தை பேடும் சேவலும் மாறிக் கூப்பிடும் நெடியமலை' (ஷை நச்சினார்க்கினியர் உரை). 'கடுந்துடி, புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டும்மலை' (புறம்.170). 'அத்தக் குடிஞைத் துடிமருள் தீங்குரல்' (ஷை 370).

'குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை' (நன். சூ. 458. மயிலைநாதருரை) 'புனத்த குடிஞை யிரட்டுங் குளிர்வரை' (பழ. 246 அல்லது 375). இரட்டுதல், "படுமணியிரட்டும்..........பணைத் தாள்.......யானை" "குடிஞைப் பேடும் சேவலும் மாறிக் கூப்பிடும்" என்பனபோல்வன விடத்து வரற்பாலது. ஒலித்தல் என்ற பொருளிலும் பண்டைச் செய்யுட்களிற் பலவிடத்து வந்துளது (கபிலர். பக். 40.)

இப்பாட்டியற்றி யருளிய கல்லாடனாரைப் பற்றிப் புறநானூற்றுரைப் பதிப்பிற் பாடினோர் வரலாற்றில் மகாமகோபாத்தியாய, தாட்சிணாத்திய கலாநிதி, டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதி யிருத்தலாற் சிறிது தெரிந்து கொள்ளல்கூடும்.



# மதிப்புரை



| | | |
|---|---|---|
| 1. புதியதும் பழயதும் | } | இம்மூன்று புத்தகங்களும் Doctor. உ. வே. சாமிநாதையர் |
| 2. கனம் கிருஷ்ணையர் | | |
| 3. கோபாலகிருஷ்ண பாரதியார் | | |

அவர்களால் இயற்றப்பட்டவை. சொன்னயம், பொருணயம் மிளிர, கற்போர் இதயம் குளிர, கவின்பெற இயற்றப் பெற்றவை. பொருட்செறிவால், உயர்நோக்கால் தமிழன்பர்க்குப் புதுவிருந்தாவன.



சிந்தனைக் களஞ்சியம்:—இது சேலம் வழக்கறிஞர் திரு. R. V. இராமசுவாமி அவர்களால் இயற்றப்பெற்ற கட்டுரைத் தொகுதி. சிறந்தபொருள்களைப்பற்றி செவ்வியநடையில் எழுதியிருக்கும் கட்டுரைகள். மாணவர்க்கு மிகவும் பயன்படும்.

---

சமயங்களின் சக்கரச் சுழற்சி:—புத்தபெருமான் காசிநகரில் நிகழ்த்திய தர்மோபதேசத்தின்சாரமாகிய இப்பொருளை பிட்சு. சகதீசகாசியர் M.A , அவர்கள் The Turning of the wheel of Religions என்ற தலைப்பில் விரித்தெழுதினர். புத்தபிரானது உபதேசத்தின் நன்மைகளைத் தமிழ்மக்களும் அறிந்து பயனுறும் பெருநோக்குடன் பினங்கு, இந்திய சங்கத் தமிழ்ப் பாடசாலையின் தலைமை ஆசிரியர் திரு ஆ. மாரிமுத்து அவர்கள் தமிழில் மொழிபெயர்த்துதவிய நூலாகும். பவுத்த கருமத்தின் அடிப்படையான கொள்கைகளைச்செவ்வனம் அறிந்துகோடற்கு ஏற்ற கருவிநூல். சமயத்துறையில் நிற்போர் அனைவரும் கற்றுத் தெளிதற்கான நூல்.

---

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை



## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "ஆடி" நன்கொடை



| திங்கள் நன்கொடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, க. நடராசன் B.A., B.L., | ,, | 5 | 0 | 0 |
| ,, கே. அ. அனந்தவிசய முதலியார் | ,, | 1 | 8 | 0 |

ஆண்டு நன்கொடை

| | | | | |
|---|---|---|---|---|
| ,, அ. பழனியப்ப பிள்ளை அவர்கள் பளிகை | | 25 | 0 | 0 |
| ,, நா. லெ. பா. ஆழ்வார்சாமி நாயடு | ,, | 20 | 0 | 0 |
| ,, T. இராதாகிருட்டின நாயடு B.A., B.L., பள்ளியக்கிரகாரம், (ரூ. 5-ல் முதல் தவணை.) | ,, | 2 | 0 | 0 |



## சென்ற பேதைக்குச் செவிலியிரங்கல்

மூற்றித்த சூலத்தர் நெல்லையஞ் சாரலில் மும்மதமா
நாற்றிக்கும் புனலுக்கலை பாலையில் நாடிச் சென்று
தூற்றிக் குழலை முடிப்பவர்யார் சுட்ட பாலையெடுத்
தாற்றித் தருபவ ராரணங் கேயுன் னருகிருந்தே 81

## தனிமை பாராட்டல்

மெழுகா யுருகின்ற வன்பர்க் குள்ளார்நெல்லை வெற்பர்சொன்ன
எழுகாரும் வந்து தலைப்பட்ட தாலிங் கிரவுபகல்
ஒழுகாவெனுங் கண்களூற்றிடை யாளெமக் கொன்றுஞ்
[சொல்லாள்
முழுகாள் மயிர்முடி யாளணி யாள்முலை முத்தங்களே 82

.....................

மேலுந் தனியிப்படி வருமோ குன்றவே டர்வில்லுங்
கோலுஞ் செறியுங் குறிஞ்சியெம் மூரண்ட கோளமெல்லா
மாலுந் தொழுமா னெல்லையஞ் சாரல் வரையிற்றென்றற்
காலுந் தமிழ்மணக் குந்தமிழ் நாடன் கடிநகரே 83

## கண்கண்டு மகிழ்தல்

மைக்கடங் காக்கண்டர் நெல்லையி லேவட குன்றமென்னுந்
திக்கடங் காமுலை யைப்புதைத் தீர்தென்ற லின்றமிழின்
மெய்க்கடங் காமுனி கைப்போ தடங்கும் விரிகடல்போல்
கைக்கடங் காது குழைக்கடங் காதுங் கருங்கடலே 84

## பாலனைப் பழித்தல்

மொழிகைக்கு தன்றி யன்பர் திண் டேர்க்கு முனிவர்சொன்ன
வழிகைக்குமது கண்டிசைப் பாண மதிக்குடை யோன்
அழிகைக் கனல்விழித் தோனெல்லை மீதி லமர்பொருவேல்
இழிகைக் குலமட வார்வலைச் சேரிக் கெழுந்தருளே 85

### அருமறைச் சடங்குக் காற்றுத் தலைவர்

மோக்கக் குழையு மனிச்சமென் பூவை முகந்திருத்தி
நோக்கக் குழையும் விருந்தென்ப ரேநுரைக் கங்கைமுடி
தேக்கப் பொறுப்பவர் நெல்லையி லேயுங்கள் சிற்றிலின்சோ
றூக்கப் பொறுத்திருந் தும்பொறுப் பேனெங்ங னுறுவதே 86

### போய் பாராட்டல்

மௌவலைப் போல்நகை யார்வலத் தார்நெல்லை வாருதிநீர்
செவ்வலைக் கேசென்று தோணி துழாவிச் சிறந்ததுயர்
மெய்வலைக் கேபட்ட மீன்போலு மென்னெஞ்ச மீனுமுங்கள்
பொய்வலைக் கேபட்ட தாலது போகவும் பேர்சொலுமே 87

### செய்பணி யாதெனத் தெரிந்து வினவல்

யானைப் பகடுரித் தோர்நெல்லை நாத ரெறிகடல்வாய்
மீனைப் படுக்க வலைவிரிக் கோவெறி பட்டகரு
வூனைப் படுக்கத் திமில்மடிக் கோவுமக் கேதெண்ணம்பூந்
தேனைச் சிவக்க வருமொழி யீரென்கொல் செய்வதுவே 88

### குறியுரைத்தல்

பூகங் குதிக்கும் பொழில்நெல்லை நாதருபர் சிலம்பில்
மாகஞ் செறிவட செந்தினை மோதி மறைத்துவின்றேன்
சோகந் தவிர விழிதுளி மாரிக் துளிசொரிந்து
மேகந் தலைப்படு மேதமி யேனுரை மெய்ப்படவே 89

### நெஞ்சோடு புலம்பல்

போகஞ் செறியர னெல்லையஞ் சார லொளிருமின்ப
போகஞ் செறியும் புணர்முலை யாளுக்குப் பூங்கமலத்
தாகந் திருமனைச் செங்கைகள் காந்த ளமுதமொழி
நாகஞ் செறிபட வல்குல்கண் டாயினி நன்னெஞ்சமே 90

## போய் பாராட்டல்

வழுதிகண் டாவிக்கும் வேயில்வந் தோர்நெல்லை மால்வரைத்தே
னுழுதுவண் டர்விக்குமென்குழ லீரிமை கோட்டிச் சற்றே
பழுதுகண் டாமுன் னிடையாகச் சற்றும் படைத்திலனே
யெழுதிலுண் டாகிலுண் டாமில்லை யாகி லிடையில்லையே 91

## விழியுங்குலமும் வேறுபடுத்துக் கூறல்

வார்துணை யாய முலைக்குத் துணைபானது வாள்பசலை
நீர்துணை யாய துமக்குங்கண் காள்நெடுஞ் சூலமன்றிப்
போர்துணை யாய மழுவாளர்நெல்லைப் பொருப்பில் முன்னீர்
யார்துணை யாந்துணை யாமன்பர் போனதென் னுருயிர்க்கே 92

## கார்கண்டு கழிபடருரைத்தல்

விடஞ்சூற் கொளுங்கண்டர் நெல்லையிலே கடல் மேய்ந்துவயிற்
றிடஞ்சூற் கொளுங்கொண்டல் முற்பட்ட நால்முத்த [மீதுணையாத்
தடஞ்சூற் கொளுஞ்சங்க மேவங்க மேமுடத் தாழைச்செங்காய்க்
குடஞ்சூற் கொளும்பொழி லேயன்பர் வாய்மைக் குறிபொய்த் [த்தே 93

## என்னேயுள்ள மிசையாதென்றல்

வீழ்ந்தா தரத்துடன் மால்தொழு வோர்நெல்லை வேலைவலை
சூழ்ந்தாலு மீனுக்குந் தோணிவிட் டாலுமெய் சூட்டுமுத்துக்
காழ்ந்தாலு மாலையை நின்று கொடுத்தே யடிக்கடிமண்
டாழ்ந்தாலு மில்லைகொல் லோமட வாருக்குத் தண்ணளியே 94

## பாங்கியோடுரைத்தல்

வென்றாலுஞ் சூலத்தர் நெல்லையில் மாவில் கரியகுயில்
நின்றாலும் வெள்ளை விடிநில வாலு நினைக்கினமக்
கொன்றாலும் நல்லவே யன்பர்

.... .... .... .... 95

### மங்கையைப் பழித்தல்

வேனலந் தோயுங் கரத்தால் வருட விடலிவிந்தக்
கானலந் தோயு மெமக்கன்ப ரேகலை யால்வளைத்த
கூனலந் திங்கட் .... .... ....
பானலந் தோய்முலை காளுங்க ளோடென்ன பற்றவர்க்கே 96

### களிற்றினை விரும்பல்

வைவேல் நெடுங்கண்ணி பங்காளர் நெல்லையில் வாவியிற்பூக்
கொய்வேலை தன்னிற் கொடியிடை யீர்குஞ் சரங்குழைகொண்
டெய்வேலை யாலிவர்க் கிப்போது மிங்கினி யெய்யவில்லுங்
கைவேலும் வாளும் பெற்றலென் செய்யார்நந்தங் காதலரே 97

கண்ணூறு சாத்து மரியயன் போற்றுங் கழைமுத்தர்க்குப்
பண்ணூறுஞ் சொல்வருக் கக்கோவை தன்னைப் பரிவுடனே
வெண்ணீ றணியம்பி காபதி வீரையில் வேதியன்சொற்
றெண்ணூறு மெட்டும் படிப்பார் தமக்கில்லைத் துன்பங்களே 98

முற்றிற்று.

உ

சிவமயம்

அம்பிகாபதி இயற்றிய

# நெல்லை வருக்கக் கோவை

தஞ்சை,

தமிழ்ப்பேராசிரியர் திரு. L. உலகநாதபிள்ளையவர்களால்

பரிசோதிக்கப்பெற்றது.




வெளியீடு ௰௧.

கூட்டுறவுப் பதிப்பகம்

தஞ்சை.

1936.

# சித்தராந்தாதி

பாரடையப்பதந் திக்கடை யப்பரி வட்டந் தொங்கல்
காரடை யக்கொங்கை வெற்படை யக்கடுக் கைச்சடைக்காட்
டூரடை யப்பகி ரண்டத்தி னெல்லைவல் லிக்குகாந்த
நீரடை யத்தண் ணளிதிருக் கோயிலென் னெஞ்சகமே

(என்பது.) வல்லிக்குப் பூமிமுழுதுஞ் சிபாதம், திக்கு முழுதும் திருப்பரிவட்டம், மேக முழுதும் திருமாலை, மலை முழுதும் கொங்கை, பரந்த பகிரண்டத்தின் முடிவுமுழுதும் திருக்கொண்டைச் சடைக்காடு, உகாந்த நீரடைய..............படைத்தாகிய கருணையித் தன்மையே பெற்றதாயினும் திருக்கோயில் என்னெஞ்சகம் என்றவாறு. வல்லிக்கென்ற சொல்லை எல்லாவற்றோடுங் கூட்டுக. ஊரென்றதனைப் பரந்த சடைக்காடென்றுரைப்பினு மமையும். பாரடையப் பதமென்றார், எல்லாப் பொருளையும் விளையும் வண்ணஞ் செய்தலான். திக்கடையப் பரிவட்டமென்றார், வளையச் சூழ்ந்துகிடத்தலான். காரடையத் தொங்கலென்றார், பன்னிறம்பெற் றொழுக்கத்தினோடு குளிர்ச்சியையுடைத்தாதலான். வெற்படையக் கொங்கையென்றார், பெருமையினான். பரந்த பகிரண்டத்தினெல்லை யடையக் கடுக்கைச் சடைக்காடென்றார், பொன்னிறம் விளங்கி யளவிறந்த வந்தம் பெறுதலான். உகாந்த நீரடையத் தண்ணளியென்றார், மிகுதியோடு குளிர்ச்சியை யுடைத்தாதலான். இந்தப் பிரளையத்தைத் தண்ணளி யென்றாராகலின், ஊழித் தீயாற் பல்லுயிர்களும் வெந்து பாழ்படுவதன் முன்னம், பூமி யந்தரம் சுவர்க்கம் புதையப் பிரளயங் கோக்கும் வண்ணஞ்செய்து, பல்லுயிர்களையும் தன்னுடைய திருவடிக்கே சேர்த்திக்கொண்டு, அக்கூடு சங்காரமான பின்பு, மீட்டுந்தோற்றும் வண்ணஞ்செய்து தண்ணளி செய்யா நின்றவாறு போலுங் கருத்து. திருக்கோயி லென்னெஞ்சகமென்றார், கருவிகளிற் பரிதலின்றி பொருந்குதல் பயப்பின் என்னுடைய நெஞ்சகமே பகமாகு மென்றவாறு. அடைய

என்பதற்கு வல்விக் கவ்விடங்கட் கேற்ற செயலடுத்து நின்ற வப்பொருள்கள் உகாந்தத்தின்கண் அவ்விடங்கடோறும் அடையுமென ஒருபொருட்டோன்றியவாறு கொள்க. (1)

நெஞ்சக் கனகல்லு நெக்குரு கப்புக்கென் னுண்ணிறைந்த
வஞ்சக் கனகள்வி யேயென்னம் மேமருங் குங்குவடு
மஞ்சக் கனகனக் குந்தனத் தாய்நின் னடிக்குடைந்த
கஞ்சக் கனக மலர்சுமந் தேநின்ற காரணமே

(என்பது.) சிறிதுங் கசிவில்லாத நெஞ்சமான பாரியான கல் நெகிழ்ந்துருகும் வண்ணம் செய்து உட்புகுந் தொன்றானுங் குறைவின்றி நிறைந்த வஞ்சகத்தால் மிகுந்த கள்வியாகிய என தம்மே நின்மருங்குலு மலைகளும் அஞ்சும் வண்ணம் மிகவும் மிகவும் வளரா நின்ற தனங்களையுடையாய்! நின்னுடைய திருவடிகட்குப் பொற்றாமரைமலர் உவமையன்றித் தாழ்ந்துதானே சுமந்துகொண்ட காரணம் யாதே? அதன் கணிருத்தல்வேண்டிற்றென்றவாறு. வஞ்சகக் கள்வியென்றது, நெஞ்சத்துட் புகுந்திருத்தலானும் அம்மைதிருவடியையும் செயற்பாட்டையும் அளப்பரிதாகிய மிக்க மாயத்தினைற் கூறியவாறு. நெஞ்சக் கனகல்லை யுருக்குதலால் எனினுமமையும். பாரமாக நின்ற தென்று மருங்கு லஞ்சவும், பொர நின்றதென்று மலைகளஞ்சவும் மிகவும் வளரா நின்ற தனமென வியையும். அடிக்குடைந்தன மென்றுபாடமாயின், அடிக்குடைந்து போகிய பொற்றாமரை மலர் விரும்பிச் சுமந்து கொண்டே நின்ற வாற்றான், இதுவுமொரு காரணமாதே யென்றுரைக்க. (2)

காரண மென்னென் றறிகின் றிலங்கட லும்மலையு
மாரண மும்மகி லாண்டமு மண்டரண் டம்பொதிந்த
பூரண மும்மக முஞ்சக மும்புற மும்புறத்து
வாரண மும்பெண் பிள்ளைவிளை யாடு மணற்சிற்றிலே

(என்பது.) கடல்களும், மலைகளும், வேதங்களும், அகிலாண்டங்களும், அந்த வண்டங்களைப் பொதிந்த பேரண்ட பூரணமும், அது முதலாகிய அண்டத்தகங்களும், அவ்வண்டங்கடோறும் உளதாய எல்லாப்பொருளும், இந்தப் பேரண்டத்திற்குப் புறம்

பும், புறத்தின்கண் அதற்கடையாக நிற்கும் தெய்வயானைகளும் வாலசத்தி விளையாடுகின்ற மணற்சிற்றிலாதல் என்ன காரண மென்றறிகின்றிலம். ஏறுமகாப்பிரளைய சலதிப் பெருங்கடல் அவ்வண்டங்கட்குச் சத்த சமுத்திர மென்கின்ற கடல்களும் அவ்வண்டங்களின் மாமேரு ஏழ்குல பர்வதங்கள் சக்கரவாளகிரி என்கின்ற மலைகளும், ஈறிலின்பப்பயனாகிய இறைவன் றன்மை கூறுகின்ற நாலுவேதங்களின் ஞானபாதமாகிய ஆரணங்களும், அதலமுதலாகிய பதினாலுலகங்களையும் பொற்கோளகையாகப் பொதிந்துகொண்டது அண்டம். அண்டமென்பது முட்டை தனை யணுவாகக் கொண்டு பெருங் கடலிட்டது மிதக்கின்ற அகிலாண்டங்களும், இதில் ஓரண்டத்தின்கட் பொருந்திய முப்பத்து முக்கோடி அண்டரண்டங்களில் அவ்வண்ணமே நிறைந்த அவ்வண்டங்களனைத்தையும் அந்தப் பெருங்கடலதனை யும் உள்ளடங்கப் பொதிந்து மகாப்பிரளைய சலதியின்கண் மிதக்கின்ற பேரண்ட பூரணமும் இந்தப் பேரண்ட முதலாக அதற்குட்பட்ட பலவண்டத்தகங்களும் அவ்வகங்கடோறும் உளதாகிய பிராணனொடுங்கி மவுனமடைந்த தாவரங்கள் முத லாக அற்ப சீவனூ யூர்வன ஈறாக எண்பத்து நான்கு நூறாயிர மாகி ஒன்றுக்கொன்று பேதித்து வேறுபட்ட சகாறும், அந்தப் பேரண்டத்திற்குட்படாத அகண்டப்பெருவெளியாகியபுறமும், அப்புறத்தின்கண் இந்த வண்டத்திற் கடையாகச்செய்த கம்பத் தின்கண் நிற்கின்றதெய்வவாரணங்களும் இங்ஙனம் முதலாகிய எல்லாப்பொருளும் வாலசத்தி விளையாடுகின்ற மணற்சிற்றிலாத லான், மேற் பேரிற் கண்ணாவாடல் எத்தன்மையாகவற்றோ இதென்ன காரணமென்னென்றறிகின்றிலம் என்றதிசயப்பட்ட வாறுபோலுங் கருத்து. (3)

சிற்றிடைக் கொல்கி நுடங்குந் திருவயிற் றொளொருத்தி
பெற்றெடுக் குந்திறற் பிள்ளைகள் மூவரம் மூவரையுங்
கற்றிடச் சொன்ன தொழிலொரு மூன்றவ ரிற்கடைக்காற்
செற்றிடச் சொன்னபின் ளைக்கவ ளேயம்மை தேவியுமே.

(என்பது.) ஒல்கிய நுடங்குகின்ற சிறிதாகிய இடைக் கிடைந்த திருவுதரத்தையுடையாள் ஒருத்தி பெற்றெடுத்த திறலினை



உ


# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௰உ | தாது, புரட்டாசி | மலர் ௬ |
|---|---|---|


உ

## திருவிளையாடற் புராண வாராய்ச்சி

E. R. நரசிம்ம ஐயங்கார் அவர்கள் B.A., B.L., சேலம்.

திருவிளையாடற் புராணமெனப் பெயரிய நூல்களிரண்டனுள் பெரும்பற்றப்புலியூர் நம்பியார் இயற்றிய நூலொன்றே ஆராயப்பட்டதாகும். புறச்சான்றின் ஆதரவைக்கொண்டு இந்நூல் தொன்மை வாய்ந்ததெனப் புலவர் திலகம் டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் சாற்றினர். இதனால் மற்றை நூலாகிய பரஞ்சோதி முனிவர் இயற்றியநூல் பிற்பட்டதெனப் பெறப்படாதாயினும் அறிஞரனைவரும் இதனை மிகவும் பிற்பட்டதெனவே கருதுவர். இக்கருத்துடையார் சான்று ஒன்றும் பகரவில்லை. இவ்விரு நூல்களினும் அகச்சான்றுகள் ஒன்றும் இன்றென்பதே அறிஞர்களனைவரும் ஒப்ப முடிந்ததொரு கொள்கை

யாகும். அன்றியும் இவ்விரு நூல்களின் காலமும் வரையறுத்துக் கூறப்படவில்லை. இந்நூல்களில் அகச்சான்றுகள் உளவென்பதையும் அவற்றால் இவ்விரு நூல்களின் காலங்களை வரையறுத்துக் கூற வியலுமென்பதையும் ஈண்டுக் காட்ட முயலுவாம்.

பெரும்பற்றப் புலியூர் நம்பியார் இயற்றியுள்ள புராணம் எட்டிலே குடிபுகுந்து கரந்துறைந்து இறந்தொழியுங் கருவாயிலிருந்தது. இதனை டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் அரிதிற்றேடி எடுத்து ஓரிய குறிப்புரையும் வரைந்து, அச்சுவாகனமேற்றி என்றும் பொன்றாப்புகழைப் படைத்துக்கொண்டனர். இலக்கியங்களைத் துருவியாராய்ந்து ஓரின்றியமையா ஆராய்ச்சி புரையையும் இப்பெருந்தகையார் தந்துள்ளதற்குத் தமிழுலகு என்றும் சடப்பாடுடையதாகும். நான்மாடக் கூடலான திருவிளையாடலில் மதுரை மாநகருக்கு மாடக் குளக்கீழ் என்னும் ஓர் அடைகொடுத்துப் புலவர் கூறியுள்ளார்.

கொண்மூ மாடங்கள் கூடலின் மீறியு
நண்ணி நீள்கடங் கொள்ளா நகரிதன்
மண்ணின் மாடக் குளக்கீழ் மதுரையென்
றெண்ணில் காலத் திலங்கிய தெங்கணும்

என்னும் செய்யுளில் கூறப்பட்ட மாடக் குளக்கீழ் மதுரை என்பதின் காரணத்தை ஆராய்வாம். இலக்கியங்களில் திருமருதப் பெருந்துறை, குடகூடல், நான்மாடக்கூடல் முதலிய பெயர்கள் மதுரையின் மறுபெயர்களாக வழங்கப்பட்டுள்ளன. இப்புலவர் தமது நூலில் திருவிளையாடல்கள் நிகழ்ந்த ஊர், நாடு, மலை முதலியவற்றைக் குறிக்கும்போது அவற்றினுக்கோர் அழகூட்டிக் கூறும் திறமை வாய்ந்தவர் என்பதை அறிஞர் அறிவர். இச்செய்யுளிலும் புலவர் பெருமான் மதுரை நகரின் மேலொரு கற்பனையையேற்றிக் கூறப்புகுந்தனரோவென்னும் ஆசங்கைக்குச் சாசனச் சான்றுகள் இடங்கொடா. இப்பெயர் பாண்டிய மன்னர் சாசனங்களில் காணப்படுங் குறிப்பால் பாண்டிய மன்னர் காலங்களை வரையறுப்பதற்கு இப்பெயரை ஓர் கருவியாக திரு. நீலகண்டசாஸ்திரியாரவர்கள் தமது பாண்டிய சரித்

திரத்தில் கொண்டுள்ளார். இச்செய்யுளை இப்பேராசிரியர் அறிந்தவராயின் இந்நூல் 13-ம் நூற்றூண்டிற்கு முன்னதாகு மென்று கூறியிருக்கமாட்டார் என்பது திண்ணம். ஆயினும் இப்பேராசிரியர் நம்பியார் புராணம் 13-ம் நூண்ருண்டிற்கும் முற்பட்டதெனக் கூறியுள்ளது அறியாது கூறினராகல்வேண்டும். இப்பெயர் தோன்றியதன் காரணம் அறியவியலாதென்று இப் பேராசிரியர் கூறிவிட்டாரேனும் இப்பெயர் தோன்றிய கார ணத்தை அக்கால அரசியல்நிலை யொருவாறுணர்த்துவதைக் காட்டுவாம்.

பாண்டிய மன்னர் இருவர் தம்முட் பகை பாராட்டி பன் னிரண்டாம் நூற்றூண்டினிடைக்காலம் முதல் இறுதி வரை யிலும் கடும்போர் புரிந்து வந்தனர். இருவரும் வெற்றியும் தோல்வியும் மாறிமாறி யடைந்துவந்தனர். இக்கொடியபோரின் நிகழ்ச்சிகளையறிந்த சோழநாட்டிலுள்ளாரும் திடுக்கிட்டு நடுங் கும்படியாக விருந்ததெனக் காஞ்சீபுரத்துக்கடுத்த ஆரம்பாக் கத்துச் சாசனம் புகலுவதைக் காண்க. (சோழ சரித்திரம் பக்கம் 40). இப்போர் கொங்கு நாட்டிலும் பரவியிருந்ததென் பதற்குச்சான்ருக கொங்கு மன்னனொருவன் கொழுமங்கொண்ட சோழன் என்னும் பட்டத்தை பூண்டுள்ளதைக் காண்க. இம் மன்னன் குலசேகர பாண்டியனுக்கு மாமன் என்று கூறிக் கொள்ளுகிறுன். இக்கொடும்போர் நிகழுங்காலையில் மதுரை நகரும் தகர்ப்புண்டது போலும். இப்போர் முடிவுற்றது கி. பி. 1190 ஆண்டின்முன் என்னலாம். இப்போரில் வெற்றி யடைந்த மற்ருெரு குலசேகரன் அரியணை யேறினுன். இவன் காலம் முதல் நாடு அமைதி பெற்றது. இவ்வரசன் மதுரைமா நகரைப் புதிப்பித்தான், என்னலாம். மதுரை நகர் புதியவிடத் தில் அமைக்கப்பட்டதென்பதற்கு ஐயரவர்கள் "மாநகரி என்பது மதுரைக்கு வடகிழக்கிலுள்ளது; பாண்டிய மன்னர் களுடைய அரண்மனை முதலியன இருந்தவிடம்" என்றும் "பழ மதுரை இஃது இப்போதுள்ள மதுரைப் பதிக்குக் கிழக்கே யிருந்ததாகத் தெரிகின்றது" பழமதுரைமேடென்ற ஓரிடமும் பழமதுரைமுனியென்ற ஓர் முனியின் கோயிலும் அங்கே

யுண்டு என்றும் கூறியுள்ளதோர் சான்றாகும். இஃதன்றியும் இக்காலம் முதல் அரசன் திருவோலக்க மண்டபம் "புகழாபரணன் மண்டபம்" எனவும் வழங்கியுளதால் இம்மண்டபம் ஓர் குறுநில மன்னனால் கட்டப்பட்டு அவன் பெயரும் இடப்பட்டுள்ளதென்பதை யறியலாகும். மதுரைமாநகர் அமைக்கப் பட்டபோது ஓர் புதிய குளந்தொட்டு அதனருகே அரசன் கோயிலும் அமைக்கப்பட்டது போலும். இதனை யக்கால மன்னர் வெற்றிக் குறிகுறியாக தமது சாசனங்களில் கூறிக் கொண்டாரெனலாம். புலவர் இவ்வகையோர் நிகழ்ச்சியைத் தமது நூலினும் குறித்தார்போலும். இச்சிறப்பைப் புலவர் சிறிது விரித்துக் கூறாதது நமது துர்ப்பாக்கியமாகும். இப் பெயர் புலவர் திகழ்ந்த பலவாண்டுகளுக்கு முன்னமே எழுந்த தென்பதை உபசாரமாக "எண்ணில் காலத் திலங்கிய தெங் கணும்" என்று கூறினாரவர்.

இனி இப்பெயர் காணப்படும் சிலசாசனங்களைக் கூறுவாம். திருநெல்வேலி தாலுக்கா சுத்தமல்லி பென்னூரில் உள்ள முதல் சடாவர்மகுலசேகரன் ஆட்சியில் 14ம்ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் (459-1909) அரசன் மாடக் குளக்கீழ் மதுரையில் புகழா பரணன் என்னும் கூடத்தில் வீற்றிருந்தபோது ஓர் நிலம் தானமாகக் கொடுத்ததாகக் கூறப்பட்டுளது. புகழா பரணன் என்பது ஓர் குறுநிலமன்னன் பெயராகும். இவ்வரசனுக்கு இம் மன்னன் இன்றியமையாத் துணைவனாயிருந்தான்போலும். இவ் வரசன் கி. பி. 1190 முதல் 1216 வரையில் ஆட்சி புரிந்தா னாகலின் கல்வெட்டு கி. பி. 1204ல் பொறிக்கப் பட்டதாகும்.

ஸ்ரீவில்லிப்புத்தூர் தாலுக்கா புதுப்பாளையம் என்னும் ஊரில் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் 11-ம் ஆண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் (504—1909) திருவாரூர் கோளகைமடத்து ஈசான தேவருக்கு சில நிலங்கள் அளிக்கப் பட்டதாகக் கூறப்பட்டுளது. அக்காலத்தில் மன்னன் மாடக்குளக்கிழ் மதுரையில் மழவராயன் என்னும் சிங்காதனத் தில் வீற்றிருந்ததாகத் தெரிகிறது. இங்கு மழவராயன் என் னும் பெயர் ஓர் குறுநில மன்னனைக் குறிக்கும். இவ்வரசன்

கி. பி. 1216 முதல் 1239 வரையில் செங்கோலோச்சினனாதலின் கல்வெட்டு கி. பி. 1227ல் பொறிக்கப்பட்டதாகும்.

இப்பாண்டிய மன்னரின் முன்னோர் காலத்துச் சாசனங்களில் இப்பெயர் வந்திலது. எனவே இப்பெயர் ஆட்சிக்கு வந்தது 13ம் நூற்றாண்டின் தொடக்கத்திலென்னலாம். நம்பியார் தமது காலத்திற்கு பலவாண்டுகள் முன்னரே இப்பெயர் எழுந்ததென்று கூறியுள்ளாராதலின், புலவர் பெருமான் 13ம் நூற்றாண்டிறுதியில் திகழ்ந்தவரெனக் கூறலாகும். இக்கருத்து வேறு சாசனங்களால் வலியுறுவதைக் காட்டுவாம்.

திருப்புல்லாணியில் உள்ள முதல் மாறவர்மன் குலசேகரன் ஆட்சியில் 36-ம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் (131—1908) அரசனுடைய அதிகாரிகளில் ஒருவனான வள்ளுவநாடாள்வான் பெரும்பற்றுப்புலியூர் நம்பியாருக்கு அளிக்கப்பட்ட நிலங்களைக் கவர்ந்து கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. இம்மன்னன் கி.பி. 1268முதல் 1306 வரையில் ஆட்சிபுரிந்தானாதலின் இக்கல்வெட்டின் காலம் 1304ம் ஆண்டாகும். இம்மன்னன் ஆட்சியில் திருப்புத்தூரிலுள்ள மற்றோர் கல்வெட்டில் அவ்வூர் சிவபிரான் கோயிலுக்குப் பெரும்பற்றபுலியூர் நம்பியார் நிலம் தானம் செய்ததாகக் காணப்படும். இவ்விரு கல்வெட்டுகளிலும் குறிக்கப்பட்ட பெயர் நம் புலவரைச் சுட்டியதாகுமென்பது இழுக்காகாது. எனவே நம்புலவர் 13ம் நூற்றாண்டின் இறுதியிலும் 14ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இருந்தவர் என்பது தோற்றமாம்.

மதுரைத் திருப்பணி மாலையிலும் மதுரைக் கோயிலொழுகிலும் கூறப்பட்ட ஆனந்ததாண்டவ நம்பியார் கி. பி. 1228க்கு முன்னரிருந்தவராவர். நமது புலவர் இந்நூற்றாண்டிறுதியில் திகழ்ந்தவராவர். இவர்களுக்கிடையில் 60 ஆண்டுகள் சென்றிருத்தல் வேண்டுமென்பது வெளிப்படை. நம் புலவர் ஆனந்த தாண்டவநம்பிகளுக்கு பெயரனவரெனக் கொள்வதே பொருத்தமானதாகும். திரு.உ.வே. சுவாமினாதஐயரவர்கள் நம்புலவர் 13ம் நூற்றாண்டிற்கு முற்பட்டவரென்று கூறியது உத்தேசத்தின் பேரில் என்பது நன்கு விளங்குதல் காண்க.

பரஞ்சோதி முனிவர் நூலும் 16-ம், 17-ம் நூற்றாண்டி லிருந்த வீமநாத பண்டிதராலும் புகழப்பட்டிருத்தலே, கடம்ப வனபுராணத்தின் அவையடக்கத்தில்,

"திருந்துபுகழ்ப் பரஞ்சோதி மாமுனிவன்
சிவனருளாற் செப்பு மெண்ணெண்
பொருந்திவளர் திருவிளையா டற்புராணமுமிருக்க"

என்றும் கூறியுள்ளதால் அறியலாகும். பரஞ்சோதிமுனிவர் நூல் கற்பனைத்திறமும் அணியழகும் நாடகச் சுவைகளு மொருங்கே யமையப் பெற்றுத் திகழ்வதால் திருவிளையாடற் புராணங்களில் தலை சிறந்து விளங்குவதாய் திருவிளையாடற் புராணம் என்னும் அடையில்லாச் சிறப்பெய்தியதாகும். இந் நூல் காவிய விலக்கணங்கள் அமையப் பெற்றதாகும். காவிய விலக்கணங்களுக்குக் கம்பநாடரை இப்புலவர் பின் பற்றினு ரென்பதற்குப் பல சான்றுகள் கூறவியலும்.

இதனையறியாத சிலவாராய்ச்சியாளர் பரஞ்சோதி முனிவர் நூலில் பொய் மிடையப் பெற்றுளதென்று கூறுவர். இப் புலவர் பெருமான் தமது நூல் வளம்பெறுவதற்கு இலக்கணக் குறிப்புக்களை ஆட்சி கொண்டுள்ளது ஓர் புதிய உபாயமாகும்.

"பாயதொன் மரப்பறவை போற்பயன் கொள்வான் பதினெண்
தேய மாந்தருங் கிளந்த சொற்றிரட்சித் தான்றாய
மாயை காரிய வொலியன்றி வான்முதற் கருவி
ருப காரிய வோசையேயாக் கிடந்த தன்றே"

என்னும் செய்யுளின் பின்னிரண்டடிகளில் "மொழி முதற் காரணமா மணுத்திரளொலி, எழுத்து முதற் சார்பென விரு வகைத்தே" என்னும் நன்னூலார் சூத்திரத்தை விளக்கி யுள்ளது காண்க. இவ்வாறே இப்புலவர் இலக்கணக் குறிப் புக்களை பலவிடத்து ஆண்டுள்ளாராதலின் இவர் ஆண்டுள்ள இலக்கணக் குறிப்புக்களே இவர் நூலின்காலம் அறிவதற்குத் துணையாகும். சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலியோர் கருத்துக்கள் புலவர் நூலில் காணப்படாவாதலின் இப்புலவர் முன் கூறிய உரையாசிரியர்களுக்கு முற்பட்டவ ரென்பதைக் காட்டுவாம்.

இசைவாது வென்ற படலத்தில்,

இருமை யும்பெறு கற்பினு ளியம்புவாள் கலத்தின்
வரும ரும்பெறற் கல்வியு வாதின்மே லூக்கப்
பெருமை யும்பலர் விரும்புறு பெண்மையின் செருக்குந்
திரும கன்சடை யறிய வாய் திறக்க வேண்டாவோ''

என்னும் செய்யுளில் பாணன் மனைவி இசைவாதுக்கு வந்த ஈழத்து விறலியை "கலத்தின் வருமரும் பெறற் கல்வி" என்ற தால் அவள் பரத்தைமையை குறிப்பிக்கின்றவழகு இன்புறற் பாலது. இங்குக் கூறிய கருத்தாவது கற்பிற் சேர்ந்த பெண் பாலார் கலத்தின்மீது போதல் தகாதென்பதும் இவ்விலக்கை மீறிப் போவது பரத்தையர்க்குரியதாகும் என்பதுமாம். நச்சி னார்க்கினியர் "முந்நீர் வழக்க மகடூவோ டில்லை" என்னும் சூத்திரத்தில், முந்நீர் என்பதற்கு "ஓதலும் தூதும் பொருளு மாகிய மூன்று நீர்மை" என்று பொருள் கூறியுள்ளார். பரஞ் சோதியார் நச்சினார்க்கினியருக்குப் பிற்காலத்தவராயின் இவர் கருத்தைத் தழுவியிருக்கக் கூடும். முந்நீர் வழக்கம் என்பதற்கு கடலின்மேல் செல்லுதல் என இளம்பூரணர் கருத்தையும் நாற் கவிராச நம்பி கருத்தையும் பின்பற்றி இப்புலவர் கற்புக்குரிய மங்கையர் கடலைக் கடந்தேகுதல் தகாதெனப் பொருள் விரித் துரைத்தாராவர். மற்றும் இப்புலவர் சிறுபொழுது ஐவகைத் தாகுமென்னும் கொள்கையுடையவர். இதனை,

"ஆண்டினோ டயனம் பருவந் திங்களா றிரண்டிருபக்க
மீண்டு மைப் பொழுதியோ கங்கள் கரணங்கள்''

என்னும் திருமணப்படலம் 88-ம் செய்யுளில் கூறியுள்ளது காண்க. நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் இலக்கண விளக்க வாசிரியர் முதலியோர் சிறுபொழுது அறுவகைத்தாகும் என்னும் கருத்துடையவராவர். புலவர் பிற்காலத்தவராயின் இவ்வாசிரியர்கள் கருத்தைத் தழுவாத காரணமென்னை? தமிழ் விடுதூதுகாரரும் அறு வகைத்தெனக் கொண்டவரென்பர். எனவே நச்சினார்க்கினியர் முதலிய பிற்கால வாசிரியர்களுக்கும் பரஞ் சோதியார் முற்பட்டவ ராவரென்க. சிறுபொழுது

ஐவகைத் தாகுமென்று அகப்பொருள் விளக்க வாசிரியரான நாற் கவிராச நம்பிகள் கூறியுள்ள

"மாலை யாமம் வைகறை எற்படு
காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்
கைவகை சிறுபொழு தைவகைத் தாகும்"

என்னும் சூத்திரத்தின் கருத்தையே பரஞ்சோதியார் பின் பற்றினரென்பதை யறிக. நாற் கவிராச நம்பிகள் 12-ம் நூற் றாண்டிலிருந்தவராவர். இவ்வாசிரியர்க்கு வைகுறுவிடியல் ஒரே பொழுதாகும். இதனைச் சிறப்பித்து பரஞ்சோதியார்

"சங்கவான் றமிழ்த் தெய்வப் புலவோரு முடனெழுந்து [சைலவேந்தன்
மங்கைநா யகன்போன வழிபோயங் கிருந்தா ரவ்வழி [நாள்வைகற்
கங்குல்வாய் புலரவரும் வைகறையிற் பள்ளியுணர் காலத் [தெய்தி
யங்கணு பகனடியார் சேவிப்பா ரிலிங்க வுருவங் காணர்"
(இடைக்காடன் பின் போன படலம் செய். 12.)

என வைகறையை விரித்துக் கூறியுள்ளார். இனிப் புலவர் தொல்காப்பிய வுரையாசிரியரான பேராசிரியருக்கு முற்பட்டவ ரென்பதற்கு, பன்றிக் குட்டிக்குத் தாயான படலத்தில் பன்றி யின் பெண்பாற்கு பேடு, பெடை உரியதாமெனக்கொண்டு "பின் றுணையாய பெடைத் தனியேனம்" எனவும் "திறனவில் பேட்டை விளிப்பது" எனவும் (45-46 செய்) கூறியுள்ளது ஓர் சான்றாகும். பன்றியின் பெண்பாற்கு,

"பன்றி புல்வாய் நாயென மூன்று
மொன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை"

என்னும் சிறப்புச் சூத்திரத்தில் கூறப்பட்ட பிணவென்னும் பெயரை இப்புலவர் இப்படலத்தில் ஒருமுறையேனும் கூறாதது நோக்கத்தக்கது. தொல்காப்பியம், மரபியலில்

"ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை
பெட்டை யென்னும் பெயர்க் கொடைக்குரிய" எனவும்

"புள்ளு முரிய வப்பெயர்க் கென்ப" எனவும்

"பேடையும் பெடையும் நாடி னென்றும்" எனவும்

வரும் சூத்திரவுரைகளில் பேடும் பெடையும் பெரும் பான்மை புள்ளிற்கு வழங்குமெனவும் பெட்டை என்பது புள்ளிற்கு சிறு பான்மை வழங்குமெனவும் பேராசிரியர் கூறினர். பேராசிரியர் பேடும் பெடையும் விலங்குகளுக்கு வழங்குமெனக்கூறிணரில்லை. பேராசிரியர் உரையே சிறந்ததாகும். நம் புலவர் புள்ளிற்கு வழங்கும் பெயரை பன்றிக்கு வழங்கியதால் இளம்பூரணர் உரையைத் தழுவியும் விரித்துரைத்தாரெனக்கொள்ளவேண்டும். இளம்பூரணர் மூன்றும் சூத்திரத்தில் "நாடின்" என்றதால் பேடும் பெடையும், முதல் சூத்திரத்தில் குறித்த ஒட்டகம் முதலிய விலங்குகளுக்கும் உரியதாகுமென வுரைத்தார். நம் புலவர் விலங்குகளுக்கெல்லாம் இவ்விரு பெயரும் உரியவாகு மெனக் கூறிணராகல்வேண்டும். புலவர் பேராசிரியர் கருத் தைத் தழுவவில்லை யாதலின் பேராசிரியருக்கு முற்பட்டவ ராவர். பேராசிரியர் 14-ம் நூற்றுண்டில் திகழ்ந்தவராவர். எனவே பரஞ்சோதியார் 14-ம் நூற்றுண்டிற்கு முற்பட்டவராவ ரெனலாம். (தொடரும்.)

---

# திருக்குறளுதலிய நெறிமுறை

திரு. K. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B.A., B.L., தஞ்சை

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 5, பக்கம் 182)

இத்தகைய நூலறிவோடும் கேள்வியறிவோடும் நுண்ணறிவு வாய்க்கப் பெற்றவர்கள், தாம் எண்ணிய கருமங்களை எண்ணிய வாறே திண்ணியராய் முடிக்கும் ஆற்றலுடையர். கல்வி யறிவே எத்தகைய முயற்சியும் நன்கு நடைபெறுதற்கு சிறந்த சாதனமா யிருத்தலான் அவ்வறிவே ஒருவனுக்கு ஊக்கம் ஊட்டி சலிப் பின்றிச் செய்யும் மன உறுதியினை பயக்கவல்லது. இவ்வாறு

மனவெழுச்சி யுடையானிடமே செல்வம் திரண்டு செல்லும்; விதியின் வழி அவ்வாக்கம் இழந்துபோனாலும் அதனால்விளையும் வருத்தத்தினால், மனவெழுச்சியுடையவர் மனஞ் சுழன்று தளரார். ஓர் தொழிலை இயற்றுவதற்கு முன் ஒருவர் அதனைப் பல்வகையானும் ஆராய்ந்து தெளிந்து பின்னர் துணிந்து மடியின்று முயன்று முடிக்கவேண்டும். 'எண்ணித் துணிக கருமந் துணிந்தபின், எண்ணுவ மென்பதிழுக்கு' என்பது பொய்யாமொழி. இவ்வாறு எண்ணித் துணிந்து ஓர் தொழிலினைச் செய்யின் அவன் தான் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றுவானென்ற உண்மையினை தெய்வப் புலவர் 'எண்ணிய வெண்ணியாங் கெய்துபவெண்ணியார், திண்ணியராகப்பெறின்' என்ற குறளால் தெளியப் படுத்துகின்றார். தன் எண்ணத்தை நிறைவேற்றும் மனவெழுச்சியில்லான் மடியின்பால் மடிந்து தன் குடியையுமிழந்து பல்பெருங் குற்றங்களுக்கு ஆளாகுவன்; எனவே தாம் பிறந்த குடியை நற்குடி யாக்கவேண்டுமென ஒருவனுக்கு எண்ணமுளதேல் அவன் மடியினை அடியோடு அழிக்க முயலவேண்டும். 'மடியை மடியா வொழுகல் குடியைக், குடியாக வேண்டுபவர்' என்பது திருக்குறள். எளிதே பெறத்தகும் நன்மைகள் தனக்கெதிராக யிருந்தும், முயற்சியின்மையால் மடியுற்று அவைகளைப் பெறாதே யிருப்பவன் யாதொரு பயனும் அடையான்; ஊழினாலே ஒன்றுமடைவதற்கிடமில்லாதிருந்தாலும் மன உறுதி யுடையான் தன் தளராத முயற்சியினால் அவ்வூழையுங்கடந்து விதியை ஊக்கத்தால்வெல்வான்; இஃதே திருவள்ளுவர் கருத்தென்பதை 'ஊழையு முப்பக்கங் காண்பருலை வின்றித், தாழா துஞற்றுபவர்' என்ற குறளால் நன்குணரலாகும். விதிவலிதென 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்' என்றறிவிக்கப் பட்டதனான், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையராகிய நாம் யாதும் ஊழே என்றிராது முயற்சியைக் கைவிடல் நீதமாகாது. முயற்சி ஒன்றினாலேயே எதையும் பெறுதல் கூடுமென நம் பெருநாவலர்

முயற்சி திருவினையாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்

தெய்வத் தானுகாதெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலிதரும்

எனப் புகன்றிருப்பது புலப்படும். ஊழையிலழிந்திய பாண்டிலைக் கடா தன் வருத்தத்தையும் பாராது மனங்கலங்காதே மாருரங் கொண்டிழுப்பதே போன்று மக்கள் தாமியற்றும் தொழிலை ஆராய்ந்து எவ்வாற்ருனும் தளராது முயன்ருராகில் செயற் கரிய செயல்கள் யாவும் எளிதே அடையப்பெறுவர்; இவ்வாறில் லாது உள்ளவெறுக்கையாகிய உரம்அற்று ஒழுகுபவர்மரங்களுக் கொப்பாவர்எனவள்ளுவர்கூறியிருப்பது ஈண்டுநோக்கத்தக்கது.

நன் முயற்சியுடையார் ஒவ்வொருவரும் தம்மைப்பற்றிய அறியாமையினை கல்வி யறிவானே நீக்கி, தாம் துவங்கிய நன் முயற்சியை முடிக்க இடனறிந்தும் காலமறிந்தும் தெளிந்து தம்மெண்ணத்தை நிறைவேற்றுவார். காலங் கருதி ஓர் தொழிலினை முடித்தற்கு அதற்குரிய சாதனங்களால், ஒருவன் தன் வலியை நோக்கி இடத்தொடு பொருந்த அத் தொழிலைத் தெரிந்து செய்யின், அவனுக்கு அருவினையென்ப தொன்றுளதோ? அஃதில்லையானதால், நாம் காலங்கருதி இடனறிந்து எடுத்த காரியத்தை முடித்தற்கு முற்படவேண்டு வது அவசியமாதல் காண்க.

இத்தகைய நன்முயற்சி யுடையராயும், அடக்க முடைய ராயும் நடுநிலை தவருதவராயும், நல்லொழுக்க முடையராயும் அறனின்று இல்வாழ்பவர் நல்லகுடிப்பிறந்தாராவர். நிலத்தின தியல்பை அதன்கண் முளைத்த முளைகாட்டுதல் போன்று நற் குலத்தினதியல்பை அக்குலத்திற் பிறந்த மக்களது குணம் காட்டிவிடுமாதலான் நற்குடியிற் பிறந்தார், நலம் வேண்டி ஒழுக்கமும், வாய்மையும், நாணும் ஆகிய இம் மூன்றிடத்தே வழுவாது, யாவரிடத்தும் இன்முகங்கொண்டு இகழாமை நீக்கி இன்சொல் புகன்றும், இனியவை செய்தும், வறியார்க்கு எஞ்ஞான்றும் இல்லையெனமாட்டாராய், ('இலனென்னுமெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணேயுள') ஈகைக் குணம் வாய்ந்து, யாவரிடத்தும் சலம்பற்றிச் சால்பில செய்

யாது, பெருமை, பெருமிதமின்மையென வோர்ந்து தாழ்வென்னும் தன்மையின் இயலுக் கிணங்க பணிதலாகிய அணியைக் கொண்டு இளிவரின் வாழாத மானமுடையராய் யார்மாட்டும் பண்புடையராயும் ஒழுகிவாழ்வார். மானமாக குற்றமிலனாய் தன்னிலைமையிற்றாழாது குடிசெய்து வாழ்வான், தன்குடியினது பெருமையினை ஆள்வினையானும் ஆன்ற வறிவானும் மேல் மேலாகப் பெருக்கி வளர்த்து இல்லறம் பொருளளவிற் கேற்ப செய்ய வேண்டும். பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை யென வள்ளுவர் கூறியதன் நோக்கம் யாதெனின் பொருளானது பொருளல்லாதவரையும் ஓர்பொருளாகச் செய்யுமாதலானென அறிக. அப்பொருளில்லாரையும் யாவரும் எள்ளுவர். களவாடாது திறனறிந்து நல்வழியான் வரும்பொருள் அறமும் இன்பமும் பயக்குமாதலால் அத்தகைய பொருள் இல்லறம் வழாது நடத்தற் குரிய பெரும் பொருளாகும். அப்பொருளை ஈட்டுதலும் அதற்கேற்ற கருவிகளை ஆக்கிக்கொள்வதும் மக்கள் தம் வாழ்க்கைக்கு உறுதுணை ஆகவே அறன்நின்று பொருளை சம்பாதிப்போர் நிலந்தரும் பொருளைக்கொண்டு முயற்சியின் பயனாகத் தங்கட்கு இன்றி யமையாதன வற்றைச் செய்து கொள்ளும் திறனுடையரா யிருத்தல்வேண்டும்.

மக்கள் தொழின்முறையில் கொள்ளத்தகும் முயற்சிகள் பலவற்றுள் தலைசிறந்து நிற்கும் தகைமை வாய்ந்தது உழவுத் தொழிலேயாதலின், அத்தொழிலை உலைவிலாஉழைப்புக்கொண்டு செழுமையுறச் செய்யின் அஃது பொருள் வளத்தைப் பெருக்கும். இத்தொழிலின் செல்வத்தைக் கருதியே திருவள்ளுவதேவர், உலகம் சுழன்றும் அஃது ஏர்ப்பின்னதேயென வெண்ணி வேளாண்மை கொண்ட தாளாளரே பிறர் தொழும்பு பூண்டு வாழாதவர் என்று 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந், தொழுதுண்டு பின் செல்பவர்' என்ற குறளால் விளங்க வைத்து வேளாண்மையே மற்றெல்லாத் தொழில்களினும் சிறந்ததென அறிவுறுத்தினர். ஊழினாலே வறுமையடைந்து பொருளற்றார், இவ்வுழவுத்தொழிலைக்கைக்கொள்ளின் பின்னொரு காலத்தில் அவர் செல்வத்தினால் பொலிய, பொருளாதாரமாகிய

தொழிலின் வளத்தினைப் பெருக்கும் இருபெரு சாதனங்களைக் கூறி அவர்களுக்கும் நாயனுர் அறிவுறுத்தியது நோக்கத்தக்கது. அவ்விரு சாதனங்களைப்பின்வரும் குறட்பாக்கள் நன்கு விளக்குதல் காண்க.

தொடிப் புழுதிகஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண் டாது சாலப்படும்,
ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி,
னீரினு நன்றதன் காப்பு.

எனவே வறுமையினை யகற்றும் நற்பணி வேளாண்மையே யெனப் பெற்றும். இதனை 'இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி, னிலமென்னு நல்லாணகும்' என்ற குறளில் நாயனுர் நயம் ஆழ்ந்து நோக்கி, பொருந்திய வாக்கால் அருளிச்செய்தது இன்புறத் தக்கதாகும்.

உழவுத்தொழிலால் விளைபொருள்கள் பெருகியவழி வாணிகம் இன்றியமையாததென வெண்ணி வாணிக வாழ்க்கையை மேம்படுத்த அவ்வாணிகர் கையாள வேண்டிய சிறந்த ஒழுக்கங்களைத் திருவள்ளுவர் கூறிப்போந்தார். வாணிகர்கள் வாய்மையினின்றும் வழுவாது பிறர் பொருளையும் தம் பொருளைப் போல்பேணி வாணிபம் செய்தல் வேண்டுமென 'வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப், பிறவுந் தமபோற் செயின்' எனவும் அவ்வாறு தொழில் மேல் மனஞ்செல்லுங் காலத்து அத்தொழிலான் ஊதியம் அழிவதும், ஆவதும், என இன்னோரன்னவைகளை ஆய்ந்து அத்தொழிலைச் செய்யவேண்டுமென 'அழிவதூஉ மாவதூஉ மாகிவழி பயக்கு, மூதியமுஞ் சூழ்ந்து செயல்,' எனவும் திருவள்ளுவர் அருளிச் செய்தது அறியத் தக்கது; 'முதலிலார்க்கு ஊதியமில்லை' என, பெரியாரைத் துணைகோடல் எனும் அதிகாரத்தில் கூறியிருப்பதனுல்' வணிகர்கள் தம் தொழிலை செவ்வனே செய்ய முதல் வேண்டுமெனவும் அதனுல் ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினையை மேற்கொள்ளக் கூடாதெனவும், அவ்வணிக மக்களுக்கு தெய்வப் புலவர் அறிவுறுத்தியது பாராட்டற் பாலதாகும்.

இதுகாறும் அறம் போற்றும் இல் வாழ்க்கைக்குரிய நற்குணம், நற்செயல் முதலானவற்றை ஆய்ந்தும் இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டேயெனவும் கண்டு தெளிந்தோமாதலின், அவ்வினிய வாழ்க்கைக்கு இடையூறாகிய இருமனப் பெண்டிர், கள்களவுகள், பெண்வழிச் சேறல், நன்றியில் செல்வம், இரவு இரவச்சம் முதலியவற்றையும் காண்குவம்.

மதிநலத்தின் மாண்ட அறிவினர் தம் மனைவியைத் துறந்து பிறர் நலம் வேண்டும் பொது மகளிரது புன்னலம் விரும்பி பொழுகுதல் தகாது; அவர்கள் அன்புபற்றி விரும்பாது பொருள்பற்றி விழையும் பண்பின் மகளிராதல்பற்றி, அருட் பொருளறியும் அறிவினர் அவர்களைச் சேரார். புரையிலாது அவர்கள் பொருட் பெண்டிரோடு முயங்கிச் சேர்ந்தால், உருவும் திருவும் கெட்டழிவார், எனவே இருமனப் பெண்டிரது வலைக் குட்பட்டொழுகுவது இனிய வாழ்க்கைக்கு இடையூறுபடுத்தலான் அதனைக் கடியப்பட்டது காண்க.

இருமனப் பெண்டிரது காதலால்வரும் தீங்கினை அறிந்த பின்னர் கட்காதலும் களவும் இனிய இல் வாழ்வுடையானுக்கு எவ்வாறு துன்பப் பெருக்கைத் தருகின்றதென்பதை ஒரு சிறிதே கவனிப்பாம். கள்ளுண்பார் மனமொழி மெய்கள் தன் வசப்படாது சோர்வையடைதலானும், அறிவும் மடம் படுதலையுமுடைத்தாய காரணங்களானும், கள்ளுண்டலும் கடியப் பட்டவாறு காண்க. களவும், அதனை விரும்பினோர்க்கு சிறுமை பலசெய்து அவரதொளியையும் ஒழுக்கத்தையும் ஒழித்து கல்வி நலத்தையும் செல்வ நலத்தையும் தடைத்து, மெய்யல்லாதன வைகளை ஓர் பொருளாக மேற்கொளப்பண்ணி அவரது சீரை அழிக்குமாதலான், அக்களவும் நல்வாழ்வினை விரும்பும் அறிவுடையோர் வேண்டற்க. களவுடல் பாவத் தொழிலாதலான் அஃது அத்தொழிலைக் கைக்கொண்டானுக்கு என்றும் உதவி செய்யுமென்று எண்ணுவது முறையாகுமோ! 'ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ, னன்றெய்தி வாழ்வதோ ராறு' என்பது திருவள்ளுவப்பயன். ஆகவே இதுகாறுங்

கூறியவாற்ருன் 'இருமனப்பெண்டிருங்கள்ளுங் கவறுந் திரு நீக்கப்பட்டார் தொடர்பு' என அறியப்பெற்ரும்.

இல்வாழ்க்கை நிலைக்கு கற்புடைய மனையாளுடன் நன்னெறிக்கண் நின்று அறத்தினைப் புரிதல் சாலவும் விரும்பத் தக்கதென அறியப் பெற்ரேமெனின், இன்பங்காரணமாக, தம் மனையாளை விரும்பி அவள் வழி நடப்பவர் மாண் பயனெய் தாரென அறநூல் புகலும்; அவ்வாறு மனையாளை அஞ்சி அவள் வழி நடந்து எவல் செய்தொழுகும் மறுமையிலாளன் நாணுற்று ஆக்கங்கெட்டு தொழிலையாளுந் தன்மையிலானும், நட்டார் குறையை இனிது முடிக்கமாட்டானும் பெண் சேர்ந்தாம் பேதைமையி லழுந்தி அறவினையுமான்ற பொருளும் பிறவினையு மில்லாது கெடுவன்; எனவே திருவள்ளுவர் உயர்ந்தோர் பலரும் ஒழுகியவழி பெண்வழிச் சேறலல்லவென இகழ்ந்ததை மக்கள் யாவரும் சிந்தையைத் தெளிவித்துக் கருதற்பாலதே.

பொது நலம்பேணும் பெருந்தகை வாய்ந்து அறனின்று வாழ்வார் யாவரிடத்தும் அன்புடையராய் தம்மிடமுள்ள பொருளை இல்லாத வறியார்க்கு 'இலனென்னுமெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணேயுள' என நாயனர் அருளியபடி இல்லையென மாட்டாராய் அவர் துயர்களைவர் என முன்னரே விளங்க வைத்தோம். இனி பொருளொன்றினுல் யாவுமுண்டாகுமெனக் கருதி அம்மயக்கத்தினுல் கொடுப்பதூஉ. மின்றியும் தாமும் துய்ப்பதூஉமின்றியும் தக்கார்க்கு ஒன்று ஈதலியல்பிலானுய் வாழ்பவன் இதுகாறும் கூறிவந்த இனிய வாழ்க்கைக்கு இடையூருக நிற்பான். ஏனெனின் 'அறிவினு னுருவதுண்டோ பிறிதினேய், தந்நோய் போற் போற்ருக் கடை' என்ற திருக்குறளின்படி பிறர் வறுமைத் துன்பத்தை தனதென வெண்ணி அவர் துன்பத்தை துடைப்பது அறிவுடை மக்கள் கடமையாயிருக்க, அதனைச் சிறிதும் நினையாமலும், அவர் துயர் களையாதும் நடப்பவர், பொருளுடையராயிருந்தாலும் அவர் 'தோற்றம் நிலக்குப்பொறை'யென எளிதிலடக்கி திருவள்ளுவர் கூறியிருப்பது அறியத்தக்கது. பொருளீட்டமிவறி புகழையும் வேண்டாது அறன் நோக்காது பாடுபட்டுத்தேடி

வைத்தபொருள் பிறர் கொள்வாராதலின், அதனைப்பெற்ற ஞான்றே வறியார்க்கு வழங்காதும் தானும் அனுபவியாமலும் உலோபஞ்செய்து மறுபிறப்பினிலே மயக்கத்தானிறைந்த பேய்ப் பிறப்படைவதனால், அவர் தாம்பெற்ற பொருளினால் எய்தும் பயன் யாதுளது?

வறுமையைப்போல் துன்பம் இவ்வுலகில் யாதுமில்லை, 'நல் குரவென்னு மிடும்பையுட் பல்குரைத், துன்பங்கள் சென்று படும்' என்றதனானே வறுமையென்று சொல்லப்படும் துன்பம் ஒன்றினுள்ளே பலவாகிய துன்பங்களும் தோற்றா நிற்கும், எனவே நல்கூர்ந்தாரை அவர் தம் இல்லாளும் வேண்டாள்; ஈன்றதாயும் அவரை ஏறெடுத்தும் பாராள்; நற்பொருளினை நன் குணர்ந்து சொல்லும் அவன் வாய்ச்சொல்லும் சோர்வுபடும்; ஆகையால் வறுமைகாரணமாக வறியார் புகழுடனே மானத்தை நிறுத்துதலை வேண்டாதவராய் அதனைத் துறந்து குறைபிரந்து நிற்குங்காலத்து அவரது வறுமையால் வரும் இடும்பை பொரு ளுதவியால் துடைக்க முன் வருபவர் அவர் பால் இரக்கங் கொண்டு கரப்பில்லா நெஞ்சினையுடையராய் அவரை இகழாதும் எள்ளாதும் மகிழ்ந்து பொருள் கொடுத்துதவுதல் வேண்டுமென இல்லறத்திலொழுகும் நல்லொழுக்கம் வாய்ந்தார்க்கு திருவள்ளு வர் பணித்துள்ளாரன்றோ! ஒளிக்காமற் கொடுப்பவர் இவ் வையகத்தே இருக்கின்றபடியினால் இரப்பவர் வறுமைக் காரண மாக பிறர் பால் சென்றிரந்து உயிர் வாழ்தல் நவையென அறிவுடைப் பெரியார் இகழுதல் இழுக்கென திருவள்ளுவர் கூறியருளியது அறியற்பாற்று.

(தொடரும்.)

# மகாபலிபுரத்தின் பண்டையப் பெயர்

திரு. C. M. இராமச்சந்திரசெட்டியார் அவர்கள் B.A., B.L.,
வழக்கறிஞர், கோயமுத்தூர்.

H. ஹீராஸ் என்ற ஆசிரியர் பல்லவர்கள் சரித்திரத்தைப் பற்றி எழுதின நூலில் மகாபலிபுரத்தைப்பற்றி சில அபிப்பிராயங்கள் கூறியிருக்கின்றார். மகாபலிபுரம் பல்லவர்கள் ஆட்சிக்கு முந்தியே ஏற்பட்டதென்றும் அக்காலத்தில் அதற்குத் தலசயனம் என்ற பெயர் இருந்ததென்றும் அவர் ஊகிக்கின்றார். அதற்கு அவர் கூறும் காரணம் என்னவெனில் நந்திவர்மன் பல்லவமல்லன் காலத்திலிருந்த வைஷ்ணவ சமயத்து ஆழ்வாரான திருமங்கையாழ்வார் அவ்வூரை "கடல்மல்லைத்தலசயனம்" என்கிறார். அவ்வார்த்தைகளுக்குப் பொருள் "தலசயனம் என்ற பெயர்பெற்ற கடற்கரையில் மலை" என்று ஹீராஸ் சொல்லுகிறார். நரசிம்மவர்மன் மகாமல்லனால் அழகு செய்யப்பட்டபின் அவ்வூருக்கு மாமல்லபுரம் என்றபெயர் ஏற்பட்டிருந்தபோதிலும் அதற்குமுந்தி அவ்வூருக்கு தலசயனம் என்ற பெயரே இருந்திருக்கவேண்டும் என்கின்றார்.

ஹீராஸ் ஆசிரியர் சொல்லும் அபிப்பிராயத்தைச் சிறிது ஆராய்வோம். நரசிம்மவர்மன் மாமல்லனால் கட்டப்பட்டதினாலே இவ்வூருக்குத் தலசயனம் என்ற பெயர் வந்ததென்பது நாளதுவரை சரித்திராசிரியர்கள் அபிப்பிராயமாகும். ஹீராஸ் துரை அவர்கள் இவ்வூர் நரசிம்மவர்மனுக்கு முந்தியேயிருந்ததென்றும் அவன் தகப்பன் மகேந்திரவர்மன் சில குகை ஆலயங்களைச் செதுக்கினன் என்றும் சொல்லுகிறார். இதுசரியே.

ஆனால் அவ்வூர் பல்லவர்களுக்கு முந்தியேயிருந்ததென்று சொல்லி அதற்கு அக்காலத்தில் தலசயனம் என்ற பெயர் இருந்ததென்றுகூறி அதற்குத் திருமங்கையாழ்வாரது பெரிய திருமொழியை ஆதாரமாகக் கூறினது வியக்கத்தக்கதே. அவ்வாறு கூறியதில் "கடல்மல்லைத் தலசயனம்" என்ற பதங்களுக்கு "தலசயனம் எனப் பெயர்பெற்ற கடல் அருகில்மலை"

என்ற பொருள் கொள்ளுகிறார். தமிழ் மொழியில் இப்பொருள் ஏற்படாது. மல்லை என்ற வார்த்தைக்கு மலை என்ற பொருள் இல்லை. திருமங்கையாழ்வாரது சொற்களுக்கு "கடற்கரையிலுள்ள மலையின்கண் உள்ள தலசயனம் என்ற கோயில்" என்ற பொருள் ஏற்படும். தமிழ் மொழியின் பொருள் அறியாது அவ்வாசிரியர் கூறினர் போலும். தமிழ் இலக்கணமும் அவ்வாசிரியர் கூற்றுக்கு இடந்தராது. சைவ வைஷ்ணவ கிரந்தங்களிலும் கல்வெட்டுகளிலும் கிடைக்கக் கூடிய மேற்கோள்களை ஆராய்ந்து பார்த்தால் ஊர்ப்பெயரும் ஆலயப்பெயரும் சேர்த்துச் சொல்லுவது அக்காலத்து வழக்கு எனத்தெரியவரும். சில உதாரணங்கள் கூறுவோம்.

## சைவம்.

| பெயர்கள். | ஊர்ப்பெயர். | ஆலயப்பெயர். |
|---|---|---|
| புலியூர்ச்சிற்றம்பலம் | புலியூர் | சிற்றம்பலம் |
| கருவூர்ப்பசுபதீஸ்வரம் | கருவூர் | பசுபதீஸ்வரம் |
| தஞ்சைராஜராஜேஜஸ்வரம் | தஞ்சை | ராஜராஜேஜஸ்வரம் |
| வெண்ணைநல்லூர்அருள்துறை | வெண்ணைநல்லூர் | அருள்துறை |
| குடந்தைக்காரோணம் | குடந்தை | காரோணம் |

## வைஷ்ணவம்.

| | | |
|---|---|---|
| திருவரங்கம்பெரியகோயில் | திருவரங்கம் | பெரியகோயில் |
| தஞ்சைமாமணிகோயில் | தஞ்சை | மாமணிகோயில் |
| தில்லைத்திருச்சித்திரக்கூடம் | தில்லை | திருச்சித்திரக்கூடம் |
| காழிசீராமவிண்ணகரம் | காழி | சீராமவிண்ணகரம் |
| கச்சிஅத்திகிரி | கச்சி | அத்திகிரி |
| நந்திபுரவிண்ணகரம் | நந்திபுரம் | விண்ணகரம் |

அதைப்போலவே:—

திருக்கடல்மல்லைத்தலசயனம் திருக்கடல்மல்லை தலசயனம்

## கல்வெட்டு.

| | | |
|---|---|---|
| தஞ்சைராஜராஜேஸ்வரம் | தஞ்சை | ராஜராஜேஸ்வரம் |
| கச்சிராஜசிம்மேஸ்வரம் | கச்சி | ராஜசிம்மேஸ்வரம் |

அதைப்போலவே:—

| | | |
|---|---|---|
| மல்லைஜலசயனம் | மல்லை | ஜலசயனம் |

மேற்கூறிய உதாரணங்களால் மல்லை என்பது ஊர்பெயரும் தலசயனம் என்பது ஆலயப் பெயருமாக இருக்கவேண்டு மென்பது அறியலாம். மாமல்லபுரத்தில் பல ஆலயங்கள் உண்டு. அவைகளில் வைஷ்ணவ ஆலயங்கள் இரண்டு முக்கிய மானவை. இவ்விரண்டிலும் திருமால் பள்ளிகொண்ட நிலைமை (சயனம்)யில் இருக்கிறார். அவைகளில் ஒரு ஆலயம் நிலத்தி லும் மற்றொன்று கடலிலும் உண்டு. நிலத்தில் இருப்பதற்குத் தலசயனம் என்றும் கடலில் இருப்பதற்கு ஜலசயனம் என்றும் பெயர்கள் ஏற்பட்டன. நந்திவர்மன் பல்லவவர்மன் காலத்தில் இருந்த திருமங்கை ஆழ்வார் தலசயனப் பெருமாளைக் குறித்து பதிகம் பாடியிருக்கின்றார். இத்தலத்தைப் பற்றிப் பெரிய திருமொழியில் இரண்டு பதிகங்கள் உண்டு. முதலில் மகுடமாக,

"கண்டதுநான் கடன்மல்லைத் தலசயனத்தே"

என்றும் இரண்டாவதில்,

"கடன்மல்லைத் தலசயனம்"

என்றும் கூறுகின்றார்.

தலசயனத்திற்கு எதிரிடையாக கடற்கரையிலுள்ள நீரால் மோதப்பட்ட ஆலயம் ஜலசயனம் எனப்பட்டது. இவ்வாலயத் துக் கல்வெட்டுகளில்,

மாமல்ல புரத்து ஜலசயன தேவர் (S. I. I. Vol. I No. 40)

மாமல்ல புரத்து நகரத்துளோமும்—இன்னகரத்து
ஜலசயனத்து...பள்ளிகொண்டருளிய தேவரும்,
(S. I. I. Vol. I No. 41)

என்று கூறப்பட்டுள்ளன. ஜலசயன பெருமாள்கோயில் நரசிம்மவர்மன் ராஜசிம்மனால் கட்டப்பட்டது. தம்நூலில் ஹீராஸ் ஆசிரியர் தலசயனப் பெருமாள் கோயில் ஒன்று மாமல்லபுரத்தில் இருப்பதாகவும் ஒத்துக்கொள்ளுகிறார். ஆகவே நரசிம்மன் காலத்தில் ஜலசயனத்துக்கு எதிரிடையாக தலசயனம் இருந்திருக்க வேண்டும். ஆகவே அப்பெயர் அவ்வூரின் பழைய பெயராக இருக்கமுடியாது.

மேலும் திருமங்கையாழ்வார் இத்தலத்தைப்பற்றி வேறு இடங்களில் கூறும்போது தலசயனம என்றபெயர் இல்லாமல் கடல்மல்லை என்று மாத்திரம் கூறுகின்றார். உதாரணங்கள்:

"கடன் மல்லையுட் கிடந்தாய்—" திருவாலி III—5
"கடன் மல்லைக்கிடந்த கரும்பே—" திருநறையூர் VII—1
"கச்சி, பேர்மல்லை" திருக்குறுந்தாண்டகம்—19
"காரார் கடந்தை, கடிகை, கடன்மல்லை"—சிறியதிருமடல் 73
"மன்னும் கடன்மல்லை மாயவனை"—பெரிய திருமடல்—120

அவருக்குமுன் அவதரித்த பூதத்தாழ்வார் தம் இயற்பாவில் தாம் அவதரித்த நகராகிய மல்லையை,

"வேலை தமருள்ளும் மாமல்லை"—இயற்பா 270

என்கிறார். இம்மேற்கோள்களினால் இவ்வூருக்கு கடல்மல்லை, மல்லை, மாமல்லை, என்ற பெயர்களே இருந்தன என அறியலாம்.

மேலும் வீரராஜேந்திர சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்றில் (S. I. I. Vol. I. No. 42) இவ்வூரின் பெயர் "திருக்கடன் மல்லை" என்றே கண்டிருக்கின்றது.

மேலும் குலோத்துங்கச் சோழன் அனபாயர் காலத்து மந்திரியாயிருந்த சேக்கிழார் பெருமான் இநநகரை தொண்டை

நாட்டில் குறுஞ்சித்திணையும் நெய்தற்றிணையும் விரவியதற்கு ஒரு உதாரணமாக எடுத்துக்காட்டி அதன்பெயரை மாமல்லை என்றே கூறுகிறார். அவ்வடிகள்,

"நீடு நெய்தலும் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடுமீன் கொடி மாடமா மல்லையே அனைய"

பெரிய புராணம்—திருக்குறிப்பு சே. 41. ஆகும்.

திரு P. T. ஸ்ரீனிவாசய்யங்கார் அவர்கள் மல்லையின் பண்டைப் பெயர் மாவிலங்கை என்கிறார். இதற்கு ஆதாரம் புறநானூறு என்கிறார். ஆனால் அந்நூலில் அக்கூற்றிற்கு ஆதாரம் காணவில்லை.

மாமல்லபுரத்துக் கடற்கரையிலுள்ள ஜலசயனப் பெருமாள் கோயிலில் பள்ளிகொண்ட தேவரோடு க்ஷத்திரிய சிம்ஹ பல்லவேஸ்வரரும், ராஜசிம்ஹ பல்லவேஸ்வரரும் எழுந்தருளி யிருப்பதாக அவ்வாலயத்துக் கல்வெட்டொன்று கூறுகிறது. இவ்விரு தேவர்களும் சிவ மூர்த்தங்கள். திருமாலோடு சிவபெருமானும் எழுந்தருளி யிருப்பதாக திருமங்கை ஆழ்வார் தம் பாசுரத்தில் குறித்திருப்பது நோக்கத்தக்க ஒரு குறிப்பாகும். ஆகவே மாமல்ல புரத்திற்குப் பண்டையப் பெயர் எது இருந்தபோதிலும் தலைசயனம் என்ற பெயராக அது இருக்காது என்பது திண்ணம்.

# காலவாராய்ச்சி

கோமான். ம. வி. இராகவன், வித்துவான்
ஔவைத்தமிழகம், திருவத்திபுரம்

## I

காலவாராய்ச்சி யென்பது பொதுவாகக் காலம் பற்றிப் பலவகையா னாராயப்படும் ஆராய்ச்சிகளையும் குறிக்குமெனினும் ஈண்டு, அது, பண்டைப் பெருமக்கள் வாழ்ந்த காலத்தைப் பற்றிய வாராய்ச்சியையே குறிப்ப தென்க. காலம் என்று தோன்றிற்று, அன்றே அதுபற்றிய ஆராய்ச்சியும் உடன் தோன்றிற்றாகலான், நம்மனோரான் இதுபோது மேற்கொள்ளப் பட்டமை கொண்டு அதற்குப் புதுமை கற்பித்தல் சாலாதாம். காலத்தின் முற்பட்டதோன் றின்மையின், காலவாராய்ச்சியும் தன்னின் முற்பட்ட தொன்றில்லாத் தொன்மைவாய்ந்தது. பிறவகையாற் காலம் பற்றிய வாராய்ச்சி பண்டைக்காலத்து வழக்கிலிருந்தமை யக்காலத்துப் பனுவற்களானும், அவற்றின் உரைகளானும் உணரக் கிடத்தலின், மக்கள் காலம்பற்றிய ஆராய்ச்சித்துறை அவர்களானறியப் படாத தொன்றென்றல் அமைவதின்று. மக்கட்குப் பெரிதும் பயன் படுவனவே புரிதற் கோட்பாட்டின ராகலான், இத்துறையாற் பின்வருவாரெய்த லாவதொரு பயனின் றென்னுங் கருத்துடைய ராகலானும், காலத்தாற் பெருமை சிறுமை கோடலியல்பின ரல்லராக லானும், அன்னார், அறிந்து வைத்தும் அத்துறைமேற் சேற லொழிவாராயினர். இக்கருத்தினராகலா னன்றே வரலாறு வரைந்து வைக்கும் வழக்கையும் வரைந்தொழுகிப் போவாரா யினதூஉ மென்க.

இக்கருத்தினராய், பெருமக்கள் காலத்தையும் அக்காலத் தில் அவர்களானும் பிறரானும் நிகழ்ந்த அரிய நிகழ்ச்சிகளையும் பிறவற்றையும் விளங்க வரைந்து வைத்தில ரேனும், சிறு பான்மை காலம்பற்றிய சிறுகுறிப்புகள் குறித்து வைக்கும்

வழக்குடையரா யிருந்தமை பெறப்படுகின்றது. இது சாசன காலத்தில் மிகுதியும் வழக்கிலிருந்ததாதல் நன்கு அறியப்படுவ தொன்று. பண்டைச் சாசனங்களிற் காணப்பெறும் காலக் குறிப்பும் அவற்றிற் குரியார் அரசு நிலை யெய்திய இத்தனை யாவதியாண்டில் இன்னது நிகழ்ந்தது என்னுந் துணையல்லது, அவர் வாழ்ந்த காலம் இஃதெனத் திட்டமாகத் துணிந்து கோடற்குப் போதிய வகையில் குறிக்கப் பட்டிலது. இது சாசனப் பயிற்சி யுடையார் நன்கறிந்ததொரு செய்தியாகும்.

இங்ஙனம் நம்முன்னோரானொருதலையாகக் கொள்ளப்படாத அக்காலவாராய்ச்சித்துறை, கால வேறுபாட்டானும், மேனாட்டு மக்களோடு மேவிக்கலந்து பயிறலுற்றமையின்பயனாகவும், இது போது நம்மனோர்க்கு மிகவும் இன்றியமையாததொன்றாயிற்று. பண்டைக்காலத்து நம்முன்னோரின் பலதிறப்பட்டநிலைகளையும் அறிதலவாவா னூக்கலுற்ற யாம், அவை யறிதற்குற்ற கருவி யாகிய பண்டை நூல்களையும், உரைகளையும் ஆக்கிய ஆசிரியன் மாருடைய காலத்தைக் கண்டு நிறுவக் கடவோமாயினோம். ஆகவே நூற்பயிற்சியும், அஃகியகன்ற அறிவொட்பமும், ஆராய்ச்சித் திட்பமும், மனத்தூய்மையும், மடிவின்மையு முத லாகப்பலவும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற சான்றோர் பலர் அத் துறை மேற்சென்று முயறலுருவாராயினர். அங்ஙனம் முயற லுற்ற அவர்கள், போதிய தக்கசாதனங்களின்மையாலும், கற் பனைவழக்குக்களானும், நூலாசிரியன்மாரும்,உரையாசிரியன்மா ரும் செய்துவைத்துள்ள மயக்கத்தானும் ஒரு முடிவு கூறலாற் றாது, குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சி புக்கமான் போல வும் இடையிடர்ப்பட்டுத் தடையுற்றுத் தியங்குதல் காண்டும். உரியநெறி நின்று அரிது முயலுவார்க்கே இவ்வாறிடர்ப்பாடுள தெனின், நெறி பிறழ்ந்து முயலுவார் நிலை கூறல் வேண்டா.

நிற்க, பண்டை நூல்களுக்குள்ள பழையவுரைகளைக் கருவி யாகக் கொண்டு காலவாராய்ச்சி செய்வதனால் உண்மை காண் டல் ஒருகாலு மியலாது. அது நேரிய முறையும் அன்றாம். அதனாற்றான், ஆராய்ச்சி நெறியிற்றுறை போய நிறையறிஞரும்

அம்முறை மேற்கோடல் தவிர்ந்தொழுகு வாராயினர்; தவி ராது முயன்றோரும் முடிவு கண்டிலர்; கண்டுகூறினோர் முடிபும் பின்னர் மறுத்தற் குரித்தாதலன்றி நிறுத்தற் கேலாமை கழி தல் காண்டும். அந்நெறியில் உண்மை துணியக் கூடாவாறு அத்துணை யிடர்ப்பாடுகள் மலிந்துள. நிறைந்த புலமையும் செறிந்த நூற்பயிற்சியும், தெளிந்த தூயமனமும், கூர்த்த மதி நுட்பமும், சீர்த்த செப்பமும் ஒட்பமும் அமைதியும் பிற தகுதியுமுடையராயின் ஒருகால் அந்நெறியிற் சென்று உண்மை காண்டல் கூடலாம்.

## II

அங்ஙனமாக, திரு. E. R. நரசிம்மையங்கார் அவர்கள், சில பொருள் பற்றித் தாம் ஆராய்ந்துகண்ட உண்மைகளை, நமது "பொழில்" வாயிலாக வெளியிட்டு வருகின்றமை பொழிலன்பர் அறிவர். சென்ற யுவ, புரட்டாசி, ஐப்பசித்திங்கள் இதழ்களில், "உரையாசிரியர் ஒருவர், பேராசிரியர் பலர்" என்ற தலைப்பின்கீழ், அவ்விருவரேயன்றிப் பிறவுரையாசிரியர்களைப் பற்றியும் விரிவான ஆராய்ச்சிக் கட்டுரை யொன்று அவரான் வெளியிடப் பெற்றிருத்தல் அன்பர் அறிந்ததொன்று. அதன்கண் அவர் உண்மை காணச் செய்திருக்கும் முயற்சி பாராட்டற் பால தொன்றாயினும், அவர், ஆராய்ச்சிநெறிக்குறிய நேரியமுறையை விடுத்து, நெறியல்லா நெறிமேற் கொண்டு, சிலவற்றை ஏதுவும் எடுத்துக் காட்டும் இன்றியே துணிந்து விதித்தும், சிலவற்றை இயைபில்லாதனவும், கொண்ட கோளைச் சாதித்தற்குப் போதிய வலியில்லனவும், தன்கோளையே மறுக்கத் தக்கனவு மான குற்றம்படத்தக்க ஏதுக்களாற் றுணிந்து நிறுத்தியும் முடிபு கூறியுள்ளனர். ஒருவர் ஒருபொருளின் மெய்ம்மைப் பொய்ம்மை நிலைகளைக் கண்டறிதற்குச் செய்யும் ஆராய்ச்சிக் கண் குற்றமுள்ளன காணப்பெறின், அவை உளவாதற்குரிய ஏதுக்களை இயன்றமட்டில் துருவிக்கண்டு, அவற்றின் வன்மை மென்மைகளைச் சீர்தூக்கி நோக்கி, அவற்றிற்குத்தகக் கொள்ளு வதும் தள்ளுவதும் செய்தற்குரியரேயன்றி, தனக்குக் குற்ற முளதெனத் தோன்றிய வத்துணையானே, ஏது முதலியன

காணாது பிறிதொரு முடிபு வகுத்தற்குரிய ரல்லரென்பதும், அங்ஙனம் வகுப்பரேல் அது பெரும்பாலும் தவறாய் முடிதல் ஒருதலையென்பதும் முதலிய ஆராய்ச்சி விதிகட்குமாறாக, அவர் ஆராய்ச்சி செய்யப் பெற்றுள்ளது. ஆராய்ச்சிநூல்கள் ஒவ்வொன்றும், அவற்றைப் படிப்போரொவ்வொருவரையும் பிற்காலத்தில் மொழிக்கு ஆக்கந் தேடும் தனிப்பெருமகனுக்குதற் கேற்ற முறையில் அமைந்திருத்தல் வேண்டுமாக, அங்ஙனமன்றி, அவ்வாராய்ச்சி, படிப்போர்க்குப் பொய்ப்பொருளை மெய்ப்பொருளாகக் காட்டி மயங்க வைப்பதாக விருத்தலின், அதனைப் படிப்பார், தாம் காண்பனவற்றைக் காணுமாறே கொள்ளாது, தம் உண்மையறிவான் ஓர்ந்துணர்தல் வேண்டி, அவ்வாராய்ச்சி யுரைபற்றி மீண்டுச் சிறிது ஆராயப்பெறுகின்றது.

முதற்கண், உரையாசிரியர் ஒருவரா? இருவரா? என்பது பற்றி ஆராயப்புகுந்த திரு. ஐயங்காரவர்கள், இருவர் என்போரால் ஏதுவாகக் காட்டப்படுவதும், சேனாவரையரால், உரையாசிரியராற் கூறப்பட்டதாகக் கூறி மறுக்கப்பட்டுள்ள பகுதிகளுள் இது போது வெளிவந்துள்ள இளம்பூரணர் உரையிற் காணப்படாதனவற்று ளொன்றுமாகிய "நஞ்சுண்டான் சாம்" என்பது ஒருபாற்குரிய சொல்லாயினும், நஞ்சுண்டாள் சாவள், நஞ்சுண்டார் சாவர், நஞ்சுண்டதுசாம், நஞ்சுண்டனசாம், என ஏனைப்பாற்கு முரித்தாம் அச்சொல்லென இப்பொருளுணர்த்துகின்றது இச்சூத்திரம் என்றாரால் உரையாசிரியர் எனின்" (தொல். சொல் சே. 161) என்னும் பகுதியைக் காட்டி, இப்பகுதி இளம்பூரணர் உரைப்பதிப்பில் காணப்படவில்லையாயினும் அவராற் கூறப்பட்டதேயென நிறுவுவார்; இம்மறுப்புக் குரியவுரை நேமிநாதவுரையிற் (சொல். 65) காணப்படுகிறது. முற்கூறிய நேமிநாதவுரைகாரர் இளம்பூரண அடிகளுக்கு அணுகிய காலத்திருந்தவராதலினாலும், முந்திய ஆசிரியர் கருத்தையும் உதாரணங்களையும் தழுவுவது உரையாசிரியர்களின் பெருவழக்காதலாலும் 'நஞ்சுண்டான்சாம்' என்னும் உதாரணம் காட்டியவர் இளம்பூரண அடிக

ளாவரெனக்கோடல் அமையும். அடிகள் உரையில் இவ்வுதா ரணம் காணப்படாததற்குக் காரணம் எழுத்தாளர் செய்த பிழையாகும்" என்கின்றனர்.

இதன்கண் திரு. ஐயங்காரவர்கள் காட்டும் ஏது: நேமிநாத வுரையில் நஞ்சுண்டான்சாம் என்றவுதாரணம் காட்டப்பட்டிருத் தல். அதனாற் சாதிப்பது: ஆசிரியர் சேனாவரையரான் அவ் வுதாரணம் காட்டியவராகக் கூறப்படும் உரையாசிரியர் இளம் பூரணவடிகளே யாவரென்பது. இச்சாதன சாத்தியங்கட்குள்ள இயைபு: முந்திய ஆசிரியர்களின் கருத்தையும் உதாரணங் களையும் தழுவுதலாகிய உரையாசிரியர்களின் வழக்கு.

இவர் கொண்ட இவ்வியைபைபபற்றி நோக்கின் இளம்பூரண வடிகட்குக் காலத்தான் முன்னாக, பின்னாக, நேமிநாத வுரைகார ருக்கு முற்பட்டு உரையாசிரியர் என்னும் பெயருடையராய்த் தொல்காப்பியத்திற்கு உரை வகுத்தாரொருவரிருந்து, அவ்வுதா ரணம் அவரான் அவ்வுரைக்கட் காட்டப்பட, அதனை யவ்வழக் குப்பற்றி நேமிநாத வுரைகாரர் காட்டுவாராயினா ரென்றலும் எய்துமன்றே. இம்மாறுபாட்டினை யாராயாது நேமிநாத வுரை காரர் காட்டியுள்ளமையின், அஃது இளம்பூரணராற் காட்டப் பட்டதேயென்று கோடலும், அதனால் உரையாசிரியர் இளம் பூரணர் இருவரும் ஒருவரேயென்று துணிதலும் நிரம்பாதென்க.

நேமிநாத வுரைகாரருக்கு அணுகிய காலத்தவர் இளம் பூரணவடிகளே யெனின், முதற்கண் அங்ஙனமாதல் நிறுவப் படுதல்வேண்டும். ஏதுவும் எடுத்துக் காட்டுமின்றி நேமிநாத வுரைகாரருக்கு இளம்பூரணவடிகள் அணுகிய காலத்தவரென் றலும், இருவர்க்கு மிடைப்பட்ட காலம் ஐம்பது அறுபதி யாண்டுகட்கு மேற்படாதென்றலும் ஆதாரமற்ற கூற்றுக்களாய் அறிஞரா னொருதலையாகக் கொள்ளப்படா தென்க. ஏனைய் ஆராய்ச்சியாளர் கொள்கைப்படி இளம்பூரணர் எட்டு அல்லது ஒன்பதாவது நூற்றாண்டில் வாழ்ந்தவரெனக் கொண்டு, அவ ருக்கும் பதினோராவது நூற்றாண்டிற்குப் பிற்பட்டவரான நேமிநாத உரைகாரருக்கு மிடையில் உரையாசிரியரெனப்படுவா

ரிருந்தாரெனக் கோடலும், அவராற் காட்டப்பட்ட அவ்வுதாரணம் நேமிநாத வுரைகாரரான் மேற்கொண்டு காட்டப்பட்டதென்றலும் எய்துவதாய், எவ்வாற்றானும் இவர் காட்டிய ஏது உரையாசிரியர் இளம்பூரணரேயென நிறுவுதற்கேற்ற ஆற்றலுடையதாகாமை காண்க.

பின்னர், அவ்வுதாரணம் இளம்பூரணருரைப் பதிப்பிற் காணப் படாமைக்குக் காரணங் கூறுவார்; அஃது ஏடெழுதியோர் செய்த பிழையென்றும், பழைய உரைகளிற் காணப்படுவன காலத்தால் வீழ்ந்து போதல் உண்டென்றும், கூறி, அங்ஙனம் வீழ்ந்துபோதலுண்டென்பதற்குச் சான்றாக, "இராவணனுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் உரையானுமுணர்க" (40-2) என்று மதுரைக்காஞ்சி யடிகளுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியிருத்தலைக் காட்டி, அப்பகுதி இதுபோது வெளிவந்துள்ள இளம்பூரணருரைப் பதிப்பிற் காணப் படவில்லையென்பதையும், அஃது அங்ஙனம் காலத்தால் வீழ்ந்துபட்டதென்பதையும் குறிப்பாற் பெறவைத்து, "இராவணனுதல்.... .......உரையானு முணர்க' என்று மதுரைக்காஞ்சியடிகள் உரையில் நச்சினார்க்கினியர் கூறிய பகுதி இளம்பூரணவடிகளையே உரையாசிரியர் என்னும் சிறப்புப்பெயர் கொடுத்துக் கூறினாரென ஒருதலையாகக் கொள்க" என்று கூறுகின்றார்.

ஒன்று குறித்து ஆராயப் புகுவார் முன்னர் ஏதுவும் எடுத்துக்காட்டும் காட்டி விளக்கிப், பின்னர் தங்கோளைச் சாதிப்பதே முறையாக, அவ்வாறன்றி, நச்சினார்க்கினியர், உரையாசிரியர் என்றது இளம்பூரணரையே யென ஒருதலையாகக் கொள்கவெனவிதித்தல், சிறிதும் ஆராய்ச்சியாளர்க்கு அடுப்பதன்றாம். இளம்பூரணரையும் உரையாசிரியரென்றலுண்டென்பதும் இவரான் மறுக்கப்படுவார் கொள்கையாகலின், இந்நச்சினார்க்கினியர் கூற்று இளம்பூரண ருரைப்பதிப்பிற் காணப் படுவதாயினும், ஐயங்கார் கூற்றுக்குத் துணைபுரிவதாகாமையுணர்க. இளம்பூரணரின் வேறாய உரையாசிரியரே தாமியற்றியதொல்காப்பியப் பாயிர வுரைக்கண் அதுகூறினாரென்றும், அதனையே

எடுத்துக்காட்டி, அது கூறினாரையே உரையாசிரிய ரென்பா ராயினர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் என்றும் கோடல் அமையு மன்றே. அங்ஙனமாக நச்சினார்க்கினியர் உரையாசிரியர் என்றது இளம்பூரணரையே என்று ஒருதலையாற் கொள்வ தியாண்டையதென்க. தான் அது கோடலின், பிறரும் அதுவே கோடல் வேண்டுமென்பது இவர் தம் கருத்துப் போலும்! வேத விதிக்கும் ஏதுவேண்டும் இக்காலத்து இத்தகைய ஏதுவின்றி விதிக்கும்விதி, ஆராய்ச்சிமுடிபாக அறிஞராற் கொள்ளப்படா தென்க.

இனி, "நேமிநாதநூலைச் சின்னூல் என்று புறக்கணித்த பிழையால் உரையாசிரியர் ஒருவரை யிருவராக்கி ஒவ்வாத கூற் றையுரைத்து இடர்ப்பாட்டில் உழலநேர்ந்தது" என்னும் இவர் கூற்று, நேமிநாத நூலைச் சின்னூல் என்று புறக்கணித்தற்கும், உரையாசிரிய ரொருவரை யிருவராகக் கோடற்கும் என்னும் இயைபின்மையான் ஒவ்வாக் கூற்றாயிருத்தலினானும், இயை புண்டெனின், அது விளக்கப்படவில்லையாகலானும் இதுபற்றிய வாராய்ச்சி வேண்டுவ தின்றெனவிடுத்தொழிகின்றாம்.

இனி, ஆசிரியர் சேனாவரையர் உரையாசிரியர் கூறியதாகக் கொண்டு மறுத்தபகுதி இளம்பூரணராலேயே கூறப்பட்டுப், பிற்காலத்து ஏடுபெயர்த்து எழுதுவோரான் விடுபட்டதென்றல் பொருந்துமாறு சிறிது நோக்குதும். அப்பகுதியை ஆசிரியர் சேனாவரையர், "இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கு, முரி யவையுரிய பெயர் வயினான" (தொல். சொல். சே. 161; இ. 158) என்ற சூத்திரவுரைக்கண் காட்டிமறுக்கின்றார். மறுக்கின்றவர், "உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்றாரால்" என்று கூறுத லின், அப்பகுதி இச்சூத்திர வுரைக்கண்ணே இளம்பூரணராற் கூறப் பட்டதாதல் வேண்டும். வேண்டவே, அப்பகுதி பிற் காலத்து வீழ்ந்ததாயின் அச்சூத்திரத்தின்கீழ் இதுபோது பதிக்கப் பட்டுள்ள வுரை அப்பகுதியோடு பொருந்துவதாக விருத்தல் வேண்டும்.

'இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவி'யாதற்குப் பெயருள் உரியன உரியவாம் என்றவாறு. அவன், பெண்மகன். சாத்தன்

என னகரவீறு ஆடூவிற்கும், மகடூவிற்கும், அஃறிணை யாண்பாற்கும் உரித்தாய் வருதலானும், அவள், மக்கள், மகள் என ளகார வீறு மகடூவிற்கும் பல்லோர்க்கும், அஃறிணைப் பெண்பாற்கும் உரித்தாய் வருதலானும், பெண்டாட்டி, நம்பி எனவும் ஆடூ மகடூ எனவும் இகரவீறும் ஊகாரவீறும் இருபாற்கும் உரியவாய் வருதலானும், வினைச்சொற் போல இன்னவீறு இன்னபாற் குரித்தெனப் பெயர்ச்சொல் ஈறுபற்றி யுணர்தலாகாமையின், 'உரியவையுரிய' வென்றார். பிறவு மன்ன" என்பது 'நஞ்சுண்டான் சாம்' என்னும் பகுதியை மறுத்த சேனாவரையர் இச்சூத்திரத்திற்குக் கூறியுள்ளவுரை.

இனி, "இருதிணைப்பிரிந்த ஐம்பாற் கிளவியாதற்குப் பெயருள் உரியன உரியவாம் என்றவாறு. அவன், பெண்மகன், சாத்தன் என னகாரஈறு ஆடூஉவிற்கும், மகடூஉவிற்கும், அஃறிணை யாண்பாற்கும் உரித்தாய் வருதலானும், அவள், மக்கள், மகள் என ளகார ஈறு மகடூஉவிற்கும், பல்லோர்க்கும், அஃறிணைப் பெண்பாற்கும் உரித்தாய் வருதலானும், பெண்டாட்டி, நம்பி எனவும், ஆடூஉ, மகடூஉ எனவும் வரும் இகாரவீறும் உகாரவீறும் இருபாற்கும் உரியவாய் வருதலானும், வினைச்சொற் போல இன்ன ஈறு இன்னபாற்கு உரித்து என்னப் பெயர்ச்சொல் ஈறு பற்றி யுணர்த்தலாகாமையின், 'உரியவையுரிய' என்றார். பிறவும் அன்ன, "என்பது ஆசிரியர் சேனாவரையரான் மறுக்கப்பட்டவுரையைக் கூறியவராகக் கொள்ளப்படும் இளம்பூரணர் உரைப் பதிப்பில் அவர் கூறியதாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளவுரை.

இவ்விருவருரையும் ஒப்பித்து நோக்குவார்க்கு இவைபொருணெறியால் ஒருசிறிதும் தம்முள் வேறுபாடின்றியொத்திருத்தல் நன்கு புலனாவதொன்று. அங்ஙனம் சேனாவரையரான் மறுக்கப்பட்டவுரைப் பகுதி இளம்பூரணரே கூறியதாயின் அதற்கேற்பவன்றே இவ்வுரையுமிருத்தல் வேண்டும். அங்ஙனமன்றி அம்மறுப்புப் பகுதியோடு பொருணெறியாற் பெரிதும் வேறுபட்டும், அப்பகுதியைமறுத்த சேனாவரையர் உரையோடு சிறிது வேறுபாடு மின்றி யொத்தும் இருத்தலின் அதுகூறினுரை

இது கூறிய இளம்பூரணரே யென்றல் பொருந்தாக் கூற்றே யாமன்றே.

"....என இப்பொருளுணர்த்துகின்றது இச்சூத்திரம்என்று ரால் உரையாசிரியர்" என்றலின் இப்பகுதி சூத்திரம் நுதலியது கூறியதாதல் பெறப்படும். படவே, இச்சூத்திரம் இப் பொருண்மை நுதலுவதாக நுதலிப் புகுந்தார், அதன்கீழ் அத னோடு முற்றிலும் மாறுபட இங்ஙனம் உரை கூறியிருப்பர்கொல்? எனும் வினவெழுதலறிக. இவ்வினவிற்குத் தக்க விடை கூறி விளக்கலாய் வாளா கூறிச்சேறல் ஆராய்ச்சி முறையன்றாம். இங்ஙனம் இவ்வுரையோடு மாறுபட்ட அப்பகுதி இடைக் காலத்து ஏடுபெயர்த் தெழுதுவோரால் விடப்பெற்று வீழ்ந்து போயிற்றெனை அப்பேருபகாரப் பெரியார்மேற் பழியேற்றிக் கூறுதல்,அவ்விருவருரையினும் போதியபயிற்சியும் ஆராய்ச்சியும் இன்மையையே காட்டுவதாவதேயன்றி, குற்றமில்லார்மேல் குற்றமேறக் கூறிய குற்றத்திற்கும் ஆளாக்குவதாம். இக்காட் டியவுரையை யொருகால் நோக்குவார்க்கும் "நஞ்சுண்டான்சாம்" என்ற உதாரணப்பகுதி ஈண்டு இளம்பூரணராற் காட்டப்பட்ட தென்றலின் பொருந்தாமை இனிது புலனாகற்பாலதொன்றாகும்.

இனி, இதுபோது வெளிவந்துள்ள இளம்பூரண ருரைப் பதிப்பில் இச்சூத்திரத்தின்கீழ்ப் பதிப்பிக்கப் பெற்றுள்ளவுரை இளம்பூரணருரை யன்றென்றும், சேனாவரைய ருரையே இளம் பூரண ருரையென மயங்கித் தவறாக ஏடுகளிற் சேர்க்கப்பட, அதன்படிப் பதிப்பிக்கப்பட்டுளதென்றும் ஒரு சாராரும், சேனா வரையரான் மறுக்கப்பட்ட அப்பகுதி பிறனொருவன் கூற்றாக இளம்பூரணராற் கூறப்பட்டிருந்தது, பிற்காலத்து வீழ்ந் திருத்தல் கூடும் என்று ஒரு சாராரும் கூறுபவாலெனின், அவை திரு. ஐயங்காரவர்களாற் காட்டப்பெறாமையின் அவை பற்றி யீண்டு ஆராய்ச்சியின்றென்க. இதுகாறும் கூறி வந்த வாற்றான், திரு. ஐயங்காரவர்கள், உரையாசிரியர் எனப்படுவார் இளம்பூரணரே என்ற சாத்தியத்திற்குக் காட்டிய சாதனங் களின் பொருத்தமின்மையும், அவற்றாற் சாதிக்கப்பெற்ற சாத் தியத்தின் நிலைபேறின்மையும் ஒருவாறு விளக்கப்பட்டன.

இவ்வாற்றான் உரையாசிரியரும் இளம்பூரணவடிகளும் வேறென்பது எம்கோளென்று துணிவாருளரேல், அன்னார்க்கு அஃது இன்னமும் அறிஞரான் ஆராய்தற்குரியதோரரியபொருளாகலின், அதனை நிறுவுதற்கு எழுந்ததன்று இக்கட்டுரையென்பதையும், திரு. ஐயங்காரவர்களின் ஆராய்ச்சியின் நேர்மையின்மை விளக்குவதொன்றனையே நோக்கமாகக்கொண்டு எழுந்ததென்பதையும் அறிவுறுத்தி, மேற்செல்லுகின்றேம்.

(தொடரும்.)



## தமிழ்ச்செய்திகள்.



திருப்பனந்தாள் தமிழ்ப்பரிசு. திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர் காசிவாசி. உயர்திரு. சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் தமிழ்மொழி வளர்ச்சி கருதி சென்னைப் பல்கலைக்கழகத்தினர் நடத்திவரும் தனித் தமிழ்த்தேர்வில் முதல் வகுப்பில் முதலாவதாகத் தேறும் தமிழ் வித்துவானுக்கு ஆண்டுதோறும் ஒரு ஆயிரம் வெண்பொற்காசுகள் பரிசு வழங்கி வருவது தமிழ்நாடு போற்றத்தகும் அருஞ்செயலாகும்.

இப்பரிசை இந்த ஆண்டில் பெற்ற புலவர் உத்தமபாளையம் உயர்தரக் கல்லூரி தலைமைத் தமிழாசிரியர் திருவாளர். வித்துவான். T. சங்குப்புலவர் அவர்கள் எனவறிந்து மகிழ்கின்றோம்.

27—8—36 தேதியன்று சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் (Vice-Chancellor) திருவாளர். Dr. A. இலக்குமணசுவாமி முதலியார் அவர்கள் தலைமையில் பேர் அறிஞர்கள்

குழுமிய கூட்டத்தில் துணைவேந்தர் அவர்களால் பரிசு வழங்கப் பட்டது. அதுகாலை, தானும் கழகத்தினரும் தமிழ்வளர்ச்சியில் கருத்தூன்றி ஆக்கந்தரும் பணிகளை மேற்கொள்ளவிற்கும் நற் செய்தியை வெளியிட்டனர்.

தமிழ்க் கலைச்சொற்கள் மாநாடு:—திருநெல்வேலி, சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தினரின் நன்முயற்சியால் 21—9—36 தேதியன்று சென்னைப் பச்சையப்பன் கல்லூரி மன்றத்தில் உயர்திரு. சுவாமி. விபுலானந்த அடிகளின் சீரிய தலைமையில் கூடியது. திருவாங்கூர் திவான். திருவாளர். Sir. C. P. இராமசுவாமி ஐயரவர்கள் மாநாட்டைத் திறந்து வைத்தனர்.

மாநாட்டைத் திறந்து வைத்தகாலை திருவாளர் Sir. C. P. இராமசாமிஐயர் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவில் கவனிக் கத்தக்க சில குறிப்புகள்:— வங்காளி வாலிபர்கள் தமது மொழியை வளர்ப்பதற்கு சில கழகங்கள் நிறுவி அவற்றின் உறுப்பினர்கள் தாய்மொழிச் சொற்களைத் தவிர்த்து அங்கிலச் சொற்களை வழங்கினால் அயற்சொல் ஒன்றிற்கு அணா 2 விழுக் காடு அபராதம் விதித்து தமது மொழியைப் பாதுகாத்து வந்த னர் எனக் கேள்வி யுற்றிருக்கின்றேன். தமது தாய் மொழிப் பற்றினால் வங்கமொழியும், வங்க நாகரிகமும்போற்றி வளர்க்கப் பெற்று இதுபோது வங்கநாடும் வங்கமொழியும் புகழுடன் திகழ்கின்றன. கூர்ச்சரரும், தெலுங்கரும் வங்கநாடினரைப் போலவே தாய் மொழியைப் போற்றுகின்றனர். துருக்கி நாட் டின் முன்னேற்றம் கமால்என்பவரின் மொழித்திருத்தைப்பற்றி யது. துருக்கிநூல் வழக்குகளில் காணப்பெற்றஅரபி, பாரசீகம், ஐரோப்பிய சொற்களைக்களைந்து அகற்றி தனது நாட்டுமொழி களைவழங்கிக் கலைநூல்களைச் செப்பஞ்செய்தனர். துருக்கிமொழி யில் கலைக்களஞ்சியமும் (Encyclopaedia) அகராதியும்(Dictionary) இயற்றினர். சர்மனியரும் தமது மொழியினின்றும் அயற் சொற்களை அகற்றி தமது நாட்டுமொழியில் கலைச் சொற்களைப் படைத்துக்கொண்டனர்.

தமிழரின் நாகரிகம் நமது நாட்டின் எல்லையை யிகந்து குணகுட கடல்களுக்கப்பாலும் பலநாடுகளிலும் பரவியிருந்தது. பிறமொழியினரின் சிறந்த கருத்துக்களைத் தாம் அறிந்து கொள்ளுவதும், அறிந்தவற்றை தமதாக்கிக் கொள்ளுவதும் இவர்களின் சிறந்தபண்புகளாக இருந்தன. கலை நூற் கருத்துக்களை வெளியிடுதற்கு அயன் மொழிகளிலிருந்து கடன் வாங்குவது இன்றியமையாத போது அச்சொற்களை அவ்வுருவத்தில் வழங்காது தமிழ்மொழியின் இயலுடன் இசையமாற்றிவழங்கவேண்டுமென்பதை நினைவிலிறுத்தவேண்டும்.

திருவாளர். T. S. நடராச பிள்ளையவர்கள் நிகழ்த்திய வரவேற்பின் குறிப்புகள்:—

தெலுங்கர், கன்னடர், மலையாளர் இவர்களை நோக்கத் தமிழ் மக்கள் தமிழ்மொழி வளர்ச்சியில் ஊக்கங்காட்டவில்லையென்பது கண்கூடு. தமது தாய்மொழியைப் போற்றுதோடமையாது, அயன் மொழிகளைத் தமிழ்நாட்டில் நிலைநிறுத்தவும், வளர்க்கவும் தலைப்படுகின்றனர்.

கலைச்சொற்களை ஆக்குவதில் பல கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. Cycle, Motorcar முதலிய அங்கிலச்சொற்கள் வழக்கில் இருந்து வருவதால், அவற்றின்பொருளை பாமரரும் எளிதே தெரிந்து கொள்ளுகின்றனர். இவற்றைக் குறிப்பதற்கு தமிழ்ச்சொற் குறியீடுகளை ஆக்குவதானல் அச்சொற்கள் வழக்கில் வரும் வரை பொருள் விளங்குவது கடினமாகும். அதன் பொருட்டு அங்கிலமாதிய அயன்மொழிக் குறியீடுகளை தமிழ்மொழி வழக்கில் பெருக்குதல் நன்றா? தெலுங்கு, மலையாள மொழிகள் வடமொழிக்கு அடிப்பட்டு தமது உருவும் திருவும் சிதைந் தொழிந்ததை மறக்கவொண்ணுமா?

---

மாநாட்டின் தலைவர் உயர்திரு. சுவாமி விபுலானந்த அடிகள் நிகழ்த்திய தலைமையுரையின் குறிப்புகள்:—

பண்டைக்காலத்தில் கவின்கலைகள், சிற்பம் ஓவியம், மருத்துவம், இரசாயனம், கணக்கு, கப்பலோட்டம், வாணிகம், ஆகிய பலகலைகள் தமிழ் நாட்டில் செழித்தோங்கின. தமிழ் நூல்களைத் துருவி ஆராய்ந்தால் தமிழ் வழக்கிலுள்ள பல குறியீட்டுச் சொற்கள் நமக்குக் கிடைக்கும். கலைக்கருத்துகளை வெளியிடுதற்கு தனித்தமிழ்ச்சொற்கள் இல்லாவிடில் வடமொழி நூல்களில் பயிலப்படும் வடசொற்களை ஏற்றபடி அமைத்து தமிழில் வழங்கலாம். தமிழ் வழக்கில் இருந்துவரும் அயன் மொழிகளைத் தமிழர் வழங்கத் தலைப்பட்டமையால் செவ்விய தமிழ்ச் சொற்கள் பல வழக்காறற்றன. உ-ம்: மறைக்காடு: வேதாரணியம்: வெண்காடு: சுவேதாரணியம். இந்குறிச் சொற்கள் நீங்க, பொருள்குறிக்கும் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைப் படைப்பது மிகவும் எளிது.

மாநாட்டினர் ஒவ்வொரு கலைக்கும் உரிய குறியீட்டுச் சொற்களை ஆராய்ந்து தேர்தற்கென அவ்வக் கலைவல்லார் சிற்சிலர் கூடிய உட்கழகங்களை அமைத்து ஆராய்ச்சி முடிபுகளைத் தெரிக்குமாறு விடுத்திருக்கின்றனர்.

---

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "ஆவணி" நன்கொடை

| திங்கள் நன்கொடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, க. நடராசன் B.A., B.L., | ,, | 5 | 0 | 0 |
| ,, ரே. அ. அனந்தவிசய முதலியார் | ,, | 1 | 8 | 0 |
| ஆண்டு நன்கொடை | | | | |
| ,, N. L. வேங்கடசாமி நாயுடு கரந்தை. | ,, | 35 | 0 | 0 |
| ,, T. S. நாராயணசாமி அய்யர் (Retired P. W. D. Overseer). | ,, | 5 | 0 | 0 |

## மருத்துவசாலைக்குதவிய அன்பர்கள்.

---

| திருவாளர். | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| ,, S. முத்துசாமி ஐயர் அவர்கள் | பெருந்தோட்டம் | 2 | 0 | 0 |
| ,, R. கோதண்டராமய்யர் அவர்கள் | ,, | 2 | 0 | 0 |
| ,, T. R. சுப்பிரமணிய ஐயர் ,, | திருவெண்காடு | 5 | 0 | 0 |
| ,, தலைமையாசிரியர் க. த. ச. கல்லூரி | தஞ்சை | 20 | 0 | 0 |
| ,, இராவ்சாகிபு த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் | | 25 | 0 | 0 |
| ,, V. துரைசாமிப் பிள்ளை அவர்கள் | திருக்காட்டுப்பள்ளி | 2 | 0 | 0 |

யுடைய பிரம்மா விஷ்ணு ருத்திரன் என்ற பிள்ளைகள் மூவர். அந்த மூவரையும் கற்கச் சொன்ன தொழில், சிருட்டி திதி சங்காரமென்னுந் தொழில் மூன்று. அவருள் காலக்கடையின்கண் சங்கரிக்கச் சொன்ன அந்த ருத்திரனென பிள்ளைக்கு, அவளே தாயும் தேவியும் என்றவாறு. எல்லாப்பொருளும் விளைவதற்குச் சத்தி சிவத்தொடுங் கூடுதலால், அவளே தேவியாகியும், பொருளை அழிப்பதற்கு சிவன் சந்நிதியின்கண் தோன்றுதலால் தாயாகியும் நின்றனள் ஒருத்தியாகியவாற்றான் என்றவாறு. ஒருத்தி என்பது, ஊழிக்கண் எல்லாப்பொருளும் ஒருருவாயவள் ஆதலான்; ஒப்பில்லாதவள் எனினும் அமையும். (4)

தேவியென் றுன்னைப் பெறுவார் விடமுண்டு தெட்டுண்டநா
ளாவியந் தண்குமு தத்தமு தூற லளித்திலையே
ளோவியம் போலிருந் துள்ளே விழித்துணர் வற்றிருப்பா
ராவியங் கோயிலுள் ளாயகி லாண்டமென் னுவதுவே

(என்பது.) கருவிகளையிறந்து நினைப்பு மறப்புமின்றி ஓவியம் போலச் சமாதியடைந்து ஞானநாட்டத்தால் உள்ளேநோக்கிப் பரமவெளியின்கண் உற்றிருக்கின்ற ஞானயோகிகள் தமது ஆவியே பழைய கோயிலாக உடையாய்! உன்னைத் தேவியாகப் பெற்ற விடையோன், விடத்தை அயின்று தெள்மைப்பட்ட காலத்தின்கண் குளிர்ந்த குமுதம்போன்ற அதரத் தமுதூறலை அவற்கு ஆவியாக அளித்து அவ்விடத்தை மாற்றுவிடின், அகிலாண்டப் பல்லுயிர்களும் என்னாகும் என்றவாறு. ஓவியம் போலிருந்தென்பதற்குக் குறித்தபொருளைநோக்கி மனமாய்ந்து இமையா நாட்டத்திருத்தலாம் என்றுரைப்பாரும் உளர். (5)

வேதாந்த மந்தஞ் சகல கலாந்தம் பொதிந்தவிந்து
காதாந்த நாயகி யேயென் னம்மையுன் னயனமென்னுங்
நாதாந்த காரக் கடலதொக்குங் கருணையின்றே னுலகுக்
கார்தான் தலைவ ருகாந்த காலத் தருங்கனற்கே

(என்பது.) வேதங்களினது அந்தம் வடிவாகியும், பலகலைகளின் அந்தம் பொதிந்த விந்து நாதாந்தத்தின் முடிவாகியும் நின்ற நாயகியே! எனதம்மே! யுகாந்தத்தின் கணதனது காலத்து

எல்லாவற்றையுஞ் சங்கரிக்கின்ற வடவாஅனற்கு, உன்னுடைய காதளவாகப் பிறழும் கரிய கடலென்னுங்கட் கருணை வெள்ளம் பரந்து மாற்றினல்லது உலகத்திற்கு வேறு தலைவர், ஆர்தான் இதற்கு நின்னையல்லதென்றவாறு. வேதாந்தம் அந்தம் என்றூர், எல்லாப்பொருளையும் கடந்து நின்ற வேதங்களின் அந்தமாகிய ஓங்கார நாத முடிந்த சொல்லிறந்து நின்ற பொருளே வடிவாதலால், சகல கலாந்தம் பொதிந்த விந்து என்பது, பல கலைப்பொருளின் அந்தம் பொதிந்த விந்து என்பதோர்பொருள். நாதாந்த நாயகியே என்பது, விந்துவைக் கடந்த நாதத்தின் முடிவாகி நின்ற பராசத்தியெனக் கருத்து. எல்லாவற்றையும் அடுகின்றவூழித்தீக்கு, உன்னுடையகட்கடலான் மாற்றுவிடின், உலகத்திற்குத் தலைவராகத் திருமேனிச் சட்டை சாத்தி இருக்கின்றவர் ஆர்தான்; அந்தச் சங்காரமூர்த்தி நிஷ்களம் அல்லதுண்டோ எனினும் அமையும். ஆரதான் என்பது ஆர்தான் என்றிடைக் குறைந்து நின்றது. (6)

கனற்றடத் துள்ளத் தடமல ருங்கம லத்தமலை
யனத்தடத் தண்ணென்ற தொத்து நிற்பாளகி லாந்தரத்துப்
புனற்றடத் தண்டம் புகுவன போவன வாகிநிற்கும்
வினைத்தடப் பொன்னுந்தி தாள்வந்தி யாமுன் வெளிநிற்குமே

(என்பது.) அந்தணர் வேள்விக்கண் வேதத்தினுன் எழுப்பிய அக்கினிச் சுடரினும் உன்னிய மெய்யடியார் நெஞ்சவாவியின் மலரும் தாமரை யுழியினு மொப்புரைக்கின்ற அமலை அன்னம் பொருந்திய தாமரைத் தடாகத்திற்றண்ணெனவு போன்று யாவுக்குந் தண்ணளி செய்து நிற்பாளகிலமு முடிவாமிடத்து மகாப்பிரளைய சலதியின் மிதக்கின்ற பேரண்ட முதலாகிய அண்டங்கள் வந்தொடுங்குவன மீட்டும் போவன வாகாநின்ற பெரிய வினைப்பாடுளதாய் அழகிய உந்தியையுடையாள் திருவடிகளெம்மைப் புதிதாக ஆட்கொண்ட முறைமையால் இன்பம் நினைவதன்முன் தானேவந்து எமக்கு எளிவாகக் கட்புலனுகிக் கட்புலனுக்கி நின்றருளுமென்றவாறு. கனற்றடமென்பதற்கு யோக சிலர் மூலாதாரத்தின்கண் ஓங்காரத்தெழுப்பிய அக்கினிச் சுடர் எனினுமமையும். பெருமையிருந்தபடி, பேரண்ட

முதலாகிய பலவண்டங்களையும் ஒடுக்கவும் பெறவும் வல்லவளா யிற்று. சிறுமையிருந்தபடி, சருவப்பிராணிகளிடங்களினும் உளதாயினள். அருமையிருந்தபடி, மனோவாக்குகளுக் கெட் டாத தன்மையளாகி அகண்டத்தோடுகூடி நின்றனள். எளிமை யிருந்தபடி, ஏழை நெஞ்சத்தான் வந்திப்பார் தமது முன்னின் றருளுமாயிற்று. கருணையிருந்தபடி, எவ்வுயிர்க்கும் தாமரைத் தடாகம் போன்று குளிர்ச்சியை யுடைத்தாயினள். இத் தன்மையினிருந்துள்ள மகாசத்தி திருவடிதனை உணர்வோடு வழுத்தா முன் வெளிநிற்குமே என்றவதனாற் சிறிதும் வெளி நில்லாளெனினுமாகும். ஆதலால் இவ்வாறு உள்ளியும் அறிதி யோளே என்பது போலுங்கருத்து. தாமரை என்றொருசொல் வருவிக்கப்பட்டது. (7)

நிற்பன யாவையு மாகிநிற் பாய்நின்னி டத்தகலங்
கற்பன வல்லபொன் னேயென்னம் மேநின் கமலபதச்
சொற்பனு வாய கவிகற்பி னுங்கவி துல்லவர்க்கு
விற்பன வாயவென் னேயறத் தாழ விலைமதிந்தே

என்பது யாவையும் நிலைபெறும் பொருளாகி நிற்பாய்! பொன் போல்வாய்! எனதம்மே! நின்கண் உண்டாகிய சொல்லிறந்த பெருமையை யாவரானும் கற்று முடிவதன்று. ஆயினும் இயன் றது நின்னுடைய பாதத்தைத் தோத்திரச் சொல்லாகிய பாக் களைக் கற்றுய்கின்ற வதனினும் வறிதேதது வாக்கினையுடையார்க் குப் பாக்களை விலைதாழ மதித்து விற்பனவாகி நின்றன செய்ய னுக்கென்றோ இதுவும் நின் திருவுளச்செயலானதே என்றவாறு. நிற்பன யாவையுமாகி நிற்பாயென்பது எல்லாப் பொருளும் ஒழியாது நின்று விளையும் வண்ணம் அவற்றுக் குட்பொருளாகி நிற்பாயென்றவாறு. (8)

மதியா யெறிக்கு முருவ னிலாமரு மாலையிருட்
பொதியா யெறிக்கு மளகா டவிபுவ னாதியந்தம்
பதியா யெறிக்குமுதையா தவரெழு பாரின்மகோ
ததியா யெறிக்குஞ் சகதண்ட மேழுக்குந் தண்ணளியே.

என்பது புவனத்துக் காதிபதியாகி யவள் தனது முறுவலினது

ஒளி சந்திரகிரணம் போன்று விளங்கா நின்றது. குழற்காடு மணமுடைத்தாகிய மாலையையும் இருளையும் பொதிந்துகொண்டு கருமையொளி விளங்கா நின்றது. திருவடிகள் கீழேழு பூமியினு மேவி ஆதித்திய கிரணம்போன்று அவ்விடத்து இருளையகற்றி விளங்கா நின்றது. தண்ணளி மற்றையேழு லோகங்களுக்கும் பலவண்டங்களுக்கும் பெருங்கடல்போன்று விளங்காநின்றது. புவனுக்கு என்ற சொல்லை எல்லாவற்றோடுங் கூட்டுக. இவ் விறைவி தனது முறுவல் சந்திரோதையம் காட்ட அளகாடவி இருளைக் காட்டத் திருவடிக் கமலங்களினது ஆபரணத்தொளி ஆதித்திய கிரணம் காட்டத் தண்ணளி பெருங்கடலைக் காட் டிற்றென இயையும். (9)

தண்ணளிப் பான்முகிட் கொங்கை சுரந்து தனிக்குழவி
மண்ணளிப் பாகபகி லாண்டஞ் சுடாவட வாவனலின்
விண்ணளிப் பாரழித் தாரும் விடாய்கெட மெய்க்கருணைக்
கண்ணளிப் பாயென் னம்மேவினை பேனையுங் காத்தருளே

(என்பது.) அகிலாண்டங்களையும் வடவாவனலாற்சுட்டவற்றுள் எல்லாவற்றையும் அழித்து விண்ணென்கின்ற வெளியை நிலை பெறத் தருகின்ற சங்கரனது சங்காரத் தாண்டமாடிய விடாய் கெடும் வண்ணம் மெய்ம்மையாகிய கருணைக் கண்ணாற்றண்ணளி செய்யா நிற்பாய் முகிழ்த்த கொங்கைகள் தண்ணளி யென் கின்ற பால் பயந்து ஒப்பில்லாத விளையு மண்ணைக மீட்டும்தந்து அதனுள் எல்லாவற்றுக்கும் அன்புசெய்து வளர்க்கின்ற எனது அம்மே நின்னைச் சிறிதும் நினைத்தல் செய்யாத தீவினைகட்குரி யேனையும் இனிப் பிறவா வண்ணம் நீயே காத்தருள்வாயாக என்றவாறு. சங்காரத்திலே மடிந்துபோக மீட்டும் பயந்து வளர்த்தமையாற் குழவி மண் என்றார்; மூப்பின்றி யிருத்தலா லெனினுமமையும். (10)

காப்பார் படைப்பா ரொழிப்பார் கனற்று மரைக்கரத்துப்
பூப்பா ளகிலாண்ட முங்கொண்ட போதப்பொலன்

[சுடர்போய்ச்

சேர்ப்பான மேருவிற் சேர்ப்புண்ட வண்டஞ்செஞ்
[னூலின்முத்தங்
கோப்பார் தனிவடம்போற்கொங்கை மேற்பொலிகோலத்தளே.

(என்பது.)உலகங்களைப்படைக்கின்ற பிரம்மாக்களும் அவற்றை இரட்சிக்கின்ற விஷ்ணுக்களும் மாண்டொழியும் வண்ணம் கைத் தாமரையின்கண் வடவாவனலைப் பொலிவிப்பாள் அகிலாண்டங் களையும் சங்கரிப்பதாகக் கோட்பாடு கொண்ட காலத்துக் கட் புலனாகிய ஒளியினையுடைய சந்திராதித்தர் போய்ச் சேருதற் கான மகமேருவில் கோவைப்பட்ட அண்டங்கள் சிவந்த நூலில் முத்தம் கோக்கின்றவர் தனி வடம்போல் கொங்கையின் மீதே பொலிவுபெற்ற கோலத்தையுடையாள் என்றவாறு. சங்காரத் திலே மடிவதான காலத்துக் கிருபையினால் அண்டங்களைக் கோவையுடனே தனத்திலடைத்துக் கொண்டது செஞ்ஞூலிற் கோக்கின்ற முத்துவடம்போலும் என உவமை கூறியவாறு(11)

கோலத் தனகள பக்கடி னத்துங்கக் கொங்கைவஞ்சி
நீலத் தனகள னாகத் திறைவி நிறைமலரோ
னோலக் கடல்கொளு முந்திபல் லூழி யொருநிமிட
காலத்த னாகத்த ளேபுறத் தோம்வெய்ய காலனையே.

(என்பது.) பொற்கோலமான துத்தியையும் குங்குமச் சேற்றினை யும் கடினத்தையும் பெருமையும் பொருந்திய தனங்களையுடைய வஞ்சி நீல நிறமாகிய கண்டத்தையுடையவன் ஆகத்தின்கண் உண்டாகிய இறைவி, நிறைந்த தாமரைமலரின் கட்டங்கிய பிரம்மா இறந்து ஒலிகடல் பிரளயங் கோவா நின்றதோர் ஊழி யில் கழிந்து பேரண்டம் சங்காரப்படும் காலத்திலும் என்னு டைய நெஞ்சத்தில் நீ இருத்தலாலே வெய்தாயுள்ள காலனையும் புறங் காண்போம் என்றவாறு. நிகழ்காலத்தின்கண் எஞ் ஞான்றும் ஒழிவறக் கண்டிருத்தலால் இவ்வாறு பேரண்டம் சங்காரப்படும் காலத்திலும் நீலகண்டனதாகத்திலுண்டாகிய இறைவீ அ:வனோடு என் ஆகத்தின் அகத்திருத்தின் ஆகத் திருத்தலால் வெய்தாயுள்ள காலனைப்புறங்காண்பேம் என்றார்.

கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு சுட்டுக் கலைமதியின்
பால்கொண் டிறக்கி யுள்ளேபணி யாப்பர மானந்தமே

மேல்கொண்டு நீயென்று நானென்றும் வேறின்றி விம்மிவிம்மி
மால்கொண் டிருப்பனம் மேயறி யேனிந்த மாயத்தையே

(என்பது.) பிராணவாயுவினாலே சீவான்மாவைக் கட்டுப்படுத்தி மூலதாரத்தில் அக்கினியால் சந்திரமண்டலத்தை வெதுப்பி அதன்கண் உருகி எழுகின்ற அமுதத்தை எனதுள்ளிறக்கிக் கொண்டு அதற்பின் மாயாப் பரமானந்தக் களிமேல்கொண்டு நீ என்றும் நான் என்றும் வேறுபாடின்றி இரேசக பூரக கும்பகத்தால் பிரமி மால்கொண்டு இருப்பனம்மே அறியேன் இந்த மாயத்தை என்றவாறு இதனுடனே சிலசொல் வருவித்துரைக்கப்பட்டது. மதன்மாயத்தையே என்னும்பாடம் கால் கொண்டு கட்டிக் கனல்கொண்டு சுட்டுக் கலைமதி என்பதற்கு மனத்தொடு வாயுவாதலால் அந்த வாயுவாதலால் அந்த வாயுவினாற் சந்திர மண்டலத்தைச்சுற்றி வலித்ததனை மலாக்கினியாலே வெதுப்ப வென்றுரைப்பாருமுளர். இவ்வக்கினியை ஓங்காரத்தாலுன்னி அபான வாயுவினால் எழுப்பிச் சுழு முனையின் நாட்டி அதனை வெதுப்பி என்றுரைப்பாருமுளர். சீவாத்மா பேரின்பம் பயக்கும் பரத்தின்கணுயர்த்தி ஒருவாறறியப்படுத்தியிருத்தலால் நீயென்றும் நானென்றும் வேறின்றி யென்றார். ஆனந்தக் களியால் மனமாய்ந்து உணர்வொழிந்த இளமைபான் இவ்வாறு கூறினரெனினுமமையும இவ்வாறு கூறியதனால் ஆங்காரமாகுமென்று அறியேனிந்த மாயத்தை என்றார். வியாத்தியொடு தொக்கு நின்று மனங்கெட்டு உணர்வொழிந்த இளமையான் இவ்வாறு கூறினர் எனினுமமையும். மால்கொண்டிருத்தல் யாதொன்றும் அறியாதிருத்தல். (13)

மாயிலென் மாயா விடிலென் வடிவுமென் னுயிருநின்
கோயிலு நீயுமன் றேயகி லாண்ட குழுவுக் கெல்லாந்
தாயிலு நல்ல தனியுறவே சைவ நாயகியே
யாயினு மாவி விடும்போது யானுன் னடைக்கலமே

என்பது அகிலாண்டப் பல்லுயிர்ச் சமுகங்கட்கெல்லாம் தாயினும் இனிதாகிய தனியுறவாயுள்ள நாயகியே என்னுடைய வடிவு நின்னுடைய கோயிலும் எனதாவி நீயேயாயினும் நீ யிதனை

விட்டு நீங்குமிடத்து என்னுயிர் உன்னடைக்கலமாதலின் இவ் வியாக்கை மாய்ந்தென்கொல் மாயாவிடிலென்கொல்என்றவாறு. தனியுறவு-ஒப்பிலாதவுறவு. (14)

அடைக்கலம் புக்கன வுந்தியி லண்டமைபூ தங்கொங்கை
புடைக்கலம் புக்கன சந்திரா தித்தர்பைம் பொற்சரத்துப்
படைக்கலம் புக்கன வெற்பெட்டு மம்மை பதச்சதங்கைக்
கிடைக்கலம் புக்கன புக்கொளிப் பாருக் கிடமில்லையே

(என்பது.) ஊழியின் இறுதியின்கண் உம்மையுடைய உந்தியில் அடைக்கலமாக அடைந்தன அண்டங்களும் அதனுட் கருவாய பஞ்ச பூதங்களும், கொங்கைக் கணிகலங்கட்கு முத்துமாணிக் கங்களாக அடைந்தனர் சந்திராதித்தியர். பசும்பொன்போலும் கரத்தின்கட் படைக்குக் கலப்பை யடைந்தது. திருவடிகளிற் சதங்கைகளினது உட்பணியாக அடைந்தன அட்டகுல பர்வ தங்கள் முதலாகிய பலமலைகளும், இவ்வாற்றாற் புகுமது அடை வதற்கு யாவர்க்கும் இடமில்லையாகும் என்றவாறு. அண்டத் திற்குள்ளாகியவற்றை வேறுகக் கூறியவதனுன் அண்டம் அவற் றிற்குப் பிறந்தவாறு போலக் கருத்து. கொங்கைப் புடை யென்பதற்குப் புடைத்த கொங்கையெனினும் அமையும். (15)

இல்லமை பின்றள்ள நாணமுன் றள்ள விரவுதள்ள
நில்லாமை யுநின தேயரன் சென்னியி னின்னுதனே
ரல்லா மதிதோய்ந் தருமந்த செம்மையெல் லாம்வெளிறிப்
பொல்லா மையு மழகா பொலஞ் சேவடி பொற்கொடியே

(என்பது.) அரனது சென்னியின்கண் மேவிய நின்னுடைய நுதல் போல் உவமையில்லாமைத் தாழ்ந்த மதிதோய்ந் தழகிய செம்மை முழுதும் வெளிதாகிப் பொல்லாததாயும் அழகாகி யிருக்கின்ற பொற்சேவடியுடைய கொடியே உணவு முதலாகிய பலவற்றினும் மனஞ் செலுத்தி அவ்வழியே வறுமை பின் தள் ளிப் பெயர வாங்கி யாவர் கடைக்கட் செல்வதென்று புத்தி யொத்தவழியே நாணுதல் முன் தள்ளித்தரிக்க அதனையுமறுத்து ஆசை மிகுதியான் இரப்பு முன் தள்ள இதுவே நெறியென்று நில்லாது போகிய ஆங்காரமும் நின்னுடைய திருவுளச்செயலே

என்றவாறு. மதிதோய்ந்த சேவடி வெளிறியதென்றார்; அரன் திருமுடி வணங்குதலால் வறுமைக்கிரத்தல் துணையாகி நாணுத லில்வழி சிறிதும் இல்லாது அலம் வருகின்ற இதுவும் நின் செயலேயென்று போக்குக் கூறினார். (16)

பொற்கொடி போலு மிடைவல்லி கோத்துப் புருவமென்னும்
விற்கொடி யாற்சைவ யானை யணைத்தவிந் துப்பிடியே
கற்கொடி யேனெஞ் சுருகக் கரைத்தகள்வி நின்தாட்
சொற்கொடி யேன்துதிக் கப்பெற்ற பேற்றையென்
[சொல்லுவதே.

(என்பது.) அழகிய கொடிபோலும் இடையாயது விலங்கு போன்று பெயராது பூட்டி வில்லென்னும் புருவக்கொடியதனால் சைவக்களிற்றைப் பிணித்து நின்கட் சேர்த்திக்கொண்ட விந்து வாகியே பிடியே கொடியேன் தனது கற்போன்ற நெஞ்சத்தை உருகும் வண்ணம் கரைத்தல் செய்த கள்வீ, அன்றியும் நின்னுடைய திருவடிகளைச் சிறிதும் உள்ளி உரைத்தற்குக் கொடிதாயுளனென்றாலும் அன்பரிற் கூட்டாகத் துதித்தல் செய்யப் பெற்ற பேற்றினை என் சொல்லுவதென்றவாறு. கள்வீ என்பதற்கு முன்னுரைத்த துரைக்க. (17)

சொல்லுவ தேத மறியே னிதற்கோர் துவக்கறுத்து
நல்லுவ தேச மெனக்களித் தாய்நகை யாற்புரங்கள்
கல்லுவ தேபுரிந் தார்வன் கனவரைத் தோணெகிழப்
புல்லுவ தேயென் னம்மையுன் னிலாவிடைப் போக்கறிந்தே

(என்பது) எனது அம்மை உன்றன் பெருமையைச் சொல்லு முறையை சிறிதும் அறியாத என் றிப்பிறவிப் பிணிப்பின் ஓர் துவக்குமின்றி அற்று நீங்கும் வண்ணம் உன்னுடைய நல்ல மெஞ்ஞானத்தை அளித்தவளே! உன்னுடைய தனங்களைப் பொறுத்து நின்று முடியாத இடையினது போக்கை அறிந் திருந்தும், நகையாலே முப்புரங்களையும் கெடுப்ப வெம்மை புரிந்தவரது வலிதாகிய பெரிய மலைபோன்ற தோள்களானது குழையும் வண்ணம் புல்லுவதே. யீதென்ன பேதைமை என்றவாறு, இதற்கோர் துவக்கறுத்து என்பதற்கு இக்காலத்துடன் ஓராசைப்பிணிப்பற எனினுமமையும்! சங்கரன் தோள்களின் வலிப்பாட்டையும் அம்மை இடையினது மென்மையும் கூறினதாம். இல்லா இடை என்று பாடமாயின் கட்புலனாதற்கில்லா விடையென்க. (18)



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௰உ | தாது, ஐப்பசி | மலர் எ |
|---|---|---|

உ

## திருக்குறளுதலிய நெறிமுறை

திரு. K. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் B.A., B.L., தஞ்சை

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 6, பக்கம் 208)

இதுகாறும் நல் வாழ்க்கைக்குரிய பெற்றிமைகளையும் அவற்றின் நலப்பாட்டினையும் ஆய்ந்து பின்னர் அவ்வாழ்க்கைக் கிடையூறுன, இருமனப் பெண்டிர், பெண்வழிச்சேறல், கள், கவறுகள், இரவு, இரவச்சம் முதலியவற்றையும் முற்றும் வேண்டப் படாதவெனக் நிறுவினம். மனவலிக்குக் காரணமாக யிருந்த வாய்மையும் ஈகையும் முதலியவற்றையும் கண்ட பின்னர், உடல்வலிக்குக் காரணமாக நம்வாழ்வை பிணிவழிப் படாது நலமுறச் செய்ய இன்றியமையாதவைகளை ஒருசிறிது கவனிப்பாம். நமக்கும் பிறருக்கும் நம்உடல் நலமுற்றிருந்தால் தான் பயன்படுமாதலின் உடலின் நல்வழிக்கு இடையூறாகிய

பிணியையும் அதனை நீக்கும் மருந்தையும் வேண்டிய அளவான் திருவள்ளுவர் உடற் காப்புக் குரிய 'மருந்து' எனும் அதிகாரத்தில் விரித்துக் கூறுகின்றனர். திருவள்ளுவர் நம்முடல் தன்னைத் தானே காத்துக் கொள்ளும் இயல்பு வாய்ந்ததென்று கருதி நலவழிப்படி வாழ்தல் வேண்டுமென அறிவுறுத்துவது கருதற்பாற்று. அவ்வாறே நலவழிகளை நாடாது நடப்போமாயின் நோயுறுவோமாதலின், நாம் நாடாது விட்ட வழியை நாடி நோயினை நீக்க வேண்டும். அஃதே சிறந்த வழியென்றும், அந் நல்வழியைப் பின்பற்றினுல்தான் நோய் நீங்குமெனவும், 'நோய்நாடி நோய் முதனாடி யது தணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்' என்ற செழுங் குறட்பாவில் தெள்ளத் தெளிய திருவள்ளுவர் விளக்கியுள்ளார். நோய்கள்யாவும் உண்ணும்உணவின் மிகையானும் குறையானும் வருதலான், திருவள்ளுவப்பெரியார் உடல் நலத்திற்கு மீதூண் விரும்பாமையைப் பன்முறை பின்வருமாறே வலியுறுத்து கின்றனர்.

i மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்

ii அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க் குமாறு

iii அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து

iv மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு

v இழிவறிந் துண்பான் கணின்பம் போனிற்கும்
கழிபே ரிரையான் கணோய்

vi தியள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்

ஆதலின் உணவால் பயனடைவோர் பசித்த பின் அளவறிந்து சிறிது குறைவாகவேயுண்ணின் அவரது உயிர்க்கு ஊறுபாடிலாதாகும். உலக வாழ்க்கையை உவக்கும் தன்மையவர் அவ்வாழ்க்கைக்குரிய மாண்புகளை நன்கறிந்து உடல்நலனை யுணர்ந்தவராயிருப்பார். அஃதில்லையாயின் அவர்கள் பல பிணிவாய்ப்பட்டு

தங்கள் வாழ்கையை துன்ப நிலையமாய் வைத்து வாழக் கடவராவர்.

தீயும் வளியும் விசும்புபயங் தாங்கு, நோயுமின்பமும் இவ் வுலகம் பெற்றதனல் இங் 'நாமநீர் வைப்பி'னதியல்பையும், நம் வாழ்வினதியல்பின் உண்மைகளையும் மெய்மைகளையும் எவ்வா றெடுத்து செந்நாப்போதார் விளங்க வைக்கின்றனரென்பதைச் சிறிது ஆராய்வோம். 'நெருநலுள னொருவனின்றில்லை யென் னும் பெருமையுடைத் திவ்வுலகு' என்ற குறளில் நேற்றிருந் தானொருவன் இன்று இறந்துபோனனென்றும் பெருமையை யுடையதாய் இந்த உலகமிருக்கின்றதெனத் திருவள்ளுவர்கூறி, உறங்கி விழித்தாலொக்கும் இப்பிறவி யென்றுணர்த்த 'உறங் குவது போலுஞ் சாக்காடுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு' என வள்ளுவப் பெருந்தகையார் மொழிந்தருளினர். மற்றும் இவ்வுடலமோ

'வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது'

இஃதன்றியும் இது.

'பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை;'

'அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா உள்ளம் தன்பால் உடையது;'

'மூப்பு விளிவுடையது தீப்பிணி யிருக்கை'

எனவே இவ்வுலகத்தையும் இவ்வுடலையும் மெய்ப்பொருள்க ளெனக்கொள்ளலாகாது. இவ்வுடம்பு அழிந்தால் யாவும்அழிந்து போகுமெனவும் எண்ணுதல் தகாது. முற்பிறப்பில் தொடங் கிய வினைகள் யாவும் இப்பிறவியிலும் இனிவரும் பிறவிகளிலும் தொடர்ந்து கொண்டே வருமாதலான் அரிதாகக் கிடைக்கப் பெற்ற மனிதப் பிறவிப் பயனை இழந்து போதல் நன்றன்று. முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகளின் பயன் மறுபிறவியில் நம்மைப் பற்றுமாதலான் இனிவரும் பிறவியிலே நமக்குத் துன் பம் அணுகாதபடி இப்பிறவியினிலே நல்வினைகளைச் செய்து

நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ளல்வேண்டும். வாழ்க்கை அரம்பும் கரம்பும் நிரம்ப வாய்க்கப் பட்டிருத்தலான் பெருந் துன்பத்திற்கிடமாய இப்பிறவியாலடையும் சிறு சுகத்தை ஒரு பொருளெனக் கருதாது பெறற்குரிய பெரும் பயனை இழத்த லாகாது.

உலகில் மக்களாய்ப் பிறந்த யாவருக்கும் துன்பம் அடுத் தடுத்து வருதலான், உலகியல் மக்கள் ஒருவரோ டொருவர் கூடியும் பிரிந்தும் ஒருங் கியைந்தும் இன்பம் ஒன்றனையே நாடி உவப்பர். இன்பமும் துன்பமும், புணர்வும் பிரிவும், நண்பக லமயமும் இரவும் போன்று வேறு வேறியலவாகி மாறெதிர்ந் துளவென நாம் உணர்ந்தும், இவ்வுலகில் வளம்பட வாழ்வை விரும்பார் யார்? ஒருவருமில்லை. பார்க்குமளவிலே, இவ்வுலகில் துன்பமெனத் தோன்றுவதெல்லாம் உண்மையாகவே இன்பம் பயக்கின்றதாகு மென்றும் துன்பம் உயிர்க் கியல்பன்றெனத் திருவள்ளுவர் 'சுடச் சுடரும் பொன் போலொளி விடுந் துன் பஞ், சுடச்சுட நோற்கிற்பவர்க்கு' என்ற குறளில் குறிப்பாக விளக்கியுள்ளார். 'இன்னாமை யின்பமெனக் கொளினாகுந் தன், னொன்னார் விழையுஞ் சிறப்பு' என்ற பொய்யா மொழிக்கு, ஆசிரியர் பரிமேலழகர் 'துன்பந்தானும் உயிர்க் கியல்பன்றிக் கணிகமாய் மனத்திடை நிகழ்வதோர் கோட்பாடாகலின் அதனை மாறுபடக் கொள்ளவே, அதற்கழிவின்றி மனமகிழ்ச்சி யுடைய னாய், அதனாற் றொடங்கிய வினைமுடித்தேவிடும் ஆற்றலுடை யனாமென்பது கருத்து' எனத் தெரித்த உரை ஈண்டுசிந்திக் கற்பாலதே. இன்ப ஆக்கத்தை அடையவிரும்புவார் எவ்வாறு துன்ப நீக்கத்தைப் பெறுவாரென்பதற்கு திருவள்ளுவர் பல் வகையான் உலகின் உண்மை நிலையறிந்து அருட்புலமை மாட்சி யோடு கூறியது நோக்கத்தக்கது.

(க) அல்ல லருளாள் வார்க்கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

[அருளாகிய துணையுடையார்க்கு இம்மையில் துன்பம் இல்லை.]

(உ) அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

[ஆசையற்றவருக்கு யாதொரு துன்பமு மணுகா.]

(௩) இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறுக் கொள்ளாதா மேல்.

[ஊழினாலாகிய துன்பத்திற்கு உடல் குறியிடமென்று தெளிந்து துன்பத்திற்கு வருந்தா திருக்தல்.]

[௪] எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்

[அறிவுடையார்க்கு துன்பமும் இல்லை.]

(௫) ஏதிலார் குற்றம் போற்றங் குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு

[புறங்கூறுவோர் பிறரது குற்றத்தைப்போன்று புறங் கூறுதலாகிய தம்முடைய குற்றத்தைக் காண்பாராயின், அன்னவருக்குத் துன்பமு மணுகாது.]

(௬) 'சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார் தருநோய்'

[ஞானயோகங்களின் முதிர்ச்சியினையுடைய உயிரை சாரக் கடவனவாய் நின்ற துன்பங்கள் சேரமாட்டாமையாற் கெட்டு விடும். 'தன்னைச் சார்வனவற்றையறிந்து அவைவிற்றின் சார்பு கெட வொழுகுவனாயின் அவ்வொழுக்கத்தினை யழித்துச் சார் தலைச் செய்யா, சாரக்கடவனவாகிய துன்பங்கள்'—மணக் குடவர்.]

(எ) நோயெல்லாநோய் செய்தார் மேலவாநோய் செய்யார்
நோயின்மை வேண்டுபவர்

[தம்முயிர்க்குத் துன்பமிலாதவாறு விரும்புவோர் ஏனைய வுயிர்க்குத் துன்பஞ் செய்யார்.]

(அ) துன்பமு றவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை

[மெய்ம்முயற்சியில் துன்ப மணுகினும், வினைத்திட்ப முடையார், மனந்தளராது இன்பம் பயக்கும் தொழிலை வலிமை யுடையவராய் புரியவேண்டும்.]

(ஆ) இன்ப மிடையறா தீண்டுமவா வென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்

[அவாவில்லாதவர் குறைவிலாத நிறைந்த இன்பத்தை அடைவர். 'பசையற்றால் அன்றே அப்போதே வீடும், அதுவே வீடு வீடாமே'.]

பலவகைப் பிறப்பும் எழுவகைக்குட்பட்டதனால் பிறவா வின்பம் பெற முயலுவார் எழுபிறப்பிலும் காவற்றுணையா யுள்ளனவாகிய நன்மக்கள் பெறுதல், செய்ந்நன்றியறிதல், ஐம்பொறி யடக்குதல், மெய்யுணர்வு கைவரப்பெறுதல் உண்மை நூல்களை ஆராய்ந்தறிதல் முதலியனவற்றைக் கைக் கொள்ளவேண்டும். இதனை பொய்யில் புலவர் கூறுமாற்றான் கண்டு தெளிக.

(க) எழுபிறப்புந் தீயவை தீண்டாபழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்

(உ) எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு

(ங) ஒருமை யுளாமை போலைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து

(ச) ஒருமைக் கட்டான் கற்றகல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

இஃதொடு நில்லாது திருவள்ளுவரது அறிவுநூல் துன்பம் தோன்றாதிருக்க, துன்பம் அறிவின் திரிபானதான், அதனை மாறி நினைப்பின் அஃதொழியுமென அறைதலுற்றது. இன்பத் திற்குப் பின் துன்பமும், துன்பத்திற்குப் பின் இன்பமும், நிக மும் ஒற்றுமையினால் வருதலான், துன்பத்தில் வருந்துதலில்லா தும், இன்பத்தில் மகிழ்தலில்லாதும், அவை காரணமாக

நெஞ்சத்துக் கோடாமையுடனிருத்தல் வேண்டும். இன்பத்தை மதித்து மகிழா திருப்பின் துன்ப மில்லையென 'இன்பத் துளின்பம் விழையாதான் றுன்பத்துட், டுன்ப முறுதலிலன்' என்று தமிழ் மறை புகட்டுவது அறியப்படும் உண்மையே யாகும். பிறவியில் இன்பமும் துன்பமும் மாறிமாறி வருதலா னும், பிறந்தோருறுவது பெருகிய துன்பமாதலானும், பிறப்புத் துன்பத்தை நீக்க பிறவாமை வேண்டும், இதனை 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது, வேண்டாமை வேண்டவரும்' என்ற குறட்பா வலியுறுத்துதல் காண்க. பற்றற்ற கண்ணே பிறப்பறுமாதலால், அறிவுடையார் யாவரும் பரம்பரனைப்பற்ற லாய பற்றினைக் கைக் கொண்டு மற்ற பற்றுக்களை அறவே நீக்கவேண்டும். 'பற்றுகபற்றற்றான் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு' என்ற ஓரடி முக்காலை ஈண்டு கருத்திற் பதிக்கற்பாற்று. இவ்வாறு பிறவியை நீக்கற்கு இன்பமும் துன்பமு மில்லாதவனாகிய இறைவனது பொன்னடியை மெய் யுணர்வாலறிந்து சார்தல்வேண்டும். இதுபற்றியே

(க) வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில

(உ) தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது

(ங) பிறவிப் பெருங் கடனீந்துவர் நீந்தா
ரிறைவ னடி சேராதார்,

என்று அறிவு நூலியற்ற வந்த திருவள்ளுவர் அருளிச்செய் தனர். இக்கருத்தினை யொட்டியே

'துன்பமே பிறப்பே யிறப்போடு மயக்காந்
தொடக்கெலா மறுத்த நற்சோதீ
யின்பமே வுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்'

எனவும் அன்பு நூலாகிய திருவாசகத்தில் மணிவாசகப் பெரு மான் அருளியதையும் நோக்குக. இவ்வின்பமே உயிர்கள் உலகியல் வழாது வாழ்க்கைச் சாக்காடுகைத்தற்கு உறுதுணை யாகும்.

(தொடரும்.)

# திருவிளையாடற் புராண வாராய்ச்சி

E. R. நாசிம்ம ஐயங்கார் அவர்கள் B.A., B.L., சேலம்.

(முற்றொடர்ச்சி துணர் 12 மலர் 6 பக்கம் 201)

இனிப் பரஞ்சோதியார் நூலில் சேனவரையர் கருத்து காணப்படாமையும் ஓர் சான்றாகும். மதுரைத் திருநகரப் படலத்தில் வணிகர் மறுகைக் கூறுமிடத்து,

"புல்லியோர் பண்டங் கொள்வார் வினவி னப்பொரு டம்பக்க
மில்லெனி னினமா யுள்ள பொருளு ரைத்தெதிர் மறுத்து
மல்லதப் பொருளுண் டென்னின் விலைசுட்டி யறுத்து நேர்ந்துஞ்
சொல்லிலு மிலாபங் கொள்வார் தொன்மர பிருக்கைச் சொல்
[வாம்"

என்னும் செய்யுளில் நன்னூலார் கூறியுள்ள

"தம்பா லில்ல தில்லெனி னினனு
யுள்ளது கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே"

என்னும் சூத்திரத்தையாண்டு வணிகர் மாண்பை விளக்கிக் கூறியுள்ளார் "விலைசுட்டியறுத்து நேர்ந்து" என்பதால் நன்னூலார் கருத்தையும் விரித்துக் கூறினரென்னவுமாம், நன்னூலார் கருத்தும்

"எப்பொரு ளாயினும் அல்ல தில்லெனின்
னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்"

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் கூறியுள்ள உரையைப் பின்பற்றியதாகும். இளம்பூரணர் உரையில் சொற்கள் வருவித்து வலிந்து பொருள் கொள்ளப்பட்டதென்று சேனவரையர் இச் சூத்திரத்துக்கு வேறு பொருள் கூறினர். அல்லதில்லதெனும் ஓர்வாய்பாடு கூறுவதற்கு ஓர்விதி வகுக்கப் பட்டதென்று சேனவரையர் கூறியிருப்பதே பொருந்துமென இலக்கணமறிந்தோர் கூறுவர். பரஞ்சோதியார் சேனவரைய ருக்கும் முற்பட்டவராதலின் சேனவரையர் உரையைத் தழுவ

வில்லை யென்பது தெளிவாதல் காண்க. சேனவரையர் 13-ம் நூற்றாண்டு இறுதியிலிருந்தவராவர். நன்னூலார் 12-ம் நூற்றாண்டிறுதியிலிருந்தவராவர். எனவே பரஞ்சோதியார் 13-ம் நூற்றாண்டிடையில் இருந்தவர் என்பது போதரும்.

இதுகாறுங் கூறியவாற்றால் சேனவரையர், தொல்காப்பியப் பேராசிரியர், நச்சினார்க்கினியர், இலக்கண விளக்க வாசிரியர், சிவஞானமுனிவர் முதலியோர் கருத்து பரஞ்சோதியார் நூலில் காணப்படாமையும், இளம்பூரணர், நாற்கவிராசநம்பி, நன்னூலார் முதலிய 13ம் நூற்றாண்டுக்கு முற்பட்டோர் கருத்தே பரஞ்சோதியார் நூலில் காணப்படுவதாலும் பரஞ்சோதியாரைப் பிற்காலத்துப் புலவர் என்போர் கூற்றுப் பொருந்தாவுரை யென்பதாம். பெரும்பற்றப்புலியூர் நம்பியார் 13ம் நூற்றாண்டிறுதியில் இருந்தவரென முன்கூறினும். எனவே பரஞ்சோதியார் நம்பியாருக்கு முற்பட்டவராக இருவரும் 13ம் நூற்றாண்டில் திகழ்ந்தவ ராவரென்பது தோற்றமாம்.

பரஞ்சோதியார் புராணத்தின் உரையாசிரியர் புலவர் தோன்றி 280 ஆண்டுகட்கு முன்னரென்று கூறியது ஆராய்ச்சியின்றியும் ஆதரவின்றியும் கூறியதாகும். மணிவாசகனர் காலவாராய்ச்சிக்கார ரொருவர் கடவுண் மாமுனிவருக்கும் பரஞ்சோதியார் பிற்பட்டவரென்றார். இவருரையும் வழுவின்பாற் படும். இவ்விருவரும் ஐயரவர்கள் நம்பியார் நூலை பரஞ்சோதியார் நூலொடு ஒப்புமை கருதிக் கூறினரெனக் கொண்டவராவர். இனி இவ்விரு நூல்களில் காணப்படும் ஒப்புமையாலும் எமது கருத்து வலியுறுவதைக் காட்டுவாம்.

திருஞானசம்பந்தர் மதுரையடைந்து இறைவனை வணங்கினபின்னர் மறுகின் வழியே சென்றகாலை நாயனாரை எதிர்கொண்டழைத்து தமது மடத்தில் தங்குமாறு ஒருவர் வேண்ட அதற் கிணங்கி யவ்விடத்தில் தங்கினரென்று பரஞ்சோதியார்,

"வேண்டுகொண் டருளைப்பெற்று மீளுமப்போது கண்டு
மூண்டவைம் போறியுவென்ற வாசீசமுனிக ளென்ன

ஆண்டளோ ரொருவர்வேண்ட அவர் திரு மடத்திலன்பு
பூண்டெழு காதலோடும் போயினர் புகலிவேந்தர்''

என்னும் செய்யுளில் கூறியுள்ளார். இங்கு நாயனருக்கு தொண்டாற்ற வந்தவருக்கு உதவியாக திருநாவுக்கரையரை சமயத்துக் கேற்ற வுவமை கூறியுள்ள திறன் இன்புறற்பாலது. இந்நிகழ்ச்சி நம்பியார் புராணத்தில், மாற்றப்பட்டு

"இன்னருள்சே ரமைச்சனு ரிடங்காட்டப் போந்தினிய
தொன்னெறிசேர் வாகீசச் சுவாமிமடத் தவதரிப்ப''

என்று கூறப்பட்டுளது. இங்கு வாசீச சுவாமிமடம் ஒன்றிருந்ததாகக் கூறியிருப்பது கால இடர்பாட்டை உடையதாகும். நாயனர்கள் காலத்தில் நாயனர் பெயர்கொண்ட மடங்கள் ஏற்படவில்லை யென்பதை அறிஞர் அறிவர். இங்குக் கூறிய செய்தி சேக்கிழார் புராணத்தும்

"சித்த மின்புறு மமைச்சனுர் திருமடங் காட்டப்
பத்தர் போற்றிடப் பரிசனத் தொடுமினி தமர்ந்தார்''

என்பதில் காணப்படு மேனும் வாசிசர் மடம் இருந்ததாகக் காணப்படாதது குறிக்கத்தக்கது. நம்பியார் நூலில் சேக்கிழார் கருத்தும் பரஞ்சோதியார் கருத்தும் ஒருங்கே யமைத்துக் கூறப்பட்டுள்ளது தெளிவாம். சேக்கிழார் காலத்தும் பரஞ்சோதியார் காலத்தும் மதுரையில் இப்பெயர்கொண்ட மடம் இருக்கவில்லை யென்பதும் தெளிவாம். நம்பியார் கருத்துக்கு பரஞ்சோதியார் செய்யுளே அடிப்படையாகுமென்பது தெளிக. இவ்வுதாரணத்தால் நம்பியார் இருநூலையும் செவ்வனே ஆய்ந்துள்ளாரென்பது உணரலாகும்.

பரஞ்சோதியார் கூறும் உவமையை நம்பியார் வேறொரு வகைப்படுத்திக் கூறுவதற்கு மற்றொரு காரணத்தைக் காட்டுவாம். இறைவன் அட்டாலைச் சேவகன் வேடங்கொண்டு எய்த வம்பு யானையின் மத்தகத்தைப் பிளந்து அங்கே தங்கியிருந்த தோற்றத்திற்கு

வம்புளாய் மலர்ந்த வாரான் வரவிடு மத்தக் குன்றில்
கிம்புளாய் வடிவங் கொண்ட சேவக னேவல் செய்த

வம்புளாய்த் தூணம் விள்ள வன்றவ தரித்தா வாபோல்
செம்புளாய்க் கொடிய நார சிங்கமா யிருந்த தன்றே

என்னும் செய்யுளில் கல்லைப்பிளந்து தோன்றிய நரசிங்கவவதாரத்தை உவமை கூறியுள்ளார். நம்பியார் ஆராய்ச்சியில் சிறந்தவராதலின். இவ்வுவமையை மற்றோர் வகையாக யானைமலையில் நரசிங்கமூர்த்தி கோயிலொன்று குடையப் பெற்றதென்று சாசனச் சான்று பகரும் வரலாற்றை,

"பாவியர் விட்ட கொற்றப் பருப்பத விபத்தை வீழ
மூவர்க டலைவன் சிங்க முகக்கணை விடுத்த லாலே
காவல னவதா னத்தைக் காசினி காண நண்ணி
மேவரு நரசிங் கத்தை யிருத்தினன் வேழக் குன்றில்"

என்னும் செய்யுளில் கூறியுள்ளார் காண்க. வரகுண மகாராசன் காலத்தில் (8ம் நூற்றாண்டிறுதியில்) மாறன்காரி என்னும் அமைச்சன் கட்டிய கோயிலின் செய்தியை இறைவன் மேலேற்றிக் கூறினார். மற்றும் பரிச்சேவனாக இறைவன் வீற்றிருந்த தன்மையைப் பரஞ்சோதிமுனிவர்,

"அண்டமெலா மாதாரமாகத் தாங்கு மானந்த தனிச்சோதி
[யண்டந் தாங்குஞ்
சண்டமறைப் பரிதனக் காதார மாகி தரிக்க வோருகாலத்து
[மசைவிலாத
புண்டரிகத் தாளசையப் பாச நீங்கும் புனைகரத்தாற்
[பாசம் பற்றிக்
கொண்டரச னெதிர்போந்து மன்னவெங்கள் குதிரை
[யேற்றஞ் சிறிது காண்டியென்றார்."

என்னும் செய்யுளில் கூறியுள்ளார். இதில் "ஒரு காலத்து மசைவிலாத புண்டரிகத் தாளசைய" என்பது செய்யுளை நிறைக்க வந்ததுபோல் தோன்றுகின்றது. இதன்பொருளைத் தனியே எடுத்துக் காட்டவும் இச்செய்யுள் கருத்துமுழுதும் அமையவும் நம்பியார் இருசெய்யுள் பாடியுள்ளார்.

"அவ்வயி னெங்குந் தானே யாதார மாயிருப்பத்
தவ்வுமோர் கோடகத்தை யாதார மாக்கிச் சால

வெவ்விய மூன்றுபாச மறுக்குமேன் கரத்து மிக்க
செவ்விய விரண்டு பாசம் பிடித்தனன் றிறனமகூற"

எனவும்

கருதிடிஞெரு காலத்து மசைந்திடாக் கமலத்தாளை
பரிவொடுங் காணயாரும் பன்முறை யுற வசைத்து
கருமலரயனுன் மாலான் வறையினு லளக்க வொண்ணுந்
தருமநீ டுருவத்தானு தானுமே யென விருந்தான்"

எனவும் பாடியுள்ளதுகாண்க. பரஞ்சோதியார் நூலின் சொற்றொடர்கள் இச்செய்யுளிடத்தும் காணப்படுவதைக் குறிக்க. இவ்விரு நூல்களை ஒப்பிடு மிடத்தும் பரஞ்சோதியார் நூலே முற்பட்டதெனக் கூறவேண்டி யிருத்தல் காண்க.

இனி திருவிளையாடற் புராணங்களை சேக்கிழார் நூலொடும் ஒப்பிடுவாம். சேக்கிழார் தமது புராணத்தில் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனுரும் சைவ நெறியி லொழுகினதை

"ஓங்கிய சைவ வாய்மை பொழுக்கத்தி னின்ற தன்மை
பூங்கழற் செழியன் முன்பு புலப்படா வகைகொண் டுய்த்தார்"

எனக் கரந்தொழுகினுரெனச் சுருக்கமாகக் கூறியுள்ளார். திருவிளையாடற் புராணகாரர்,

"அருந்தமிழ்ப் பாண்டி வேந்தர்க் குறுதிபா வாக்கஞ் செய்யும்
மருந்தினிற் சிறந்த கற்பின் மங்கையர்க் கரசி யாரும்
பெருந்தகை யமைச்சு நீரிற் குழைத்தன்றிப் பிறங்கப் பேறு
தருந்திரு நீறி டாராய்ச் சிவனடிச் சார்பி னின்றுர்"

எனப் பரஞ்சோதியாரும்,

"அனைவரும் புலத்துப் போந்தி தென்கொலென் றலையக் கண்டு
புனிதநீ றணியா தஞ்சி புனல்கொடு நீறு சாத்து
மனமுடை மானி யாரும் மந்திரித் தலைவ ருநு
நினைவறிந் திருந்து சொல்வார்........................."

என நம்பியாரும் நீரை நீருக வணிந்து சைவ நெறியிலொழுகினுரென ஓர் அழகுபடக் கூறியிருத்தல் காண்க. திருவிளையாடற் புராண காரரில் ஒருவர் மற்றொருவர் கருத்தைத் தழுவினுரென்பது புலப்படும். இருவரும் சேக்கிழார் கருத்தை விரித்துரைக்

கவும் மங்கையர்க்கரசி, குலச்சிறையார் இருவர் மனத்திட்பத்தையும் அறிவிக்கவும் ஆசிகொண்ட உபாயம் வியக்கற்பாலது. திருஞான சம்பந்தர் பாண்டியன் வெப்புத் தீர்க்க முயன்ற போது சமணர் யாதொரு தடையும் எழுப்பினதாக சேக்கிழார் கூறவில்லை. இதனை

"அன்னவன் வலப்பால் வெப்பை ஆலவா யண்ணல் நீறே
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்ப தென்று"

என்னும் அடிகளில் கூறியுள்ளது காண்க. நோயுற்றவர் பிணி நீங்குவதற்கு திருநீறெடுத்து சாத்தும்போது இறைவனீறெனக் கூறும் வழக்கை நாயனாரும் அனுசரித்து தாங்கையில் கொண்ட நீறு ஆலவாய்ப் பெருமான் நீறெனக் கூறியதில் ஓர்பொருள் பொதிந்திருப்பதாகத் திருவிளையாடற் புராணகாரர் கூறுந் திறன் பாராட்டற்பாலது. நாயனார் தம் பையிலிருந்த நீறை எடுத்தபோது சமணர் தடுத்ததாக,

"நீயிர் மானமிக் குடையராய்ச் செருக்கழிந் திருப்ப
பாய கேள்வியோர் புண்ணியப் பையுணீ றள்ளிக்
காய நோயது தணித்திடக் கருதினா ரதனை
மாய நீறென விலக்கினர் மாயை செய் தழிவார்"

என்றுகூறித் தடுப்பதற்கு நாயனார் கையிலுள்ளநீறு ஓர்வஞ்சனையுடையதென வோர் காரணத்தை பரஞ்சோதியார் கற்பித்தார். இதன் கருத்தாவது நாயனார் இளம்பிள்ளையானதால், இவரிடத்து நோய் தீர்க்குந் திறனில்லை; பிறர் யாரோ மந்திரித்தனுப்பிய நீறை நாயனார் பையில் கொண்டுள்ளாரெனக் கருதினாரென்பதாம். இக்கற்பனையை,

"மண்டமுன் மாற்ற வல்லையேல் மாற்று பற்றுநின் வழிகளைக் [கொண்டே
பண்டைநின் கரத்துக் கொண்டநீ றுகா பகை மருந்திட்ட [நீறின்று
கண்டிடிற் சென்னி மண்டலத் தவனீ யென்று முன்கண்டது [விலக்க
முண்டகவதன மழகெழச் சிறிது முறுவல் கொண்டுரை [செய்வர் முனிவர்"

என நம்பியாரும் பின்பற்றி வேறுமோர் காரணம் கற்பித்துக் கூறுவார். இவ்விளம்பிராயத்தான் பகை யரசனுன சென்னி நாட்டினின்றும் வந்தவனுதலின் அரசனுக்கே தீங்கு விளைக்கக் கூடுமெனக் கூறியுள்ளது அரசன் சமணர் சூழ்ச்சிக் குடம்படுவா னென்னும் திறத்தைக் காட்டுவது காண்க. இங்கு எடுத்துக் காட்டிய திட்டாந்தங்களால் சேக்கிழார் கருத்தை திருவிளை யாடற் புராணகாரர் ஆராய்ந்துள்ளதும், பரஞ்சோதியார் கருத்தை நம்பியார் பின் பற்றியதும் தெளிவாம்.

இதுகாறுங் கூறியவாற்றால் பரஞ்சோதியார் நூலும் நம்பியார் நூலைப்போல் பழமை வாய்ந்த தென்பது உணரக் கூறினும். பரஞ்சோதியார் நூலும் நம்பியார் நூலுக்கு முற் பட்ட தென்பதும் போதரும்.

இனி நம்பியார் புராணம் பழைய திருவிளையாடல் என்னும் பெயருண்டென்பதன் காரணத்தை யாராய்வாம். நம்பியார் நூல் உத்தர புராணமென்னும் வடமொழி நூலின் மொழி பெயர்ப்பாகும். உத்தரபுராணம் இதுபோது வழக்கினின்றும் வீழ்ந்ததெனினும் நம்பியார் நூலில் வடமொழி நூலின் கருத்து முழுதும் அமைந்துள்ள தென்பதற் கையமில்லை. இந்நூலை ஆலாசியத்தோடு ஒப்பிடும் போது ஆலாசியத்தில் மூர்த்திநாய ஞர் வரலாறும் காரிநாரிபார்ப் பாப்பகுத்ததும் நீக்கப்பட் டுள்ளன. இதில் கதைகளின் வைப்பு முறையும் சிறந்து விளங் கும்; முன்னைநூலில் கூறப்பட்ட 62 திருவிளையாடல்களையே யாற்றி 64 ஆக ஆலாசிய மகாத்துமியத்தில் கூறப்படும். இத ஞல் ஆலாசியம் பிற்பட்ட நூலென்பது தெளிவாம். இது புதிய திருவிளையாடலாகவும் உத்தர புராணம் பழைய திருவிளையாட லாகவும் கருதப்பட்டதென்பது போதரும். இதனை

"அம்பதுமத் தார்ச்செல்வி யாண்டான் கவுணியர்கோன்
நம்பெரும்பற் றப்புலியூர் நம்பிவியந்—தெம்பெருமான்
ஆதிவிளை யாட லறுபத்து நான் கினையு
மோதி முடித்தா னுவந்து" என்னும்

சிறப்புப் பாயிரத்தினும் நம்பி நூலில் கூறப்பட்ட அறுபத்து நான்கு திருவிளையாடல் பழையதெனப் பட்டதையறிக. பழைய திருவிளையாடல் என்றது திருவிளையாடல் வரலாற்றைக் குறிப் பதே யாகுமென வறிக. நம்பியார் நூலின் தொன்மையைக் குறித்த தன்றென்பதை கருத்தில் இருத்துக.

# இயைபு நூல்

திரு. A. சீனிவாசாச்சாரியார் B.A.,L.T.,
ஆசிரியர் இந்து உயர்தரக் கல்லூரி சீவில்லிப்புத்தூர்

## 2. இயன் மாற்றமும் நிறையும்.

(முற்றொடர்ச்சி துணர் 11. மலர் 7. பக்கம் 268)

பொருண்மையும் நிறையும். எப்பொருட்கும் நிறை உண்டென்று முற்கூறினம். இந்நிறைக்குக் காரணம் யாது? ஒரு சிறு இரும்புக் கட்டியினும் பெரிய இரும்புக் கட்டி யொன்றில் பொருள் மிகுதியாயிருத்தல் வெளிப்படை; இத்தன்மையைப் 'பொருண்மை' யென்போம். உலகத்துள்ள பொருள் ஒவ்வொன்றையும் நிலம் தனது மையத்தை நோக்கி இழுக்க முயலுதலின், ஒவ்வொருபொருட்கும் நிறையென்பது உண்டாகின்றது. ஆதலின் பொருண்மை வேறு, நிறைவேறு. ஒருபண்டத்தில் அடங்கிய பொருளின் அளவே பொருண்மையாகும். நிலக்கவர்ச்சியின் பயனுய்த்தோன்றும் 'நிறை' அல்லது 'கனம்' பொருண்மைக்குத் தக்கவாறு வேறுபடுகின்றது; அன்றியும், பொருண்மை வேறுபடாத போதும், பொருண்மை மிகினும், குறையினும், அப்பொருளின் நிறை (முறையே) மிகுந்தும் குறைந்தும் வரும். ஒருபொருளை ஒருதுலையின் ஒருதட்டில் வைத்து மற்றொன்றில் எடையிட்டு நிறுப்பதனல், அதன் பொருண்மையை நேராக அறிய இயலாது, அதன் நிறையே அறியப்படுவதாகும். பொருண்மையையும் (நிறுக்கும் இடத்திலுள்ள) நிலக்கவர்சியையும் பெருக்கிவரும் தொகையே நிறையாகும். ஆதலின் எவ்விடத்தும் யாதேனும் ஒருபொருளின் நிறைக்கும் அதன் பொருண்மைக்கும் உள்ள ஈவுமாறுதாகலின், சமநிறையுள்ள இரு பொருள்கள் சமபொருண்மையுள்ளன வாதல்வேண்டும். அன்றியும், ஓரிடத்துப் பொருளின் நிறைமாற்றம் காணப்படுமேல், அதன் பொருண்மை மாறுபட்டதாக அறிதல்வேண்டும்.

இயன்மாற்றத்தில் நிறைமாற்றம். பொருள்கள் இயன் மாற்றம் அடையுங்கால் அவைகளின் பண்புகள் மாறுமெனக் கூறினேம்; அவைகளின் நிறைமாறுகின்றதா என்பதை இனி ஆராய்வோம்.

நிலவியம் போன்ற சிலபொருள்கள் எரிந்த பின்பு சாம்பர் எஞ்சுகின்றது; மெழுகுவத்தி சந்தகம் போன்ற சிலபொருள் கள் எரிந்தபின்பு ஒன்றும் எஞ்சுவதில்லை. இதனுல் எரியும் பொருள்கள் அழிவடைகின்றனபோல மேலெழுந்த பார்வைக் குத் தோன்றுகின்றது. ஆனுல் நிலவியம் எரியுங்கால் ஒரு வெண்புகை வெளியேறுவதும், கந்தகம் எரியுங்கால் நாற்ற முள்ள ஓர் ஆவிகிளம்புவதும், முறையே காட்சியாலும் மோப் பத்தாலும் உணரப்படுகின்றன. ஆதலின் ஒருபொருள் இயன் மாற்றமடையுங்கால் அதன் நிறைமாற்றமடைகின்றதா என் பதை ஆராய்தற்பொருட்டு, அது எரியும்போது தோன்றும் எல்லாப் பொருள்களின் நிறையையும் சேர்த்துக் கணக்கிடுதல் வேண்டும்; இரண்டு சோதனைகளால் இதை அறிய முயல்வாம்.

ஒரு சிறிய குகைக்குள் மெல்லிய நிலவியத் தகடுகளின் துண்டுகள் சிலவற்றையிட்டு மூடியால் மூடி இரண்டையும் நிறுத்து, மூடியவண்ணமே குகையை எரியுமிழ்அடுப்பினுற் சூடாக்கி, அதன் அடி செந்தணலானபின் மூடியை இடை யிடையே சற்றே உயர்த்தி உடனேமூடுக. உயர்த்துங்கால், வளி உட்புகுமாறும் நிலவியப்புகை வெளியேருதவாறும் உன்னிப் பாய்ச்செய்க. இவ்வண்ணம் செய்வதால் நிலவியம் முழுதும் எரிந்து வெண்மையான சாம்பராகும். குகை ஆறியபின், மூடியோடும் சாம்பரோடும் அதனை நிறுக்கின், சாம்பரின் நிறை நிலவியத்தின் நிறையினும் மிகுந்திருத்தல் புலப்படுகின்றது

ஒரு கண்ணுடிக் குழல்உருட்டின் (Cylinder) அடியிற் பொருந்துதற்கேற்ற ஒரு தக்கையின்மீது சிறியதோர் மெழுகு வத்தியை நிறுத்தி, அத்தக்கையில் வளிபுகுமாறு பல துளைகளை யிட்டு, உருட்டின் அடியை அத்தக்கையால்மூடிவிடுக. உருட்டின் மேற்பகுதியில் ஒரு கம்பிவலையைச் செருகி, அதன்மீது உவரி

யக்காரக் கழிகளை (Sticks of Caustic soda) நிரப்புக. தக்கையை வெளியிலெடுத்து வத்தியை ஏற்றி, மீண்டும், அதனைப் பண்டுபோல் அமைத்து, உருட்டினை ஒரு துலையின் இடப்புறத் தட்டின்மேல் கொக்கியினின்றும் தொங்கவிடுக. வலப்புறத் தட்டில் சமன் எடையாம் வண்ணம் நிறைகளை இடுக. வத்தி எறிய எறிய, வத்தியுள்ள தட்டு தாழ்ந்துவரக் காணப்படுகின்றது. வத்தி எறியுங்கால் எழும் ஆவிப் பொருள்களனைத்தையும் உவரியக்காரம் உள்ளிழுத்து அடக்கிக் கொள்ளும் பண்பினதாகலின், வத்தி நிறையினும் வத்தி எறியும்போது தோன்றும் பொருள்களின் நிறை மிக்கிருப்பது வெளிப்படுகின்றது.

இவ் இருசோதனைகளானும், இயன் மாற்றத்தால் விளையும் பொருள்களின் நிறை அம்மாற்றமடையும் பொருளின் நிறையினும் மிகுதல் காணப்படுதலின், இயன்மாற்றத்தால் ஒரு பொருள் அழிவடைவதன்றி ஆக்கமுறுகின்றதோ என்று ஐயுறற்கிடனுகின்றது. ஆனல் ஒருபொருள் எரிதற்கு இன்றியமையாத்துணையான வளியினை இருசோதனைகளிலும் உட்புகவிட்டிருத்தல் ஊன்றி நோக்கத்தக்கது. ஒருக்கால் இரண்டிடத்தும் கண்ட நிறைமிகுதிக்கு உட்புகுந்த வளியே ஏதுவாயிருத்தலும் கூடும். ஆதலின் இவ் ஐயப்பாட்டை ஒழித்தற்பொருட்டு, அடைபட்ட இடத்தின்கண் இயன்மாற்றத்தை நிகழ்வித்து, அதன் முன்னும் பின்னும் பொருள்களின் நிறையினைக் கணக்கிட்டு ஒப்பிடல் வேண்டற் பாலதாகின்றது. இதற்கென வேறிரண்டு சோதனைகள் செய்யலாம்.

அழுக்கற்ற உலர்ந்த உண்டைக்கூம்பி (Round-bottomed flask) யொன்றிற்குள் ஒரு சிறு மஞ்சள் எரியத்துண்டை (வடிதாட்கிடையே வைத்து அமுக்கி உலர்த்தியபின்) இட்டு அக்கூம்பியின் வாயைத் தக்க அடைப்பானுற் காற்றுப்புகாத வண்ணம் அடைத்துவிடுக. அதனை ஒருதுலையில் வைத்து, அதன் நிறையை உன்னல் இயன்றவறை நுணுக்கமாகக் கண்டுபிடி. பின் அக்கூம்பியின் அடியை வெந்நீரிற்குள் அமிழ்த்திப் பிடி, எரியம் எரியத் தொடங்கியதும், கூம்பியை வெளியே

எடுத்து, அணையும் வரை ஒருவிரலால் அடைப்பானை அழுத்திக் கொண்டிரு. கூம்பி ஆறியதும், அடிப்பீரத்தைத் துடைத்து மீண்டும் அதன் நிறையைக் காண்க. நிறை முன்னர்க் கண்ட நிறையினும் வேறுபடாதிருத்தல் புலப்படும். பின்னர்க் கூம்பியைக் குப்புறக் கவிழ்த்தி, அதன் வாயை ஒரு கலத்தி லுள்ள நீர்க்குள் ஆழ அமிழ்த்தி, அடைப்பானை நீக்குக. அப்போது நீர் கூம்பிக்குள் ஒரெல்லைவரை ஏறுகின்றது. இத னல் கூம்பியில் அடைபட்டிருந்த வளி, எரியம் எறிந்ததன் பய ளுய், ஒரு பகுதியை இழந்து நிற்றல் அறியக் கிடக்கின்றது; ஆயினும் கூம்பியின் முழுநிறை மாறுபடாமையின், எரியத் தினின்றும் எழுந்த வெண்புகை எரியத்தினும் நிறை மிகுதல் இன்றியமையாதது என்பதும் பெறப்படுகின்றது.

அழுக்கற்ற தட்டைக்கூம்பி யொன்றினுள் 20 கன சதி மீட்டர் (20 C. C.) உணவுப்புக்கரையத்தை ஊற்றி, வெள்ளி வெடியிகக் (Silver nitrate) கரையமடங்கிய ஒரு சிறு சோதனைக் குழாயையும் கூம்பிக்குள் வேருகவைத்து, கூம்பியின் வாயைத் தக்க அடைப்பானல் இறுக அடைத்துவிடுக. கூம்பியின் நிறையைத் துலையினுற் கண்டறிக. பின்னர், கூம்பியைச் சாய்த்து, இரு கரையங்களையும் கலக்குமாறு செய்க. இரண்டும் இரட்டைமுறிவு என்னும் இயன்மாற்றத்திற்குள்ளாக, வெண் படிகை (Precipitate) பொன்று (வெள்ளிப்பசியை—Silver Chloride) தோன்றுகிறது. மீண்டும் கூம்பியின் நிறையைக் கண்டறிக. நிறைபண்டுபோல் இருப்பதன்றி மாறுபடுவதில்லை.

இவ் இருசோதனைகளும் புலப்படுத்தும் ஓர் உண்மை யாதெனின், ஒரு பொருள் அடைபட்ட இடத்து இயன்மாற்ற மடையுங்கால், இயற்மாற்றத்திலே தொடர்புற்ற அனைத்துப் பொருள்களின் மொத்தநிறை மாற்றத்திற்கு முன்னும் பின் னும் ஒன்றேயாம் என்பது. அப்பொருள்களில் யாதேனும் ஒன்றின்நிறை மாற்றத்திற்குப் பின் முன்னினும் குறைந்து காணப்படின், அதனெடும் தொடர்புற்ற மற்ருென்று மாற்றத் திற்குப் பின் அதேயளவிற்கு நிறை மிகுந்திருத்தல் வேண்டும்;

அன்றேல், மொத்த நிறை மாறுமை பொருந்தாது. பலமுறை பல அறிஞர்கள் பல்வகைப் பொருள்களைத் துணைக் கொண்டு முற் கூறிய உண்மையை ஆயந்தவிடத்தும், கோடியில் ஒரு கூறேனும் நிறை மிகினும் குறையினும் அதனையும் தெளிய எடுத்துக் காட்டும் நுண்கருவிகளைப் பயன் படுத்திய விடத்தும் சோதனை பிழை யளவிற்கே வேறுபாடு காணப்படுவதாயிற்று. ஆதலின் "இயன்மாற்றம் நிகழும்போது, மாற்றத்தில் தொடர் புறும் எல்லாப் பொருள்களின் மொத்த நிறை (அல்லது பொருண்மை) மாற்றத்தினுல் விளையும் பொருள்களின் மொத்த நிறை (அல்லது பொருண்மை) க்கு இணையாகும்" என்ற உண்மை நிலை நாட்டப்பட்டதாயிற்று. இது 'பொருண்மை அழியாமை'யென்னும் முறைமை (The law of conservation of Mass) யெனப் பெயர்பெறும். ஒரு பொருளின்கண் நிலை மாற்றம் நிகழும்போதும் இது பொருந்தும். இம்முறைமை யைப் பொருளழியாமை முறைமை யென்னலும் உண்டு; உலக முழுமையிலும் உள்ள பொருள்களின் மொத்த அளவு, எப் பொருள் எம்மாற்ற மடையினும், மாறுபடாது என்பதே இதன் பொருளாகும். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் லவாய்சியே என்னும் பிரெஞ்சு அறிஞர் நடாத்திய தொடர்ந்த ஆராய்ச்சியின் பயனக நிறுவப்பட்ட நிறையழியாமையென்னும் இம்முறைமை இயைபுநூற்கு அமைந்த அடிப்படைக் கல்லாகும். இது பொய்க்குமாயின், இயைபுநூற் புலவர் இன்னின்ன மாற் றத்தால் இன்னின்ன பின்னர் விளையும் என்பதை முன்னுணர மாட்டாதவராவர்; அன்றே இயைபுநூல் அழிந்துவிடும்.

இயன் மாற்றத்திற்குக் காரணம். பளிதனக் (Platinum) கம்பியொன்றைச் சூடாக்குங்கால் அது இயன்மாற்றமடைவ தில்லை; ஆனல் நிலவியக்கம்பியைச் சூடாக்குங்கால் அது புதிய தொரு கூட்டுப் பொருளாக மாறுகின்றது. இவ்வேறுபாட் டிற்குக் காரணம் யாது? நிலவியத்திற்கும் வளியின்கண் அமர்ந் துள்ள உயிரியத்திற்கும் (Oxygen) ஒன்றோடொன்று இயைந்து ஒன்றுவதிலுள்ள ஒருவகைக் கவர்ச்சியே அதற்குக் காரணம்

என்னலாம். இக்கவர்ச்சியை இயைபுக் கவர்ச்சி என்ப (Chemical affinity). நிலவியம் சூடாகும்போது இவ் இயைபுக் கவர்ச்சி வெளித்தோன்றுகின்றது என்னலும் இயைபு நூலறிஞரது மரபு. பளிதனத்திற்கும் உயிரியத்திற்கும் அத்தகைய கவர்ச்சியின்மையே அதன்கண் இயன்மாற்றமின்மைக்கு ஏதுவாகும். இரச உயிரி (Mercuric Oxide) யிலுள்ள இரசமும் உயிரியமும் இயைபுக் கவர்ச்சிக்கு வயப்பட்டு இணைந்தொன்று யிருத்தல் பற்றியே, அச்சத்தியைவென்று இரண்டையும் பிரித்தற் பொருட்டு இரசஉயிரியை உயர்ந்த அனற்பதனெய்தும் வரை சூடாக்குதல் இன்றியமையாத தாகின்றது.

இயன் மாற்றத்தின் சிறப்பியல்புகள். (1) இயன்மாற்றத்தின் பயனாய்ப் புதிய பண்புகளையுடைய புதுப்பொருள்கள் தோன்றும். (2) இயன்மாற்றம் நிகழும்போது, இயன்மாற்றத்தின் பயனாக விளையும் பொருள்களின் மொத்தநிறை அம்மாற்றத்திற் கலந்து கொள்ளும் பொருள்களின் மொத்த நிறைக்கு இணையாகும். (3) இயன்மாற்றம் நிகழும் போதெல்லாம் அனல் உட்கொளப்படும், அன்றி வெளிவிடப்படும். (4) பொருள்கள் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருந்தாலன்றி இயன்மாற்றம் நிகழாது. (5) இயன்மாற்றமடையும் பொருள்கட்குள் ஒரு குறிப்பிட்டநிறை விதப்படியே இயன்மாற்றம் எப்போதும் நிகழும். கூட்டுப்பொருளொன்றை எம்முறையிற் பெறினும் அதன் நிறைவகை இயைபு (Gravimetric Composition) என்ஞான்றும் மாறாததாகும்.

---

# கருவிலே வாய்த்த திரு

பண்டிதர். திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள்,
தலைமைத்தமிழாசிரியர், உயர்தரக்கல்லூரி, திருவோத்தூர்

உலகில் மக்கள் பலவேறுவகையான செயல்களைச் செய்கின்றனர். ஒருசிலர் தாம் செய்ய வேண்டியவற்றைப் பிறர்துணையின்றி தாமாகவே நினைந்து செய்கின்றனர்; ஒருசிலர், பிறர்துணைகொண்டு செய்கின்றனர்; வேறுசிலர் பிறர் ஏவல் வழிநின்று, அவர் காட்டக் கண்டு செய்கினர். செய்வோர் திறம் இதுவாக, செயப்படுபொருள்கள், ஒருசில யாவராலும் மதிக்கத்தகுவனவாகவும், ஒருசில வியக்கத் தகுவனவாகவும், வேறு சிலவியப்பும் மதிப்பும் இலவாகவும் இருக்கின்றன. யாவராலும் வியக்கத் தகும் செயப்படுபொருள்கள் தாமும், பிறர் துணையின்றி ஒருவரால் தனிமையிற் செய்யப்படின், செய்தவரது அறிவுமாண்பும் கருவிமாண்பும் பிறவும் வியப்போரால் நினைந்துப் பாராட்டப்படுகின்றன. இவ்வாறு பாராட்டப்பெறும் தக்கோரது செயலின் சிறப்பியல்பினை ஆராய்ந்து உண்மை காண முயல்வோர் சிலரே; அத் தக்கோரது தகவு கருவிலேயே வாய்த்ததிரு என்று கூறியமைவோரோ பலர். உண்மைகாணும் அறிவும் பெற்றுறும் உயர்ந்தோர் ஒருவர்பால், நிகழும் வினையாற் பிறக்கும் செயப்படுபொருள்கள், உயர்ந்தோர் பலரும் உவந்துபாராட்டத் தக்க நிலையில் நிற்ப. அவற்றைகாணுங்கால், அவர்பால் அச்செயற்குறிய தளர்ச்சியும், சோர்வும் புலனாகாமை கண்டவிடத்து, "இன்னோரன்னவற்றைச் செய்வது இவர்கட்கு எளிதன்று; இச் செயல்வன்மை இவர்கட்குக் கருவிலேவாய்த்த திரு", என்கின்றனர். எனவே, செயற்கரிய செய்யும் பெரியார்பால், அரிய செய்கை யொன்று நிகழ்ந்த விடத்து, செயலருமை காணும் சிறப்புடைய மக்கள், அச்செயலின் சிறப்புத் தோன்ற, "கருவிலே வாய்த்த திரு" என்ற தொடரைச் சிறக்கக் கூறிப் பாராட்டுவர் என்பது விளங்குகிறது.

கருவிலே வாய்த்ததிரு என்ற தொடருள், கருவென்பது பிறப்பையும், திருவென்பது சிறப்பையும் கட்டிநிற்கின்றன.

கருவாய்க்கிடந்து உருவு சிறந்து பிறவி பெறுதல் உயிர்கட்கு இயல்பு. ஆதலால், இத்தொடரும் உயிருடைப் பொருளையே சுட்டி வருதலுடையதாகும். மேலும், திருவென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை யென்பவாகலின், ஓருயிரிடத்து, கண்டாரால் விரும்பிப் பாராட்டப்பெறும் செயற் சிறப்புத் தோன்றினும், அதுதானும், எல்லாவுயிர்க்கும் பொதுவாய் அமையாது, சிலவற்றின்பால் சிறப்பாய் அமைந்து தோன்றினும், அச்சிறப்பும் அமைதியும் ஒருங்க விளங்குதற்கு, கருவிலே வாய்த்த திரு என்ற சொற்றொடர் அழகுற வழங்கப் பெறும்

மனிதவுயிர் மண்ணிற் றோன்றிப் பலநாள் கழித்த பிறகே தனக்குரியவற்றைத் தானே தேடிச் செய்வன செய்யும் திறம் பெறுகிறது. விலங்குகளுட் சிலவும், புள்ளினத்துப் பலவும் பிறக்கும்போதே, தாம் வாழும் இடம், காலம் முதலியவற்றின் நிலைக்கேற்ப, வினையறிவும், வினையினை ஆற்றற்குரிய திட்பமும் பெற்றுத் திருவுடையவாய் விளங்குகின்றன. ஏனைவுயிர்களை நோக்கப் புள்ளுயிர்கள், சில இயல்புகளைக் கருவிலேயே திருவுறப் பெற்றிருத்தலை நாம் நாளும் காணலாம். இவற்றின் திருவுடைமையினை ஆராய்ந்து கண்ட மில்ட்டன் மெக்காயி (Milton Mackaye) என்னும் அமெரிக்க நாட்டு அறிஞர் கூறிய செய்தியினை ஈண்டுத் தமிழில் எழுதுகின்றேன்:

ஆஸ்திரேலியாவில் ஒருவகை வான் கோழிகள் வாழ்கின்றன. அவற்றைத் தர்மா மீட்டர் (Thermometer) பறவை யென்று அங்குள்ளவர் கூறுகின்றனர். அவை ஆணும் பெண்ணுமாகக் கூடிவாழும் அமைதியுடையவாகும். அவை கூடமைக்கும் முறை மிக அழகிது. அவற்றுட் பெண்கோழி முட்டையிடுதற்குரிய காலம் நெருங்குகையில், ஞாயிற்றின் வெயில் உறைப்பதும், மணற்பாங்கானதுமான ஓர் இடத்தைக் கண்டு, ஓரடியாழமுள்ள குழியொன்றைச் செய்யும். பின்பு, அதனுள் சருகும் புல்லும் கொணர்ந்து பெய்து, அவை வெயிலாலும் மழையாலும் உறைபட்டு மட்குவிக்கும். அவை மட்கத்தொடங்குங்கால், அக்குழியின்மேல் தன் கூட்டினைக் கட்டத்தொடங்கும்.

சேவற்கோழியும், அச்செயற்குத் தன்னின் இயன்ற உதவியினைச் செய்கின்றது.

இக் கோழி யமைக்கும் கூடு மூன்றடி உயரம் பெற்று வட்டமாக சமைந்து நிற்கிறது. இதன் குறுக்களவு (Diameter) நான்கடியாகும். கூட்டின்புறம் குச்சிகளாலும் சிறுசிறு கொம்புகளாலும் சன்னல் பின்னலாகத் தொடுக்கப்பட்டுளது. மேலும், இது, மிக்க வன்மை யுடையதாகலின், காற்றிற்கும் மழைக்கும் பிறவற்றிற்கும் சிறிதும் தளர்வுறுவதும் இல்லை. இத்துணை வன்மையுறக் கட்டப் பெற்ற இக்கூடு முடிவு பெற்றதும், இப் பறவைகள், இதன்கண் வந்து தங்குவதில்லை. ஆறுநாட்களோ, ஒன்பதுநாட்களோ கழிந்தபிறகுதான், இச்கூட்டிற்குவரும்.

வரும்போது பெண்கோழி, புறத்தே வழியொன்று செய்து கூட்டின் உட்புகுந்து முட்டை யொன்றையிடும். பின்பு, அதனை மூடி விட்டுச் சேவலோடு நீங்கிவிடும்; மறுபடியும் மூன்று நாள் கழித்தே கூடுநோக்கி வரும். வரும்போதும், அது, முன் போலவே, குழிசெய்து, உட்புகுந்து ஒரே முட்டை யிட்டுவிட்டு நீங்கிவிடும். இவ்வாறு அது, மூன்று நாட்களோ, நான்கு நாட்களோ, இடையிட்டு இடையிட்டு, பதினான்கு முட்டைகளை இடும். அதற்குமேல், பெண்கோழி முட்டையிடுவதாகத் தெரியவில்லை.

இவ்வாறு பதினான்கு முட்டைகளும் இடப்பட்டவுடன், அக்கோழி, அக்கூட்டிற்குள் நுழையாமல், புறத்தே தான் செய்த வழியையும் மூடிவிடுகிறது. அதனால், கூட்டின் உட்புறத்தே புழுக்கம் உண்டாகிறது; வெப்பமும் மிகுகின்றது. முட்டைக்குத்தொண்ணூறு திகிரி (Degree)யளவுள்ள வெப்பமே வேண்டப்படுகிறது. கூட்டின்அகத்தேநிலவும் வெப்பம் அவ்வளவில் மிகுமாயின், அதனைத் தாய்க்கோழி எவ்வண்ணமாகவோ தெரிந்து கொண்டு, புறத்தே வழியொன்று செய்து, அதன் வழியாகக் குளிர் காற்று உள்ளே செல்லவிடுகின்றது. மிக்குற்ற வெப்பம் அத்தொண்ணூறு திகிரிக்கு இறங்கியதும், குளிர்

காற்று நுழைந்து, மேலும் இறங்காதவாறு தாய்ப்பறவை தடைசெய்து விடுகின்றது. இவ்வாறு, கூட்டகத்தில் தொண்ணூறு திகிரி யளவுள்ள வெப்பமே நிலவுமாறு செய்யும் இத் தருமாமீடர் பறவையின் வித்தகம் நினைக்குந்தோறும் வியப்புத் தருகின்றது.

இவ்வகையில் சுமார் நாற்பத்தைந்து நாட்கள் சென்றதும் முட்டைகள் பொரிக்கின்றன. குஞ்சுகள் வெளிப்பட்டு, அக் குழியிலிருந்து மண்வழியே மேலேறி வெளிவருகின்றன. தாம் இருக்குமிடத்து வெப்பம் தமக்குப் போதாதென்று அக்குஞ்சுகள் வெளிவந்து விடுகின்றன என்பர். இவ்வாறு தன்னைச்சுற்றி நிலவும் காற்றினது வெப்பநிலையை அளந்து காண்டலும், ஓரளவிலேயே வெப்பநிலையை நிறுத்திக் கொள்ளலும் ஆகிய இச் செயல்கள், மக்களுள், இயற்கை நூற்புலவர் பெருமக்களுள் சிறந்தவர்க்கும் எளிதில் முடியாதனவாக இருக்க, இவற்றைச் சிறு வருத்தமும் முயற்சியும் கருவியும் பிறவுமின்றி, இவ்வாஸ்திரேலிய வான்கோழிகள் செய்துகொள்ளும் திறம் இவற்றிற்கு கருவிலேயே வாய்த்த திரு என்று கொள்ளவேண்டும்.

நம் தமிழ் நூல்களில், புள்ளினங்களை அறிஞர் ஐயறிவுயிராகக் கொண்டுளராயினும், இவற்றிற்கு மனவுணர்வு உண்டென்று கூறுவதிலர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் "மாவும் மாக்களும்" என்றற்றொடக்கத்து விதிகளால், பறவைகட்கு மனவுணர்வு இன்மை தோன்றவே கூறினர். மற்று, மேனாட்டு மக்கள் பலரும் புள்ளினங்கள் நுண்ணறிவுடையவென்றே கருதி வந்தனர். உயிர்நூற் புலவர்கள், ஆண்டுதோறும், இவற்றின் குணஞ்செயல்களை ஆராய்ந்து கொண்டே வருகின்றனர். அவர்கள், "புள்ளினம் நுண்ணுணர்வுடையவென்றல் உண்மையன்று; அவற்றிற்கு நினைத்தல் என்ற செய்கையே கிடையாது; நினைக்கவேண்டிய நியதியும் அவற்றிற்கு வேண்டா; அவற்றின் உயிர்த் தன்மையே (Instinct), அவை செய்தற்குரிய செயற்பன்மைக்காகிய செம்மை நெறிக்கண் அவற்றைச் செலுத்துகிறது," என்றே கூறுகின்றனர். அமரிக்க நாட்டு நியூயார்க்

நகரத்தில், உயிராய்ச்சிக்கழகம் ஒன்று உளது. அங்கு உயிராய்ச்சிப் புலவர்களுள் தலைமைப் புலமை நடாத்தும் ராபர்ட் குஷ்மான் மர்பி* என்பார் பின் வருமாறு கூறுகின்றார்:

புள்ளினங்களுள் உயர்வுடையன எனக் கருதப்படும் கிளியும், காக்கையும், பிற இன்னிசைப் பறவைகளும் நினைத்தற்குரிய மனப்பொறி, மிகச் சிறிதே யுடையவாகும். சிறு புழுக்களுக்குரிய மனப்பொறியும், இவற்றின் மனப்பொறியும் பெரும்பாலும் ஒத்திருக்கும். ஆயினும், உயிர்த்தன்மையினையே (Instinct) உணர்வுக் கருவியாகக் கொண்டு, செய்வன செய்து, உயிர்வாழும் புள்ளினங்கள், பல அரிய செயல்களைக் காரணம் தேராமலே, செய்து வருகின்றன. ஒரு செயலைச் செய்தல் வேண்டும் என்றெழும் உயிர்க்கிளர்ச்சியும், செய்கையாற் பிறக்கும் அமைதியும் ஒன்றையொன்று இன்றியமையாது தொடர்புற்றிருக்கின்றன.† அத்தொடர்புக்குரிய உயிர்ப்பண்பே, பறவைகளின் அருஞ்செயற்குப் போதிய ஏதுவாகின்றது; எவ்வகையாலேனும் இத்தொடர்பு இடையறுமாயின், அவற்றிற்கு உளதாகும் கையறவு நம் நினைவு நிலையினைக் கடந்து நிற்கும் என்பது அப்பெரியார் கூறும்பொருள்.

பறவைகள் சில காலங்களில் பாடுதலில் வேட்கைமிகுகின்றன. அக்காலத்து அவ்வேட்கையினை அடக்கிக்கொள்ளும் மனநிறை அவற்றிற்கு இருப்பது கிடையாது. வேண்டுங் காலத்துப் பாடுதலும், வேண்டாக் காலத்துப் பாடாதமைதலும் அவற்றிற்கு ஒல்லுவதில்லை. நீர் வழிச் செல்லும் மிதவை போல, வேட்கை வழிச் செல்லும் இயல்பே யுடைமையின், புள்ளினம் உயிர்த் தன்மையினையே உறுவ ஆகின்றன.

ஒரு பறவை இட்டு வைத்துள்ள முட்டைகளை நீக்கிவிட்டு, அவற்றைப்போல உருவமும், நிறமும் உடைய கோலி (ரவை)

---

* Doctor. Robert Cushman Murphy of the American Museum of Natural History in New York, N. America.

† "They live by a Chain system of Stimuli and responses" —Dr. Murphy.

குண்டுகளை வைப்போமாயின், அப்பறவை, உண்மை துணிய மாட்டாது, அவற்றை முட்டையென்றே கருதி யமைந்துவிடக் காணலாம். இதனாலும், அவற்றிற்கு நினைவுச் செய்கை இல்லை யென்பது விளங்குகின்றது. இதைக்காணும் அறிஞர்க்கு, இக்காலத்திற் சிலர் கோழி முட்டைகளோடு வாத்துக்களின் முட்டைகளை வைத்துப் பொரிப்பிக்கும் இயல்பு புதுமையாகா தென்பது தோன்றும். புனைந்துரை வழக்கினும், புலவர்கள் சங்கின்ற முத்துக்களை அன்னம் தன் முட்டையெனக் கருதி அடைகாக்க முயலும் எனப் புனைந்துரைத்தற்கும் இயைபுண் டென்று அறியலாம்.

ஒரு பறவை தன் கூட்டைவிட்டு, இரைதேடற் பொருட்டு நெடுந் தொலைவு செல்லும். செல்லினும், பொழுது சாய்ந்ததும் அது தன்கூடு இருக்கும் இடத்தைத் தப்பாது சென்று சேர்ந்து விடும். இதனால் இதற்கு உண்மையறிவு உண்டென்று காணலாம் ஆயினும், அப்பறவை யில்லாதபோது, அக்கூட்டினை எடுத்து ஒருகசதூரத்தில் பெயர்த்து வைத்துவிடின், திரும்பிவரும் அப் பறவை நேரே தன் கூட்டைத் தேடியடைவது கிடையாது. முன்னே அமைந்த இடத்தில் அக்கூடு இன்மை கண்டதும், அது விரைந்து பறந்து நெடுந்தூரம் சென்று மீண்டு அவ்விடந் துக்கிவருகின்றது. இவ்வாறுபலமுறையும் போவதும் வருவது மாகவுழன்று, முடிவில் குருட்டுநெறியாகத் தன் கூட்டை அடை வது உண்டே தவிர, தான் சமைத்த கூட்டினையே சிறிது அமைதி யுடன் தேடிக்காணும் திறமை அதன்பால் காணப்பட்டிலது. இரண்டு கசதூரத்தில் பெயர்த்து வைக்கப் பட்டிருந்த தன் கூட்டை யடைவதற்கு ஒரு பறவைக்கு மூன்றுமணி நேரம் வேண்டியிருந்ததாகவும், அத்துணை நேரம் வருந்தி யலைந்தும் முடிவில் தற்செயலாக அக்கூட்டைக் காணமுடிந்ததேயன்றி, தன் அறிவுப்பொறியால் ஆராய்ந்து காணமுடிந்ததாகத் தெரிய வில்லை யென்றும் ஆங்கில நாட்டு உயிர் நூலாராய்ச்சியாளர் கூறுகின்றார். "பறவைக் கூட்டைக் கலைக்காதே, பாவம் அது தான் பொல்லாதே" என்று தமிழ் நாட்டில் ஒருபொருளுரை நிலவுவதும். பறவையின் இம்மடமை நிலை கருதியே போலும்!

பறவைகள் தம் கூடுகட்கு வருவதும் போவதும் செய்யு மிடத்தில, சிறப்புடைய செயலொன்று அவற்றாற் செய்யப் படுகின்றது. வரும்போது ஏதாவதொன்றைக் கொணருவதும் போம்போது ஏதாவதொன்றைக் கொண்டேகுவதும் அவற்றிற் கமைந்த உயிர்த்தன்மை. இத்தன்மை அவை தம் கூட்டைச் "சுகாதார நிலையில்", தூய்தாக, வைத்துக் கோடற்கு உபகார மாகின்றது. அவைதம் கூடுகளில் தங்கியிருக்கும் காலத்தில் அவற்றால் இடப்பெறும் எச்சங்களால், அக் கூடுகள் தூய்மை யின்றிக் கெடலாம். போம் போது ஏதாவதொன்றைக் கொண்டேகுவதாகிய உயிர்த்தன்மையால், அவை குடம்பை நீங்கிப் போம்போது, அவ்வெச்சங்களை எடுத்தேகி விடுகின்றன. அதனால், அக்கூடுகள் எப்போதும் தூயநிலையில் அமைந்து நிற் கின்றன. இதனை நோக்கின், பறவைகள் மக்களைவிட எத்துணைச் சிறிய "சுகாதார" நெறியினவாக இருக்கின்றன என்பது தோன்றும்! இவ்வாறு செய்வதால், குடம்பைகள் தூயவாத லோடு, பகையினங்கள், எச்சங்களின் நாற்றம் உணர்ந்து போந்து தீங்கு செய்தற்கும் ஏது இலதாகின்றது. இவ்வியல் பினை முதன் முதலாகக்கண்ட அறிஞர் சிலர், இவ்வண்ணம் தம் உறையுளை மாசுபடா வகையிற் காக்கும் பறவைகட்கு இந் நன் மாண்புடைமை அவற்றின் இயற்கை மதிநுட்பத்தின் பயன் என்றே துணிந்தனர். கேம்பிரிட்ஸ் சர்வகலாசாலை (Cambridge University) யினுள்ள மாணவர் சிலர், இதன் உண்மை துணிய வேண்டி, ஒருபறவையின் கூட்டை, அப்பறவை புறத்தே சென் றது திரும்பிவருவதற்குள், அதன் பார்ப்புக்கள் இட்டிருந்த எச்சம் முதலிய கழிபொருள்களைத் தாமே களைந்து, தூய்மை செய்துவைத்தனர். திரும்பி வந்த பறவை தான் கொணர்ந்த இரைப்பொருளைத் தன் காதற் பார்ப்புட்கு அருத்திவிட்டு, ஒரு குச்சியினை எடுத்தேகிற்று. அம்மாணவர்கள் முன் போலவே, அக்கூட்டினை அடிக்கடித் தூய்மை செய்து வரலா யினர்; அப்பறவையும் போம்போதெல்லாம் கூட்டிலிருந்தே ஒரு குச்சியினை எடுத்தேகிக் கொண்டே வந்தது. இதற்குள் பார்ப் புக்களும் முதிர ஆரம்பித்தன. முடிவில் அக்கூடு கலைந்தே

போயிற்று. "வரும்போதொன்றைக் கொண்டு வருவதும், போம்போதொன்றைக்கொண்டு செல்வதும் அவற்றிற்கு, ஒரு காரணமுமின்றி நிகழும் செயல்வகையாகலின், புழு முதலிய இரைப்பொருள் கொண்டுவந்த தான், கொண்டு போதற்குரிய எச்சமாதல், பிறவாதல் ஏதும் இல்லாமையால், கூட்டின் குச்சியையே கொண்டு போவதாயிற்று," என்று டாக்டர் மர்பி என்னும் பேராசிரியர் காரணங் கூறுகின்றார்.

ஆப்பிரிக்கா நாட்டில் தூக்கணாங் குருவி யினத்தைச் (Weaver bird) சேர்ந்த ஒருவகைப் பறவை இருக்கிறது. சிறு சிறு நார்களையும், குச்சிகளையும் கொணர்ந்து இறுகப் பிணித்து ஒள்ளிய முடிச்சுகளை இட்டுக் குடம்பை (கூடு) யமைத்தல் அதற்கு இயல்பு. உலகில் நல்லறிவுடைய உயிர்களால் அமைக்கப்பெறும் முடிச்சுகளைவிட இதன் முடிச்சுகள் அருமையும் செம்மையும் உடையவாய் இருத்தலின், இவற்றை ஒள்ளிய முடிச்சுகள் என்றும். இவற்றைக்கண்ட உயிர்நூல் அறிஞர்க்கு, இப்பறவைக்கு இவ்வாறு முடியிடும் வன்மை எவ்வாறு உண்டாயிற்றெனும் ஆராய்ச்சி தோன்றுவதாயிற்று. பலர் பல முடிவுகளைக் கூறுவாராயினர். ஒரு சிலர், இப்பறவையின் தோற்றத்துக்கு முதற்காரணமாக இருந்த முதற்பறவைவகை இவ்வண்ணம் குடம்பை நெய்தமைக்கும் நேர்மையுடையவாய் இருந்திருத்தல் வேண்டும்; அந்நேர்மையே அவற்றின் வழிவந்த இப்பறவைபால் விளங்குவதாயிற்று என்று கூறினர். இக்காலத்து அறிஞர் சிலர் இதன் உண்மை நிலையினைத் துணிந்து காண விரும்பி, இப்பறவையின் முட்டைகளைச் செயற்கை முறையால் பொரிக்கச் செய்து, அப்பொரித்த பார்ப்புக்களையும் தனிப்பட வளர்த்து வந்தனர்; வளர்ந்த அவை, திருந்திய பறவையாகிய வழி, அவற்றின் இனத்துள் எதனோடும் கூடாமலும், காண்பதின்றியும் தனிப்பட வளர்ந்தனவாயினும், தாய்ப் பறவையும் பிறவும் எவ்வாறு அமைத்தனவோ, அவ்வாறே முடிச்சுகள் அமைத்துக் குடம்பை யமைக்கத்தொடங்கின. குலவிச்சை கல்லாமற்பாகம் படுமன்றோ! இதைக்கண்டதும், அவ்வுயிர்நூல் அறிஞர், இச்செய்கை பரமனது திருவருளால் இப்பறவைகட்குக் கருவிலே வாய்ந்த திருவாதல் வேண்டுமென்றே துணிபு கொண்டனர்.

(தொடரும்.)

# காலவாராய்ச்சி

கோமான். ம. வி. இராகவன் வித்துவான்
ஔவைத்தமிழகம், திருவத்திபுரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 6. பக்கம் 223.)

## III

இனி, தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு உரைவகுத்த ஆசிரியர் பேராசிரியரும், தெய்வப் பனுவலாகிய திருக்கோவையாருரைகண்ட பேராசிரியரும், ஒருவரே யென்பதுபற்றி யாராய்தலுறுகின்றார் திரு. ஐயங்காரவர்கள். உறுகின்றவர், முதற்கண் ஆசிரியர் அடியார்க்கு நல்லார் காலங்காண முயலுகின்றார். முயல்பவர், அடியார்க்கு நல்லார், "திங்களஞ் செல்வன்" (சிலப். 4:3) என்றவிடத்துக் "காலமுலகம்"...............இதுவே விதியெனக் கொள்க, என்று இலக்கண விசேடத்தை விரித்துக் கூறினர். இலக்கணக் குறிப்புக் கூறுமிடங்களில் எல்லாம் சூத்திரமுதலுரைத்துக் குறித்துப் போவது அடியார்க்கு நல்லார் பெருவழக்கு; இவ்விடத்து மூன்று சூத்திரங்களின் கருத்தை விரித்துக்கூறியதால் அடியார்க்கு நல்லார் தாம்புதிதாக ஓர் கருத்தை வெளியிட்டனராவர். சேனாவரையர் கருத்தும் ஒத்திருப்பதால் அடியார்க்கு நல்லார் சேனாவரையருக்கு பிற்பட்டவரென்று, திரு. சோமசுந்திரம் பிள்ளையவர்களும் கூறியுள்ளார். சேனாவரையர் அடியார்க்கு நல்லார் உரையைத் தழுவினரென்பது பொருந்துமாதலின் அடியார்க்கு நல்லார் சேனாவரையருக்கு முற்பட்டவரெனக் கொள்க, என்று கூறுகின்றனர்.

இதில், திரு. ஐயங்காரவர்கள் காட்டும் ஏது, அடியார்க்கு நல்லார், "கால முலகம்", "நின்றாங் கிசைத்தல்", "இசைத்தலுமுரிய" (தொல். சொ. 58, 59, 60) என்ற சூத்திரங்களின் இலக்கண விசேடத்தை விரித்துக் கூறியிருப்பது. அதனைச் சாதிப்பது: அம்மூன்று சூத்திரங்கட்கும் அடியார்க்கு நல்லார் புதியதோர் கருத்தை வெளியிட்டனரென்பதும், அதனைச்

சேனாவரையர் க்குமுன்னைமையின் அடியார்க்கு நல்லார் அவர்க்கு முற்பட்டவரென்பதுமாம்.

இவர் கருத்துப்படி அம்மூன்று சூத்திரங்களின் கருத்தையும் விரித்துக் கூறியதால் அடியார்க்கு நல்லார் தாம் புதியதாகவோர் கருத்தை வெளியிட்டாராவரெனின், உரைப்பாயிரத்தின்கண், "இழுமென் மொழியான் விழுமியது நவலினும், பரந்தமொழியா னடிநிமிர்ந் தொழுகினும்", (தொல். பொ. 239) என்ற பொருளதிகாரச் சூத்திரத்தின் கருத்தையும், பதிகவுரைக்கண், (61-2) "லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்" (தொல். எழு. 481) என்ற சூத்திரத்தின் கருத்தையும் விரித்துரைத்துள்ளாராதலான் அச்சூத்திரங்கட்கும் இவர் புதிதாகவோர் கருத்தை வெளியிட்டாராவர். அங்ஙனமின்மையானும், இளம்பூரணரும், "காலமுலகம்" முதலிய மூன்று சூத்திரங்கட்கும் இவர் கொண்ட பொருளே கூறியுள்ளமையானும்* அடியார்க்கு நல்லார் அச்சூத்திரங்கட்குப் புதிதாகவோர் கருத்தை வெளியிட்டாரென்பதும், அதற்கு அவர் அச்சூத்திரங்களின் கருத்தை விரித்துக் கூறியுள்ளமை ஏதுவாதலும் பொருந்தாக் கூற்றாதலறிக.

---

* "காலமுலகம்" என்னுஞ் சூத்திரத்துள், ஞாயிறு திங்களென்பன உயர்திணை மேலனவாய்ப் பால் பிரிந்திசையா வெனவும், "நின்றாங்கிசைத்தலிவணியல் பின்று" எனவே, நின்ற முறையானே ஈறுபெற்று நின்று உயர்திணையா யிசைத்தல் இவணியல் பின்றெனவும் கூறிய வாசிரியர், "இசைத்தலு முரிய வேறிடத்தான" எனக் காலமுதலாகிய சொல் உயர்திணையா யிசைத்தலுமுரிய, ஈறுதிரிந்து வாய்பாடு வேறுபட்ட வழியென்றாராகலின்" (சிலப். அரும்: 3-4 உரை) என்பது கருத்து விரித்துரைத்தாராகக் கூறப்படும் அடியார்க்கு நல்லார் அச்சூத்திரங்கட்குக் காட்டிய குறிப்பு.

"காலமுலகம்... ...வுயர்திணைமேன." இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இதுவும் உயர்திணையான் முடியாது அஃறிணையான் முடியும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. உரை: காலம், உலகம் என்றித்தொடக்கத்தனவும் உயர்திணை யெனினும் உயர்திணைப் பால் பிரிந்திசையா; அஃறிணையான் இசைக்கும் என்றவாறு. 'பிறவும்' என்றதனால், 'வெள்ளி எழுந்தது, செவ்வாய் எழுந்தது' என்பன கொள்க. இச்சூத்திரம் தெய்வஞ் சுட்டியபொருள் அஃறிணை யான் முடிபேற்றல் கூறினர் என்ப ஒரு திறத்தார். அற்றன்று, ஈண்டுத் தெய்வமும் உள, மக்களும் உளர்; இனி, மேற்சூத்திரம், 'முன்னர்த்தான் உரைப்படும்' என்றவாறு கூறினர், இச்சூத்திரம் உயர்திணைப்பொருளே அஃறிணை முடிபு ஏற்பனவற்றிற்குக் கூறினர் என்பது".

சில்வழிச் சூத்திரங்களைக் கூறிப் பொருளையும் விரித்துரைத்துப் பொருத்திக் காட்டுதலும், சில்வழிச் சூத்திர முதலுரைத்துச் சேறலும், சில்வழிச் சூத்திரந்தானுங் காட்டுதலின்றிக் கருத்துரைத்து அமைத்துப் போதலும், உரையாசிரியன்மார் பலர்மாட்டும் ஒப்பக் காணப்படுவதொரு பொது வழக்காம். அவ்வழக்கே அடியார்க்கு நல்லாரும் மேற்கொண்டுள்ளமை அவர் உரைமுற்றும் ஒருகால் நோக்குவாரும் எளிதினுணரலாவதொன்றாக, "இலக்கணக் குறிப்புக் கூறுமிடங்களில் எல்லாம் சூத்திர முதலுரைத்துக் குறித்துப்போவது அடியார்க்குநல்லார் பெருவழக்கு" என்றலும், அதுகொண்டு ஒன்றனைச் சாதித்தலும் அவர் உரையிற் போதிய பயிற்சியும் ஆராய்ச்சியுமின்மையையே காட்டுவனவாமென்க.

பதிகவுரைக்கண், இவர், 'வாயிற்கோட்டமென்பது' 'லகார விறுதினகாரவியற்றே' என்பதனால், ஏழனுருபின்கண் வந்த சாரியை லகாரவீறு, வருமொழி முதலில் வல்லெழுத்து வர னகாரம் வேற்றுமைக்கண் திரிந்து றகார மாயிற்றே போலத்

---

"நின்றாங்......பின்று" இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், "குடிமை யாண்மை" (கிளவி. 57) என்பதற்குப் புறனடை கூறுதல் நுதலிற்று.

உரை: இச்சொல்லப்பட்டவையிற்றுக்கு நின்றாங்கு இசைத்தல் இயல் பின்று என்பது. எனவே, மேற்சூத்திரத்திற் சொல்லப்பட்டனவற்றுக்கு நின்றாங்கு இசைத்தல் இயல்புமாம் என்பது.

"இசைத்தலு......தான" இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இது, "காலம்உலகம்" (கிளவி. 58) என்பதற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று. உரை: வேறிடம் என்பது வேறுவாய்பாடு; வேறுவாய்பாட்டாற் சொல்ல இசைக்கும், ஒழியவாய்பாட்டாற் சொல்ல இசையாது என்பது, இஃது இளம்பூரணர் கூறியுள்ளவுரை. (தொல். சொல். இளம். 58, 59, 60)

இவ்விருபேருரையையும் ஒப்பிட்டு நோக்குவார்க்குப் பொருணெறியால் இரண்டற்கும் வேறுபாடின்மையும், அம்மூன்று சூத்திரங்களின் கருத்தையும் விரித்துரைத்தவர் அடியார்க்கு நல்லார் அல்லர் என்பதும், இளம்பூரணரே விளங்கவிரித்துரைத்துள்ளமையும் பிறவும் புலனாகாமற் போகா.

திரிந்தது என்றும், "கோச் சேரலென்பது, ஒகார விறுதி யேகார வியற்றே" என்பதனுல் ஒகார வீற்றுப் பெயர்ச் சொல் அவ்வழிக்கண் ஏகார வீற்று அல்வழியே போல வல்லெழுத்துப் பெற்று முடிகவென்றலின் வல்லொற்று மிக்கது" என்றும் இங்ஙனம் சில்வழிச் சூத்திரக் கருத்து விரிக்கப்படுதல் நோக்கின், தாம் எடுத்துக் காட்டும் சூத்திரம் வெளிப்படை யான் விளங்காத பொருளருமை யுடையதாய வழியும், மாட்டேறுடைய தாயினும், பல சூத்திரங்களான் ஒன்று அமைக்கவேண்டுழியும் அவற்றின் கருத்தையும் உடன் கூறிமுடித்துக் காட்டுதல் இவர் வழக்காதல் புலனாகின்றது. ஆகவே, அவ்வழக்கால், "திங்களஞ் செல்வன்" 'காரரசாளன்", "திங்கட்செல்வன்" (சிலப்.4: 4, 14: 96, 8: 59) என்பனவற்றை யமைத்தற்கு மூன்று சூத்திரங்கள் வேண்டியிருத்தலானும், அவைஎளிதின் விளங்கும் பொருள வல்ல வாகலானும், அங் ஙனம் சூத்திரங்காட்டிக் கருத்து விரித்து முடித்தனரென்றலே நிரம்புவதாகும்.

இவர் ஒரு காதைக்கட் கூறப்பட்ட தொன்றனையே மீட்டும் பிற காதைகளுள்ளும், வருவழிதோறும், படிப்பார்க்கு மயக்க மின்றி நன்கு விளக்குதற் பொருட்டுக் கூறுதலுடையர். இங் ஙனம் இவ்வாசிரியர் பிறநூற் பயிலாது இந் நூல் மட்டில் படிக் கலுறுவார்க்கும், இந்நூலுள்ளும் ஒரு காதை கற்காது ஒரு காதை கற்றுணரலுறுவார்க்கும் நன்கு விளங்குதல் வேண்டி, பிற நூல்களுள் விளக்கப் பட்டுள்ளனவற்றையும், இந்நூலுள் ளும் முன்னாக, பின்னாக விளக்கப் பட்டுள்ளனவற்றையும், ஆங் காங்கு வருவழிதோறும் விரித்துரைக்கு மியல்பினராதல், முன்னர் அரங்கேற்றுக் காதை முதலியவற்றுள் விளங்கக் கூறிய வற்றையே பின்னரும் ஊர்காண்காதைக் கண்ணும் விளக்கிக் கூறி, "இவை யெல்லாம் முன்னம் அரங்கேற்றுக்காதை முதலிய வற்றுள் விரித்துக் கூறினவாதலின், ஈண்டும் விரித்துக் கூறுதல், 'கூறியது கூறல்' என்னும் குற்றமாமெனின், ஒக்கும்; ஆண்டுக் கூறிய அடிகளே ஈண்டும் கூறுதலானும், இக்காதை யொன்றனை யுமே கற்றுணர்வார்க்குப் புலப்படவேண்டுதலானும், ஈண்டும் விரித்

துரைக்கப் பட்டன'', (14: 156 உரை) என இவ்வாசிரியர் தாமே கூறியிருத்தலானும், அந்திமாலைச் சிறப்புச் செய்காதைக்கண் (3-4 உரை) திங்களஞ் செல்வன்: ''காலமுலகம்'' என்னுஞ்சூத்திரத் துள், ஞாயிறு, திங்களென்பன உயர்திணை மேலன வாய்ப்பால் பிரிந்திசையாவெனவும், ''நின்றாங்கிசைத்தல் இவணியல்பின்று'' எனவே, நின்ற முறையானே ஈறுபெற்று நின்று உயர்திணையா யிசைத்தல் இவணியல்பின்றெனவும் கூறியவாசிரியர், ''இசைத் தலுமுரிய வேறிடத்தான'' எனக் கால முதலாகிய சொல் உயர் திணையா யிசைத்தலுமுரிய, ஈறுதிரிந்து வாய்பாடு வேறு பட்ட வழியென்றாராகலின் இதுவும் ஈறுதிரிந்து திங்களஞ்செல்வன் என்றாயிற்றென்க. மேலும் இவ்வாறு வருவனவற்றிற்கும் இதுவே விதியென்க,'' என விளங்கக்கூறி, மேலே இவ்வாறு வருவனவற் றிற்கும் இதுவே விதியாகக் கொள்ளுமாறு முடித்துக் காட்டி யவர், மேலே இவ்வாறு வருமிடங்களில் ஈண்டுத் தாம் விளக்கி யுள்ளமை குறித்துச்செல்லாது, மேல் வேனிற்காதைக் கண்ணும் (59 உரை) ஊர்காண்காதைக் கண்ணும் (96-உரை), ''திங்கட் செல்வன்'', ''காரரசாளன்'' என்பனவற்றை யமைகலுற்று, இங்ஙனமே, ''காலமுலகம்'', ''நின்றாங் கிசைத்தல்'', ''இசைத் தலுமுரிய'' என்னும் மூன்று சூத்திரங்களையும் முறையே காட்டி, அதனோடு மனமமைகிலராய், அவற்றின் கருத்தையும் முற் காட்டிய வதனில் ஒரு சிறிதும் வேறுபாடின்றி விரித்துக் கூறி முடித்திருத்தலானும் புலனாதல் கண்டு கொள்க.

இதுகாறும் கூறியவாற்றான், ''காலமுலகம்,'' முதலிய மூன்று சூத்திரங்கட்கும் ஆசிரியர் இளம்பூரணர் கூறிய வுரையையே, ஆசிரியர் அடியார்க்கு நல்லார், தொல்காப்பியம் பயிலாது சிலப்பதிகாரம் கற்றுணர் வார்க்கும் புலப்படுதல் வேண்டி விளக்கிக் காட்டினரல்லது, தாம் புதிதாக வோர் கருத்தைவெளியிட்டனரல்லரென்பது பிறவும் விளக்கியவாறும்.

இனி, ''சேனாவரையர் அடியார்க்கு நல்லார் உரையைத் தழுவினரென்பதும் பொருந்துமாதலின் அடியார்க்கு நல்லார் சேனாவரையருக்கு முற்பட்டவரெனக் கொள்க'' என்னும் கூற்றைச் சிறிது ஆராய்தும்.

இவர் காட்டும் ஏது: அடியார்க்கு நல்லார் காட்டிய கருத்தும் சேனாவரையர் கூறிய வுரையும் தம்மு ளொத்திருத்தல். அதனாற் சாதிப்பது: சேனாவரையருக்கு முற்பட்டவர் அடியார்க்கு நல்லார் என்பது.

இவ்வேதுபற்றி யிம்முறையே நோக்கின், திரு. சோமசுந்தரம்பிள்ளையவர்கள் கொண்டாங்கே, இலக்கண வுரையாசிரிய ராகிய சேனாவரையர் உரையை இலக்கிய வுரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் தழுவினரென்பதும்பட்டு, சேனாவரையர் அடியார்க்கு நல்லார்க்கு முற்பட்டவ ரென்பதெய்தி ஒன்றை யொன்று பற்றுதல் என்னும் குற்றம் படுதலின் அதனை முன்னர்த் தக்க ஏதுக்களான் மறுக்கவேண்டியவர், அதுசெய்யாது தன் கோள் நிறுவப்புகுதல் நெறியன் றென்க.

அன்றியும், அடியார்க்கு நல்லாரின் முற்பட்டவராக, இவ ரானேயும் கொள்ளப்படும் இளம்பூரண ருரையோடும் சேனாவரையர் உரையொத்திருத்தலின்*, அவருரையே சேனாவரைய

---

* "காலமுலகம்............வுயர்திணைமேன"

"இதன் பொருள்: காலமுதலாகச் சொல்லப்பட்ட பத்தும் அத்தன்மைய பிறவுமாகிய அப்பகுதிக்கண் வருஞ்சொலெல்லாம், உயர்திணைச் சொல்லாயினும், உயர்திணைக்கட் பால் பிரிந்திசையா, அஃறிணைப் பாலா யிசைக்கும் என்றவாறு."

"நின்றாங் கிசைத்த லிவணியல் பின்றே"

"இதன் பொருள்: ஈறுதிரியாது நின்றாங்கு நின்று உயர்திணையா யிசைத்தல் ஈண்டியல் பின்று என்றவாறு.

ஈண்டென்றது காலமுதலாகிய சொற்களை. அவை இடையீடின்றி மேற் சொல்லப்பட்டு நிற்றலின் 'இவண்' என்றார்.

இவணியல்பின்றெனவே, குடிமை யாண்மை முதலாயின சொல்லின் கண், ...... நின்றாங்கு நின்று உயர்திணையா யிசைத்தல் இயல்புடைத் தென்பதாம்."

"இசைத்தலு முரிய வேறிடத் தான"

"இதன்பொருள்: காலமுதலாகிய சொல் உயர்திணையாயிசைத்தலு முரிய, ஈறுதிரிந்து வாய்ப் பாடு வேறுபட்டவழி என்றவாறு" (தொல். சொல். சேனா. 57, 58, 59)

இது சேனாவரையர் அம்மூன்று சூத்திரங்கட்கும் கூறியுள்ளவுரை. இவற்றிற்கு இளம்பூரணர் கூறியுள்ளவுரை முன்னர்க் காட்டப்பட்டுளது. இவ்விருவருரையையும் ஒப்பித்து நோக்கின் சூத்திரப் பொருள் மட்டில் ஒரு சிறிதும் வேறுபாடின்றியொத்திருத்தல் விளங்கும்.

ரால் தழுவப்பட்ட தென்றல் பொருந்துமன்றி, அடியார்க்கு நல்லாருரையைச் சேனாவரையர் தழுவினரெனவாளா கூறுதல் ஏலாதாம்.

இந்நெறி மேற்கொள்ளின், தொல்காப்பியச் சூத்திரங்கள் சிலவற்றிற்கு அடியார்க்குநல்லார் கொண்டுள்ள கருத்தும், அச் சூத்திரங்கட்கு ஆசிரியர் இளம்பூரணவடிகள் கூறியுள்ளவுரையும் ஒத்திருந்தலின், அதுகொண்டு அடியார்க்குநல்லார் கருத்தையே இளம்பூரணர் தழுவினரென்றும், ஆதலான் அவர் அடியார்க்கு நல்லார்க்குப் பிற்பட்டவராவரெனக் கடாயினார்க்கு விடையின்மையுமறிக. இதுபோது இளம்பூரணருரைப் பதிப்பின்கண் அம்மூன்று சூத்திரங்களின் கீழும் பதிக்கப் பட்டுள்ளவுரை இளம்பூரணர் கூறியவுரை யன்று, இடையில் தவறாகச் சேர்க் கப்பட்டதாதல் வேண்டுமென்பரேல், அங்ஙனம் அச்சூத்திரங் கட்குத்தன் கருத்தோடு மாறுபட இளம்பூரணர் வேறுவுரை கூறியிருப்பரேல், சேனாவரையர் அதனை மறாதுவிட்டுச் சென் றிராரென மறுக்க. இங்ஙனம் இவர் குற்றம்பட முடிபு கூறிச் செல்வது இளம்பூரணர், சேனாவரையர் ஆகிய இருபேராசிரியர் களுடைய தொல்காப்பிய வுரையையும் அடியார்க்குநல்லாருடைய சிலப்பதிகார வுரையையும் ஆராய்ச்சி முறையிற் செவ்வனம் பயிலாமையின் நிகழ்ந்ததாயும். உரையாசிரியன்மாருரைகளை யும், அவர் தம் கருத்தையும், போக்கையும் உய்த்துணர்ந்து உண்மை காணலாற்றாது வாய்தந்தன கூறி யிடர்ப்படும் இவர்தம் கூற்று எவ்வாற்றானும் ஒவ்வாமைகாண்க.

(தொடரும்.)

---

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "புரட்டாசி" நன்கொடை

| திங்கள் நன்கோடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, நே. அ. அனந்தவிசய முதலியார் | ,, | 1 | 8 | 0 |
| ,, T. S. சபாபதி பிள்ளை தஞ்சை | ,, | 1 | 0 | 0 |
| ஆண்டு நன்கோடை | | | | |
| ,, N. L. வரதராஜலு நாயுடு கரந்தை | ,, | 30 | 0 | 0 |
| ,, P. சுந்தரமய்யர் | ,, | 1 | 0 | 0 |
| ,, A. பொன்னுசாமி நாடார் | ,, | 10 | 0 | 0 |
| ,, A. Y. அருளானந்தசாமி நாடார் | ,, | 10 | 0 | 0 |

## மருத்துவசாலைக்குதவிய 'ஐப்பசி' நன்கோடை

| | | | | |
|---|---|---|---|---|
| ,, R. வெங்கடாசலம் பிள்ளை திருவையாறு | ,, | 1 | 0 | 0 |
| ,, S. பொன்னுசாமி பிள்ளை ,, | ,, | 6 | 0 | 0 |
| ,, இராவ்சாகிபு த. வே. உமாமகேசுவரம் பிள்ளை | அவர்கள் | 38 | 12 | 6 |

போக்கறி யாவிடை கொண்டுகண் கன்றிடப் பொங்குகொங்கை
மாக்கறி யாப்பொலன் மேனிப் பிடிமண வாளனுக்குத்
தூக்கறி யாதிரு நாழிநெல் லாற்சிறு சோறிடவே
தேக்கறி நிற்கு மேயகி லாண்டந் தெவிட்டவுண்டே.

(என்பது.) பின்பு பாரமாகுமென்கின்ற விகாரமறியாமற் சுமந்து கொண்டு நிற்கின்ற இடையுடன்கண் கன்றுதல் செய்து அது வருந்தும் வண்ணம் மிகவும் வளராநின்ற கொங்கைகளின் மாறுபாட்டையறியாத பொன்போன்ற மேனியையுடைய பிடிபோல்வாள் தன்னுடைய மணவாளனுக்கு இரு நாழி நெல்லால் போதுமோ என்று சீர்தூக்குதல் செய்யாமல் அதனுற் சமைத்த சிறுசோறு இடாநிற்ப அகிலாண்டங்களும் தெவிட்டவுண்டு தேக்கிடா நிற்கும். இது எவ்வாற்ருனென்றவாறு, போக்கறியா விடை என்பதற்கு அந்நிலையைவிட்டுப் புடைபெயர அறியாத இடை எனினுமமையும். தன்னுடைய மணவாளனுக்குச் சிறுசோறிட்டு அமுது செய்விப்புழி அகிலாண்டத்திற் பலவுயிர்களும் தெவிட்டவுண்டு தேக்கிடா நிற்கும் என்றதனுல் சர்வ பிராணிகளுக்கும் உயிர்க்குயிராகியும் உணர்வுக்குணர்வாகியும் இயங்கா நின்ற ஒரு மூர்த்தியாதலான் ஒருமுதற்கு வேரின்கண் நீர்வார்க்கக்கிளைக்கும் வார்த்தவாறுபோலும் கருத்து. (19)

தெவிட்டித் தடங்கொண் டிளகிள வென்றுசிக் கென்றுவிம்மிக்
குவட்டைப் பொருத தனங்கொண் டென் னம்மைகொழு [நர்நெஞ்சந்
துவட்டிப் பெறுமிரு நாழிநெல் லாற்சுற்ற மூட்டிமிக்க
தவிட்டிற் பிழைத்தது முப்பத் திரண்டு தவப்பசுவே

(என்பது) தனவடிவான் உள்ளது நிறைந்து பெருமையை மேவி மெய்போலு மிளகிக் கடினமாகிப் புடைத்து இத்தன்மையவாகிய மலைகளை மாறுகொண்ட தனங்களைக் கொண்ட எனது அம்மை கொழுனனது நெஞ்சத்தைக்குழையும் வண்ணம்செய்து அவன்கண் பெற்ற இருநாழி நெற்கொண்டு சுற்றமாகிய சர்வப் பிராணிகளுக்கும் உணவாக்கி யதுவேயுமன்றி அதன்மிகுந்த தவிட்டால் முப்பத்திரண்டறங்களின் பயன் கோடின்றியிருந்தன. இதனை என் சொல்வதென்றவாறு. துவட்டி யென்றது உருக்கி என்பதுபட நின்றது. (20)

பச்சைக் கொடிவிடைப் பாகர்பொற் றேண்மதம் பட்டுப்படாக்
கச்சைப் பொருத கனதனத் தாய்கசி வொன்றுமில்லா
திச்சைப் படுஞ்செல்வர் பொல்லாமை கண்டுநில் லாமையினு
லெச்சப் படுகை நன்றே யருளாயினி வேணுமென்றே

(என்பது) விடைப்பாகர் தமது பொலிவுடைத்தாகிய தோள்களின் வலிமையோடு தாக்குதலிற் சிறிதும் சாயாது கச்சினை மாறுகொண்ட கனதனங்களை யுடைத்தாகிய கொடி போல்வாய் நின்னுடைய திருவடிகள்..........தராத்தி..........யின்றி யானிவையும் இச்சித்து..............கேட்டைக் கண்டு அங்கு உன்னருளின்மையால் அவர்கள் வெய்தான கருக்குழிக்கண் தோன்றுதல் நன்றன்றே. இனி அவர்கள் உய்யும் வகை வேணுமென்று நீயே அருள்புரிவாயாக என்றவாறு. பொற்றோள் மதம்பட்டுப் படாக் கச்சைப் பொருத கனதனம் என்பதற்குப் பொற்றோள் சிறிதுபடினும் அதனால் மதம்பட்டுக் கச்சைப்பொருத கனதனமென்று கூட்டியுரைப்பினுமமையும். (21)

வேணும் பெறவென் றிருக்கான வுள்ளத்து மேவிமிக்க
காணுங் கொடுமைபு நல்குரவுஞ் செற்ற நாயகியே
சேணுந் தலமுந் திசையெட்டு மாகிய சிவசத்தியே
பாணு மறையும் பரவுந் திருவடிப் பாரடையே

(என்பது.) உரை வெளிப்படை.

(வேறு உரை) கதிவேணுமென்று கருதியிருக்கும் பெரியோர்கள் மனத்துள் விருப்பஞ்செய்து அவர்கள் வீரம் அச்சம் இழிவு வியப்பு காமம் அவலம் ரவுத்திரம் நகை என்னும் எண்வகை குண ஈனமும் நாணமும் கொடுமையும் நல்குரவும் நினது ஞான காட்டத்காலே நோக்கி பஸ்மீகரமாக்கிப் பெருங்களஞ்செய்து அவர்கள் உள்ளக்கோயிலுள்ளே எழுந்தருளியிருக்கும் நாயகியே! அகிலாண்டங்களெங்கும் நிறைந்து அகண்ட பரிபூரணமாய் போக்கு வரவு புணர்ச்சியற நின்ற பெருந்தனிப் பிரபைவீசும் சிவானுபவ சத்தியே! பாணாகிய இயலிசைகளாலும் மறையாகிய வாத்தியக் குழாங்களாலும் வேதாகம புராண சாத்திரங்களாலும் துதிக்கக்கண்டு திருவுளக் கருணை செய்திருக்கும் அம்மே! அடியேனையும் நினது கிருபா திருஷ்டியினாலே பார்த்தருளுவாயாக என்று அம்மை சன்னதியிலே குறைச்சலுடனே விண்ணப்பஞ் செய்தருளினார் என்றவாறு. (22)

மூலையில் வாழுங் கிழவியை முற்றத் தழைத்தவடன்
மேலுற வாகமம் வேதாந்தந் தன்னில் விரித்தவுரை
கோலிமுன் சித்த ருரைத்தவந் தாதியைக் கூறிநித்தம்
ஞால மிருப்பவர் பானம ஞர்செல்ல நாணுவரே

குத்தரந் தாதிப் பிறவிக் கடலைக் குலைத்துநெஞ்சே
முத்தரந் தாதித் துறைபெற லாமுதி ராமுலையா
ளத்தரந் தாதி யகிலாண்ட நாயகி யம்மையுட
சித்தரந் தாதி யிருபத் திரண்டையுஞ் செப்பிடவே.

முற்றிற்று.

உ

சிவமயம்

# சித்தரந்தாதி

## மூலமும் உரையும்

தஞ்சை

தமிழ்ப்பேராசிரியர் திரு. L. உலகநாதபிள்ளையவர்களால்

பரிசோதிக்கப்பெற்றது




வெளியீடு—௰௨

கூட்டுறவுப் பதிப்பகம்

தஞ்சை

1936



உ


# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ௰௨ | தாது, கார்த்திகை | மலர் ௮ |


உ

## கருவிலே வாய்த்த திரு


பண்டிதர். திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள்,

*தலைமைத்தமிழாசிரியர், உயர்தரக்கல்லூரி, திருவோத்தூர்*


(முற்றொடர்ச்சி துணர் 12 மலர் 7 பக்கம் 256)

உயிர்நூலாராய்ச்சியாளர்கள் இதுகாறும் ஆராய்ந்து கூறப்பட்டவற்றால் பறவைகள் மிக்க நுண்ணிய பொறியுணர்வுடையன என்பது தெரிகிறது. ஏனைய உயிரினங்களை நோக்க, பறவையின் பொறியுணர்வு சிறந்ததென்றே ஒரு சிலர் கூறுப. நாகரிகக் குறைவுடைய மக்கள் வாத்து, கோழி முதலியவற்றைத் தங்கள் உறைவிடங்களில் மிகுதியாக வைத்து வளர்ப்பர். ஆஸ்திரேலியாவில் வாழும் மக்கள் இவ்வாறு வைத்திருப்பதைக் கண்ட காப்டன் ரெயினாள்ஸ் (Reynolds) என்பவர், அவர்களைக் காரணம் வினவ, அவர்க்கு அவர்கள் பகைவர் வரவை முன்னறிக்

துணர்த்தும் முதுக்குறைவு அவற்றின்பால் உண்டு என்று கூறினாராம். பகைவர்கள் சேய்மையில் வரும்போதே அவர் வரவினால் எழும் ஓசையை முன்பே கேட்டு, அப்புள்ளினம் சிலைக்கத் தொடங்கும்; அதனைக் கேட்டு நாய்கள் குரைக்கும்; அதனால், அவற்றையுடைய மக்கள் தம்மைக் காத்துக்கோடற்கு வேண்டுவனவற்றை விரைவில் செய்து கொள்வர். நடந்த "மகா யுத்தத்தில்", பிரஞ்சுக்காரருடைய கோட்டைகளுள், ஏபல்டவர் (Eiffel Tower) என்ற விடத்தில் வளர்க்கப்பட்டு வந்த கிள்ளைகள், வான விமானங்கள் மக்கள் கண்ணுக்கும், கண் செய் பொறிக்கும் (Observers) புலனாவதற்கு முன்பே, தமது ஒள்ளிய செவிப் புலனால் இனிதுணர்ந்து அஞ்சி இரைச்சலிடத் தொடங்கினவாம். டாகர் பாங்க் (Dogger Bank) என்னுமிடத்தில் 1915 ஆம் யாண்டில் நடந்த கடற்போரில் இருநூற்றுப் பதினாறு மைல் தூரத்துக்கப்பால் இருந்த சிறு பறவைகள், துப்பாக்கிகளின் வெடிப்போசை கேட்டுச் சிலம்பின என்று குறித்திருக்கின்றனர். அருகிலிருந்த மக்களுள் ஒருவரேனும் அப்போர் முழக்கத்தைக் கேளாதிருக்கவும், இப் பறவைகள் அவ்வோசையினைக் கேட்டுப் பேராவாரம் செய்தன என்பதைச் சிறிது நினைந்துப் பார்க்கின், நுண்ணிய செவிப்புலனுடைமையும் இவற்றிற்குக் கருவிலே பரமனருளால் வாய்த்த திரு என்பது விளங்கும்.

இவ்வாறு பறவைகள் நேரிய செவிப்புலன் உடையவாதலோடு மிக்க சீர்மையும் கூர்மையுமுடையகட்புலனும் உடையவாமென்பது உயிர் நூலாராய்ச்சியால் அறியப் பட்டிருக்கிறது. அவற்றின் கண்கள் தலையின் இருபக்கத்திலும் நிற்றலின், அவற்றின் இருபார்வையும் நடுநிலைக்கண் ஒன்றும் (Focus) தகுதிப்பேறு பெற்றில. நமது முகத்துக் கண்கள் நேர்முகமாக நின்று பொருளைப் பார்க்குமிடத்து நடுநிலையுற்று (Focus)பெறுமாறு அமைந்துள. அதனால் நாம் இருகண்களாலும் ஒரு பொருளையேநோக்கும் தகுதிப்பேறு உடையோமாயினும்; கண்களும் நிலைபெயராது நின்றாங்கு நோக்குகின்றன. பறவையின் பார்வைபோலவேறுபட்டுளது;ஒருகண்ணால்ஒருபொருளைநோக்கு

மிடத்து மற்றொருகண் செயலின்றித் தாழ்ந்துவிடுதலும். மூடப் பெறுதலும்உண்டு. ஒருகட்பார்வை நிகழுமிடத்துக் காக்கைக்கு, மற்றைக்கண் மூடப்படுதல் உண்மை கண்ட திருக்கோவை யுடையார், "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந்தாங்கு இருவர் ஆகத்துள் ஓருயிர் கண்டனம்யாம் இன்று" (71) என்று கூறியருளினர். இவ்வாறுவேறுபடும் இக்கண்கள், நேர்பொருளை ஆழ்ந்துநோக்கற்கண், தம்மிற்றுமே ஒப்ப அமைந்துகொள்ளும். இதனை நெடிதாய்ந்தறிந்த வில்லியம் பீபி (William Beebe) என்பவர், "பறவையின்கண் ஒருசிறுபொழுதிற்குள் தூரதிட்டி யிலிருந்து சூக்குமதிட்டி யாகவும், சூக்குமத்திலிருந்து தூர திட்டியாகவும் மாறுவது இயல்பாகக் கொண்டு விளங்குகிறது," என்று துணிந்து கூறியுள்ளனர். இதனுற்றான் விரைந்துபறக்கும் வன்மையினையுடைய பருந்து, கழுகு முதலியன, வானத்தே மிக்க உயரத்தே பறக்கும்போதே தரையில் நகர்ந்து செல்லும் சிறுபூச்சியினையும் கட்புலனால் தெரிந்து ஞெரேலெனப் பாய்ந்து பற்றுதலும், இவற்றின் வரவினைக் கோழிகள் முன்னறிந்து தம் பார்ப்புக்களைப் புறங்காத்தலும் செய்கின்றன. மணிக்கு எண்பதுமைல் வீதம் பறந்தேகும் புள்ளினம், தரையில் குண்டூசியின் நுனியளவிற்றாய பூச்சியினையும் காண்டலும், கண்டாங்குக் குறிதவறாது அதன்மேற் பாய்ந்து கவர்ந்தேகுதலும் செய்கின்றன. இன்னோரன்ன திருவுடைக்காட்சி யுணர்வு, இவற்றிற்குப் பரமன் திருவருளால் கருவிலே வாய்த்துளதெனக் கூறுவதல்லது பிறிதுயாதும் கூறுதற்கில்லை.

பறவைகளின் சிறப்பியல்புகளை ஆராயப்புகுந்த அறிஞர் பலரும் வேறுபுலம் பெயர்தல் (Migration) என்னும் செய்கை யொன்று பறவைகளின்பால் சிறந்து நிற்கிறதென்கின்றனர். இதனைப் பண்டைக்காலத்துத் தமிழறிஞரும் அறிந்திருந்தனர். "வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசைபர், உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்" என்று கூறும் கம்பர் மொழியின்கண், பறவையின் சிறப்பியல்பு உணரப்பட்டமை நாம் உணர நிற்கின்றது. பறவைகள் ஒருசில பருவகாலங்களில் ஓரிடத்திலும், வேறு காலங்களில் வேறிடங்களிலும் காணப்படுவதுண்டு.

தமக்கு உரிய இரைப்பொருள் கிடைத்தற்கு அமைந்த காலங்களில், அக்கால நிகழ்ச்சியுள்ள இடத்தில் இருப்பதும், இல்வழி வேறிடத்துச் செல்லுதலுமாகிய இச்செய்கை யியல்பே வேறுபுலம் பெயர்தல் எனப்படுகிறது. பருவ வரவு தேர்தலும், தேர்ந்து செய்வன செய்தலும் கூரிய உணர்வுடையுயிர்கட்கே ஒல்லும் செய்கையாகும். அவ்வியல்பினால், பறவைகள் வேறுபுலம் பெயரும் இயல்பினவாதற்குக் காரணம் யாதாகும் எனச்சில அறிஞர் ஆராய்வாராயினர். அவருட் பலரும், "பருவ வரவின்கண், பறவைகளின் யாக்கையமைப்பில் எழும் சில ரசாயனக் கிளர்ச்சியே, வேறுபுலம் பெயர்தற்கு ஏதுவாகும்" என்கின்றனர். (Scientists generally accept the theory that these seasonal flights are the result of some chemical distarbance in the bird itself) இதனாற்றான், வீடுகளில் கூடமைத்து வளர்க்கப் பெறும் பறவையினமும் அவ்வப் பருவ வரவின்கண் அமைதியின்றி அலைப்பும் சிலைப்பும் கொள்கின்றன என்றும் கூறுப.

இவ்வண்ணம் பருவ வரவு தேர்ந்து வேறுபுலம் படரும் பறவைகளின் செலவினைச் சிலஅறிஞர் ஆராய்ந்து வருகின்றனர். இவ்வாராய்ச்சியின்கண் அரிய செய்திகள் பல அறியப்படுகின்றன. தாட்டரல் (Dotteral) என்னும் பறவை மாலையில் வட வாப்பிரிக்காவில் உணவுகொண்டு, மறுநாட்காலையில் ஸ்காந்திநேவியக் கடற்கரையில் (Scandinavian shores) இரைதேர்ந்துண்டு இன்புறுகிறது. திரசி (Thrush) என்னும் புள்ளினத்துள் சாம்பல் நிறமுடையவை, எப்பிரல்திங்களில் வடஅமரிக்கநாட்டு ஐக்கியமாகாணத்தின் தென்பகுதியில் தங்கி, ஒருதிங்கட்கு பின், அலாஸ்கா என்னும் நாட்டையடைகின்றன. அவற்றின் செலவு நாளொன்றுக்கு 130 மைல் ஆகிறதெனக் கணக்கிட்டிருக்கின்றனர். அந்நாட்டுப் பறவைகளுள் இராபின் (Robin) என்பது நம் நாட்டுக் காக்கையைப் போல ஆங்காங்குத் தங்கி இரைகொள்ளும் இயல்பிற்று. வேறுபுலம் பெயரும் விரகின்கண், அஃது வடவமரிக்காவின் வடபகுதியினைச் சாரச்சார, நாளொன்றுக்கு பதின்மூன்றுமைல் விழுக்காடு செலவுகொண்டு, பின்பு மின்னஸ்டோவா (Minnestoa) என்னும் இடத்தினைக் கடந்ததும்,

அலாஸ்கா நாட்டை நோக்கி, ஏனைப் பறவை யினத்தோடு கூடி, மணிக்கு எழுபது மைல் விழுக்காடு செலவு பெற்றுச்செல்கிறது.

இனி, இவ்வண்ணம் வேறுபுலம் பெயரும் விரகுடை உயிர்கட்குத் திசைநிலை காட்டுவது யாதாகும்? பரந்த கடலினும், விரிந்த மணற்பாலையினும், உறைந்த பனிவெளியினும் விரைந்து பறந்தேகும் புள்ளினங்கள், தாம் படர்ந்துசெல்லும் நாடு இருக்கும் திசை தப்பி மயங்கி விடுகின்றனவா? இல்லையே! தாம் படர்ந்த நாட்டைத் தப்பாது சென்றடைதலின், இவற்றிற்குத் திசைகாட்டிநிற்கும் திருவுடைக் கருவியாது கொல்லோ? இவை செல்லுநெறியில், பிழையாது சேறற்கண் துணைபுரிதற்கு யாதானுமொன்று இருந்தே தீர்தல் வேண்டுமன்றோ! அக்கருவியின் முன்,-அத்திப்பியக் கருவியின்முன்,-மனிதவுணர்வால் செய்யப்பட்ட செயற்கைத் திசையறி கருவி முன்னிற்றல் கூடுமா? கூடாது, கூடாது. இயற்கை வழியியங்கும் இயல்புடைக்கருவி முன், செயற்கை வழி இயலும் செய்வினைக்கருவி யாது செய்யவல்லதாம்?

மேலை அமரிக்காவில் வாழும் புலாவர் (Plover) என்னும் பறவைகள் அலாஸ்கா நாட்டிலிருந்து தெற்குநோக்கி ஆவுஷியன் தீவுகட்குச் செல்கின்றன. அவற்றின் எதிரே பசிபிக்கென்னும் பரந்த பாய்திரைப் பெருங்கடல், மாசு மறுவின்றி, நாற்றிசையும் தன் பரப்பே தோன்ற, கருநிறங் காட்டிக் கலக்கமின்றிக் கிடக்கின்றது. பின்பு, அதன் நடுவே ஒருபுறத்தே, நீலப்பெரும் புடவையின் ஒருபுறத்தே வெண்ணித்திலம் பதித்தாற்போல ஹாவாய் (Howai) என்னும் சிறிய தீவு காணப்பெறுகிறது. அச்சிறு நிலப் பகுதியினை நோக்கி இப்பொன்னிறப் புலாவரினம் படர்ந்து வருகின்றது! அட்லாண்டிக் என்னும் பெருங் கடற்கரையில் வாழும் புலாவரினங்கள் நோவாஸ்கோஷியாவிலிருந்து, தரையைத் தீண்டாமலே தென்னமரிக்காவின் தென்பகுதியினை யடைகின்றன. அவைபவை திரும்புகாலையில் வேறு வழியைத் தொடர்ந்து வருகின்றன; மிசிசிப்பி நதிபாயும் வளநாட்டின் வழியே படர்ந்து, உள் நாட்டைக் கடந்து, வடகடற்கரையை யடையும். ஆர்க்டிக் உலகத்தில்

தரன் (Tern) என்னும் பறவைகள் வாழ்கின்றன. வட துருவத்தைக் காணப்புகுந்த வீரர்கள், தாம் இவற்றின் கூடுகளை வட துருவத்துக்கு நானூற்றைம்பது மைல் தூரத்தே கண்டதாகக் கூறிகின்றனர். அங்குள்ள இவை மாரிக்கால வரவு தேர்ந்து, பதினோராயிரமைல் தூரத்தில் உள்ள தென் துருவ அண்டார்க்டிக் உலகு நோக்கிச் செல்கின்றன. இவ்வரிய காரியத்தை இவை எவ்வண்ணம் செய்கின்றன? இச்செயற்கண் இவை பிழையின்றி ஒழுகுதற்குத் துணையாவது யாது? இவையாவும் இவற்றால் இயல்பாகவே நடைபெறுவன; இஃது இவற்றிற்குக் கருவிலே வாய்த்ததிரு என்பதல்லது பிறிதில்லை.

இனி, அடுத்த கட்டுரையில் வடகடற் பறவைகள் என்னும் பொருள்பற்றி, ஸ்மித்ஸோனியன் ஆராய்ச்சிக் கழகத்துத் துணையமைச்சராக இருக்கும் அலக்சாண்டர் வெட்மோர் Alexander Wetmore Asst. Secretary Smithsonian Institution N. America என்பார் எழுதிய கட்டுரை தமிழில் வெளியிடப்பெறும்.

---

# காலவாராய்ச்சி

சோமான். ம. வி. இராகவன் வித்துவான்
ஔவைத்தமிழகம், திருவத்திபுரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 7. பக்கம் 263.)

## IV

இனி, அடியார்க்குநல்லார், பேரிலக்கியமாகிய திருக்கோவையாருரைகண்ட பேராசிரியருக்குப் பிற்பட்டவர் என்பது நிறுவுவார், "அடியார்க்குநல்லார், "கொன்றையன்" என்புழிப் போல என்று திருக்கோவையுரையை ஆட்சி கொண்டாராகலின் திருக்கோவை யுரையாசிரியர் அடியார்க்குநல்லார்க்கு முற்பட்டவராவர்' என்று முடிக்கின்றார்.

இதில், ஆசிரியர் மேற்கோளாகக் காட்டிய கோன்றையன் என்பது கோவையாரிலுள்ளதேயோ; பிற நூல்களிலுள்ள தேயோ; கோவையாரி லுள்ளதே யெனினும், "தேனக்க கோன்றையன்" (159), "தாருறு கோன்றையன்" (*176), "தேன் வண்டுறைதரு கோன்றையன்" (380), "தாரணி கோன்றையன்" 400) எனப் பலபாக்களில் அக் கோன்றையன் என்பது வந் திருத்தலின் இக்காட்டியது எப்பாவினதோ என்பனபோல்வ ஆராய்தற்குரிய.

இவ்வுரையாசிரியர், "இளையார் விளையாட" என்றார் சிந்தா மணியினும், "கூட்புவிடு முழுநெறி" என்றார் புறப்பாட்டினும், "வான்கேழ் வட்டம்" என்றார் நெடுநல் வாடையினும், என் பனபோலப் பெரும்பான்மையும் தாம் எடுத்துக் காட்டும் மேற் கோள்கள் இன்னவின்ன நூலின் கணுள்ளனவென்று நூற் பெயர் கூறிக்காட்டியும், சிறுபான்மை, "வெப்பின் பழச்சுனை" என்றாகலின், "நீர்முற்றி மதில் பொரூஉம்" என்றார் பிறரும், என்பனபோல நூற்பெயர் கூறாது பிறராற் கூறப்பட்டதென் பது மாத்திர மறியவைத்தும், சிறுபான்மை, "கோயில் போல நின்றது", எனப் பிறராற் கூறப்பட்டது பின் இவரானெடுத் துக்காட்டப்பட்டதா, அல்லது இவரே காட்டியதா என்பன போல்வ அறியலாகாவகையில் வாளா கூறியும் சேறல் வழக் குடையராதல் இவருரையா னறியக் கிடக்கின்றது. இறுதியிற் காட்டப்பட்டுள்ளவகையில் இவராணுட்சி கொள்ளப்பட்டுள்ள மேற்கோள் மொழிகளுள் பல பிற நூல்களிலுள்ளனவாகவும், சில தொல்காப்பிய வுரையாசிரியர்களாற் காட்டப்பட்டுள்ள உதாரண மொழிகளாகவும், சில வழக்குச் சொற்களாகவும் காணப்படுகின்றன. அங்ஙனமாக, இவைபு நோக்காது அவை யிற்று இஃதிஃ தின்னவின்ன நூலினின்றும் எடுத்தாளப் பட்ட தெனத் துணிந்து கூறுதல் பொருந்துவ தொன்றன்றும்; அக் காட்டிய மொழி பிறிதொரு நூலின்கணுள்ள தெனினும், அந் நூலுரைகாரர் கொண்ட பொருளிலேயே அம்மொழி இவ் வெடுத்துக் காட்டிய ஆசிரியராற் கொள்ளப்பட்டதென ஒரு தலையாற் கோடலும் ஒல்லுவதன்றும்; ஒருகால் அங்ஙனங்

கோட லொல்லுவதெனினும் அவ்வெடுத்துக் காட்டே யேது வாக அவ்விருவருள் ஒருவரினொருவர் முற்பட்டவர் பிற்பட்டவ ரென்பது போன்ற முடிவு கொண்டு கூறுதல் நேரிய முறை யாகாதாம்.

அற்றாக, "சினையலர் வேம்பன்" எனவரும் கொலைக்களக் காதையடியில் (149), வேம்புமாலையைக் குடிக்குரிய வடை யாளமாலையாகவுடைய பாண்டியனைக் குறிப்பதாகிய அத்தொட ருக்குச் "சினையலர் வேம்பன்" என்றே பொருள்கூறி, விசே டங் கூறுவார், "சினை=கொம்பு. அலர் வேம்பு—வேம்பல ரென்க; ஆகு பெயரான் மாலையாயிற்று," என்று விளக்கி, "வேம்பன், "கொன்றையன் என்பதுபோல நின்றது" என்று காட்டினர் ஆசிரியர். இக்காட்டிய கொன்றையன் என்பது திருச் சிற்றம்பலக் கோவையாரின் நானூறாவது செய்யுளின் மூன்றாவ தடியில் வரும், "தாரணி கொன்றையன்" என்றதிலுள்ள கொன் றையன் என்பதென்று கொண்டு, அதுவே ஈண்டு அடியார்க்கு நல்லாரால் காட்டப் பட்டுளதென்றும், அச்சொல் அந்நூலுரை காரர் கூறிய பொருளிலேயே அடியார்க்கு நல்லாரான் ஆட்சி கொள்ளப் பட்டுள்ளதென்றும் மயங்கி, அதனை யேதுவாக்கிக் கொண்டு கோவை யுரைகாரருக்குப் பிற்பட்டவர் அடியார்க்கு நல்லாரென முடிவு கொள்வாராயினர்.

கோவையார் நானூறாவது செய்யுளில் வரும் அக்கொன்றை யன் என்பது ஆண்டுப் பாட்டுடைத் தலைவராகிய சிவபெரு மானை யன்றிக் கிளவித் தலைவனைக் குறித்தலின், அந்நூலுரை கண்ட பேராசிரியர் ஆண்டு அச்சொற்குக் "கொன்றைப் பூவின் தன்மையன்" என்று பொருள் கொண்டுள்ளனர். அங்ஙனம் அக் கொன்றையன் என்பதனையே, அப்பொருளிலேயே ஈண்டு அடியார்க்குநல்லார் காட்டினாராயின், ஈண்டு, "வேம்பன்" என்ப தற்கு வேம்பின் தன்மையை யுடையவன் என்பதே ஆசிரியர் கொண்ட பொருளாதல் வேண்டும். வேண்டவே, அங்ஙனம் ஒருசொற்கு வெளிப்படையாக இனிது விளங்காத குறிப்புப் பொருள் கொள்வழியும், பிறிது பொருள் கூறியதனை நிறுவும்

வழியெல்லாம், "வெப்பு-தொழுநோய்; "வெப்பின்பழச்சுனை" என்றாராகலின்; ஆடுதல்-அனுபவித்தல்; "இளையார் விளையாட" என்றார் சிந்தாமணியினும்; முதிர்தல்-முற்றுதல்; சூழ்தலுமாம்; "நீர்முற்றி மதில் பொரூஉம்" என்றார் பிறரும்; கறை-கடமை; "கறை பன்னீராண்டுடன் விடுமின்" என்றார் சிந்தாமணியினும் பகல்-அரையாமம்; "மற்றையாமம் பகலுறக்கழிப்பி" என்றார் மதுரைக்காஞ்சியினும்; மண்-ஈண்டுச்சுதை; "மண்ணேறுடியைந்த மரத்தனையர்" என்றாராகலின்; நிழல்-ஒளி; "நிழல்மணி" யென்றார் பிறரும்; பணித்தல்-அருளிச்செய்தல்; திசைச்சொல்; "மண்டலமேபணியாய்" என்பதுபோல; என்பனபோலத் தாம்கொள்ளும் பொருளை முன்னர்க் கூறிப் பின்னரே மேற்கோள்காட்டும் வழக்குடைய ஆசிரியர், அச்சொற்கு அங்ஙனம் எளிதினுணர்தலாகாத அக்குறிப்புப் பொருளைகொண்டிருப்பின் வேம்பன்-வேம்பின் தன்மையன்; "கொன்றையன்" என்பதுபோல; என்றன்றே கூறியிருப்பர். பிறனூற் பயிற்சியின்றி இந்நூல் கற்றலுறுவார்க்கும் மயக்கமு மிடர்ப்பாடு மெய்தாவகையாளினிது பொருள் விளங்க விரித்துக்கூறும் கருத்தினராய விவ்வாசிரியர், வேம்பன் என்பதற்கு நயங்கருதிப் பிறிது பொருள்கொண்டவர், அதனை வாசகர் எளிதினுணருமாறு உரையகத்து விளங்கக் கூறாராய், உய்த்துணர்தற்கு மெட்டாவாறு, கோவையாரில் வந்துள்ள கோன்றையன் என்பதற்குப் பேராசிரியர் கூறியுள்ள பொருள் கண்டுகொள்கவென்னுங் கருத்தாற் கோன்றையன் என்பனதை யெடுத்துக் காட்டி, அதனையும், இந்நூலினுள்ளதென்றுதல், இப்பாவினுள்ளதென்றுதல் கூறலராய் வாளா விடுத்துச் செல்வர்கொல்? அக்கோவையாரில், "தேனக்க கோன்றையன்," "தாருறு கோன்றையன்," "தேன்வண் குறைதரு கோன்றையன்" (159, 176, 380) என்பனபோல வேறு பல பாக்களினும் அக்கோன்றையன் என்பது வந்துள்ளமையின் இவற்றுள் எப்பாவின்கண் வந்துள்ள கோன்றையன் என்பது ஈண்டுக் காட்டப்பட்டதோவெனக் கற்பார் மயங்கி யிடர்ப்பட்டு மனம் வருந்தி நிற்கவையார் அந்நல்லார் என ஒரு தலையாற் கொள்க. இது மேற்காட்டிப் போந்தவாற்றான் நன்கு துணிவுறுதலுங் காண்க.

இனி, "வினைவிளை காலமாதலின் யாவதுஞ், சினையலர் வேம் பன் தேரானகி" (27-8) எனவரும் பதிக வடிகட்கு, "பாண்டியன் தான் முற்பவத்திற் செய்த தீவினை வந்து பலிக்கின்ற காலமாத லாலே ஒன்றையுந் தேரானாய்" என்று இவ்வாசிரியர் பொரு ளுரைத் துள்ளனர். ஈண்டுச் "சினையலர் வேம்பன்" என்ப தற்குப் பாண்டியன் என்றே பொருள் கொண்டுள்ளமை காணப் படுகின்றது. பின்னர், இவ்வடிகட்கு விசேடங் கூறுவார், இதனை ஆராயுநெறி பலவுளவாகவும், அவற்றில் ஒன்றையுந் தேர்ந் திலனேன்பார் யாவதும் தேரானகியென்றார்; முன்னர்க் கைகுறைத் தல் முதலிய முறை செய்தோன் இதனைத் தேர்ந்திலனேன்று அடிகள் இரங்கிக் கூறினார். கன்றிய காவலரென்றார், அவரும் முன்னர்த் தீது செய்யாரேன்பது தோன்ற" எனச் சொற்றொறும் இற்றிதன் பெற்றியென்று நயங்கண்டு விசேடம் விளங்கக் கூறு கின்றவர், வேம்பன் என்ற சொற்கு அப்பொருள் கோடற் கருத்தினராயின் வாளாவிடுத்துச் செல்லாரன்றே! "கோன்றை யன்" என்பதுபோல வேம்பன் என்றார்; இச்செயலாற் பிறர்க் குக்கைக்குந் தன்மைய னயினனென்பது தோன்ற, என்றன்றே கூறிச் சென்றிருப்பார்.

நிற்க, அக்கோன்றையன் என்ற மேற்கோள் காட்டப்பட் டுள்ள விடத்தும் அங்ஙனம் பொருள் கொண்டு குறித்தில ரென் பது முன்னர்க் காட்டினும். அப்பொருள் கொண்டு குறித்தில ராயினும், அங்ஙனம் கோடற்கேற்ப வேனும் ஆண்டுக் கூறப் பட்டுள்ள பொருள் அமைந்துளதோவெனின், அதுவு மின்று. பதிகத்துக் கூறிப அவ்விரண்டடியும் அவ்வாறே கோலைக்களக் காதை யாகிய இவ்விடத்தும், "வினைவிளை காலமாதலின் யாவ துஞ், சினையலர் வேம்பன் தேரானகி" (148-9) என அடிகளா னமைத்துக் கொண்டு கூறப்பட்டுளது. ஈண்டு இவ்வடிகட்கு ஆசிரியர், "சினையலர் வேம்பன்..........வினைவிளைகின்ற காலமாத லானே இதனைச்சிறிதுந் தேரானாய்" என்றே வுரைகூறியவர், பின் சினையலர் வேம்பன் என்ற தொடரை விளக்கலுற்று, "சினை- கோம்பு. அலர் வேம்பு- வேம்பலரேன்க; ஆகுபெயரான் மாலை யாயிற்று" என்ற இத்துணையே கூறுயமைந்தார். இக் கூறிய

விளக்கப்படிச் சினையலர் வேம்பன் என்றது சினைவேம்பலர் எனக் கூடி ஆகுபெயரான் மாலையை யுணர்த்திற்றென்பதும், பின்னர், அது, "கோன்றையன்" என்றாற் போலப் பாண்டியனை யுணர்த்திற்றென்பதும் விளக்க மெய்தல் பெறும். பெறவே, வேம்பலர் என்பது ஆகுபெயரான் மாலையாய், பின்னர் அதனைக் குடிக்குரிய வடையாள மாலையாகக் கொண்டு அணிதலுடையானாகிய பாண்டியனைக் குறிக்கும்; கோன்றையன் என்பதில் கொன்றை யென்பது ஆகுபெயரான் மாலையாய், பின்னர் அதனைத் தனக்குரிய வடையாள மாலையாக அணிதலுடை யானாகிய சிவபெருமானைக் குறித்தல் போல என்பதே ஆசிரியர் அடியார்க்குநல்லார் கருத்ாதல் தெளிவாகின்றது.

அன்றி, கோன்றைப் பூவின் தன்மையன் என்பது போல வேம்பலரின் தன்மையன் என்பதே ஆசிரியர்க்குக் கருத்தாயின், வேம்பலர் என்பது ஆகுபெயரான் மாலையாயிற் றென்றலின் பொருந்தாமையும் நுனித்தறிக. வேம்பலரின் தன்மையன் என்றலே பொருந்துவதாக, அதனை ஆகுபெயரான் மாலையாக்கி வேம்புமாலையின் தன்மையன் என்றுரெனின், பொருட் பொருத்தமின்றி வெற்றுரை கூறிய குற்றம் ஆசிரியரைச் சார நிற்றலுமுணர்க. துறைபோய வுரையாசிரியராகிய அந்நிறை திருவாளர் அங்ஙனம் குற்றமெய்தக் கூறுரென்ப தொருநிலையாமாகலின் அவர்க்கது கருத்தன்மையும் அறிந்துகொள்க.

அற்றேல், ஈண்டு அடியார்க்கு நல்லார் காட்டிய கோன்றையன் என்பது கோவையார் நானூறுவது செய்யுளில் வந்துள்ளதே யெனக் கொண்டு, அடிக் குறிப்பில் அந்நூற் பெயரையும் அப்பாட்டெண்ணையும் குறித்து, ஆண்டு அச்சொற்கு அந்நூலுரையாசிரியராகிய பேராசிரியர் கூறியுள்ள பொருளையும் எடுத்துக் காட்டி யுள்ளாரால், சிலப்பதிகாரப் பதிப்பாசிரியரும், பெரும் புலவருமாகிய பிரமஸ்ரீ. மஹாமஹோபாத்யாய. தாக்ஷிணாத்ய கலாநிதி. டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்களெனின், ஒக்கும். நூற்பயிற்சியும் புலமையும் ஒரு சிறிதும் வாய்க்கப்பெறாத என் போன்றார்க்கும் எளிதின் அறியக்கிடக்கு மிப்பொருந்தா

மையை, பன்னூற் பயிற்சியும், ஆராய்ச்சியும், நிறைந்த புலமையும் வாய்க்கப்பெற்று உரைதர விளங்கு மங்நிறை திருவாளர் அறியாது கூறினரென்ற லறியாமையாம். ஆகவே கோன்றையன் என்பதற்கு அப் புதுப்பொருள் கண்டவர், ஈண்டும் அந்நெறியில் வேம்பலரின் தன்மையன் என்று பொருள்கோடல் நயப்பாடு சிறக்கும், வேம்பன் என எடுத்துக் கூறியுள்ளமையின், எனத் தம் கருத்துப் புலப்படக் கூறியிருத்தல் வேண்டுமன்றி, அஃது அடியார்க்கு நல்லார் கருத்தென்பது அவர் கருத்தெனக் கோடல் சாலா தென்க.

இவ்வாற்றான் வேம்பன் என்பதற்கு இன்னோரன்னோர் கருதும் பொருள் ஆண்டைக்கும் பொருந்துவ தன்றென்பதும், பின்னல் தம் உரையைப்படிக்கும் மாணவர் மனநிலையை முன்னுணர்ந்து ஏற்ற பெற்றியான் உரைவகுத்தலே உரையாசிரியன்மார்க்குரிய தலைக்கடனாகலானும், கண்டவுடன் எவ்வியல்பினோரும் எளிதின் வேம்பு மாலையை யுடையன் எனப்பொருள் கொள்ளற்பாலதான வேம்பன் என்ற சொற்குத் தாம் வேறு பொருள் கருதி யிருப்பரேல் அதனை விளங்கக் கூறாது செல்லாராகலானும், ஈண்டு வேம்பன் என்பது வேம்புமாலையையுடையனென உடைமையாற் பெற்ற பெயர் என்பதே ஆசிரியர் கருத்தென்பதும், ஈண்டுக் காட்டப்பட்டுள்ள கோன்றையன் என்பது கோவையார் நானூறுவது செய்யுளின் மூன்றாவதடியில் வரும் "தாரணி கொன்றையன்" என்பதிலுள்ள கோன்றையன் என்பதேயென ஒருதலையாகக் கொள்ளலாகாதென்பதும், அந்நூற்கண்ணே பிறபாக்களில் உடைப் பெயராக வந்துள்ளன வற்றுளொன்றேயாதல், அஃதொழிந்த ஏனைய பண்டைப்பெருநூல்களுள் யாதானுமொன்றில் அப்பொருளில் வந்துள்ளன வற்றுளொன்றே யாதல் வேண்டுமென்பதும் போல்வன ஆராய்ந்து விளக்கப் பட்டன. படவே, அடியார்க்கு நல்லார் காட்டிய கோன்றையன் என்பது கோவையார் நானூறுவது செய்யுளில் வந்துள்ளதே யென்பதும், அஃது அந் நூலுரையாசிரியராற் கொள்ளப்பட்ட பொருளிலேயே அடியார்க்கு நல்லாரான் ஆட்சி கொள்ளப் பட்ட தென்பதுமாகிய ஏதுக்கள் மறுக்கப்பட்டமை

யான், அவற்றுற் சாதிக்கப்பட்ட கோவையாருரையாசிரியர் அடியார்க்கு நல்லாரின் முற்பட்டவரென்னுஞ் சாத்தியமும் மறுக்கப் பட்டதாயிற்று.

ஆராய்ச்சி நெறிக்குமாறுக, திரு. அய்யங்காரவர்களான் மேற்கொள்ளப் பட்டுளதாகிய மேற்கோளாட்சிகொண்டு காலங் கணிக்கும் முறை பற்றி நோக்குவார்க்குச் சிந்தாமணி, கலித் தொகை, பத்துப்பாட்டு முதலியவற்றிலிருந்து ஆசிரியர் நச்சினார்க் கினியர் கொண்ட பொருளிலேயே பல சொற்களும், தொடர் களும், திருக்குறளிலிருந்து ஆசிரியர் பரிமேலழகர் கொண்ட பொருளிலேயே பல சொற்களும், தொடர்களும் ஆசிரியர் அடியர்க்குநல்லாரான் மேற்கோளாகக் காட்டப் பட்டிருத் தலின், அவர் அவ்விருவர்க்கும் பிற்பட்டவரென்பது மெய்து மாறறிக. அன்றியும் இம் முறை பெரிதும் ஒன்றையோன்று பற்றுதல் என்னும் குற்றம்பட நிற்றலுங் காண்க. எனவே இங் ஙனம் மேற்கோளாட்சியே கொண்டு ஒருவருடைய காலங் கண்டு நிறுவப் புகுதலாகிய போலி வழக்கினை மேற்கொண்டு ழைத்தல் பயனிலுழவேயாய் முடியுமென்க. நியாய நூன் முறையோடு மாறுபடாது தக்க ஏதுவும் எடுத்துக் காட்டும் கொண்டு ஒன்றைத் துணியும் நேரிய நெறியை விடுத்து, இங்ங னம் புற்கயிற்றுற் களிறு பிணிக்க முயலுதல் ஆராய்ச்சி நெறியாகா மையும், அதனுல் பொய்ம்மையை மெய்ம்மையெனவும் மெய்மை யைப் பொய்ம்மை யெனவும் மயக்குதலின்றி உண்மை காண்ட லொருதலையாற் கூடாமையும் உணர்ந்து கொள்க. பிற பகுதி பற்றிய ஆராய்ச்சியும் முறையே பின்னர்த் தொடர்ந்து வெளி வரும்.

# நெடுந்தொகைக் குறும்பொருள்

திரு. வித்துவான், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்பள்ளி, ஆரணி.

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 5, பக்கம் 190)

பா. ௬௦. நெய்தல். அம்மூவனார்.

*இரவுக் குறி வந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனை யெதிர்ப் பட்டு நின்று தோழி சொல்லியது.*

வான்கடற் பரப்பிற் றூவற் கெதிரிய
மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த
முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்
புள்ளிறை கூரு மெல்லம் புலம்ப
நெய்த லுண்கண் பைதல் கலுழப்
பிரித லெண்ணினை யாயி னன்று
மரிதுற் றனையாற் பெரும வரிதினிற்
கொண்டாக்குப் பெயர்தல் வேண்டுங் கொண்டலொடு
குருஉத்திரைப் புணரி யுடைதரு மெக்கர்ப்
பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமண லடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி யன்னவிவ ணலனே.

வான்கடல் பரப்பில் தூவற்கு எதிரிய=அழகையுடைய கடலிடத்தே பரந்து கிடக்கின்ற சோலையில் (நீர்த்)துவலையை யேற்ற (புன்னை), மீன் கண்ட அன்ன மெல் அரும்பு ஊழ்த்த முடவு முதிர்புன்னை=விண்மீன்களைக் கண்டாலொத்தமெல்லிய அரும்புகளை உதிர்த்த வளைவாந் தன்மை முதிர்ந்த புன்னைமரத்தின், தடவுநிலை மாசினை=பெருமையைக் கொண்ட நிலையினையுடைய கரிய கிளைகளில், புள் இறைகூரும் மெல்லம் புலம்ப, பெரும,=புட்கள் தங்குதல் மிகும் மெல்லிய கடற்சேர்ப்ப,

தலைவ, நெய்தல் உண்கண் பைதல கலுழப்பிரிதல் எண்ணினை ஆயின் நன்றும் அரிது உற்றனை=(நீ) [தலைவியின்] நெய்தற் பூப்போலும் மையுண்ட கண்கள் வருத்தமுடையவாய் அழ(த் தலைவியை)ப் பிரிதலை நினைத்தாயாயின் பெரிதும் அரியதனைச் செலுத்துதலுற்றாய், கொண்டலொடு குரூஉதிரை புணரி உடைதரும் எக்கர் பழதிமில் கொன்ற புதுவலை பரதவர்=கீழ்காற் றால் நிறம்பொருந்திய அலைகளையுடைய கடனீர் உடைதலைச் செய்யும் மணல் மேட்டின்கண் பழைய (மீன்பிடி) படகை(ப் பயன்படாதென)க் கெடுத்த புதிய வலையைப் பண்ணும் நெய் தனிலமாக்கள், மோடுமணல் அடைகரை கோட்டுமீன்கொண்டி =உயர்ச்சியையுடைய மணலடைந்த கரையில் சுறுமீன் கொள்ளை, மணம் கமழ் பாக்கத்து பகுக்கும் வளம்கெழுதொண்டி அன்ன இவள் நலன்=புலால் நாற்றம் வீசும் கடற்கரையூரிற் (பலர்க்கும்) பகுத்தல் செய்யும் வளங்கள் பொருந்தியதொண்டி என்னும் நகரைப் போன்ற இவளுடைய நலம், உரிதினின்= (இவட்கு) உரித்தாக, கொண்டு=(இவளை உடன்) கொண்டு, ஆங்கு பெயர்தல்வேண்டும்=(நின் ஊராகிய) அவ்விடத்துப் போதல் வேண்டும்.

(வரைந்து கொண்டு செல்லல் வேண்டும். அன்றாயின் இறந்துபடும்).

அழகையுடைய கடலிடத்தே பரந்து கிடக்கின்ற சோலைக் கண் நீர்த் துவலையையேற்ற — விண்மீன்களைப் (பார்த்தாற்) போன்ற மெல்லிய அரும்புகளை யுதிர்த்த—வளைவாந் தன்மை முதிர்ந்த புன்னைமரத்தின் பெரியநிற்றலையுடைய கரியகிளைகளிற் புட்கள் தங்குதல் மிகும் மெல்லிய கடற்சேர்ப! பெரும! நீ நெய்தற் பூவையொத்தமையுண்ட (தலைவியின்) கண்கள் வருத்த முடையனவாயழும்வண்ணம்(அவளைவிட்டுப்) பிரிதலைஎண்ணினை யாயின் பெரிதும் அரியதனைச் செலுத்தலுற்றனை. கீழ்காற்றால் நிறமுடைய அலைவாய்ந்த கடனீர் உடையும் மணல் மேட்டின் கண் பழையபடகுகளைக் கெடவிட்ட— புதிய வலையை யுடைய பரதவர் உயர்ந்த மணலடை கரையில் சுறுமீன் வருவாயைப் புலால் நாறுங் கடற்கரைப் பாக்கத்திற் (பலர்க்கும்) பகுத்துக்

கொடுக்கும் வளங்கள் விளங்கும் தொண்டி என்னும் நகரைப் போன்ற இவளுடைய நலம் இவட்கு உரித்தாக இவளை உடன் கொண்டு நின்னூர்க்குச் செல்க. தனியே இவளை விட்டுச் செல்வையேல் இவள் இறந்துபடுவாள். (கலி. 10:— 21.)

தலைவ, நீ தலைவியை வரைந்து கொண்டேகல் வேண்டும். அங்கனமன்றி இவளைப் பிரிந்து செல்லின் இறந்து படுவாள்.

இப்பாட்டில் 'வான்கடல்............புலம்ப' என்பது நெய்தல் நிலத்தியல்பையும், 'நெய்தல்...........பெரும' என்பது தலைவன் பிரிவெண்ணலையும், 'உரிதினில்...........வேண்டும்' என்பது தோழி தன் விருப்பத்தையும், 'கொண்டலொடு...........எக்கர்' என்பதுமணல் மேட்டின் அழிவையும், பழந்திமில்...........பகுக்கும், என்பது பரதவர் செயலையும், 'வளம்...........நலன்' என்பது தலைவியின் நலத்தையும் பற்றியனவாகும்.

மெல்லம் புலம்ப, பெரும, கலுழப் பிரித லெண்ணினை யாயின் நன்றும் அரிதுற்றனை. இவள் நலன் உரிதினிற் கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும். 'தூவற்கெதிரிய' உருபுமயக்கம். எதிரிய புன்னை. எதிரிய சினையெனலுமாம். மீன்கண்டன்ன அரும்பு. மணலிற் கண்ட அரும்புகட்கு வானிற் கண்ட மீன்கள் உவமை.

அரும்பு ஊழ்த்தசினை. சினையிற்புள் இறை கூரும்புலம்பு. உடைவது அலைநீர் உடைதருவது எக்கர் உடைதால்=உடைதலைச்செய்தல். 'பொங்குபிசிர் முழவிசைப் புணரியெழு தரும் உடைகடல்' (நற். 67 அகம். 310) 'உறுகால் எடுத்த ஓங்குவரற் புணரி நுண்மணலடை கரையுடை தரும், தண்கடல்' (பதிற்.88) எனப் பிறாண்டும் வருதல் காண்க. கொண்டலும் புணரியும் எக்கரை உடைப்பனவாகவும் பொருள் கோடற் கிடனுண்டு. பழந்திமிலை எக்கரிற் கொன்ற பரதவர். புன்சினையில் இறை கூரும்புலம்பு. பரதவர் பாக்கத்துப் பகுக்குந் தொண்டி. தொண்டியன்ன இவள் நலன். இவள் நலன் உரிதினிற்கொண்டு பெயர்தல்வேண்டும்.

1. வான்கடல்:— 'வான்முந்நீர்' = 'அழகையுடைய கடலிடம்' (கலி. 103)

2. கடற்பரப்பு:— 'பெருங்கடற்பரப்பிற் சேயிருநடுங்க' (அகம். 60, நற். 155. 159. 215, 231.)

3. தூவல்:— 'தூவலின் நனைந்த தொடலை' (ஐங். 206). 'தூவற்கலித்த தேம்பாய் புன்னை' (புறம். 24). 'குளிர்ப் பொதும்பர்நளித் தூவல்' (மதுரைக். 115). இது துவலை எனவும் படும். 'வடந்தைதுவலை தூவ' (நற். 152, 181). துவலைத் தண்டுளி'(ஐங். 141.) 'இருங்கழித்துவலை யொலியிற்றுஞ்சும்' (ஐங். 163.) துவலை என்பது திவலை (குறுந். 5, 334, 344, நற். 127)யென மரீஇயிற்று என்பர். (அகம்: (143, 166, 236, 252 262, 274, 359)பிள்ளை, பிட்டு, பிண்டு, தின்று, பிரை, பிடுக்கு, திட்டென்னும்சொற்களை மக்கள் வழங்கும் முறைமையை நோக்கின் இகரம் உகரமாதலன்றி உகரம் இகரமாதலில்லையென்பது தெளிவாம்.

4. எதிரிய:— 'எதிரியஇலவம்' 'எதிரிய வேனிலான் 'எதிரிய அங்கை' (கலி. 26, 30, 83). 'பெயற்கெதிரியசிதர் கொடண்மலர்' (ஐங்.458). 'வருமழைக் கெதிரிய மணிநிற விரும்புதல்' 'வேனிலெதிரிய அதிரல்' 'தலைநாட்கெதிரிய தண்பெயலெழிலி' (நற். 302, 337, 362). அகம். 27:—13.

5. மீன் கண்டன்ன :— 'மீன் கண்டன்ன வெண்மணல்' (பெருங். 2. 9:—5) 'மீன் பூத்தன்ன' (முருகு. 169: பெரும்பாண். 477). (புறம். 109.) (சிலப். கானல். 29) (சிந். 74).

6. ஊழ்த்தல் :— 'யாபா மரங்கள் இலை ஊழ்த்து' (சிந். 2690). மலர்தல் என்ற பொருளுமுண்டு. ஆசிரியர் நச்சினார்க்கினியர் செவ்வி யழிதல் என்றுங் கூறுவர். (கலி. 26, 32, 33, 44, 67. கார். 8. குறள். 650. மலைபடு. 180. புறம். 381) வேறு பொருளுமுண்டு.

7. முடவு முதிர் புன்னை :— 'முடத்தாட் புன்னை' (அகம். 180, 344) முடமுதிர் புன்னைப் படுகோட்டிருந்த மடமுடை நாரை' (ஐங். எழு. 69.) 'முடக்காற் புன்னை' (மணிமே. 8:—9)

'கொடுங்காற் புன்னை' (பெரும்: 266). 'முடமுதிர் மருதத்துப் பெருந்துறை' (ஐங். 31) 'முடமுதிர் பலவின் (அகம். 91, 352) குடமருள் பெரும்பழம்' (நற். 353). முடமுதிர்நரை (நற். 263) 'முடமுதிர் பார்ப்பான்' கலி. 65.

8. தடவுநிலை மாச்சினை :— (அகம். 320, 165) 'தடவு நிலைப் பலவின்' (பெரும்பாண். 77) 'தடவு நிலைக் கொன்றை' குறுங். 66, 219. பெருங். க. 49:—116). 'தடவிணோங்கு சினை' (குறுங். 160) 'தடவுநிலைத் தாழை' குறுங். 219) தடவுச்சினை பெருங்: க. 41, 27) 'தடவு நிலை நிழற்றிய' (பெருங். க. 38:—126). 'தடவுமுதல்' (நற். 19. 235). மாச்சினை. (நற். 49, குறுங். 175). (தொல். உரி. 24—5) அகம். 23.

9. (புள்) இறை கூர்தல்:— 'புள்ளிறைகூரும்' (மணிமே. 6:—85) 'புள்ளிறை கூருந்துறைவன்' (ஐங். 142) 'வண்டிறை கொண்ட எரிமருள் தோன்றி' (அகம். 218). 'ஈர்க் குழாத் தோடிறை கூர்ந்தபே எற்பகை' (புறம். 136). 'தேனிறை கொள்ளும் இரும்பல் யானை' (புறம். 17) 'தெறன்மற வரிறை கூர்தல்' (புறம். 345) 'அரசிறை கொண்ட ஆவணம்' (பெருங். 2, 15:—34)

10. மெல்லம் புலம்பன்:—(தொ. பொ. 20, உரை) (குறுங் 5, 245, ஐங், 120, 133, 166, 189, 190, 302, நற், 38, 127, 195, 223, 263, அகம். 330, 400)

11. நெய்தலுண்கண்:— 'இருங்கழிமலர்ந்த கண்போல் நெய்தல்' 'உறுகழிமருங்கிணோத மொடுமலர்ந்த, சிறுகருநெய்தற் கண்போல் மாமலர்; 'சுரும்புண மலர்ந்த பெருந்தண் நெய்தல், மணியேர்மாண் நலம் ஒரீஇப், பொன்னேர் வண்ணங் கொண்ட என்கண்ணே', (அகம். 83, 170, 230, 290.) 'நெய்தல்.......... மகளிர் கண்ணின்மானும்' (குறுங். 9). வைகறைமலருநெய்தல் போலத், தகைபெரிதுடைய காதலிகண்ணே', (ஐங். 151, 188). 'கயவாயநெய்தல்.......மதருண்கண்' (பரிபா. 8:—74-5) கட் கமழ்நெய்தல்.......கண்போல்மலர்ந்த காமருசுனைமலர்' (முருகு.

74-5) 'கண்ணவிழ் நெய்தலும்' (சிலப். 14:—77) 'கண்போல் நெய்தல்' 'கழிசேர் மருங்கிற் கணைக் கானீடிக், கண்போற் பூத்தமை கண்டு நுண்பல, சிறு பாசடைய நெய்தல் குறுமோ சென்றெனக் கூறுநோளே' (நற். 8, 27, 283) 'நெய்தலி தழுண்கண்' 'நெய்தல் மலரன்னகண்' (கலி, 15, 34, 39, 121; அகம். 129, 179, 183, 230, 234, 237, 276, 285, 320, 363,) உண்கண் என்பதன் பொருளறிக. (கலி. 39, 121, 131.) கண்ணாறு நெய்தல் கமழும் கொடுங்கழி' (ஐங்-எழு. 63) 'மணி நிற நெய்தல் மலர் புரையுங் கண்ணாய்' (கைந். 51). குறள் 1172.

12. பைதல்:—குறுந். 13. 125. 139. 298. ஐங். 135. (குளிர். பரிபா. 11:—75) வருத்தம். கலி. 5. 16. 32. 46. 101. (நோய். 126) 129, 130, 138, 142. குறள். 1172, 1175. (துன்பம் பெருங். க. 33:—108. 157. 36:—159.) (பசலை. 40:—49) (துன்பம். ந. 6:—155.) (பசலை. கைந். 25.) துன்பம். புறம். 41. 221.

13. உரிதினின்:—உரிது=உரித்து. அகம். 69, 256, 392. கலி.76, 92. குறிஞ்சிப். 65. பரிபா 13:-13 உரிதினின். பரிபா. 18:—55. சிலப். 2:—40. இருவருரையும் பார்க்க. உரித்தாக =சேமமாகவேண்டி. புறப். வெண். 306. உரியது. பெருங். ந. 15:—24. உரிதினின். சூளா. மந்திர. 36. அரசியல். 357.

14. கொண்டல்:-'கொண்டலிடுமணல்' அகம்.20, 40, 100, 178 முன்பனிக் காலத்துக் காற்று. கொண்டல் குணக்கிலிருந்து வருவது. கோடை குடக்கிலிருந்து வருவது. தென்றல் தெற்கிலிருந்து வருவது. வாடை வடக்கிலிருந்து வருவது. ஐங். 209. [மேகம், கொள்ளுதல் என்ற பொருளினும் வரும். கொள் + தல் =கொண்டல் விண்டல் என்பதுபோல கொண்டல் கட்டி, கார் காத்தார் என்பன ஈண்டுக் கருதற்குரியன.] நற். 74. 89. குறுந் 185. சிலப். 14:—110. கலி. 106. பெருங். ச. 7:—132. பு. வெ. 179. மதுரைக். 530. 568. புறம். 34. முத்தொள். 47. 'கோடை மேல்காற்றின் நாமம். கொண்டல் கீழ்காற்றிற்கேற்கும். வாடையின் நாமம் வீசும் வடகாற்று வடந்தை என்ப'. 'வருதென்கால் சிறுகால் தென்றி மலயக்கால் வசந்தன் தென்றல்' (நிகண்டு).

15. குரூஉ:—'குருவும் கெழுவும் நிறனாகும்மே' (தொல். சொல். உரி. 5.) சிந். 2748.

16. புணரி:—இது காரணக் குறி. குறுந். 109. 144. 299. 351. ஐங். 150. புறம். 2. 31. பதிற். 11. 30. அகம். 20. 65. 190. அலை, நீர், கடல், நற். 11. கடனீர். 63. 315, 74. 335. 395. பட்டினப். 97.

17. உடைதரல்:—உடைதலைச் செய்தல். குறுந். 351-ல் 'புணரிஉடைதருந்துறை' கலி. 33, 66, 97, 138, 144ல் துனைதந்தார்= விரைதலைத் தந்தார். சூழ்தந்து= சூழ்தலைச் செய்து. திரிதர =திரிதலைச்செய்ய. இதுதருகடாத்தால்=சொரிதலைச் செய்யும் மதத்தாலே. நருதரும்= நருதலைச்செய்யும் என்றிருத்தல் அறியத்தக்கது.

18. எக்கர். 'ஊர்திரைதொகுத்தவுயர்மணல்' மணி. 25:-168. 'உரவு நீர்த்திரை பொர வோங்கியஎக்கர்' கலி. 132:—1. 'முழங்குதிரை கொழீஇய மூரிஎக்கர்' நற்.15. 203. 'படுதிரை கொழீஇய பாணிறவெக்கர்' நற். 49. 'பெருங்கடல் எறிதிரை கொழீஇய எக்கர்' நற்.106. 'எறிதிரை தொகுத்தஎக்கர் நெடுங் கோட்டுத்துறுகடல்' நற். 211. இது 'குன்றிற்றோன்றுங்குவவு மணல் (அகம். 310, 341, 350, 360; நற். 207, 235, 254) எனவும்படும். கொடுங்கழிவளைஇய குன்றுபோல் வாலெக்கர். (கலி. 127.) எக்கர்=மணற்குன்று. (புறம். 177). கடுவரலருவிக் கடும்புனல் கொழித்த இடுமணல். மணி. 17:—25-6. 'இடுமணலெக்கர்' (ஐங்-எழு. 59. சிலப். காட்சி. 23.) 'எக்கரிடுமணல்'(ஐங். ஐம்.48.) 'அணிமணலெக்கர்' (ஐங். எழு. 60.) 'அடும்பிவரெக்கர்' (அகம். 320. ஐங். எழு.62.) 'அடும்பிமிரெக்கர்' (கைந். 53). எக்கரழுது. (குறுந். 53. 299.) எக்கர்=இடுமணல். (கலி. நச். உரை) இடுமணல் நெடுங்கோடு. (கலி.135. ஐங். 177.) மணங்கமழினை மணலெக்கர் (அகம். 250, 360:—14ன் பொருளை உணர்ந்து மகிழ்க.

19. திமில்:— மரக்கல வகையுளொன்று. களவழி. 18. மீன்படகு மதுரைக். 116. கலி. 136 குறுந். 123, 304 அகம்.

340. நற். 111, 175, 199. அகம் 260. திமில் களிறுபோறல். கலி 135. 149. நற். 74. பதிற். 52. புறம். 13, 26. மணி. 4:—29—44. சிந். 493—501. 2223. 2231. 2793. மதுரைக். 376—83. திணை. நூற். 50, 52, 53. திமில் விளக்கம். (சிலப். கடலாடு.142. புறம். 60. நற் 372. 388. அகம். 65. 100. 240. திமில்விசை. அகம் 330. 340 நற். 388. குறுந். 304. திமிலின்பெருக்கம். அகம். 190. 210. நற். 331, விளக்குஎண்ணல். நற், 372, பட்டினப்.112 திமில் மலை போறல். அகம். 187.

20. கொல்லல்:— கெடுத்தல். குணங்கொல்லாது = நற் குணங்களைக் கெடாது. புறம். 55:—12.

21. பரதவர், நுளையர், பதிற் 48, உரை, புறம், 24. பட்டினப்- 112. நற்45, 87, 101, 175, 199, 239, 372,388, அகம், 140, 250, 300 மீன்விலைப் பரதவர், சிலப். இந்திர, 25, வலைப் பரதவர். குறுந் 184, சிலப், 6:—142. ஐந், எழு. 66, பரதர் திணை. ஐம், 45. நற், 4, 38, 63, 111, 207. அகம், 30, 70.

22. மோட்டு மணலடைகரை:—அகம், 130. நற், 124, 159, 11, 27, 35, 243. மதுரைக், 386—7, குறுந், 175, 236, 316. அகம், 60, 280 பதிற், 30, 80. பெருங், க 41:—120. அகம், 34, 80, 97, 177, 355. குறுந், 171, 303. புறம், 342. பெருங், க, 40: 258, ரு, 1:- 184. நற், 118.

23. கோட்டு மீன். அகம். 80, 170, 210. புறம். 399. சிந். 2325. நற். 49. குறுந். 304.

24. கொண்டி:—பரிபா. 10:—120. புறம். 78, 198. பதிற். 43, 63. பெரும்பாண்:—454. மதுரைக். 137. உரை. பட்டினப்:—212.

25. மணங்கமழ் பாக்கம்:— தெண்கழிக்கானல் விரை மேவும் பாக்கம். (திணை. நூற். 48). அகம். 196, 245, 270, 338. பொருந: 210. பட்டினப்:—27. நற். 111, 127, 167, 203:—2, 7, 207, 323. பாக்கம் என்பது குறிஞ்சி முதலிய நிலங்களிலுள்ள சிற்றூர்க்கும், அரசனிருப்புக்கும் பெயராத

னுண்டு. 'குறவர் பாக்கத்திழி தருநாடன்'. குறுந். 339. 'நறவுமலி பாக்கத்துக் குறமகள்.' குறுங். 394. 'நன்றே காதலர் சென்றவாறே, குருந்தங் கண்ணிக் கோவலர் பெருந் தண்ணிலைய பாக்கமு முடைத்தே.' ஐங். 115, 173, 439. 'பாடுவார் பாக்கம்' பரிபா. எ:—31. பதிற். 13:—12. உரை. 'தூவருவி பூக்கண் கழூஉம் புறவிற்றாய்ப் பொன்விளையும் பாக்கம்'. ஐந். ஐம். 12. பெரும்பாண் :—367. முல்லைப் :—7. உரை. மதுரைக். 137. 'சிலம்படைக் திருந்தபாக்கம்' மலைபடு. 162.

26. தொண்டி:—கடற்கரைப்பட்டினம். சேரநாட்டிலும், சோழநாட்டிலும், இப்பெயர்கொண்ட நகருண்டு. இப்பத்தாம் அகப்பாட்டிற் சேர நாட்டுத் தொண்டியே கூறப்பட்டது. அகம். 60, 290. ஐங். 171—180. பதிற். 60. பதிகம். 88. குறுங் 128, 210, 238. புறம் 17, 48. தொண்டியோர்=சோழ குலத்தோர். சிலப். ஊர்காண் 107 உரை. அகம். 169-ம் பாட்டினைப் பாடிய சாத்தனார் ஊர். சேரநாட்டுத் தொண்டியைச் சார்ந்ததே. நற் 195.

27. மீன் பகுத்தல்:—அகம் 70. (முத்தம் பகுத்தலுங் கூறப்படும். அகம் 28).

புன்னைச் சினையிற் புள்ளிறை கூறுமென்றது. புள்ளுக்குப் புன்னையிருப்பிடமாயினாற்போல எமக்கு நீ யிடமாகின்றிலை என்றவாறு.

இறைச்சிப்பொருள்:—'பழந்திமில்.......தொண்டி'பரதவர் பழமையானவை எனத் திமிலைக் கெடுத்தமையானும் புதிதாக வலை செய்தமையானும் தமது தொழிலாகிய வேட்டைமேற் செல்லாது, தேடாமல் வந்த இழிந்த சுறுமீனை யகப்படுத்து (கலி. 121:—20-1) அதனையழித்துக் கூறுவைத்துப் பலரையும் அழைத்தாற் போல் நீயிரும் நுமக்குரிய ஒழுக்கமாகிய நல்லாற்றிற்செல்லாது, கண்டோரிகழ்ந்த களவொழுக்கத்திலே ஒழுகி, இக்களவினைப் பரப்பிப் பலரும் அலர் கூறும்படி செய்யாநின்றீர். (குறிப்புரை)

இங்கு அகம். 70 ம் பாட்டின் குறிப்புரையை நோக்குக. இதனைப் பாடிய நல்லிசைப் புலவர் அம்மூவனார் வரலாற்றுக் குறிப்பை ஐங்குறு நூற்றுட் பாடினார் வரலாற்றிற் காண்க.

# எண்ணெயும் தண்ணீரும்

திரு. அ. சிதம்பரநாதஞ் செட்டியார் பி. ஏ., ஆனர்ஸ்
தமிழ்ப்பேராசிரியர், அண்ணாமலைநகர்

"எள்ளும் நீரும் இரைக்க ஒரு பிள்ளை வேண்டாவோ" என்பது பழமொழி. இம்மொழி எள்ளுக்கும் நீரிற்கும் ஒரு தொடர்பு காட்டுமேல், எண்ணெய்க்கும் தண்ணீர்க்கும் ஓர் இயைபு உண்டு என்றுங் கூறலாம். என்னை? எள்ளினின்று எடுபடும் நெய் அன்றோ எண்ணெய் ஆவது? தண்மை தங்கிய நீரன்றோ தண்ணீர் ஆவது? ஆனால், நாமெல்லாம் இப்பொருளிலேயே இச்சொற்களை வழங்கி வருகிறோமா? இல்லையே. ஆகவிற்றான், இவை தம்முள் ஓர் ஒற்றுமையுண்டு என்று முன்னர் உரைத்தது.

நெய் என்பது பளபளப்பும் ஈர்மையும் உள்ள எந்தப் பொருளையும் ஒரு காலத்துக் குறித்திருக்கவேண்டும். அன்றேல், அதற்குத் தேன் புழுகு, குருதி, நிணம் முதலாய பொருள்கள் வழங்கி யிருக்கமாட்டா. நெய்ப்பு என்னும் சொல்லைப் பளபளப்பு என்னும் பொருளிலும் குளிர்ச்சி என்னும் பொருளிலும் நச்சினார்க்கினியர் ஆளக் காண்கின்றோம். சிந்தாமணி 170-வது செய்யுளுரையில் "அமை திரட்சிக்கும் நெய்ப்பிற்கும் உவமை" என்னுமிடத்திற் பளபளப்பையும், திருமுருகாற்றுப்படை 20-ஆம் அடியின் உரையில் "நெய்ப்பினையுடைய மயிரிலே" என்னுமிடத்திற் குளிர்ச்சியையும் அவர் குறித்தமை கண்டு கொள்க. சிந்தாமணியுரைப் பகுதியில்வரும் நெய்ப்பு என்னும் சொல்லுக்குப் பளபளப்பு என்பதே பொருளென்று மகாமகோபாத்தியாய ஐயரவர்களும் குறிப்புரையிற் குறித்துள்ளார்கள். திருமுருகாற்றுப்படை யுரைப் பகுதியில் வரும் நெய்ப்பு என்பது குளிர்ச்சியையே குறித்ததாதல் வேண்டும் என்பது "துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி" என்னும்பாட்டின் அடிக்கண் உள்ள 'ஈர்' என்னும் சொல்லாற்பெறப்படும். குளிர்ச்சியே யன்றோ? நீர் வாழ் மீனின் ஈரலிலிருந்து

எடுபடும் நெய்க்கு (Cod-liver oil) நேய் எனப் பெயர் வந்ததும் பளபளப்புக் காரணமாக இருத்தல் வேண்டும் எனத் தோன்று கிறது. மீன் நெய் என ஒன்று கடைச்சங்க காலத்தே அறியப்பட்டிருந்தது என்பதற்குச் சான்று கரிகாலனைப் பற்றிய பொருநராற்றுப் படை என்னும் "பாட்டில் மீனெய்யொடு நறவு மறுகவும்".என வரும் அடியாற் பெறுகின்றோம்.

இனி, நெய் என்னுஞ் சொல் தேனைக் குறித்தது என்பதற்குச் சான்று சிந்தாமணி 1198-ஆம் செய்யுளில் வரும் "நெய்ம்முதிர் தொடையல் கீறி" என்னும் பகுதியாகும். பொருநராற்றுப்படையில் "தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்" என்னும் அடிக்கு "தேனாகிய நெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள்" என்று வரையப்பட்டிருக்கும் உரையுங் காணத்தக்கது. தேனை வடிகட்டுதற்கு உதவியாயிருத்தலின் அன்றோ பன்னாடை நேய்யரி எனப் பெயர் பெற்றது என்பர் ஐயரவர்களும், "தேன், நெய்யென்றும் வழங்கும்" என்பது அவர் வாக்கு. புழுகு என்னும் பொருளிலும் இச்சொல் வழங்கப்பெற்றுளது என்பதற்குக் கீழ்வருவன ஆதாரம்:—

i. "நேய்ம் மாண் சிவிறியர்" (பரிபாடல் 6. வரி 34.)

ii. "மையிருங் கூந்தல் நேய்பணி மறப்ப" (சிலப்பு IV. 56)

iii. "நெய்த் தலைக் கருங்குழல்" (சிந்தாமணி IV. 251)

தேனும் புழுகும் நெய்ப் புடைமையால் நெய் என வழங்கப் பட்டன. இவற்றினின்று வேறு பிரித்துக் காட்டும் பொருட்டுச் சிற்சில சமயங்களில் மாட்டின் பாலிற் படும் நேய் ஆனெய் என்றும் வெண்ணெய் என்றும் வழங்கப் பட்டிருத்தலைக் காண்கின்றோம். சிந்தாமணியில் (II. 72) "உண்ண உருக்கிய ஆனெய் போல் மேனியள்—வெண்ணெய் போன்று ஊறு இனியள்" என வருதல் காண்க. கலித்தொகையிலும் (108) "வெண்ணெய்த் தெழி கேட்கும் அண்மையாற் சேய்த்தன்றி" என வருதல் காண்க.* அன்றியும் இப்பொருளில் வாளா 'நெய்' எனவும் வழங்கக் காண்கிறோம். பரிபாடலின் (16) "நேய் குடை

* பெரும் பாணாற்றுப் படை 306-ஆம் அடியிலும் வருதல் காண்க.

தயிரின் நுரையொடும் பிறவொடும்" என வருமிடத்து உருக்கப் படாத நெய்யும் 'நெய்' என்ற சொல்லாற் குறிக்கப் படுதலைக் காண்க. "பாலிற்படு நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" என்று அப்பர் சுவாமிகள் கூறியவிடத்தும் நெய் யென்பது உருக்கப் படாததையே குறித்தலைக் காண்க. இது இன்னதுதான் என்பது அவர் ஆளும் "கோல் நட்டு—கயிற்றி னால்—வாங்கிக் கடைய" என்னுஞ்சொற்களாற் பெறப்படுவது ஒரு தலை. அச்சொல் ஆனுருக்கையும் (உருக்கிய நெய்யையும்) குறித்தது என்பதற்குப் பல சான்றுகள் உள:—

i. "நெல்லுடைக் கவளமொடு நெய்ம் மிதிபெறாஅ" (புறம். 44)

ii. "நெய்ம் மிதி கவளம்" (பெரும்பாண். 394)

iii. "நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்றால்" (குறள். 1148)

iv. "கரும்பெறி கடிகையொடு நெய்ம்மலி கவளங் கொள்ளாது" (சிந்தா. IV. 226)

அச்சொல்லே எள்ளினின்று எடுபடும் நெய்யையும் உணர்த் திற்று என்பதற்கு முல்லைப்பாட்டு 48-ஆம் அடியில்வரும் "நெய் யுமிழ் சுரையர்" என்பதும், அகநானூற்றுப் பதினேழாம் பாட லில் வரும் "நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி" என்பதும் ஏற்ற ஆதாரங்கள். இவற்றினுஞ் சிறந்ததோர் ஆதாரத்தையும் தொல்காப்பியக் கற்பியலிற் (5) காண்கின்றோம்.

"புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோள்"

என ஆண்டு வருதலைப் பார்க்க. ஆண்டுச் சுட்டப் படுவது ஈன்ற தாய் சின்னாள் கழித்து எண்ணெயாடுவது என்பதை "எண்ணெ யாடும் மயக்கத்தை விரும்பிய தலைவியை" என்று நச்சினார்க்கினி யர் உரைதருமாற்றால் உணரல் கூடும். "புதல்வனை யீன்றிவள் நெய்யாடினளே" என வரும் பண்டை யிலக்கியமும் உண்டு.

மகளிர் கூந்தலுக்குப் புழுகையேயன்றி, எள்ளான் ஆய நெய்யையும் ஊட்டி வந்தனர் என்று பழந்தமிழ்ப் பனுவல்கள்

பகரக் காண்கிறோம். மகளிர் கூந்தலில் அணிந்த புழுகு 'நெய்' என்ற சொல்லால் சிலப்பதிகாரத்தும் சிந்தாமணியிலும் குறிக்கப்பட்டுளது என்பதை முன்னரே கண்டோம். இனி, அவர்கள் எண்ணெயிட்டுக் கூந்தலை நீவிய செய்திக்குரிய ஆதாரத்தையும் காண்போமாக. "எண்ணெய் நீவிய நலம்பெறு சென்னி" எனக் குறிஞ்சிப் பாட்டின்கண் வருகின்றது. பரிபாடலிலும் மகளிர் எண்ணெயிட்டு நீராடும் செய்தி உரைக்கப்படுகிறது. "எண்ணெய் கழல இழைதுகள் பிசைவார்" என வருதல்காண்க. (பரி. 10.) எண்ணெய் என்னும் சொல்லின் ஆட்சியைப் புறநானூற்றிலும் காண்கின்றோம். ஓர் அரசனது முரசுகட்டிலுக்குச் சார்த்திய பூக்கள் எண்ணெயினது நுரையை முகந்தாலொத்து இருந்தன என மோசிகீரனார் என்னும் புலவர் கூறுகிறார். அப்பகுதி "எண்ணெய் நுரைமுகந்தன்ன மென்பூஞ் சேக்கை" என்பது (புறம். 50). இவற்றால், எள்ளினின்று எடுபட்டதே எண்ணெய் என வழங்கப்பட்டது முற்காலத்தில் என்பது போதரும்.

ஆனால், இக்காலத்திலோ அப்பொருளில் மாத்திரம் அதனை வழங்குகின்றோமில்லை. வேப்பெண்ணெய், ஆமணக்கெண்ணெய் தேங்காயெண்ணெய், இலுப்பையெண்ணெய், கடலைக்கொட்டையெண்ணெய் என்றெல்லாம் சொல்லுகிறோம்.* மண் எண்ணெய் என்றும் ஒரு நெய்யைக் குறிக்கிறோம். இந்நெய்களில் எள் என்பது எள்ளளவும் இல்லையே! இல்லையாயினும், நாம் ஏன் இவற்றை எண்ணெய் என்று கூறுகிறோம்? கவிச்சக்கரவர்த்தியாகிய சயங்கொண்டார் எள்ளினின்று எடுபடாததையும் எண்ணெயென்று வழங்கினமையாலா? அவர் யானையின்மதத்தையும் தயிலம் எனப் பேய்கள் கருதின என்றும், அவ் எண்ணெய் போக்க வெண் மூளைகளால் தேய்க்குமாறு பணித்துக் கொண்டன என்றுங் கூறியிருப்பது உண்மையே. (கலிங்கத்துப் பரணி 493-494). ஈண்டு, அவர் எண்ணெய் என்னுஞ் சொல்லை நெய்ப்புடைய

* வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்: தமிழ்மொழிவரலாறு. [பக். 88.

பொருள் அல்லது நெய் என்னுங் கருத்துப்பட வழங்கி யுள்ளாராயினும், அதுபற்றி நாம் வழங்குகின்றோமென்பது முறையாகாது. ஏனெனின், அவ்வழக்கு நம்முட் பலர்க்குத் தெரியாது ஆதலின். பின் என்னையோ காரணம்?

மொழியிலக்கண வல்லுநர் மேனாட்டில் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் அர்த்த சாஸ்திரப் பயிற்சி கொள்வாராயினர். அவரது அர்த்த சாஸ்திரம் கௌடில்யரது அர்த்த சாஸ்திரத்தின் வேறுபட்டது. அவர் புதுவதாகப் பயின்ற சாஸ்திரம் சொற்பொருள் பற்றியதாகலின், அப்பயிற்சியின் பயனாய், சில நியதிகள் பேச்சுவழக்குள்ள மொழிகளின் கண்ணே நிகழ்வதைக் கண்டனர். அவை தம்முள் ஒரு நியதிப்படி சில சொற்கள் குறிக்கும் பொருள் நாளடைவில் விரிதலுண்டு என்று கூறியுள்ளார்கள். அங்ஙனம் நோக்கின், எண்ணெய் என்ற சொல் தனித்த ஒரு நெய்யை முற்காலத்தே குறித்துவந்தது நாளடைவில் நெய் வருக்கத்தையே பொதுவாகக் குறிக்கும் விரிந்த பொருட்பேறு பெறலாயிற்று என்பது புலப்படும். அதனால், வேப்பெண்ணெய் முதல் மண்ணெய் இறுதியாக நாம் வழங்கும் சொற்கள் குற்றமுடையன ஆகா. ஏன்? அவையெல்லாம் மொழியிலக்கண நியதி ஒன்றின் காரணமாக வந்து சேர்ந்தன ஆகலின் என்க.

இந்நியதியே காரணமாகத் தண்ணீரும் நடத்தலின் அன்றே இதற்கும் எண்ணெய்க்கும் ஓர் இயைபு தொடக்கத்திற் சுட்டியது! எண்ணெய் இருசொற்களான் ஆயவாறே தண்ணீரும் இரு சொற்களான் ஆயது. தண்மை நீர் தண்ணீர் அன்றோ! கால்டு வேலைக் கேட்டால் தண் நீர் அல்லது தள் நீரே தண்ணீராயிற்று என்பர். தண்டலை (=சோலை), தண்ணம் (=குளிர்ச்சி), தண்ணவன் (சந்திரன்), தளம் (இலை), தளவம் (=முல்லைக் கொடி), தளி (=மழைத்துளி) தளிர் (தழை), தட்பம் (குளிர்ச்சி) ஆகிய சொற்களை நோக்கி யறியுமாறு பணிப்பர். நல் என்பதிலிருந்து நன்மை வந்ததென்றும் இர் என்பதிலிருந்து இரண்டு வந்ததென்றும், திராவிடக் குழுமொழிகளெல்லாவற்றையும்

ஒத்து நோக்கிய காரணத்தால் கூறும் அவர் இங்ஙனம் என் கூறுர்? எங்ஙனமாயினும், குளிர்ச்சி பொருந்திய நீரே தண்ணீர் எனப் பட்டதாதல் வேண்டும். நீர் என்னுஞ் சொல்லாலேயே ஜல மென்பது பொதுவாக முன்னரெல்லாம் உணர்த்தப்பட்டு வந்தது. இதற்குச் சான்றுகள் பல வேண்டா ஆயினும் சில காண்போம்:—

i. "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே" (புறம். 186)

ii. "நீரின் றமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையாது ஒழுக்கு" (குறள். 20)

அச்சொல்லே பிறசில சொற்களோடு சேர்ந்து தெங்கின்நீரை யும் எச்சிலையும் உணர்த்தக் காண்கின்றோம். "இளநீர் விழுக் குலை யுதிர" என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியில் தெங்கினது நீரும், "பணிமொழி வாலெயிறு ஊறிய நீர் என்னும் குறட்பகுதில் (1121) எச்சிலும் குறிக்கப்படுகின்றன. ஆற்று நீரென்றும், ஊற்றுநீரென்றும், மழைநீரென்றும், தீநீரென்றும், வெந்நீரென்றும் உள்ள வழக்குகள் நீர் என்னுஞ் சொல்லின் பொதுத் தன்மையைச் சுட்டுகின்றன. கண்ணில் உண்டாம் நீர் கண்ணீராதலும், புண்ணில் தோன்றுவது புண்ணீர் ஆத லும், உண்ணப்படும் நீர் உண்ணு நீராதலும் உண்டு அன்றே? இவையும் அச்சொல்லின் பொதுத் தன்மையைச் சுட்டல் வெளிப்படை. குளிர்ந்த நீரே தண்ணீராதலும் தேற்றம். பண்டையோரெல்லாம் தண்ணீர் என்னுஞ் சொல்லை இப் பொருளிலேயே ஆளக் காண்கிறோம்.

1. "அந்நீர் தண்ணீர் அமுதொடு கொணர்கேம்" (மணிமேகலை x. 37)

2. "த(ண்)ணீர் மலரணிந்து சந்தனஞ்செய் பந்தரும்" (சிந்தா. i. 75)

3. "எந்தைக்கு ஒருநீ தண்ணீர் கொடுபோய்அளித்து" (கம்பரா—நகர்நீங்க. 81)

இதனையே "தண்ணம் புனல்" என்றார் ஒரு பழம் புலவர் பரிபாடலின் கண்ணே. "தண்ணம் புனல் தாயிற்று" என்றார் அப்பாடலில் (6).

நாமோ குளிர்ந்த நீரை மாத்திரம் குறிக்குமாறு "தண்ணீர்" என்னுஞ் சொல்லை ஆள்கின்றோமில்லை. சுடு தண்ணீர், காபித்தண்ணீர், தேத் தண்ணீர், கஞ்சித் தண்ணீர் என்றெல்லாம் சொல்லுகிறோம். கண்ணிலே தண்ணீர் வருகிறது என்றுஞ்சொல்லுகிறோம். "சூடான தேத்தண்ணீர் குடியுங்கள்" என்னும் விளம்பரங்களையுங் காண்கின்றோம். வெப்பமுந் தட்பமும் ஒருங்கே தரவல்ல இயந்திரத்தால் அமைக்கப்படாது இருந்தும், தேநீரைச் சூடான தேத் தண்ணீர் என்று கூறுவது முறையாமா? மீண்டும், சயங்கொண்டாரைத் துணைக்கு இழுக்க முயன்றால், அவர் துணைபுரிய மாட்டேன் என்று சொல்லுகின்றாரில்லை.

"வெம்புங் குருதிப் பேராற்றில் வேண்டுந் தண்ணீர் வேழத்தின்
கும்பங் களிலே முகந்தெடுத்துக் குளிர வைத்துக் கொள்ளீரே"
(பரணி. 543)

என்று அவர் சொல்லிய இடத்து, தண்ணீர் வெந்நீராயிருத்தலினன்றோ "குளிரவைத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லியிருக்கிறார்! அந்நீர் வெப்பமுள்ள குருதிநீர் எனத் தெரிகிறது. அந்நீரைக் குறிக்கத் தண்ணீர் என்னுஞ் சொல்லை அவர் ஆள்வாரேயாயின், நாமேன் சூடான தேத்தண்ணீர் என்னலாகாது?

மேலும், பச்சைத் தண்ணீர் என்றும் குளிர்ந்த தண்ணீர் என்றும் காயவைக்கப்படாத நீரைக் குறிக்கிறோம். தண்ணீர் என்றாலே அமையுமே! ஏன் பின்னர் நாம் இங்ஙனமெல்லாம் கூறுவது? எண்ணெய்க்குக் கண்ட நியதி காரணமாகவே என்பது பெறப்படும். என்னை? ஒரு காலத்தில் ஒருவகை நீரைக் குறித்து வந்த இச்சொல் நாளடைவிற் பொருளில் விரிந்து பொதுவாக நீர் என்னும் பொருட்டாயிற்று என்பதே கருத்து. இவ் விரியும் நியதி காரணமாகவே கவியரசர் சயங்கொண்டாரும் "குளிர்ந்த தண்ணீர் தனைமொண்டு—புசித்த வாயைப் பூசீரே" என்று அமைத்தாராகவேண்டும். (பரணி. 569).

எனவே, மொழியிலக்கண நியதி ஒன்றாகிய பொருள் விரிதல் நியமங் காரணமாக எண்ணெயும் தண்ணீரும் எல்லா நெய்யையும் எல்லா நீரையும் பொதுவாகக் குறித்துவரக் காண்கின்றோம்.

# எனது ஆராய்ச்சியிற் கண்ட சில செய்திகள்

திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தார் அவர்கள்
வாணாதுறை உயர்பள்ளி, கும்பகோணம்

(முற்றொடர்ச்சி துணர் 7. மலர் 12. பக்கம் 553)

5. கோல்லம் ஆண்டின் வரலாறு. இக்காலத்தில் கிருஸ்த வாப்தம் நம் நாட்டில் வழங்கி வருதல்போல முற்காலத்தில் சகாப்தம், கலியாப்தம் முதலியன வழங்கி வந்தன என்பது கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் அறியப்படுகின்றது. மலைமண்டலமாகிய மலையாளதேசத்தில் மாத்திரம் கொல்லம் ஆண்டு முன்னர் வழங்கி வந்ததோடு இன்றும் வழங்கி வருகின்றது. இக்கொல்லம் ஆண்டு எப்போது எவ்வாறு தொடங்கிற்று என்பதைப்பற்றி ஆராய்ச்சிகள் நிகழ்த்திச் சரித்திராசிரியர்கள் ஒரு முடிபிற்கு வந்துள்ளனர். அறுபத்து மூன்று அடியார்களுள் ஒருவரும் சேரநாட்டில் திருவஞ்சைக்களத்தில் வீற்றிருந்து செங்கோல்செலுத்திய முடிமன்னரும் சிவபெருமான்மீது திருக்கைலாய ஞானவுலா, பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை என்னும் பிரபந்தங்கள் இயற்றியவரும் ஆகிய சேரமான் பெருமாள் நாயனர் சுந்தரமூர்த்தி சுவாமிகளோடு கைலாயஞ் சென்றது கி. பி. 825ஆம் ஆண்டில் நிகழ்ந்த நிகழ்ச்சி என்பதும் அது முதல் தான் கொல்லம் ஆண்டு மலையாளதேசத்தில் வழங்கத் தொடங்கிற்று என்பதும் அன்னோரது முடிபுகளாகும்.* ஆனால், மலைநாட்டில் வரையப்பட்டுள்ள கல்வெட்டுக்களைப் படித்துப் பார்த்தால் கொல்லம் ஆண்டின் வரலாறு அஃது அன்று என்பது நன்கு வெளியாகின்றது. அன்றியும்,

* தமிழ் வரலாறு (திரு. ராவ்பகதூர் K. S. சீனிவாசபிள்ளை) பிற்பாகம், பக்கம் 64.

கொல்லம் ஆண்டு தோன்றியமைக்குக் காரணமும் அக்கல்வெட்டுக்களால் புலனாகின்றது. அவற்றுள் இரண்டு கல்வெட்டுக்களை அடியிற்காண்க.

I. (1) ஸ்வஸ்திஸ்ரீ கொல்லந்தோன்றி யிருநூற்றைம்பத்திரண்டாமாண்டு நாஞ்சி நாட்டதியனூரான அழகிய பாண்டிய புரத்து கண்ணன்தேவனான உத்தமபாண்டியச் சிலைசெட்டியேன் இந்நகரத் (2) தே............விலை கொண்டுடைய பூமிகொட்டியார் குளத்தில் தெற்கடைந்த நெடுங்கண்ணும் மேலைத்தடியும் பேய் கோட்டில் நீர் பாய்கிற காலுக்கு வடக்கும் பிராயோடு குழிக்கு மே(3) ற்கும் மாப்பாண்டி வயக்கலுக்கு தெற்கும் இந்நான் கெல்லைக்குட்பட்ட பூமி இந்நகரத்துபவித்திர மாணிக்க விண்ணகரெம்பெருமானுக்கு நித்தம் நாழி அரிசி திருவமுதுக்கு சந்திராதித்தவரை செல்வதாக வைச்சு கொடுத்தேன் கண்ணன் (4) தேவனான உத்தம பாண்டியச் சிலைசெட்டியேன்.

(Travancore Archaeological Series Vol. III p. 57.)

II. (1) ஸ்வஸ்திஸ்ரீ கொல்லந் தோன்றி இருநூற்றுத் தொண்ணூற் றொன்பதாமாண்டு மிதுனத்தில் வியாழன் நின்ற ஆண்டு நாஞ்சி நாட்டதியனூரான அழகிப பாண்டியபுரத்து நகரத்தோம் இந்நகரத்து திருமேற்கோயில் பவித் (2) திர மாணிக்க விண்ணக ரெம்பெருமானுக்கு இந்நகரத்தோம் சந்திராதித்தவரை செல்வதாக நீர் வார்த்துக் கொடுத்த நில மாவது [11] இந் நகரத்துப் புறவிளாகத் தூவச் செய்யும் கோன் கேரளன் திருத்துக்கும் இந்நிலத்துக்கும் பெருநான் கெல்லை கிழெல்லை இடைக் கோ (3) ட்டில் நின்று அணைக்குப் போகிற வழிக்கும் படாபாறைக்கு மேற்கும் தென்னெல்லை அய்யன்கோயிலுக்குஞ் சாலார் விளாகத்தில் நின்று இறங்குகிற ஆற்றுக்கும் படாபாறைக்கும் வடக்கும் ஆற்றுக்கு கிழக்கும் வடவெல்லை ஆற்றுக்கு தெற்கும் இவ்விசைந்த பெரு நான் கெல்லைக்குட்பட்ட (4) தூவச்செய்யும் திருத்தின பள்ளக் காலால் நீர் பாயும் நிலமுமுட்படக் கொடுத்த நிலம் பதின் மூன்று மாவுக்கும் ஊர்க்காலால் மாத்தால் எழு கல நெல்லும்

காற் காசும் கடமையிறுப்பானாக இந்நகரத்துக் கோன் கேரள னுக்கு இந்நிலம் அட்டிப் பெற்றுக் காராண்மையாக நீரோடு மட் (5) டிக் கொடுத்தோம் அழகிய பாண்டியபுரத்து நகரத் தோம், கோன் கேரளனுக்கு [11] இக்கடமை கோயிலி லிட் டளந்து கொடுப்பது.[11]

(Travancore Archaeological Series Vol. III p. 58.)

இக்கல்வெட்டுக்களால் புதிய கொல்லம் அமைக்கப்பெற்ற ஆண்டு முதல் தான் கொல்லம் ஆண்டு வழங்கத் தொடங்கிற்று என்பது நன்கு அறியக்கிடக்கின்றது.

இனி, 'செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலத்தும் தங் குறிப் பினவே திசைச்சொற் கிளவி' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தின் உரையில் தெய்வச்சிலையார் கூறியிருப்பது கொல்லத்தைப் பற்றிய சில செய்திகளை இனிது புலப்படுத்து கின்றது. அது 'பன்னிரு நிலமாவன:—குமரியாற்றின் தென் கரைப்பட்ட பழந்தீபமும் கொல்லமும் கூபகமும் சிங்களமும், சையத்தின் மேற்குப்பட்ட கொங்கணமும் துளுவமும் குடகமும் குன்றகமும், கிழக்குப்பட்ட கருநடமும் வடுகும் தெலுங்கும் கலிங் கமும் என்றுகொள்ளப்படும். இவற்றுள், கூபகமும் கொல்லமும் கடல்கொள்ளப்படுதலின் குமரியாற்றின் வடகரைக்கண் அப்பெய ரானே கொல்லமெனக் குடியேற்றினர் போலும்':— என்பதாம். (1) நந்தமிழ்மொழியில் கலந்து வழங்கும் திசைச்சொற்கள் எவ் வெந்நாடுகளிலிருந்து வந்துள்ளன என்பதை விளக்கவந்த உரை யாசிரியராகிய தெய்வச்சிலையார், குமரியாற்றின் தென்கரையில் கொல்லம் என்னும் நாடு முன்னர் இருந்தது என்றும், அதனைக் கடல்கொண்ட பின்னர் அவ்வாற்றிற்கு வடக்கே புதிய கொல் லத்தை அமைத்து, மக்கள் அங்குக் குடியேறினர் என்றும், நன்னிதின் ஆராய்ந்து எழுதியிருப்பது அரியதோர் உண்மைச் செய்தியாகும். எனவே, இப்போதுள்ள கொல்லத்தைப் புதி தாக அமைத்து மக்கள் குடியேறிய காலத்தில்தான் கொல்லம் ஆண்டும் முதலில் வழங்கத் தொடங்கிற்று என்பது உறுதி யெய்துதல் காண்க. இவ்வுண்மையைக் 'கொல்லந் தோன்றி இருநூற் றைம்பத்திரண்டாம் ஆண்டு' என்ற கல்வெட்டுத் தொடர்மொழிகள் வலியுறுத்தி நிற்றல் உணரற்பாலதாகும்.

(1) தொல்காப்பியம் சொல்லதிகாரம் தெய்வச்சிலையார் உரை-பக்கம். 219

கி. பி. 822ஆம் ஆண்டில் நிகழ்ந்த ஒரு கடல் கோளால் பழைய கொல்லம் அழிந்துவிட்டது என்றும் கி. பி. 825ஆம் ஆண்டில் புதிய கொல்லம் அமைக்கப்பட்டது என்றும் துடிசைக்கிழார் திருவாளர் அ. சிதம்பரனார் அவர்கள் எழுதியிருப்பது ஈண்டு அறிந்து கொள்ளுதற் குரியதாகும்.(1) கி. பி. எட்டாம்நூற்றாண்டின் தொடக்கத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகளோடு சேரமான் பெருமாள் நாயனார் கைலாயஞ் சென்றனர் என்பது ஆராய்ச்சியால் அறியப்படுதலின்(2) அக்காலத்தில் கொல்லம் ஆண்டு தொடங்கியிருத்தற்கு ஏது சிறிதும் இல்லை என்க.

6. **ஒரு பழைய வழக்கம்.** இக்காலத்தில் இயற்பெயருக்கு முன்னர் மகாராஜராஜஸ்ரீ என்பதை மரியாதைக்கு அறிகுறியாகச் சேர்த்து எழுதுகின்றனர். நமது தமிழன்னைக்குத் தொண்டுபுரிவதில் முன்னணியில் நிற்கும் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் இயற்பெயருக்கு முன்னர் மரியாதைக்கு அறிகுறியாகத் திருவாளர் என்பதை முதலில் எழுதத்தொடங்கி இதனை வழக்கத்திற் கொணர்ந்தனர். இங்ஙனம் எழுதும் முறை நம்தமிழகத்தில் யாண்டும் பரவி இதுபோது நிலைபெற்றுப்பியுள்ளது. இவ்வாறு முற்காலத்திலும் எழுதிவந்தனர் என்பது ஒருபழைய கல்வெட்டால் புலப்படுகின்றது. அஃது அடியில் வருமாறு:—

(1) "ஸ்வஸ்திஸ்ரீ கோமாற வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடுகொண்டு அருளிய சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு ௩-ஆவது தென்கோனாட்டுக் குன்று சூழ் நாட்டுச் சிகாநல்லூர் திருவாளன் சோழ மூவேந்த வேளானும் திருவுடை(2)யான் கோதண்டனும் சுந்தன் கொழுந்தும் சுந்தன் கணியும் நம்பி கொழுந்தும் நம்பி பன்மனும் பொன்னன் ஒன்றுயிரமுடையானும் இவ்வனைவோம் எங்கள் கீழைப் புன்செய் விலைக்குற விற்கக் கொள்விருளிரோவென்று ஒருகாலாவதும் இருகாலா(3)வதும் முக்காலாவது முற்கூறப் பிற்கூறி

(1) செந்தமிழ்த்தொகுதி 33 பக்கம் 63.

(2) தமிழ்ப்பொழில் துணர் மூன்றில் யான் எழுதியுள்ள 'சுந்தரமூர்த்தி [களது காலம்' என்ற கட்டுரையைப் பார்க்க.

சோழபாண்டிய வளநாட்டு ஆற்றூருடையான் நம்பி பொன்னம் பலக்கூத்தனுன உடையார் காங்கேயராயர் கொள்வேனென்று அருளிச்செய்ய முன் சொல்லப்பட்ட இவ்வனைவரோம் நாங்கள் விற்கிற பு(4)ன்செய்க்குப் பெருநான்கெல்லை யாவன கீழ்பாற் கெல்லை மேல்மணநல்லூர் ஊர்ப்பொது எல்லைக்கும் மேற்கும் தென்பாற்கெல்லை திருவாளன் சோழ மூவேந்த வேளான் செய்க்கு வடக்கும் மேற்பாற்கெல்லை சுந்தன்கொழுந்து நம்பி கொழுந்(5)து திருவன் சோழமூவேந்தவேளான் இவர்கள் செய்க் குக்கிழக்கும் வடபாற்கெல்லை பொன்னன் ஒன்றாயிரமுடையான் சுந்தன் கொழுந்து நம்பிகொழுந்து இவர்கள் புன்செய்க்கு தெற்கும் ஆக இசைந்த பெருநான்கெல்(6)லைக்கு உட்பட்ட புன் செய்விற்றுக் கொடுத்து எம்மில் இசைந்த விலைப்பொருள் அன் றாடு நற்பழங்காசு உ௦ இப்பழங்காசு இரண்டரையும் ஆவணக் களத்தே காட்டேற்றி கைச்செலவறக் கொண்டு விலைப்பிர மாணம் பண்ணிக்கொடுத்தோம் (7) உடையார் காங்கேயராயர் பிள்ளைக்கு திருவன் சோழமூவேந்தவேளானும் திருவுடையான் கோதண்டனும் சுந்தன் கொழுந்தும் சுந்தன்கணியும் நம்பி கொழுந்தும் நம்பிபன்மனும் (8) பொன்னன் ஒன்றாயிரமுடை யானும் இவ்வனைவோமும் பன்மாகேஸ்வரரட்சை.''

(புதுக்கோட்டை நாட்டுக் குடுமியான் மலைக் கல்வெட்டு.)

இக்கல்வெட்டு, முதல்மாறவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக்காலத்தில் கி.பி. 1219ஆம் ஆண்டில் வரையப்பெற்றது. இதில் இரண்டிடங்களில் திருவாளன் சோழமூவேந்த வேளான் என்றும் இரண்டிடங்களில் திருவன்சோழமூவேந்த வேளான் என்றும் வந்திருத்தல் அறியத்தக்கது. இக் கல்வெட்டில் ஒருவனையே ஓரிடத்தில் திருவாளன் என்றும் மற்றோரிடத்தில் திருவன் என்றும் கூறியிருத்தலால் இவ்விரண்டும் மரியாதைக் குரியனவாக முற்காலத்தில் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது வெளிப்படை. அன்றியும் மற்றொருவனைத் திருவுடை யான் என்று இரண்டிடங்களில் குறித்திருப்பது ஈண்டு உணரற் பாலதாகும். எனவே, முற்காலத்தில் மரியாதைக்குரிய அடை மொழிகளாக இபற்பெயருக்கு முன்னர்ச் சேர்த்து வழங்கப்

பெற்றவை திருவாளன், திருவன், திருவுடையான் முதலியன என்பது இக்கல்வெட்டால் நன்கு வெளியாதல் காண்க. இவற்றுள், நமது கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் வழக்கிற் கொணர்ந்து நிலைபெறச்செய்துள்ள திருவாளர் என்பது பழையகாலத்திலும் இதே பொருளில் வழங்கி வந்தமை அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

**7.** காயம். இந்நாளில் காயம் என்னுஞ்சொல் பெருங்காயம் Asafoetida) என்ற பொருளில் வழங்கி வருகின்றது. பழைய தமிழ்நூல்களில்பயின்றுவரும்அச்சொல் இப்பொருளையுணர்த்த வில்லை. எனவே, அச்சொல்லுக்கு இப்பொருள் உலக வழக்கில் மாத்திரம் இக்காலத்தில் இருந்து வருதல் உணரத்தக்கது. 'படைகொண்டார்' என்றுதொடங்கும் 253ஆம் குறட்பாவின் விசேடவுரையில், 'சுவைப்பட வுண்டல் காயங்களான் இனிய சுவைத்தாக்கி யுண்டல்' என்று ஆசிரியர் பரிமேலழகர் கூறியுள்ளனர். இதனால் இனிய சுவையைக் கொடுத்தற்குக் காயங்கள் சேர்க்கப்படுதல்வேண்டும் என்பது வெளியாகின்றது. அன்றியும்,

'இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்றும்
அடங்காதா ரென்று மடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறா பேய்ச் சுரையின் காய்' என்னும்

நாலடியாரில் வந்துள்ள காயம் என்ற சொல் இனிய சுவையைத் தரும் பொருள்களையே உணர்த்துதல் காண்க. இப்பாடலுக்கு உரை எழுதியவர்கள், 'பேய்ச்சுரைக்காய்கள் உப்பும் நெய்யும் பாலும்தயிரும் காயமும் போட்டுச்சமைத்தாலும் கசப்பு நீங்காதனவாம்' என்று வரைந்திருத்தலால் அன்னோர் காயம் என்பதின் பொருளை விளக்கிக் கூறினாரில்லை. ஒருகால், அதனை அவர்கள் பெருங்காயம் என்று கருதிப்பொருள் கூறாமல் விட்டிருத்தலுங்கூடும்; ஆனால், ஆசிரியர்பரிமேலழகர் அங்ஙனம் கருதவில்லை என்பது காயங்கள் என்று பன்மையில் கூறியிருத்தலால் பெறப்படுகின்றது. நாலடியார் எழுதப்பெற்ற காலத்தில் இந்நாளிலுள்ள பெருங்காயம் இல்லை என்பது திண்ணம். ஆகவே,

நாலடியாரின் ஆசிரியரும் பரிமேலழகரும் கொண்ட பொருள் யாது என்பது ஈண்டு ஆராய்தற்குரியதாகும். இனி; திருநெல்வேலி ஜில்லாவில் திருச்செந்தூரிலுள்ள ஒரு கல்வெட்டு, காயம் என்பதின்பொருளை மிகத்தெளிவாக உணர்த்துகின்றது, அஃது அடியில்வருமாறு:—

(41)...............'காயம் மிளகமுத(42)மஞ்சளமுது சீரகவமுது சிறுகடுகேமுத (43) கோத்தமலிஅமுது ஏற்றிக் காயம் ஐந்து இவை ஒருபோதைக்கு முச்செவிடாக நான்குபோதைக்குக் காயம் உழக்கே இருசெவிடு'

(Tiruchendur Inscription of Varaguna Maharaja II;
Epigraphia Indica Vol XXI No. 17.)

இக்கல்வெட்டினால் காயங்கள் ஐந்துள்ளன என்பதும் அவை மிளகும் சீரகமும் மஞ்சளும் சிறுகடுகும் கொத்தமல்லியுமாம் என்பதும் நன்கு புலப்படுகின்றன. 'காய மிளகமுது' எனவும் 'காயம் ஐந்து' எனவும் இக்கல்வெட்டில் வந்துள்ளமையால் இவ்வைந்தனுள் ஒவ்வொன்றையும் காயம் என்று முற்காலத்தார் வழங்கி வந்தனர் என்பது தெள்ளிதின் உணரப்படும். எனவே, நாலடியாரின் ஆசிரியரும் பரிமேலழகரும் காயம் என்பதற்குக் கொண்டபொருள் மேலே குறித்துள்ள கல்வெட்டினால் விளக்கமுறுதல் காண்க.

8. சாத்தனூரும் திருவாவடுதுறையும். சோழமண்டலத்தில் சாத்தனூர் என்ற ஊர் ஒன்றுளது. இதுவே அறுபத்து மூன்று அடியார்களுள் ஒருவராகிய திருமூல நாயனார் வாழ்ந்த தலமாகும். இதற்கு அண்மையில் திருவாவடுதுறை என்ற தலம் உளது. இது திருஞானசம்பந்த சுவாமிகளுக்குச் சிவபெருமான் ஆயிரம் பொன் அடங்கிய பொற்கிழி யொன்றை அளித்தருளிய தலமாகும். இங்குள்ள ஒரு கல்வெட்டு * இவ்வாலயத்தின் பெயரே திருவாவடுதுறை என்றுணர்த்துவதோடு இஃது அமைந்துள்ள ஊர் சாத்தனூர் என்றும் கூறுகின்றது. எனவே,

* Inscription No. 117 of 1925.

சாத்தனூர் என்னும் திருப்பதியிலுள்ள சிவாலயமே திருவாவடு துறை என்னும் பெயருடன் முற்காலத்தில் நிலவிற்று என்பது ஒருதலை. இதனை வலியுறுத்தும் மற்றொருசான்றும் சேந்தனுர் பாடியுள்ள திருவிசைப்பாவில் திருவாவடுதுறைப் பதிகத்தில் உளது. அஃது,

ஒழிவொன்றிலாவுண்மை வண்ணமும் உலப்பிலளு றின்ப
[வெள்ளமு
மொழிவொன்றிலாப் பொன்னித்தீர்த்தமு முனிகோடி
[கோடியாமூர்த்தியும்
அழிவொன்றிலாச் செல்வச்சாந்தையூர்அணியாவடுதுறையாடினுள்
இழிவொன்றிலா வகையெய்தினின் றிறுமாக்கு மென்னிள
[மானனே,—என்பதாம். இப்பாடலில்

வந்துள்ள சாந்தை என்பது சாத்தனூர் என்பதின் மரூஉ ஆகும். 'சாந்தையூர் அணியா வடுதுறை' என்னுந் தொடர்மொழிகள் சாத்தனூரில் உள்ளது ஆவடுதுறை என்னுந் திருக்கோயில் என்பதை விளக்கி நிற்றல் ஈண்டு அறிதற்குரியதாகும். சமய குரவர்களது தேவாரப்பதிகங்களை ஆராயின், சிலதிருப்பதிகளி லுள்ள திருக்கோயில்களுக்குத் தனிப் பெயர்கள் இருத்தல் புல னும். காவிரிப்பூம்பட்டினத்துத் திருக்கோயில் பல்லவனீச்சுரம் எனவும், கோவந்த புத்தூரிலுள்ள திருக்கோயில் விசயமங்கை எனவும், கருவூரிலுள்ள திருக்கோயில் ஆனிலை எனவும், சாத்த மங்கையிலுள்ள திருக்கோயில் அயவந்தி எனவும் பெயரெய்தி யிருத்தலைத் தேவாரப் பதிகங்களால் அறியலாம்.

பிற்காலத்தில், சில ஊர்களில், திருக்கோயிலின் பெயர் அதனைச் சூழ்ந்துள்ள ஊர்ப்பெயராக மாறி வழங்கப்பெற்று வருகின்றது. ஊரின் எஞ்சிய பகுதிமாத்திரம் பழைய பெய ருடன் நின்று நிலவுவதாயிற்று. இதற்கு எடுத்துக் காட்டாகப் பழையாறை நகரை எடுத்துக்கொள்ளலாம்; பழைய காலத்தில், இது மிகப் பெரிய நகரமாயிருந்தது. பல்லவர், சோழர் முத லான அரசர் குடும்பத்தினர் இந்நகரில் வதிந்து வந்தனர் என்பது பல கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது. பட்டீச் சுரம், திருச்சத்திமுற்றம், திருமேற்றளி, வடதளி, தென்றளி

என்பன இந்நகரத்திலிருந்த திருக்கோயில்கள் ஆகும். இவற்றுள், பட்டீச்சுரம், திருச்சத்திமுற்றம் என்பவை தனித்தனி ஊர்களாக இந்நாளில் வழங்கப்பட்டு வருகின்றன. திருமேற்றளி என்ற திருக்கோயிலின் பெயர் 'திருமெத்தடி' என்ற ஊர்ப் பெயராக மாறிப் போயிற்று. அன்றியும், இது இக்காலத்தில் தனி ஊராக உள்ளது. இவைகளுக்கு அணித்தாகப் பழையாறை நகர் இந்நாளில் ஒரு சிற்றூராக இருக்கின்றது, பழையாறை நகரிலிருந்த பட்டீச்சுரமும் திருச்சத்திமுற்றமும் திருமேற்றளியும் வேறுவேறு ஊர்களாயினமைபோல, சாத்தனூரிலிருந்த திருக்கோயிலாகிய திருவாவடுதுறை என்பதும் ஒரு தனி ஊராகப் பிற்காலத்தில் வழங்கிவருதல் அறியத்தக்கது. திருவாவடுதுறை என்னும் பெயரும் இத்திருக்கோயிலைச் சூழ்ந்துள்ள சாத்தனூரின் ஒரு பகுதிக்கு மாத்திரம் வழங்கப் பெற்றுள்ளமையின், எஞ்சிய பகுதி சாத்தனூர் என்னும் பழைய பெயருடன் இதற்கு அண்மையில் இன்றும் நிலைபெற்றிருத்தல் உணரற்பாலதாகும்.

---

## மதிப்புரை

| | |
|---|---|
| பொருளாதார நூல்<br>நாணயமாற்று<br>நாணயம்<br>இந்தியாவின் கிராமப்பொருள்நிலை<br>கிராமச் சீரமைப்பு | இவை மதுரை அமெரிகன் கல்லூரியில் பேராசிரியரா யிருக்கும் திரு. J. S. பொன்னையா அவர்கள் M.A. Dip. Econ. F. R., E. S. |

இயற்றியவை. பொருள் நூற்கலையில் புலமை நிரம்பிய ஆசிரியர், தமது ஆராய்ச்சியிற்கண்ட நுண்பொருள்களை உலகியலுடன் பொருத்தி எளிய நடையில் தமிழ் மக்கள் உணருமாறு எழுதி வழங்கியது தமிழ்நாடு போற்றுதற்குரிய அருஞ்செயல்.

மேனாட்டுக்கலைகளை ஆங்கிலத்துறையில் பயின்று பட்டம் பெற்ற புலவர்கள் தாய்மொழிப் பயிற்சியைப் புறக்கணிப்ப

னால், தமது அருங்கலைகளின் நுண்மாண் பொருள்களைப் பிறர் உணருமாறு கூறவழியில்லாது தடுமாறுவதன்றி, அன்னார் செய்துவரும் முயற்சிகளும் நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள்ளாது, மணலில் உழுவேபோன்று அவமே பாழ்படுகின்றன. அங்கிலக் கலைஞர்கள் இக்குறையினால் எய்திவரும் பழியைத் துடைப்பார் போன்று, தோன்றிய இப்பேராசிரியரவர்களை ஊக்குதற்பொருட்டு தமிழ் மக்கள் அனைவரும் இந்நூல்களைக் கற்கவேண்டும். தமிழ் நாட்டிலுள்ள கல்லூரிகளிலும், நூல் நிலையங்களிலும், படிப்பிடங்களிலும் இவற்றைப் பல்லாற்றானும் ஆதரிக்கவேண்டும்.

இந்தியரின் பொருளாதாரநிலை செழுமையுறவேண்டுமென்றும், கிராமங்களைச் சீர்பெற அமைத்து அங்குள்ள மக்களை வளம்பெற வாழ்விக்க வேண்டுமென்றும் கிளர்ச்சிகள் மலிந்த இற்றைநாளில் பேராசிரியர் அவர்கள் இத்தகைய நூல்களை நல்கியது காலத்தினாற் செய்த பேருதவியாகும்.

---

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "ஐப்பசி" நன்கோடை.

| திங்கள் நன்கோடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, நே. அ. அனந்தவிசய முதலியார் | ,, | 1 | 8 | 0 |
| ,, T. S. சபாபதி பிள்ளை B.A., (Retired. Dt. Registrar.) | ,, | 1 | 0 | 0 |
| ,, K. பிரணதார்த்திகரன் பிள்ளை (மனிகை) | ,, | 1 | 4 | 0 |
| ,, L. மார்க்கசகாயம் பிள்ளை B.A., (Secretary, West Tanjore Dt. Board.) | ,, | 2 | 0 | 0 |
| ,, K. நடராசன் B.A., B.L., | ,, | 5 | 0 | 0 |
| ,, R. விசுவநாதன் | ,, | 0 | 4 | 0 |

| ஆண்டு நன்கொடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. இராவ்சாகிபு த. வே. உமாமகேசுவரன் பிள்ளை B.A., B.L., | அவர்கள் | 10 | 0 | 0 |
| ,, க. விசுவநாத பிள்ளை (Merchants Bank, Secretary.) | ,, | 5 | 0 | 0 |
| ,, T. A. வாசுதேவ பிள்ளை B.A., (Retired Dt. Registrar.) | ,, | 5 | 0 | 0 |
| ,, T. S. சபாபதி பிள்ளை B.A., (Retired Dt. Registrar.) | ,, | 2 | 0 | 0 |
| ,, க. அருணாசலம் பிள்ளை (Clerk, Dt. Board Office.) | ,, | 2 | 0 | 0 |
| ,, கே. அ. வர்த்தமான முதலியார் | ,, | 2 | 0 | 0 |
| ,, இராவ்சாகிபு Dr. V. P. நாயுடுகாரு (New Town.) | ,, | 2 | 0 | 0 |
| ,, P. V. ராமு அய்யர் (கிருஷ்ண விலாஸ்) | ,, | 1 | 0 | 0 |
| ,, A. பக்கிரிசாமி பிள்ளை (மளிகை) | ,, | 1 | 0 | 0 |
| ,, J. அய்யாத்துரை நாயனர் | ,, | 1 | 0 | 0 |
| ,, பம்பாய் M. S. மணிஅய்யர் | ,, | 1 | 0 | 0 |
| ,, வி. சு. சிதம்பரம் பிள்ளை | ,, | 1 | 0 | 0 |
| ,, S. சுயம்பிரகாசம் B.A., B.L., (வக்கில்) | ,, | 1 | 0 | 0 |
| ,, T. S. ராமச்சந்திர ராவ் (Railway Contractor.) | ,, | 1 | 0 | 0 |



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

துணர் ௰உ. { தாது, மார்கழி } மலர் ௬



செந்தமிழ்ப்புரவலர்,

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பொழிற்றொண்டர்.

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ௰௨ | தாது, மார்கழி | மலர் ௯ |


உ

## நெடுந்தொகைக் குறும்பொருள்

திரு. வித்துவான். முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,
*தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்பள்ளி, ஆரணி.*

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 8, பக்கம் 286)

### பாட்டு. கக பாலை. ஔவையார்.

*தலை மகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகள் வேறு பாடுகண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பது படச் சொல்லியது.*

வான மூர்ந்த வயங்கொளி மண்டில
நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்
டிலையில மலர்ந்த முகையி லிலவங்
கலிகொ ளாய மலிபுதொகு பெடுத்த

வஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்துக ளாகிய பயந்தபு சுரன
மெம்மொடு கழிந்தன ராயிற் கம்மென
வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயிலிணா ரெக்கர்
மெய்புகு வன்ன கைகவர் முயக்க
மவரும் பெறுகுவர் மன்னே நயவர
நீர்வார் நிகர்மலர் கடுப்ப வோமறந்
தறுகுள நிறைக்குந போல வல்கலு
மழுதன் மேவல வாகிப்
பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே.

வானம்ஊர்ந்த வயங்கு ஒளிமண்டிலம்-வானத்திற்போய விளங்குகின்ற ஒளியையுடைய ஞாயிறு, நெருப்பு என சிவந்த உருப்பு அவிர் அம்காடு=தீயைப்போலச் சினந்த வெப்பம் விளங்கும் அழகிய காட்டில், இலைஇல மலர்ந்த முகைஇல் இலவம்=இலைகள் இல்லாதனவாய்ப் பூத்த அரும்புகளில்லாத இலவ மரம், கலி கொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த அம் நெடு சுடர்கொடி பொற்ப தோன்றி=விழவின் ஆரவாரத்தைத் தம்மிடத்தே கொண்ட மகளிர் திரள் விருப்பம் மிக்கு ஒருங்கு சேர்ந்து தூக்கிய அழகிய நெடிய விளக்கின் ஒழுங்கினை யொக்கத் தோன்ற, கயம்துகள் ஆகிய பயம் தபு கானம்=அறுநீர்ச்சுனை (பலவகையான)துகள் (பட்டுக்கலக்கம்) ஆகிய பயனற்ற சுரத்தில், எம்மொடு கழிந்தனராயின்=எம்மை உடன் கொண்டு சென்றனராயின், வம்புவிரித்த அன்னபொங்கு மணல்கான்யாறு படுசினை தாழ்ந்த பயில் இணர் எக்கர்=கச்சு விரித்தாற் போன்ற மிக்க மணலையுடைய காட்டாற்றிற் பெரிய கொம்புகள் தாழ்ந்துள்ள பெருகிய பூங்கொத்துகளை யுடைய மணற் குன்றிடத்து, மெய் புகுவு அன்னகைகவர் முயக்கம் நயவர அவரும் கம்மென மன் பெறுகுவர்= ஒருவருடலி லொருவருடல் புக்காற் போன்ற கைவிரும்புகின்ற முயக்கத்தை விருப்பம் வர அவரும் விரையப் பெரிதும் பெறுவார், நீர்வார் நிகர் மலர் கடுப்ப அறுகுளம் நிறைக்குநபோல அல்கலும் ஓமறந்து அழுதல் மேவலஆகி பழி

நீர்கண்ணும் படுகுவமன் = நீர் ஒழுகும் ஒளியையுடைய பூவை யொப்ப நீரற்ற குளத்தை நிறைப்பவை போல நாடோறும் (மெலிவான்) நீங்குதலை மறந்து அழுதலைப் பொருந்தாவாய்க் குற்றந் தீர்ந்தகண்களும் இமையோடிமை படத்துயிலுவனவாம். அது கழிந்தது.

விண்ணிற்சென்ற விளங்குகின்ற ஒளியையுடைய ஞாயிறு தீப்போற் சினந்தமையால் வெப்பம் விளங்கும் அழகிய காட்டின்கண் இலைகளும் அரும்புகளுமில்லாதனவாய் முற்றப் பூத்த இலவமரம் மிக்க விருப்பத்தொடும் விழவின் ஆரவாரத்தொடும் ஒருங்கு சேர்ந்து நெடிய விளக்குக்களை வரிசையாக எடுத்த மகளிர் திரளையொத்துத் தோன்ற அறுநீர்ச்சுனை பலவகைப் பட்டதுகளடைந்து தூர்ந்துபோய பயனற்ற அக்கானத்திடத்து எம்மையும் உடன்கொண்டு கழிந்தாராயின், கச்சு விரித்தாற் போன்ற மிக்க மணல் பரந்த காட்டாற்றிற் பெரிய கொம்புகள் தாழ்ந்துள்ள பெருகிய பூங்கொத்துக்களையுடைய மணற்குன்றின்மேல் உடலுள் உடல் புக்கது போன்றதை விரும்புகின்ற முயக்கத்தை விருப்பம் வர அவரும் பெறிற்பெறுவார். நீர் ஒழுகும் ஒளியையுடைய பூவையொக்க நீரற்ற குளத்தை நிறைப்பவை போல (மெலிவான்) இடைவிடாது அழுதலைப் பொருந்தாதனவாய்க் குற்றந் தீர்ந்த (என்) கண்களும் இமையோடிமை படத் துயிலுவனவாகும். அவர் அதுசெய்கின்றிலர் என்பது இச்செய்யுளிற் போந்தபொருளாம்.

ஊர்ந்தமண்டிலம் சிவந்தகாடு. அவிர்காடு. காட்டிலவம். சுடர் நெடுங் கொடிபொறப்பத் தோன்றக், கயந்துகளாகிய காடு. ஆயம் மலிபு தொகுபு எடுத்த சுடர்க் கொடி. தோன்றி என்னும் செய்தெனெச்சத்தைத் தோன்ற எனச் செயவெனச்சமாகத் திரிக்க. தோன்றல் இலவத்தின்வினை. துகளாதல் கயத்தின் வினை. 'தோன்றி' எனக்கிடக்கைமுறையிற் கொள்ளின் முடிபுமாறின்று. தோன்றத் துகளாகிய கானம், கானம் கழிந்தனராயின் அவரும் முயக்கம் பெறுகுவர். கண்ணும் அழுதல் மேவலவாகிப் படுகுவ. கம்மெனப் பெறுகுவர். நயவரப் பெறுகுவர். மன்பெறுகுவர். சினை தாழ்ந்தஎக்கர், எக்கரிற் பெறுகுவர். வம்பு

விரித்தன்ன மணல். வம்பு விரித்தன்ன பயிலிணரெக்கர் எனலு மாம். மெய்புகுவன்னமுயக்கம். அவரும் பெறுகுவர். கண்ணும் படுகுவ. ஓமறந்தழுதல். கடுப்ப அழுதல். நிறைக்குநபோலஅழு தல். எம்மொடு கழியாமையின் அல்கலும் அழுதல் மேவியகண், கழிந்தனராயின் அதனை மேவலவாகிப்படுகுவ. காட்டில் சுடரை மலிபு தொகுபு எடுக்க ஆயம்பொற்ப இலவம்இலையின்றி அரும் பறமுற்ற மலர்ந்து தோன்றுதற்கும் கயந்துகளாதற்கும் வயங் கொளி மண்டிலம் நெருப்பெனச் சிவந்தலே ஏதுவாதல் அறிக. படுசினையை வினைத் தொகையாக்கியும் பொருள் கூறலாம். தாழ்ந்த இணர் எனவும், இணர் பயிலெக்கர் எனவும் கூட்டிப் பொருள் கூறலுமாம். நெடுங்கொடி எனக்கிடக்கையே பொருந்து மெனலுமாம்.

மன் இரண்டனுள் முன்னது மிகுதி(கலி94:—16. 107:—9, 21. 137:—11) யையும் பின்னது கழிவையும் உணர்த்தி நின்றன.

இச்செய்யுட்கள் காட்டின் வெப்பமும் இலவத்தின் நிலை யும், மகளிர் திரள் கார்த்திகை விளக்கெடுத்தலும், கயந்துகளா தலும், மணலின் தோற்றமும், இணர்பயிலெக்கர் நகர்ச்சி(கலி. 27:—20)யும், தலைவியின்கண் துயிலாமையும், தலைவியைத் தலை வன்கொண்டு கழியாமையும், அதனால் தலைவற்கு முயக்கமின் மையும், தலைவிக்குக் கயக்கமுண்மையும் கூறியவாறறிக. முயக்க மின்மையாகிய வேறுவால் தலைவியின் கண்கள் துயிலாது நாடோறும் இடைவிடாமல் அழுதலையுற்று, அறுகுள நிறைப் பவைபோல நீர் வார்தலின், அவற்றிற்கு நீர்வார் நிகர் மலரு வமையாயின. தன் தலைவியின் கற்பிற்குவரும் பழியும் தனக்கு வரும் பூசல் தராமையாகிய பழியுந் தீர்ந்தமையால், பழிதீர்கண் என்றார். 'பழிதீர்முறுவல்' (தொல். களவு. 20)

தானுந் தலைவனும் முயக்க முற்றுக் கயக்கமற்றிருத்தற்கு வழியுணர்ந்து கூறுதலின் ஆற்றுதல் பெற்றும்.

1: ஊர்தல்=செல்லுதல். கலி. 39:—8. வானூர்மதியம். நாலடி. 125. சிலப். 6:—37. சிந். 286. 'மஞ்ஞை யூர்ந்து'.

"ஊர்தல் ஈண்டுப் போதன் மேற்று; 'வானூர்மதியம்' போல (உரை). நெடுநல். 161. 'விண்ணூர்பு திரிதரும்' 'ஆகாயத்திடத்தே சென்று திரியும்' (உரை) மேலேதோன்றுதல். (கலி:—148—5)

2. மண்டிலம்.

தயங்குதிரைப் பெருங்கட லுலகுதொழத் தோன்றி
வயங்குகதிர் விரிந்த வுருகெழு மண்டிலம்'
'நிரைசெல லிவுளி விரைவுடன் கடைஇ
யகலிரு விசும்பிற் பகல்செலக் சென்று
மழுகுசுடர் மண்டிலம் மாமலை மறைய'
'இலங்குசுடர் மண்டிலம் புலந்தலைப் பெய்து
பல்கதிர் மழுகிய கல் சேரமையம்'
'அழல்கான்று திரிதரு மலங்குகதிர் மண்டிலம்'
(அகம். [31]. 263. 363. 367. 381.)

'சேய்விசும் பிவர்ந்தசெழுங் கதிர்மண்டிலம் மாமலைமறைய'
'வயக்குறு மண்டிலம்' (கலி. 25:-1. உரைபார்.) [நற்.67.
'விரிகதிர் மண்டிலம்' (கலி. 71:-1.)
'பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய' (குறிஞ்சிப். 216.)
'குணகடல்வரைப்பின் முந்நீர்நாப்பட் பகல்செய் மண்டிலம்'
(பெரும்பாண். 441-2)
'மாதிரம், விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்'
(நெடுநல்-72-3)
'விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலன் மண்டிலத்து' (ஷை 161.)
'வீங்குசெலன் மண்டிலம்' (புறம். 8.)
'ஒளிகதிர் மண்டிலம்' (பெருந். 2-10:—133)
'புதையிரு ளகற்றும் பொங்கொளி மண்டிலம்' (ஷை.11:—81)
'உருப் பவிர் மண்டி லத்து'
'பொன்னிறை சுருங் காமண் டிலம்' (ஷை.4:—164; 177)
மதியைக் குறித்தல் (கலி. 7:—7)

ஞாயற்றின் மண்டிலத்தைக் குறித்தல் (அகம்.378:—14
கலி. 141:—12)

3. வயங்குதல்.

'வானமூழ்கிய வயங்கொளி நெடுஞ்சுடர்க் கதிர்காய்ந்
தெழுந்தகங் கனலி ஞாயிற்றுவைகுறு வனப்பு' (நற். 163)

'வானமூர்ந்த வயங்கொளி மண்டிலம் நெருப்பெனச்சிவந்த வுருப்பவி ரங்காட்டு என்றவழி, வயங்கென்பதூஉம் அவிரென் பதூம் விளக்கங் குறித்து நின்றன' என்பது (தொல். சொல். சூ. 391) தெய்வச்சிலையாருரையாகும்.

4. சிவத்தல்.

'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' (தொல். உரி 76)

நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் மண்டிலம்' (அகம். 31)

'சினந்திர் மண்டிலம்' (பெரும். 1. 33:—40)

'பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறுசெயிர் சினந் சொரிதலிற்
றணிவில் வெங் கோடை' (கலி. 20:—1—3)

5. கலி:—

கலிகொள் சும்மை ஒலிகொள் ஆயம். (மதுரைக். 264)

6. இலவத்தின் செய்தி.

'நிழல்படக் கவின்ற நிளரை யிலவத்
தழலகைத் தன்ன வலங்குசினை பொண்பூ' (அகம். 245.)

'எரியுரு வுறழ விலவ மலர' (கலி. 33:-10.)

'முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழக்கழ லசைவளி பெடுப்ப வானத்
துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்குங்
கவலை யருஞ்சுரம்' (ஐங். 320.)

'இலவ மேறிய கலவ மஞ்ஞை
யெரிபுகு மகளி ரேய்க்கும்' (சிற்றெட்டகம். ஐங். பக். 143.)

'சார, லிலையில மலர்ந்த வோங்குநிலை யிலவ
மலையுறு தீயிற் சுரமுதற் றோன்றும்' (ஐங். 338.)

'வானுலந், தருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவம்' (அகம். 185.)

'அருஞ்சுரக் கவலைய வதர்படு மருங்கின்
நீளரை யிலவத் தாழ்கழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறன் மூதூர்
நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனிற் றோன்றும்' (அகம். 17.)

'எரிபரந்தன்ன இல(வ)மலர்' (அகம். 133.)

'எரிநிறத் திலவம்' (சிலப். 5:-214.)

'எரிமல ரிலவம்' (மணி. 3:-166. பெருங். 1. 54:-143.)

'ஒள்ளெரி யெழுந்த வூழ்படு கொழுமலர்
முள்ளரை யிலவம்' (பெருங். 1. 53:- 177-8. 56:-214.)

'ஆனேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவம்.' (கலி. 26:-5)

'ஊனென மலர்ந்த வேணி விலவம்' (பெருங். 2. 9:—139)

'ஊன் றகர்த்தனைய போன்று மூடெரி முளைப்ப போன்றுந்
தோன்று பூ விலவத்து' (சிந். 1701)

'கருங்கா லிலவம்' (அகம். 309.)

'நீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற வணில்' (பெரும்பாண். 83-5)

7. கார்த்திகைத் திருவிழா.

மழைகானீங் கிய மாக விசும்பிற்
குறுமுயன் மறுநிறங் கிளர மதிநிறைந்
தறுமீன் சேரு மகலிரு ணடுநாண்
மறுகு விளக் குறுத்து மாலைதூக்கிப்
பழவிறன் மூதூர்ப் பலருடன் றுவன்றிய
விழவுட னயர வருகதில் லம்ம' (அகம். 141)

'பெரு விழா விளக்கம்' (அகம். 185)

'விழவுத் தலைக் கொண்ட பழவிறன் மூதூர்
நெய்யுமிழ் சுடர்' (அகம். 17.)

'அறுமீன் பயந்த வறஞ்செய் திங்கட்
செல்சுடர் நெடுங் கொடி போலப்
பல்பூங் கோங்க மணிந்த காடே' (நற். 201)
'நலமிகு கார்த்திகை நாளவ ரிட்ட
தலைநாள் விளக்கு' (கார் நாற். 26)
'கார்த்திகைச் சாற்றிற் கழி விளக்கு' (களவழி. 17)
'குன்றிற் கார்த்திகை விளக்கு' (சிந். 256)
'குன்றின் கொழுஞ் சுடர் விளக்கு.' (சூளா. மந் 17)
'வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகிற்
றுளக்கில் கபாலீச் சரத்தான் றொல்கார்த்திகைநாட்
டளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்'
(திருஞான. தேவா. மயிலை 3.)
'வேலின் ஒக்கிய விளக்கு நிலை' (தொ. பொ. 90.)
இது கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை நாளின் ஏற்றிய விளக்குக் கீழும் மேலும் வலமு மிடமுந் திரிபரந்து சுடர் ஓங்கிக் கொழுந்து விட்டெழுந்ததென்று அறிவோராக்கங் கூறப் படுவதாம்.

8. மெய்புகு வன்ன கைகவர் முயக்கம்.

'பருகு வன்ன காதலொடு திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்
தோருயிர் மாக்கள்' (அகம். 305)
'விளங் கிழைப் பொலிந்த தோள்சேர்
பெய்திய கனைதுயி லேற்றொறுந் திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்மிகுதி' (அகம். 379)
'நம்வயின் மெய்புற விரும்பிய கைகவர்முயக்கினு
மினிய.....................பொருளே' (ஐங். 337)
(முயக்கம், குறுங். 237 கலி. 32. 71. 78.)
'இலங்குவளை நெகிழப் பரந்துபட ரலைப்பயாம்
முயங்குதொறு முயங்குதொறு முயங்க முகந்துகொண்
டடக்குவ மன்னோ தோழி....................
சாரனுடன் சாயன் மார்பே' (அகம். 328)

'சிமையக்குரல சாந் தருந்தி யிருளி
யிமையக் கான நாறுங் கூந்த
னன்னுத லரிவை யின்னுற லாகம்
பருக்கு வன்ன காத லுள்ளமொடு
திருகுபு முயங்கல்.' (அகம். 399.)

9. வம்பு விரித்தல்.

மணிகண் டன்ன மாநிறக் கருவிளை
யொண்பூந் தோன்றியொடு தண்புத லணியப்
பொன்ஞெடர்ந் தன்ன தகைய நன்மலர்க்
கொன்றை யொள்ளிணர் கோடுதொறுந் தூங்க
வம்புவிரித் தன்ன செம்புலப் புறவு.

வம்பு=கச்சு. 'வம்பு நிறை முடிநர்' (=கச்சுக்களைத் தம் தொழில் முற்றுப்பட முடிவார். மதுரைக். 514. உரை.)

'விண்பொருஞ் சென்னிக் கிளைஇப காந்தட்
டண்கம ழலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்தகுன்று'

"உயர்ந்த நிலத்தே நின்று மணக்கின்ற காந்தள் வரையர மகளிராற் கீழ்நிலத்தே பரந்து அவ்விடத்தைக் கச்சு விரித்தாற் போல அழகு பெறுத்து மென்றதனுல், நம்மினுயர்ச்சியையுடைய தலைவன் நமது நல்வினையால் தனது பெருமை தானுமொழிந்து இவ்விடத்தே வந்து கூடி நமக்கும் உயர்ச்சியுளதாக்கி நம்மை அழகுபெறுத்துகின்றுன் என்று உள்ளுறை யுவமமெய்திற்று."
(குறிஞ்சிப். 196-199. உரை)

'வம்பு விரி கொட்டில்' "வம்பு=இங்கே செங்கச்சு"
(பெருங். 1. 38:—82.)

'வம்பு விசித்தியாத்த செம்பொற் கச்சையர்'
"வம்பு=அரைக்கச்சு. பொற்கச்சு=பொன்னுடை"
(பெருங். 1. 39:—31.)

'வம்புமீக்கூரும் பொங்கிளமுலை' (ஷை 1. 41:—79.)

வம்பு நெருக் குற்ற பொங்கிளமுலை (ஷை 1. 46:—244.)

'வம்பணி யானை' 'கச்சணிந்த யானை' (புறம். 37. 333. உரை.)

ஒன்றும் பலவுமான நிறங்கொண்டு அழகுடையனவாய உடை, விரிப்பு முதலியவற்றைக் கச்சு என்பர். மணமெனவுமுண்டு. (அகம். 99. 107. 250. 341; நற். 106; சிந். 853; மணி. 8:—11.)

10. நிகர்மலர்.

'நெய்தற் கூம்புவிடு நிகர் மலரன்ன
வேந் தெழின் மழைக் கண்' (அகம். 83)

'தெண்ணீராய்சுனை நிகர்மலர் போன்மென நசைஇ
வீதேர் பறவை விழை யும்
போதார் கூந்தனங் காதலி கண்ணே' (அகம். 371)

'புன்னைத் தாது சேர் நிகர்மலர்' (குறுந். 311)

'தெண்ணீர் நிகர் மலர் புரையும்
நன் மலர் மழைக் கண்' (குறுந். 329)

'குவளைநீர் வார்நிகர் மலரன்ன நின்
பேரமர் மழைக் கண்டெண் பனி கொளவே' (நற். 391)

'அரும்பவிழ்முல்லை நிகர்மலர் நெல்லொடு தூஉய்'
(சிலப்.9: 1 2)

'நிகர்மலர் நீயே கொணர் வாய்' (மணிமே. 3:—15)

விழு நிகர் மலர் (பரிபா. 9:—5)

11. படுசினை ஐங். 142 படுநுகம்=பெரியபாரம் (சிந்.203)
பெருங் 4. 2:—9.பெருங் 4. 15:—32.

12. கயந்துகளாதல்.

1. துணிகயந் துகள்பட்ட தூங்கழல் வெஞ்சுரம் (கலி. 20. 6)

2. 'துணிகயந் துகள்படத் துளங்கிய வதுபோற் றெளியாச்
[சிந்தையன்' (மணிமே. 24:—84)

3. 'துகளறத் துணிந்த மணிமருடெண்ணீர்க் குவளையம்
பைஞ்சுனை' துகளற=கலக்கமற. (மலைபடு:—250—1. உரை.)
(அகம். 184. 263. புறம். 266. 389. பார்க்க.)

13. கயம்.

வண்டிமிர் பொய்கையும் வாவியுங் கயமும்
கேணியுங் கிணறும் நிணிலப் படுவும்

பொய்கை= மாளிடராக்காத நீர்நிலை. வாவி= ஆற்றி லுள்ளவோடை (சிந். 337. உரை)

கயம் = ஆழமானநீர்நிலை (சிங். 592 புறம் 389) கேணி = சிறியகுளம். படு = மடு.

14. கம்மென.

விரைய. 'கேழலட்ட நற் கோட்

சேந்நா யேற்றை கம்மென வீர்ப்ப' (அகம். 111)

மணம்.

'காடே கம்மென்றன்றே' (அகம். 23.) 'மலர்ந்த கருங்கானுணவின் பெருஞ் சினைவான் பூச்செம் மணற் சிறுநெறி கம்மென வரிப்ப' (அகம். 345)

15. நயவர. அகம். 99, 229, 279, 335, 352. ஐங், 88, 365, 419. கலி. 40.

16. அல்கல். நாள். அகம் 127. 241. 281. 313 ஐங் 470. மலைபடு. 443. உரை. குறுங். 226. 381. நாளும். 365. இரவு. கலி 65. 90. 92. 115. இரவும் எல்லையும் படரட வருந்துதலின் அல்கலும் என்றாள் அகம். 313.

17. படுதல் = துயிலுதல். (கலி. 49:—22)

'வானமூர்ந்த வயங்கொளி மண்டில, நெருப்பெனச் சிவந்தவுருப் பவிரங்காடு' எனக் காடுறை யுலகத்துப் பாலைவந்தது (தொல். பொ. 13. உரை) என்றும், 'வானமூர்ந்த' என்னும் அகப்பாட்டினுள் 'மெய்புகுவன்ன கைகவர் முயக்கம் அவரும் பெறுகுவர் மன்னோ' எனக்கூறி அழுதன் மேவாவாய்க் கண்ணுந் துயிலுமென இரக்கமீக் கூறியவாறு முணர்க என்றும், 'குன்றியன்ன' என்னும் அகப்பாட்டும் அது என்றும் (ஷை, 15. உரை) ஆசிரியர் நச்சினார்க்கினியர் குறித்துள்ளார்.

'நீர்வார் நிகர்மலர் கடுப்ப' அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத்தோன்றி' என்னும் அடிகளைக் 'கடுப்ப' 'பொற்ப' ஆட்சிக் கெடுத்துக் காட்டினார் ஆசிரியர் பேராசிரியர். (தொல். உவ. 15. உரை)

ஔவையார் வரலாற்றைப் புறநானூறு முதலியவற்றிற் காணலாம்.

# கல்லாட நூலாராய்ச்சி

திருவாளர். E. R. நரசிம்மஐயங்கார் அவர்கள் B.A., B.L., சேலம்.

ஆக்கியோன் பெயர்பெற்ற நூல்களுக்கு எடுத்துக் காட்டாக வச்சணந்திமாலை உரையாசிரியர் ஆண்ட நூல்களில் கல்லாடம் ஒன்றும். இதன் ஆசிரியர் கல்லாடர் என்னும் புலவர். இப்பெயர் வகித்த புலவர் பலருளர். பதினொன்றாந் திருமுறையில் கண்ணப்பர் திருமறம் இயற்றிய புலவர் இப்பெயரால் விளங்குவர். இவர் இயற்பெயரால் விளங்காது புனைபெயர் பூண்டாரென்பதைப் பின்னர் கூறுவாம். தொல்காப்பியச் சொல்லதிகார உரையாசிரிகளில் ஒருவர் கல்லாடர் எனும் பெயருடையவர். இவ்வாசிரியர் இளம்பூரணர் உரையைத் தழுவியும் அதனை விளக்கியும் போந்தாராதலின் இவர் 13ம் நூற்றாண்டில் இருந்தவராவர். சங்க காலத்துப் புலவர் ஒருவரும் கல்லாடர் எனப்படுவர். கல்லாடநூலின் சிறப்புப் பாயிரம் இதனைச் சங்க நூலெனும் பொருள் படும்படிப் பகருமாயினும் இதன் அகச் சான்றுகள் சங்ககாலத் தன்றெனப் புகலுமாதலின் இதனைச் சங்க காலப் புலவர் மேலேற்றிக் கூற வியலாது. இதனுரையாசிரியர் மயிலேறும் பெருமாள் பிள்ளை சிறப்புப் பாயிரத்திற்கு உரைவரையாது விடுத்த காரணத்தான் இதனை உரையாசிரியர் ஒதினரெனக் கொள்ளத்தகும். இஃதுண்மையாயின் உரையாசிரியர் ஆராயாது தமது காலத்து நிலவியிருந்த கருத்தை உரைத்தாரென்றல் பொருந்துமென்க.

திருவாளர் சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் செந்தமிழ்த் தொகுதி 15-ல் கல்லாடநூலில் காணப்படும் சிலவகைச் சான்றுகளை ஆராய்ந்து கல்லாடம் 9-ம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதாகுமென்றும், கல்லாடச் செய்யுட்களை உரையாசிரியர் மேற்கோளாட்சி கொள்ளாத காரணத்தான் கல்லாடம் 13-ம் நூற்றாண்டினதாகு மென்றும், தமது முடிபைக் கூறியுள்ளார். இவ்வறிஞர் தமது ஆராய்ச்சியில் கல்லாடம் என்னும் பெயரை வச்சணந்திமாலை யுரைகாரர் ஆட்சிகொண்டுள்ளதைக் கருதவில்லை.

வச்சணந்திமாலை உரை 12-ம் நூற்றாண்டில் வரையப் பட்ட தெனக் கூறலாமாதலின் கல்லாடம் 12ம் நூற்றாண்டிற்கும் 9ம் நூற்றாண்டிற்கும் இடைக் காலத்தில் தோன்றிய தென்பது பொருந்தும். இக்கருத்து, நம்பியாண்டார் நம்பிகள் இயற்றி யருளியுள்ள கோயிற் றிருப்பண்ணியர் திருவிருத்தத்தால் வலி யுறுவதைக் கூறுவாம். நம்பியாண்டார்

"வருவா சகத்தினின் முற்றுணர்ந் தோனை வண்டில்லை மன்னைத்
திருவாத வூர்ச் சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவை கண்டேயு மற்றப் பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப் பிப்பரே"

என்னும் செய்யுளில் திருக் கோவையாரின் பெருமையைப் புலவர்களும் அறியவில்லையே யென்று வருந்திக் கூறுகின்றார். சிலபுலவர் இயற்றும் நூலின் பெருமை செவ்வனே உணர்வ தற்குப் பலவாண்டுகள் இடைப்படுவதை அநுபவத்தால் அறிய லாம். எனவே மணிவாசகனார் காலம் நம்பியாண்டார் காலத் திற்கு சிலநூற்றாண்டு முன்னராகுமென ஊகிக்கலாம். கல் லாடநூல் திருக்கோவையாரின் பெருமையை எடுத்துக் கூறவே எழுந்த தென்று கூறுவராதலின் கல்லாடநூல் நம்பியாண்டார் காலத்திற்கு முன் இயற்றப்படவில்லை யெனலாம். நம்பியாண் டார் 10-ம் நூற்றாண்டிறுதியிலும் 11-ம் நூற்றாண்டின் தொடக் கத்திலும் திகழ்ந்தவராவர். எனவே கல்லாட நூல் நம்பியாண் டார் நம்பிகளின் காலத்திற்கும் பின்னர், நம்பியாண்டார் கருத்தை நிலை நாட்டவே எழுந்த தென்றும் கூறலாமாகலின் கல்லாடம் 11ம் நூற்றாண்டினிடையில் இயற்றப்பட்டதென்பது போதரும்.

திருவாளர் வேதாசலம் என்னும் மறைமலையடிகள்என்பார் மணிவாசகனார் 2-ம் நூற்றாண்டில் அவதரித்தா ரென்பதற்குக் கல்லாட நூலை ஓர் சிறந்த ஆதாரவாகக் கொண்டார். இவ்வா ராய்ச்சியாளர் கருத்து, கல்லாடம் 6-ம் நூற்றாண்டில் இயற்றப் பட்ட தென்பது. இவ்வாராய்ச்சியில் வேறு பல சான்றுகளை யும் எடுத்தாண்டுள்ளாரெனினும் ஆராய்ச்சிக்கு அடிப்படை யாகக் கொண்ட கருத்துக்கள் வழுவுடையனவாகத் தோன்று

தலின் இவர் முடிபை ஏற்பதற்குச் சிலதடைகளுண்டென்பதை ஆங்காங்குக் கூறுவாம்.

கல்லாடம் ஓர் கோவை நூல். கூடற்பெருமானை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அப் பெருமான் ஆற்றிய திருவிளையாடல்கள் அறுபத்து நான்கில் சிலவற்றை அப்பெருமானின் புகழ்களாகக் கூறுமாகலின் கல்லாடம் திருவிளையாடற்புராணத் தோடும் ஓரியைபுடையதாகும். கல்லாட நூலாசிரியர்,

"கூடற் பதிவரு மாடற் பரியோன்
எட்டெட் டியற்றிய கட்டமர் சடையோன்"

என்று திருவிளையாடல்களின் தொகை அறுபத்து நான்கெனத் தொகை கூறியுள்ளார். இந்நூலில் முப்பத்து நான்கு திருவிளையாடல்களே கூறப்பட்டுள்ளன. எனவே கல்லாடருக்கு முன்பு அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் விரித்துக் கூறும் நூல் ஒன்றிருந்ததென்பது போதரும். மணிவாசகனார் காலவாராய்ச்சியாளர் கல்லாட நூலை ஆதாரவாகக் கொண்டாரேனும் திருவிளையாடல்களைக் கூறும் நூல் ஒன்றுண்டென்பதையும் அது யாதென்பதையும் கருதாதது ஓர் குறைபாடுடையதாகும். இவ்வாராய்ச்சியாளர் தமிழ் நூல்களையே ஆதாரவாகக் கொண்டார். தமிழ் நூல்களின் ஆசிரியர் தமது நூல்கள் வடமொழி நூல்களின் மொழி பெயர்ப்பென்றே கூறுவதாகத் தெரிகிறது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரையர் மணிவாசகனார் முதலியோர் திருப்பாட்டுக்களாலும் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் பெறப்படா. இவ்வடியார்கள் அறுபத்து நான்கென்னும் தொகையையும் யாண்டும் கூறவில்லை. வேறு தமிழ்நூல்கள் இருந்தனவெனக் கூறுவாருளராயின் அவருரை வெற்றுரையெனத்தகும். திருவிளையாடற் புராணங்கள் 13-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்டன வென்பதை தனிக் கட்டுரையில் கூறுவாம். எனவே வடமொழி நூல்கள் 13ம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்தே தோன்றினவாகுமென்பது தெளிவாம். வடமொழி நூல்களில் உத்தரபுராணம் முந்தியதென்றும் ஆலாசிய மகாத்துமியம் பிந்தியதென்றும் உணரலாகும். கல்லாடருக்கு முன்பிருந்த நூல் வடமொழி உத்தரபுராணமே யாகும். இதுவே

பழைய புராணமெனப்படும். இப்புராணத்தில் மூர்த்தி நாயனார் திருவிளையாடலும் காரியார் நாரியார் பாப்பகுந்த திருவிளையாடலும் கூறப்பட்டுள்ளன. (இந்நூல் இதுபோது வழக்கினின்றும் வீழ்ந்ததென்று டாக்டர் ஐயரவர்கள் கூறியுள்ளதால் அறியலாமாயினும் இந்நூலின் கருத்துக்களெல்லாம் இதன் மொழிபெயர்ப்பாகிய பெரும்பற்றப்புலியூர் நம்பிகள் புராணத்தாலறியலாகும். இக்கட்டுரையில் வடமொழி நூலின் கருத்தைக் கூறுமிடத்தெல்லாம் நம்பிகள் திருவிளையாடற் புராணத்தைக் கொண்டு கூறினுமென்க.) ஆலாசிய மகாத்துமியத்தின் ஆசிரியர் இவ்விரு திருவிளையாடல்களையும் நீக்கி, மற்றைத் திருவிளையாடல்களை செவ்விதின் ஆராய்ந்து, அத் திருவிளையாடல்கள் அழகுற வைப்பு முறையை மாற்றிக் கூறியுள்ளார். கல்லாட நூலில் மூர்த்திநாயனர் வரலாறு கூறப்பட்டிருப்பதால் கல்லாடர் உத்தரபுராணத்தை யொட்டிக் கூறினாராவர். கல்லாட நூல் 11-ம் நூற்றாண்டிடையில் இயற்றப்பட்டதென்று முன் கூறினும். உத்தரபுராணம் 11-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியதாகும். ஆலாசியமகாத்துமியம் கல்லாட நூலிற்குப் பிற்பட்ட காலத்தில் தோன்றியதெனலாம்.

திருவிளையாடல்கள் அறுபத்து நான்கில், ஆறுவரலாறுகள் சிலப்பதிகாரத்தாலும், பதினான்கு வரலாறுகள் திருஞான சம்பந்தர் திருநாவுக்கரையர் தேவாரங்களாலும், பதினான்கு வரலாறுகள் திருவாசகத்தாலும், மூர்த்தியார் வரலாறு ஒன்று சுந்தரமூர்த்திகள் தொண்டர் தொகையாலும் ஆக 35 வரலாறுகள் பழையனவெனலாம். மற்றை இருபத்தொன்பது வரலாறுகள் புதியனவாகும். திருவிளையாடற் புராணங்களில் சேரமான் பெருமாள் நாயனர் காலத்தும் ஓர் அருட்செயல் நடந்ததாகக் கூறப்படுமாதலால் இப்புதியனவான திருவிளையாடல்களும் மற்றைத் திருவிளையாடல்களோடு கர்ண பரம்பரையாய் வழங்கினவாகும். இவைகளை வடமொழிப் புராணகாரர் தொகுத்துக் கூறினாராவர். இத்தொகுப்பில் வரலாறுகள் ஆராயப்படாது அவைகள் வழங்கியவாறே புராணத்தில் கூறப்பட்டனவெனலாம்; எனவே திருவிளையாடல்களை ஆராயின்

திருவிளையாடற்புராண காலமும் இதன்பின் தோன்றிய கல்லாட நூலின் காலமும் புலப்படும்.

சான்றழைத்த வரலாறொன்று சிலப்பதிகார நூலின் வஞ்சினமாலையில்,

"வன்னியு மரமு மடைப் பள்ளியுஞ் சான்றாக
முன்னி றுத்திக் காட்டிய மொய் குழலாள்"

என்னும் அடிகளில் கூறப்பட்டது. இவ்வரலாறு சிறிது மாறுபட வன்னியுங் கிணறு மிலிங்கமும் அழைத்த திருவிளையாடலெனப் பிற்காலத்து வழங்கியதாகும். இது சான்றழைத்த திருவிளையாடலென்றும் புராணத்தில் காணப்பெறும். புராணங்களில் இச்செய்தி நிகழ்ந்தவிடம் திரும்புறம்பயமென்று கூறப்பட்டுளது. இவ்வரலாற்றில் குறிக்கப்பட்ட கன்னி காவிரிப் பூம்பட்டினத்துக் குரியவளென்று சிலப்பதிகாரத்திலும், புராணங்களிலும் கூறப்பட்டுளது. எனவே இவ்வரலாறு பழையதென்பதற்கையமில்லை. புராணகாலத்து பழைய வரலாறு சிறிதுமாறுபடக் கூறப்பட்டதென்பது தெளிவாம். வடமொழிப் புராண காலத்து செய்தி நிகழ்ந்தவிடம் திருப்புறம்பயமென்று வழங்கியதை புராணகாரர் உள்ளவாறே கூறினாராவர். வடமொழிப் புராணத்தை மொழி பெயர்த்த தமிழ்ப் புலவர்களும் அவ்வாறே கூறினாராவர். சேக்கிழார் தமது புராணத்தில் செய்தி நிகழ்ந்தவிடம் திருமருகல் என்று கூறி திருஞானசம்பந்தர் பதிகத்தையும் ஆதரவு காட்டியுள்ளார். வரலாற்றில் குறித்த கன்னி வைப்பூர்க்கோன் மகள் என்றார். இவ்வைப்பூர் திருமருகலுக்கு அருகிலுள்ளவூராகும். சேக்கிழார் கூறிய வரலாற்றுக்குச் சான்று ஒன்றுமில்லையாதலான் இதுவும் திருவிளையாடற் புராணக்கதை யென்றே கொள்ளப்படும். சேக்கிழார் புராணத்தும் திருவிளையாடற் புராணங்களிலும் இவ்வருட்செயலை திருஞானசம்பந்தர் ஆற்றியதாகக் கூறப்படும். சேக்கிழார் வரலாறும் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட வரலாற்றை யொட்டியதே யாகும். வரலாறுகள் பேதம் படக் கூறப்படும் வழக்கை மற்றைப் புராணங்களிலும் காணலாகும். இதனைப்

புராணகாரர் மரபெனக் கொள்ளவமையும். வடமொழியாளர் இதனைக் கற்பபேதம் என்று கூறுவர். தமிழ்மொழிப் புராணங் களையே ஆதரவாகக் கொள்ளின் விகற்பங்களுக்குக் காரணம் கூறவியலாது. இவ்வரலாறுகள் பலகாலத்தில் நிகழ்ந்தனவாகக் கொள்வோமாயின் திருவிளையாடல்கள் பல்கி அறுபத்து நான் கென்னும் தொகைக்கு மேற்படுமாறறிக.

இதனையோர்ந்தே பெரும்பற்றப்புலியூர் நம்பிகள் தமது புராணத்தில் திருமருகலிலும் முன் கூறிய செய்தி நடந்த தென்று கூறி சேக்கிழார் வரலாற்றையும் அறுபத்து நான்கென் னும் பழைய வரலாற்றில் அடக்கிக் கூறியிருப்பதும் காண்க. நம்பிகள் வடமொழிநூல் வரலாற்றை மாற்றிக் கூறுவதற்கு அஞ்சினராவர். (இதனால் நம்பிகள் புராணம் சேக்கிழார் புரா ணத்திற்கு பிற்பட்டகாலத்தில் இயற்றப்பட்டதென்பது தெளி வாம்.) இதனால் பழைய வரலாறு ஒன்றையே புராணகாரர் விகற்பித்து கூறினர் என்பது தெளிவாம்.

பாணன் வரலாறு மூன்றும், பாணன் மனைவி வரலாறு ஒன்றும் ஆக நான்கு திருவிளையாடல்கள் புராணங்களில் கூறப் பட்டுள்ளன. இவைகளில் ஒன்றே பழையதாகும். மற்றை மூன்றும் பிற்காலத்தனவெனலாம்; திருஞான சம்பந்தரால் குறிக்கப்பட்ட பாணன் கூடற்பிரானிடத்துத் திருமுகம்பெற்று சேரமான் பெருமாள் நாயனரிடம்சென்று அதனைக்காட்டி பரிசு பெற்றானென்று திருவிளையாடற் புராணங்களிலும் சேக்கிழார் புராணத்திலும் கூறப்பட்டுளது. இவ்வரலாறு கால இடர்ப் பாட்டை உடையதாகும். திருஞான சம்பந்தருக்கு ஒரு நூற் றாண்டிற்கு மேற்பட்ட காலத்தில் சேரமான் பெருமாள்நாயனர் அவதரித்தாராவர். இம்முரண்பாட்டுக்கு திருவிளையாடற்புராண காரர்களே காரணமென்று திரு மறைமலையடிகள் கருதுவர். தமிழ்ப் புராணங்கள் வடமொழிப் புராணங்களின் மொழி பெயர்ப்பென்பதைக் கருதாதலினல் இவ்வாராய்ச்சியாளர்க்கு முரண்பாட்டின் காரணம் விளங்கவில்லை யென்னலாம். வட மொழிப் புராணத்தில் இம்முரண்பாடு காணப்படும். எனவே வடமொழிப் புராணம் சேரமான் காலத்திற்கும் (அதாவது 9ம்

நூற்றாண்டிற்குப்) பிற்பட்டதாகும் கல்லாடமும் புராணத்திற்கும் பிற்பட்டதாகும்.

பாணன் வரலாற்றால் பழைய வரலாறு ஒன்றினை அடிப்படையாகக் கொண்டு வேறு புதிய வரலாறுகள் கூறப்பட்டனவென்பது தெளிவாம். இப்புதிய வரலாறுகள் வடமொழிப் புராணகாரர் காலத்திற்கும் சேரமான் காலத்திற்கும் இடையில் புணர்க்கப்பட்டனவெனலாம். இப்புதிய வரலாறுகளின் சற்றேக்குறைய தொகை 29 என்று முன் கூறினும். இவையனைத்தும் கல்லாடத்தினும் கூறப்பட்டனவாகும். இப்புதிய வரலாறுகளில் நக்கீரர், உக்கிரப்பெருவழுதி, மூர்த்திநாயனார் முதலியோர் செய்திகளும் அடங்கினவாகுமென்பதைக் காட்டுவாம்.

நக்கீரருக்கு ஓர் சிறப்பைக் கூறுவதற்கு இறையனாருரை, நக்கீரரால் வரையப்பட்டு குருசீடர் வழிமுறையில் கர்ண பரம்பரையாக ஓதப்பட்டு வந்ததென்று, கூறப்பட்டதாகும். இவ்வுரையில் சங்ககாலத்துச் செய்யுட்களும், சிலப்பதிகாரமும், பாண்டிக் கோவையும் ஆட்சி பெற்றுள்ளன. உரையில் கூறப்படும் சில துறைகள் புதியனவாகச் சங்ககாலத்து வழக்கினொடு மாறுபட்டனவாகத் தோன்றும். இப்புதிய துறைகளுக்கு சங்க விலக்கியங்களினின்றும் மேற்கோள் காட்டவியலாது. இத்துறைகளுக்கு பிற்காலத்து இலக்கியங்களிலிருந்தே எடுத்துக்காட்டு கூறவேண்டும். எனவே இறையனாருரையை சங்க காலத்து நக்கீரர்மேல் ஏற்றிக் கூறுவது பொருந்தாது. உரை தோன்றிய காலத்திற்கும் சங்ககாலத்திற்கும் இடையில் 7 அல்லது 8 நூற்றாண்டாகும். குரு சீட முறையில் 13 பெயர்கள் கூறப்பட்டிருத்தலும் உரைக் கூற்றை வலியுறுத்தாது.

இறையனார் உரையின் காலத்தை யறிவதற்கு பாண்டிக் கோவை உதவுபுரியும். இக்கோவை நூலின் பாட்டுடைத் தலைவன் அரிகேசரி நெடுமாறன் என்பவன். இவனைக் கூன்பாண்டியனென்றும் கூறுவர். இம்மன்னன் கி. பி. 7ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் செங்கோலோச்சினன். இவ்வரசன் சைனமதத்திலிருந்து நீங்கிய வரலாறு கோவை நூலில் யாண்டும் கூறப்படவில்லை. இவ்வரசனைப் பற்றிய கதையும் பிற்காலத்ததாகு

மெனக் கூறலாம். இக்கோவையில் பலபோர்க்களங்கள் கூறப் பட்டுள்ளன. இவைகளில் பாழி, செந்நிலம், நெல்வேலி என்ற மூன்றும் வேள்விக்குடி சாசனத்திலும் காணப்படும். கோவையில் காணப்படும் மற்றைப் போர்க் களங்கள் சாசனத்தில் காணப்படா. இப்போர்க்களங்களிற் சில இம்மன்னன் முன்னோர் காலத்திற்குரியவையாகும். வேள்விக்குடி சாசனத்தில் இம்மன்னன் முன்னோர்கள் போர்க்களங்களொன்றும் கூறப் படாமையால் கோவையில் கண்ட மற்றைப் போர்க்களங்கள் புணர்ப்பாகுமெனவும் இந்நூல் 8ம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டதெனவும் சிலவாராய்ச்சியாளர் கூறுவர். பாட்டுடைத்தலைவன் முன்னோர் செயல்களையும் பாட்டுடைத் தலைவன் செயல்களாகக் கூறுவதோர் மரபையறியாது ஆராய்ச்சியாளர் கூறுங்கூற்றை மறுக்க. கோவை நூலில் கூறப்படும் செயல்களனைத்தும் உண்மையேயாகும். கோவைநூல் அரிகேசரியின் இறுதிக் காலத்தில் (7ம் நூற்றாண்டிறுதில்) பாடப்பட்டதாகும்.

வேள்விக்குடி சாசனத்தில் அரிகேசரியின் முன்னோர்களான கடுங்கோன், அவனிசூளாமணி, சேந்தன் என்னும் மூவர் செயல்கள் கூறப்படாதிருப்பது ஓர் ஐயப்பாடுடையதாகும். பாண்டிய நாட்டை களப்பிரர் என்னும் ஓர் புதிய குலத்தினர் வெளவி சில நூற்றாண்டுகள் வரையில் அரசு புரிந்தாரென்பதொரு வரலாறு சாசனத்தில் காணப்படும். கடுங்கோனென்னும் பாண்டியன் இப்பகைவரைவென்று அவர்களை தன்னாட்டினின்றும் அகற்றித் தன்னுரிமையைப் பெற்று அரசாட்சி புரிந்தானென்று வேள்விக்குடி சாசனங் கூறும். பகைவரை வென்றதற் கறிகுறியாக ஒரு போர்க்களமேனுங் கூறாதிருத்தல் வியப்பைத்தருகின்றது. அரிகேசரி முதல் பிற்பட்ட அரசர்களின் முறையை வேறுசாசனத்தாலும் அறியலாகும். கடுங்கோன், அவனிசூளாமணி என்றவர்களைக் குறிக்கும் வேறு சாசனச் சான்றுகள் இல்லை. எனவே வேள்விக்குடி சாசனத்தில் இவ்விருவரசர்களைக் குறித்த வரலாறு பாண்டிக்கோவையோடு முரண்படுவதால் வேள்விக்குடி சாசனத்தை ஏற்றுக்கொள்வதற்கு ஐயப்பாடுண்டென்க. இதனைக்குறித்து மூர்த்திநாயனார் வரலாற்றில் வேறு காரணங்களைக் காட்டுவாம்.

# பழைய பாடற்றிரட்டு.

தமிழ்ப்பேராசிரியர் திரு. L. உலகநாத பிள்ளையவர்கள்.

சோழநாட்டின் உயர்வு, இன்றளவும் உலகை அணி செய்யுமாறு சிறந்து விளங்கும் பலவற்றுள், தஞ்சை, 'சரசுவதிமால்' என்னும் சுவடிநிலையமும் ஒன்றாகும். இஃது இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர் திலகம்- இரண்டாவது சரபோசி வேந்தனால் நிறுவப்பெற்றது. இதில் ஏட்டுச் சுவடிகளாக, தமிழ், தெலுங்கு, மராட்டியம், சம்ஸ்கிருதம் முதலிய பலமொழிகளிலும் இதுவரையில் வெளிவரப்பெறாத பல நூற்றுக்கணக்கான நூல்கள் உள்ளன. 'பழையபாடற்றிரட்டு' என்னும் இத்தொகுப்பு, மேற்குறித்த சரசுவதிமாலில் உள்ள பல தமிழ்ப்பாக்கள் தொகுப்பு நூல்களிலிருந்து திரட்டப் பெற்றுள்ளது. இத்திரட்டின் பெரும்பாகம், இதுவரையில் வெளிவராதனவாகும்.

தள்ளைக்கு மன்னமிடார் தமைக்காம தேனுவெனச் சாற்றி
[வீணே
கொள்ளைச்செந் தமிழுகுத்தால் மிடிபோமோ புலவீர்காள்
[கூறக் கேளீர்
வெள்ளைத்தண் குழைகொளிரு பெண்ணையணை யொருபெண்ணை
[வண்கைத் தஞ்சை
வெள்ளைப்பிள்ளை யைப்புகழ்ந்தால் கறுப்புப் பிள்ளைக்
[கொடியாள் மேவிடாளே. 1

வள்ளற்கைத் தலமில்லா மானிடரைப் பாடியவர் வாசற்
[போந்து
தள்ளத்தள் ளுண்டடைந்த நோயெல்லாம் புலவீர்காள்
[சாற்றக் கேளீ
ருள்ளத்தி னன்பர்கண்ணீ ரூற்றவலஞ் சுழியில் வளர்ந்
[தொருகொம் போங்கும்
வெள்ளத்தி யடியின்பா லிட்டத்தால் நமக்காறி விடுங்கண்
[டீரே. 2

ஒருபாதி பச்சையு மொருபாதி பவளமு மொருபாதி
[களபங்களும்
ஒருபாதி வெண்ணீறு மொருபாதி முல்லைநகையு
[மொருபாதி முளரிநகையும்
மருவார் மலர்க்கூந்த லொருபாதி யொருபாதி மலையளக
[பாரமுடியும்
மையிட்ட கண்ணுமைக் கீறிட்ட கண்ணுமொரு வாழ்க்கண்
[ணரைக்கண்களும்
பொருவா ரணப்போர் புரிந்தமுலை யொன்றுமப்
[போர்த்தொழிலை விட்டதொன்றும்
பொன்னுடை யொன்றுசை மின்னுடை யொன்றுமெதிர்
[போராடு முகுடமுடியும்
பாரசர் முடியிடறு பங்கயத் தாளுமென் பாவனைக்
[குள்ளாகுமோ
பஞ்சநதி முடிவைத்த பஞ்சநதி வாணனே பஞ்சாக்
[கரரூபனே 3

நெய்யொழுகு சூலமு நிணமொழுகு மழுவுமதில் நின்றொழுகு
[செங்குருதியும்
நிலவொழுக ஒருவிழியில் வெயிலொழுக ஒருவிழியில்
[நெருப்பொழுக நின்றநிலையும்
மையொழுகு களமுமனல் மெய்யொழுகு மழுவும் வழிந்தொழுகு
[பால்மதியமும்
மதுரமொழுகு தேறல் மழையொழுகு கொன்றையும்
[மணமொழுகு பாதமலரும்
கையொழுகு மலரோடு கண்ணொழுகு நீரோடு கண்டுதொழு
[தேத்தநெஞ்சக்
கல்லுக்கு ளன்பு கசிந்துருகு தென் செய்குவேன்
பையொழுகு பணமுடியில் மணியொழுகு பன்னகா பரணந்
[தரித்தபுயனே
பஞ்சநதி முடிவைத்த பஞ்சநதி வாணனே பஞ்சாக்
[கரரூபனே 4

கங்குலிலே நடப்பார்க்குக் காலிலே கண்வேணுங் கண்டீ
[ரென்று
சங்கரனார் திருத்தாளிற் கண்ணிடந்து சாத்திவைத்த
[சமத்தைப் பாரீர்
அங்கண னாரூரர் ஆடரவக் கிண்கிணிக்கா வருமை யெல்லாஞ்
செங்கணொடு மாலினுக்கே யல்லாம லொருவருக்குந் தெரிந்தி
[டாதே 5

ஆற்றிலே யிட்டபொரு ளழைத்தல் பரவைக்குரைத்த லன்று
[யாமக்
கூற்றிலே தனிச்சேறல் மூன்றுதவி யூரனுக்குக் கொடுத்தாள்
[கின்றாய்
சேற்றிலே யலர்ந்தெழுந்த செங்கழுநீர்த் தொடையழகா
[தென்றல் வாசற்
காற்றிலே வீற்றிருக்குந் தேவரகண்டா விருண்ட கண்டத்
[தானே. 6

எத்தலப் புறத்தினும் பிறப்பிறப்பி னுட்படு
மெவ்வுயிர்க்கு மயன்விதிப்ப தென்பதே மிகச்சொல்வார்
கைத்தலத்தி லவர்பெருங் கபாலமாய வன்பெருங்
கருந்தலைக்கு ளொன்றுபட்ட கருமமார் விதித்ததோ
வத்தனைக்கு மொருவரா யளிப்பதோ வதன்றியு
மன்னவேத னாதியோரை யருளெனப் படைத்ததோ
சித்தமித் தனைக்கெலாந் தியக்கமா நமக்கெலாந்
தெரியுமோ தியாகராசர் திருவுளச் செயற்கையே 7

அரிவைமார் முலைக்கிடும் படீரதூளி மொய்ப்பவு
மரும்பெறற் சிறார்தவழ்ந் தடிப்பொடிக்குள் மூழ்கவும்
பொருவிலாத யானைவாசி சேனையின் பராகமே
பொதுளவுந் திரிந்தவம் புரிந்துபோக வைப்பரோ
கருவெழாத வகைநமக்கு மாலயன் புரந்தரன்
கரங்குவிந்து ளங்கனிந்து கண்குளிர்ந்த பங்குனி
திருவிழா வெழுந்தபூழி யுடலைமூழ்க விடுவரோ
தெரியுமோ தியாகராசர் திருவுளச் செயற்கையே 8

ஐயநீ புரங்கள்வென்ற தொக்குமிக்க காலனர்
அழியவென்ற தொக்குமற் றனைத்துமொக்கு மாயினும்
வெய்யகாம தகனரென்ன விருதுசின்ன வோசையால்
வெட்கினே னுமக்குமிந்த விருதுசொல்ல வேற்குமோ
வெய்யவாசு கங்கள்பட்டு வெருவியோடி யாணிலா
தேழைமேனி புக்கொளித்து மின்னம்மாரன் வருமெனச்
செய்யமேனி பாதியும் பிறப்படாத கமலைவாழ்
தியாகராசரே சிறந்த தென்றல்வாச லழகரே 9

துய்யநந்த வனமுமலர்ச் சோலையுங் காவிரிநாடுந் தொண்டர் [போற்றும்
ஐயனந்திக் காப்பழகு மாயிரக்கான் மண்டபமு மாழித் தேருஞ்
செய்யனந்தஞ் சூழ்ந்த திருவாரூரை யான்வணங்கித் தெரிசித் [தேத்தக்
கையனந்தம் நாவனந்தம் விழியனந்தம் படைத்திலனே [கமலத் தோனே 10

பண்காணுந் தமிழ்ப்புலவீ ரினத்தோடே யினஞ்சேரும் பரிசே [யல்லாற்
றண்காவி மலர்த்தடஞ்சூழ் காவிரிநாட் டொருபுதுமை [தன்னைப் பாரீர்
கண்காண நரையான்மேல் வெண்காட னினிதிருப்பக் கண்டோ [மந்த
வெண்காட னிடப்புறத்தே பச்சையன்னங் கலந்திருக்கும் [விதங்கண் டோமே 11

கம்புபட்ட திரைசூழுங் கம்பையாற்றின் கரைபட்டார் [நாரிகையால் கட்டும்பட்டார்
வம்புபட்ட தனத்தாலே வடுவும்பட்டார் மதர்ப்பட்டார் [வாரணத்தி னுரியும் பட்டார்
வெம்புபட்ட மேனியிற்கல் லெறியும்பட்டார் வேடன்கா [லுதையும்பட்டார் விடப்படாத
அம்புமுடி மேல்வில் லடியும்பட்டார் ஆரூரர்பட்டபா டார்பட் [டாரே 12

மாவிருக்குந் தலத்திரண்டு மருந்திருக்கு மவரிடத்து வைத்திய
[நாதர்
சேவிருக்குங் கொடியுடையார் சென்றிருக்குந் தேடரியார்
[செவியின் மூவர்
பாவிருக்கு மலர்சடைமேற் பாம்பிருக்கு மால்பணியும் பாதத்
[தேயோர்
பூவிருக்கு மடையாளம் புள்ளிருக்கும் வேளூரெம் புனித
[னூர்க்கே 13

புனம்போன தில்லை மயில்போன தில்லை புதிய கிள்ளை
யினம்போன தில்லை யிதண்போன தில்லை யிருதனத்தாற்
கனம்போன நுண்ணிடைக் கண்ணிற்கொள் ளாதெனக்
[கச்சியிலென்
மனம்போன தெப்படி பூமாது போன வழியறிந்தே 14

பெற்றத்தி லேவரு கோலமுந் தானுமென் பெண்மையுய்ய
முற்றத்தி லேவந்து முன்னிற்கு மோமுது வானவர்தஞ்
சுற்றத்தி லேகதிர் தோற்றத்தி லேதொல்லை நான்மறைநூ
லற்றத்தி லேகழுக் குன்றத்தி லேநிற்கு மற்புதனே 15

அருவிக் கிரிமக டன்னிடம் நின்வலங் கண்டதல்லா
லிருவர்க்கு மோரிரு பாகமுங் கண்டில மின்கனிவாய்
பருகிக் குமுதத் தமுதூற லுண்ட பசும்பதத்தே
யுருகிக் கலந்தன வோவிரு பாகமு முங்களுக்கே 16

நீடும் பிரமனை மாலைப்பெற் றானை நிறைந்தமறைக்
காடுமென் னெஞ்சம் விடாப்பழை யோனைக் கணிப்பவர்க்கு
நாடும்படியிற் பலவண்ட மீன்றநல் லக்கிழத்தி
கூடுங் கிழவனை யென்னே யுரைப்பர் குழகனென்றே 17

சந்ததமு மாடவல்ல சைவசோணா சலனார்
கந்தனுட மாமிதனைக் கைப்பிடித்தா ரம்மானை
கந்தனுட மாமிதனைக் கைப்பிடித்தா ராமாகி
இந்த வுலகுதனி லேற்குமோ வம்மானை
ஏற்குமென்றே கையில்மழு வேந்தினர்கா ணம்மானை 18

மாலறியாக் கள்ளனிவன் மன்றுதனி லேயிருந்து
கோலமுட னுடெடுத்துக் குன்றொளித்தா ரம்மானை
கோலமுட னுடெடுத்துக் குன்றொளித்தா ராமாகில்
கால்தலைகள் தோலெலும்பு கண்ட துண்டோ வம்மானை
கண்டல்ல இருகழுகு காத்திருக்கு மம்மானை 19

விரையார் குழலணங் கேவாணர் கோன்விய னுறைசுற்றுந்
திரைவாய் மரக்கலம் போலநின் றேன்கிழி நீட்டவென்று
னுரைவாய் பிழைவரு மென்றஞ்சி னேனுமை யுள்ளங்கொண்டு
வரைபாய வுடஞ்சி னேன்றிரு மேனி வருந்துமென்றே 20

மனுநீதி கண்ட வளவர் குலேசனு மாலைநல்கா
னினிநீ ரொருவர் விலக்க நில்லேனிணை யாரமுத்தின்
தனிநீர் வடமிட்டுச் சந்தனம் பூசித் தனித்தொருகை
பனிநீரை யூறவிட் டேபடுப் பேமலர்ப் பாயலிலே 21

மல்லற் புயத்துப் பொருகாளை சண்பக மாறன்பொற்றோள்
புல்லக் கிடப்பதன் றேமடவீர்முத்தம் பூட்டி யென்னைக்
கொல்லக் கிடத்து மிளந்தளிர் வாழைக் குருத்தைவிட்டு
மெல்லக் கிடத்திவைப் பீர்கொண்டு போயந்த வேம்படிக்கே 22

தண்டுவந் தான்மத னென்மேற் பொரப்பெற்ற தாயரது
கண்டுவந் தேது பகாரஞ் செய்தனர் கற்பகக்கா
கொண்டுவந் தான்சிவந் தான்மழ வேசன்றன் கோடையிலே
வண்டு வந்தால் தெரியு முயிர்போவதும் வாழ்வதுமே 23

பாலினு மென்சொல் குயிலினு மென்மொழிப் பாவைகொங்கை
மேலினுங் காம சரந்தைக்கு மோவட வேங்கடம்விட்
டாலினும் வேலை நடுவினும் பாம்பினு மாற்றாத்துங்
கோலினுங் கண்டுயில் வாய்மழ வாபள்ளி கொண்டவனே 24

முடியாது வாழவென் றூலன்று நீதந்த மோகமன்றிப்
பிடியா தொருசற்றுங் கண்டுயி லாது பெருகுங்கங்குல்
விடியாதுமுன்றி லகலா நிலாவென்னும் வெள்ளஞ் சற்றும்
வடியாது சண்பக மாறா மதுரை வரோதயனே 25

கிழக்கோதந் தெற்கி ளிளந்தென்றல் மேற்கினிற் சிற்றப்பிறை
யழற்கோலு முத்தர்தந் திக்கினில் வாடை யதுவுமன்றிக்
குழற்கோகில மென்குலக் கோகிலத்தைக் கொடுமை சொல்ல
வழக்கோசொல் சண்பக மாறு மதுரை வரோதயனே 26

புள்ளிகொண் டேயொரு மான்வந்த போதுவப் போதரக்கன்
துள்ளியங் கேகிழ வாளிதொட் டாய்தொண்டை நாடுடையாய்
அள்ளியங் கேவெண் ணெய் யெல்லாமருந்தி யரவணைமேற்
பள்ளி கொண்டாய் மழவா பரராச பயங்கரனே 27

பெருக்கெடுக் கும்புனல் வைகையின் மன்னரைப் பின்றொடர்ந்து
திருக்கடைக் கண்சிவந்தான் சிவந்தான் தென்முகரி யன்னீர்
முருக்கிதழ்ச் செங்கனி வாயணங் கேமுனி யேல்முனியேல்
மருக்கலக் காகமன் றேதமி யேனு மகிழ்நருமே 28

புல்லிவிட் டுப்பிரி கின்றவன் றே புயல்முந்து மெனச்
சொல்லி விட்டுப்பிரியப் பெற்றிலோந் தொண்டை நாடுகொள்ள
கொல்லி விட்டுச்செல் பராக்கிரம மாறன் குளிர்கொண்டலை
வல்லிவிட்டுக் கெடுத்தா லென்செய்யா தந்த வல்லியையே 29

கொத்தார் தொடைப்பள்ளி கொண்டான் மழவன்றென் [கோடையன்னீர்
கைத்தா மரைபட மாணிக்க மானது கண்குறுக
வித்தார நீலமணியான துவெண் முறுவல் செய்ய
அத்தா பழையகன் முத்தாச்சு நீதந்த வாரமின்றே 30

கட்டுண்டு மடியுண்டுந் தளையுண்டும் படுவதுசொற் கவியின்பாவே
மட்டுண்டு கரும்புறமாய் மயங்குவது மதுகரமே வழுங்காதாகி
முட்டுண்டு கிடப்பதுவு முடக்குவதும் பொய்மொழியே [முகங்கிழாக
வெட்டுண்டு கிடப்பதுவுந் தாறுகொண்ட கதலிகளே [வேறொன்றில்லை 31

இறைக்க வூறு மணற்கேணி யிடவேயூறு மிருநிதியங்
கறக்க வூறு மாவின்பால் கற்கவூறும் பேரறிவு
அறக்க வூறு மறைக்கிரை யணுகவூறு மிந்திரியம்
துறக்க வூறு மெய்ஞ்ஞானந் துணியத்துணிய சிவபதமே 32

பொருளரி தாகிற் கேட்போர்க் கின்சொலு மரிதோ போந்தால்
விரைவுட னெழுத லோடல் வியந்தெதிர் கோடல் பீடத்
துரிமையி லிருத்தல் பாத பூசனை யுவப்பச் செய்தல்
பிரிபொழு துடனே செல்ல லெனுமிவை யேழும் பேறே 33

கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப்
பூணணி மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கள் மாறி
யாணை யிவ்வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான் 34

விரியோத நெடுங்கடலில் வீழ்ந்தானோ விரைந் துரகன் [விழுங்கினானோ
எரியோடி மகனிறக்கு மெனமகவான் முகில் மறைக்க வேவினானோ
கரியோதன் றிகிரியுஞ்செங் கதிரென்றே யிருள்பரந்த கணக்கீ [தென்னோ
பெரியோர்கள் திருவுளங்கள் பேதித்தா லெப்பொருளும் [பேதியாதோ 35

மெய்ம் மானையும் சடையம்புலி மானை வெற்றியிடக்
கைம்மானை யுங்கொண்ட வேகம்ப வாணர்தென் கச்சிவெற்பி
லும்மானை யிந்தப் புனங்காக்கு நாங்க ளொளித்துக்கொள்ள
வம்மானை தானல்ல வேமன்ன ரேவிளை யாடுதற்கே 36

மேற்பார்க்க மைந்தருமூவா வெருதும் விளங்குகங்கை
நீர்ப்பாச்சலு நன்னிலமு முண்டாகியு நின்னிடத்திற்
பாற்பாக் கியவதி நீங்காதிருந்தும் பலிக்குழன்று
யேற்பார்க் கிடாமலன்றோ பெருங்கோயி லிறையவனே 37

வழக்கன்றி தென்குல மான்கன்றை வாட்டுதல் மன்னரெல்லாந்
தொழகன்றிய பதச் சோழேந் திரசுரந் தாலசைத்த
முழக்கன்று கேட்டுப் பொறுமையி னுன்முரண் டேரிற்பட்ட
குழக்கன்றிற் காகக் குலக்கன்றை யூர்ந்திட்ட கொற்றவனே 38

நிகளங் களைச்சுளியுங் களியானை நிருபதுங்கன்
அகளங்க னம்பொன் னூரையன்னீ ரம்பொன் னூலயத்திற்
றுகளங்க மூழ்கத் தமியேன் வருந்திச் சுமந்துபெற்ற
மகளங்க மத்தனை யும்பஞ்ச பாணம் வருத்தியதே 39

ஆரூரன் சன்னிதிபோ லாரூர னாலயம்போ
லாரூரன் பாதத் தழகுபோ—லாரூர்
மருவெடுத்த கஞ்சமலர் வாவிபோல் நெஞ்சே
யொருவிடத்தி லுண்டோ வுரை.

தண்டை யசையச் சதங்கை தகுதியெனக்
கொண்டை யசையமயில் கூத்தாட—எண்டிசைக்கு
முத்தணிந்த மார்பா முருகா எனக்கொரு
தத்துவரும் போதோடி வா.

தூது மதுரை துவரை கடையிடைமுன்
னோதுகின்ற மூன்றெழுத்து மொக்குமே—நீதிச்
செகராச சேகரன்வாழ் சிங்கையெனும் வெற்பில்
நகரா யிழையார் நகை.

சங்குக்குச் சங்கிட்டாள் தாமரைக்குத் தாளிட்டாள்
கொங்கைக்கு முத்துவடங் கோத்திட்டாள்—சங்கு
தமரிட்ட முத்துந் தமரிடா முத்து
மெவரிட்டார் மங்கையருக் கின்று.



உ

# வள்ளல் அதியமான் நெடுமானஞ்சி

(ஒரு சிறு நாடகம்)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளை அவர்கள்,
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி, தஞ்சை

தமிழ் நலம் பேணி, தன்னலங் கருதாப் பொன்மொழிப் புலவர்களால் பாடப்பெற்று, இரவலர், கூத்தர், பாணர் ஆகிய எவருக்கும் இல்லையென்னாது கொடுத்து, வீரமும் வென்றியும் ஒருங்கே திகழுமாறு வாழ்ந்து வந்த, தமிழ் நாட்டுக் குறுநில மன்னர் ஒரு சிலருள், வள்ளல் அதியமான் நெடுமானஞ்சியும் ஒருவனாகும். பொன்னும், புவியும், அணியும் ஆடையும், தேரும் களிறும், உணவும் பிறவும் நல்கி, மாநிலஞ்சுருங்க நீடிசை நிறீஇய கடை வள்ளல்கள், இவனுடனேயே எழுவராவர்.

அஞ்சி, அதிகமான், அதியமான்-நெடுமானஞ்சி, எழினி என்ற பல பெயர்களும் இவனுக்குண்டு: முடியுடைத் தமிழ் மன்னர் மூவருள் ஒருவனாகும் சேரனது மரபிற் றோன்றியவன்: இளமைப் பருவந்தொட்டே, அறிவு, ஆண்மை, இரக்கம், ஈகை, உண்மை, ஊக்கம், எழில்நலம் முதலாய பல வாய்ப்புக்களுடன் கற்றலும் கேட்டலும் மிக்குடையான்: மேலும் அதிகை நகரில் வாழ்ந்த மழவர் என்ற வீரமரபினருக்குத் தலைவனுமாகும்.

இவனது வாழ்க்கை இவ்வாறாக; குதிரைமலை (குத்திராய மலை) என்பது கொங்கு நாட்டின் வடபாலுள்ளது. அதனைச் சார்ந்துள்ளது தகடூர் (தருமபுரி) என்னும் ஒரூர். அங்கு சேரர் மரபில் வந்த வேந்தன் ஒருவன், ஆண்டு வந்தான். எதிர்பாரா வகையில், பின்தோன்றல்களின்றி அவன் விண்ணாடு சென்றான். குடிகளைக்காக்கும் கொற்றவன் இன்மையால் தகடூர் குழப்பம் கொண்டது: தலைவராதற்குத் தகுதியுடையார் எவரும் அவண் அதுபோது இல்லை: அச்செய்தியை 'அதிகைநகர்-அஞ்சி' அறிந்தான்: தக்க துணைவலியுடன் தகடூர் சென்றான்: அமைதியை

நிறுவினன்: அவனைபுரிந்து அதன் தலைமையை ஏற்றான்: அது முதல் 'அதிகமானஞ்சி' தகடூரையே தன் இருக்கையாகக் கொண்டு, அதிகையையும் குதிரைமலை நாட்டையும் ஒருங்கே ஆளத் தொடங்கினன்.

தகடூரில், 'எழினி', காட்சிக் கெளியனாகி, கடுஞ்சொல்லும் கைமிகந்த தண்டமுமற்று, ஈதலினல் இசைபடவாழ்ந்து, செங்கோலோச்சுவதை யறிந்த நந்தமிழ் மூதாட்டியாகும்-ஔவையார், அவனைக்காணுமாறு அங்குவந்தார். அதிகனும் ஔவையை அன்புடனே வரவேற்று, பன்னாள் அவருடன் அளவளாவி யிருந்து, பலபரிசுகளுடன் பிரியாவிடைநல்கி அவரைப் பிறநாடு போக்கினன். ஒருநாள் எழினி, தின்றவரை நெடுநாள் வாழ்விக்கும் திம் நெல்லிக்கனி ஒன்றை, மிகவும் அரிதிற்பெற்று மகிழ்ந்து, தனதுஇல்லம் குறுகியபோது, நீர்வேட்கைமிகுதியும் பெற்றவராக ஔவையார் அவண் இருக்கக்கண்டான். அவர்மீது அவன்கொண்ட பேரன்பினல், எவரும் பெறுதற்கியலாத அந் நெல்லிக்கனியை அவரிடம் தந்து, உடனே அதனை உண்ணுமாறு செய்து, பின்னர் அதனுண்மையைக் கூறினன். அஃதுணர்ந்த ஔவையார் முன்னையினும் அவனிடத்து மிகுந்த அன்பு கொண்டாள்: அவனது உலப்பிலாக் கொடைத்திறனை வியந்தார்: அவன் நல்லிசை யாண்டும் பரவுமாறு, அழகிய தமிழ்ப் பாமாலைகள் பல யாத்தார். அதிகனும் ஔவையைத் தன் தாயினும் பெரிதாகக்கொண்டு, அவரை வழிபட்டு அன்பு பாராட்டினன். இத்தகைய செயற்கரிய செயலாலும், ஔவையார், பொன்முடியார், அரிசில்கிழார், பரணர் போன்ற பெரும்புலவர்களின் நலங்கிளர் புகழுரையாலும் 'அதியமான் நெடுமானஞ்சி'யின் புகழ், தமிழ் நாடு முழுவதும் பரவியது. மேலும், அதிகமான், தன்பாற் பிணக்குற்றிருந்த 'காஞ்சித்தொண்டமான்'எனும் மன்னன்பால், ஔவை மூதாட்டியைத் தூதுபோக்கி, அவனது நட்பினையுங் கொண்டான். இவையாவும் தமிழ் மூவேந்தர்க்கு அதிகனிடம் அழுக்காற்றை வளர்த்தன. 'இருங்கோவேள்மான்', 'எருமையூரன்', 'திதியன்', 'பொருநன்' என்ற அந்நாளின், குறுநில மன்னர்கள் நால்வரும், அதிகனிடம் பகைமைகொண்டு, மூவேந்

தரது படைத்துணைபெற்றுத் தகடூரை முற்றுகையிட்டனர்: அறிந்தான் அதிகன்: சீற்றம் மிகக்கொண்டான்: நொடிப்பொழுதில் தம் வீரரைத் திரட்டிப் படை கூட்டிப் போர்மேற் சென்றான். பகைவரது படைகள் கதிரவன் ஒளிமுன்னர்க் காய்ந்தொழியும் பனித்துளியொத்தன. அதிகமான் வெற்றிவாகை சூடினான். அந்நிலையில், அவனது மனைவி ஓராண் மகவை ஈன்றாள். எனினும் தன் பகைவர்மீது கொண்ட சினம் தணியாதவனாயிருந்ததை யுணர்ந்த ஔவையார், அவன் சினம் தணிவித்து அவனை மகிழ்வுறச் செய்தார்.

பின்னர் பலநாள் செல்ல, அதியமான் நெடுமானஞ்சிக்கும், கடையெழுவள்ளலுள் ஒருவனை திருக்கோவலூரை யாண்டு வந்த 'மலையமான் திருமுடிக்காரி' என்பவனுக்கும் பகைமை நேர்ந்தது: திருமுடிக்காரியும் சிறந்த வீரனாவன்: எனினும் அதிகமான் வீரருள் வீரனாதலால் அவனது நாட்டை முற்றுகையிட்டுவென்று, அதனைத் தன்நாட்டுடன் சேர்த்துக்கொண்டான். 'காரி', 'பெருஞ்சேரலிரும்பொறை' என்னும் சேரமன்னனிடம் சென்று அவனது துணையைநாடினான். அவனும் காரிக்குடன்பட்டுத் தனது பெரும்படையுடன் திடீரெனத் தகடூரை முற்றுகையிட்டான். தன்னையொப்பார் யாருமில்லையெனக் கருதி, படைவலியை மிகுக்காது, அரசியலிலேயே உளங்கொண்டிருந்த அதிகன், உளங்கவன்றான். தன்னாலாயமட்டும் தம்படைஞரை ஊக்கிப் பெருஞ் சமர் புரிந்தான்: என்செய்யினும் ஊழ்வினை வலித்து நின்றமையால், பெரும் வள்ளல், அதியமான்-நெடுமானஞ்சி, இரும்பொறை வாளுக்கு இலக்காகி மண்ணாட்டரசை நீக்கி, விண்ணாடு நோக்கிச் சென்றான். அதிகன் இறந்தபிறகு, தகடூர்ப் பெருமக்கள் ஒன்றுகூடி அதிகன்மகன் 'போகுட்டெழினி'க்கு முடி சூட்டி, தகடூர்ப் பெருநகர், நல்லரசும் வலிமிகு'படையும் பொருந்த, குடிகளைப் புரந்து, ஆண்டு வந்தனர்.

நலம்! நலம்!! நலம்!!!

---

## முதல் இயல்—காட்சி க.

நாடக உறுப்பினர்:—அம்பலவாணர்; கிளிவண்ணன்; பிறைமுடியார்; குடிமக்கள் நால்வர்.

இடம்:—தகடூரில் முருகன் திருமுன்.

காலம்:—மாலைப்பொழுது.

[தகடூர்ப் பெருமக்கள், தங்கள் நாட்டின் குழப்பம் நீங்க, முருகன் திருமுன் கூடியிருந்து ஆம் நெறியறிதல்.]

பிறைமுடியார்:—(தனித்திருந்து) அன்பு நிறைந்த அரும் பொருளே! தண்ணளி ததும்பும் தனிப்பெரும!! உலகெலாம் நிறைந்த எம் உயர்நிலையே!!! நாவார வாழ்த்தியவர்க்குக் கையார அளித்துவந்த எம் தலைவனின் மரபு இவ்வாறாகவோ துன்புறவேண்டும்? என்னே, இக்காலத்தின் கொடுமை! நின் செயலை அளக்க எவரால் ஆகும்?—(பெரு மூச்செறிந்து வாளா, சற்று நிற்றல்)—ஓ! அதோ என் நண்பர் கிளிவண்ணன் வருகின்றார். அவருக்கு இத் தகடூரின் நிலைமை நன்கு தெரியும். அவருடன் இதுபற்றி உசாவி அறிவேன். (கிளிவண்ணன் அண்மையில் வருதல்) வாருங்கள்! கிளிவண்ணா, வாருங்கள்!! வாருங்கள்!!! நம் நகர்க் குழப்பம் எவ்வாறுளது? தங்கட்கு எட்டாத செய்தி எதுவும் இராதே.

கிளிவண்ணன்:—என்ன, பிறைமுடியாரே! எனக்குளட்டியதால் ஆய பயன் என்? இன்று நம்முருகன் திருமுன்னர் கூட்டம் கூடி, நகர வமைதியின் பொருட்டு ஒரு முடிவு செய்வதென நம் தலைவர் கருதியுள்ளார். இதோ காண்மின்! நம் அமைதித் தலைவர் திருவளர் அம்பலவாணனுர் வருகின்றார். நம்மூர்ப் பெருமக்களும் சூழ வருகின்றார்கள். நாமும் அவருடன் கலந்து ஆவன புரிவோமே?

பிறைமுடியார்:—ஆம்! ஆம்!! அதுவும் நன்றே. நானும் அவ்வாறு தான் கேள்வியுற்று இங்கு வந்தேன்.

[அம்பலவாணர் தகரோ் மக்கள் சூழ வர, யாவரும் பணிதல்.]

கிளி வண்ணன்:— (பணிவுடன்) வருக, எம்பெரியோய், வருக! வருக!! அடியேன் வணக்கம். என்னே, நம்நகருக்கு உற்ற தாழ்வு! தங்கள் போன்ற பெரியோர்கள் இருக்கும்போதே இவ்வாறு துன்பங்கள் வந்தால்....அம்மம்ம! பிறகு சொல்லவும், வேண்டுமோ? நம்தலைவர் தகடூர்நாயகன், நாமஎதிர்பாராதவாறு விண்ணூடு புரக்கச்சென்ற இச்சிறு நாள் எல்லைக்குள், நம் தலைவன் பிரிவால் நம் உளம் நைந்து ஊறுபட்டிருக்கும் இது போது, யாரோ ஒரு சில வஞ்சகர்களின் சூழ்ச்சியால், நாடு நிலை கலங்கிக் குழப்பம் பெற்றுத் தடியெடுத்தவன் தண்டற் காரனாக மாறியிருப்பதன் கொடுமையை, என்னென்பது! அழுக் காறும் பேராசைப்பித்தும் தலைக்கேறிய அவர்களது தீச் செயல்கள் நம்மவர்க்கு எத்தகைய துன்பம் தருகின்றன, காண்மின்! ஆதலால், பெரும! தாங்கள் இவ்விடரினை இன்னே களைந்தெறிதற்குரிய முறையினை நன்கு கருதி, எமக்கு வழங் குதல்வேண்டும்.

முதற்குடிமகன்:—(வணக்கத்துடன்)பெருந்தகவோய்!நமது மன்னர்பிரான், மாநிலந்தாங்கியபோது, பசுவும் புலியும் ஒரு துறையில் படிந்து நீரருந்திய அந்நாள்கெட்டு, இன்று அன்ப ராகுநர் யாவர், அல்வழிப்படருபவர் யாவர் என அறியவியலாத வாறு நம்நாடு உளது. சிறந்த அறிவு மிக்கச் சான்றோராகிய தங்களது கண் முன்னேயே இவ்வடாத செயல்கள் நிகழுவதை நோக்கின், நம் நகரை இவ்வாறு தளிக்க ஏற்பாடு செய்த அக் கொடியவர்கள், ஏதோமறைவாக, பிறரதுபற்றுக்கோடுபெற்றே இத்தீவினைகளைப் புரிவதாகக் கருதுகின்றேன். இத்தகைய இடுக்கண் வந்தவிடத்துத் தங்களையல்லாத பிறர்பால் எங்கள் உள்ளம் செல்லவில்லை.

இரண்டாவது குடிமகன்:—(தொழுது—வீரத்துடன் நின்று) உயர்குடித் தோன்றலே! எங்களது நிலையைத் தாங்கள் அறியா தது அல்ல. நாட்டின் உரிமையைக் காப்பதன் பொருட்டும், நம் வழித் தோன்றல்களின் நன்மையை நாடியும், மானம்,

ஒப்புரவு, தாளாண்மை, தொண்டு இவற்றையே தம் அணிகளாகக்கொண்ட, இளமையும் உடல் வலிமையும் உளத்திட்பமும் ஒருங்கே பொருந்திய ஓர் ஆயிரத்துக்குமேற்பட்ட இளைஞர்கள், தாங்கள் தலையசைப்பின், இன்னே, இத்தகடூரைத் தவிக்கவிட்ட அந்நன்னலமாக்களைப் படைமுகத்து வாள் முனையில் பார்த்து நிற்க விழைகின்றார்கள். ஆதலால், எம் அண்ணலே, இன்றே தங்களது ஆணையை அவர்கட்கு அளியுங்கள்.

அம்பலவாணர்:—இளைஞர் தலைவ! நீவிர் யாவரும் நம் நாட்டினிடைக்கொண்டுள்ள அளவுகடந்த அன்பினைப் பாராட்டுகின்றேம். மேலும், போர்முனையில் நமக்கு மாற்றலராகவுள்ளவர்களை வீழ்த்தவேண்டும் என்ற வீரமொழிகள், தங்களைப்போன்றவருளத்தில் தோன்றுதல் மிகவும் பொருத்தமேயாகும். எனினும் நம் நாடு இதுபோது இருக்கும் நிலையில் அஃது ஆகாத செயலேயொழிய வேறில்லை. நிற்க, நாம் இன்று தொட்டுப் போருக்கு ஆயத்தம் செய்து, படை திரட்டிச் சமர் முருக்குவதற்குள் ஒரு திங்கள் ஆகிவிடும். எனவே நம் பகைவர்கள் இத் தகடூரைப் பற்றித் தவிடுபொடியாக்கி, நம்மை அடிமைக் குழியிற்றள்ளி நம் செல்வங்கள் அனைத்தையும் கொள்ளைகொண்டு போவார்களென்பது திண்ணம். மேலும், நமக்குள், ஒற்றுமையுணர்ச்சியும் தன்னலமின்மையும் இதுபோது பாழ்பட்டுக் கிடப்பதால், நாம்போர் குறித்துக் கருதாது, வேறு நெறியிற்படரவேண்டும்.

கிளிவண்ணன்:—ஆமாம். போர் என்றால் பொருளல்லவோ செலவழிகின்றது. பொருளழிந்தாலும் நம் நாடு இருக்கும் நிலையில் வெற்றிக்கு உறுதி கூற யாரால் ஆகும்?

பிறைமுடியார்:—நீங்கள் கூறுவதுபோல போர், போர் எனச்சொல்வதால் ஏற்படும் இன்னல்கட்கு எல்லையே இல்லை. நம் கருத்துக்கு மாறுபட்டவர் இருப்பின் அவர்களிடம் இனிமை பயக்கும் முறையில் நடந்து அமைதி நிலவலாம். ஆதலால் தாங்கள் உளங்கொண்ட கருத்தினை அறிவியுங்கள். உடனே ஆவனபுரிந்து, நாட்டின் குழப்பத்தை ஒழிப்போம்.

அம்பலவாணர்:—அன்பர்களே! என் கருத்து, இப்பொழுது நமக்குள் இருக்கும் ஒற்றுமைக் குறைவை நீக்குதற்பொருட்டே

யாகும். நமக்குள் இருக்கும் பிளவை மிகுதிப்படுத்துவதற்கு நம்நாட்டு முடியுடை வேந்தர் மூவரும் முனைந்து நிற்கின்றனர். அவர்கள் மறைவாகக் கலாம் விளைப்பவர்கட்குத் துணையாக இருந்து, அவர்களை ஊக்குகின்றாரென நம் ஒற்றனொருவன் அறிவிக்கின்றான். ஆதலால், நாம் ஒன்றுகூடி எவ்வாறாயினும் நம் நாட்டில் குழப்பம் விளைவிப்பவர்களை அடக்கி, நாட்டில் நன்முறை வழங்குதற்குற்ற முறையையே கொள்ளவேண்டும்.

கிளிவண்ணன்:—ஆம்! தலைவ! அதற்கு ஆம் வழியினையே விரைவிற் கொள்ளுவோம்.

அம்பலவாணர்:—நம்முள் ஒன்றுகூடி கலாம் விளைவிப்பவர்களை யடக்க இயலாது; ஆதலால், நம் நாட்டுடன் தொடர்புள்ளவனும், உறவினனும், பெரும் வள்ளலுமாகிய அதிகைநகரின் தலைவனும் திருமகளும் கலைமகளும் ஒருங்கேபெற்ற, சீர்மிகு 'எழினி' யிடம் சென்று, நம் குறையினை அறிவித்து, நமக்குத் துணைபுரியுமாறு இறைஞ்சுவோமாயின், அவனது வருகையைக் கேட்ட இவர்கள், அவனது வெற்றிமலிந்த ஆண்மைமிகும் படைக்கஞ்சி, இடியொலி கேட்ட நாகமென ஒடுங்குவர் என்பது திண்ணம். மேலும் நம்நாட்டின் குழப்பம் நீக்கப்பெற்றதும் நம்நகர் நாயகற்கு பின்வழி இன்மையால், அவ்'எழினி'யையே மன்னனாகக் கொள்வோமாயின் நம்மனோர் செய்த பேற்றைக் கூற எவரால் ஆகும். இக்கருத்துப்பற்றி நீவிர் என்ன கூறுகின்றீர்களோ, அதுவே எனது கருத்துமாகும்.

பிறைமுடியார்:—அம்பலக்கூத்தரே! உங்கள் கருத்து மிகவும் போற்றத்தக்க தொன்றும். நாம் தலைவனில்லாது வருந்துமிந்நிலையில், 'கண்ணின்றிக் கவலும் குருடனுக்குக் காணும் ஒளியளித்த கடவுளை' போல், தாங்கள் உலகம்வரினும் வழங்கக் குறைபடா வள்ளன்மை மிக்க எழினியைக் குறித்தீர்கள். அத்தகையானை மன்னனாகக் கொள்ள எம் மனம் மிகுந்த மகிழ்ச்சியுடன் களிக்கின்றது.

கிளிவண்ணன்:—தாங்கள் கூறியது முற்றும் பொருத்தமே. எனினும் நம்மிடை வந்து வதிவதற்கு அவர் உடன்படுவாரோவெனும் ஐயம் தான் எனக்கு எழுகின்றது.

**அம்பலவாணர்:**—நாம் ஒன்றுபட்டு விரும்பின், அவர் வருவதற்குப் பின்னிடார். நாம் அவரிடத்துக் காட்டும் அன்பினால் யாவும் எளிதிற் பெறலாகும்: அதற்கு ஐயமே வேண்டுவதில்லை. ஆதலால், நாம் அனைவரும் இன்று மாலையே அதிகைக்குச்சென்று, எழினியிடம் நம் நிலையைக்கூறி, விரைவில் நம் நாடு நலம்பெற, எழினியையே தலைவனாகக் கொள்வோம்; எழுந்திருங்கள்; செல்வோம் விரைவில். நாம் கொண்ட இவ்வினை முட்டின்றி முடியுமாறு, முருகவேளை நாம் அனைவரும் போற்றி வணங்குவோமாக. (யாவரும் முருகனைப் பாடி வழிபடுதல்).

எதிரி லாத பத்தி தனைமேவி
இனிய தாள்நி னைப்பை இருபோதும்
இதய வாரி திக்குள் உறவாகி
எனது ளேசி றக்க அருள்வாயே
கதிர காம வெற்பில் உறைவோனே
கனக மேரு ஒத்த புயவீரா
மதுர வாணி உற்ற கழலோனே
வழுதி கூன்நி மிர்த்த பெருமாளே.

---

இயல். க—காட்சி க. முடிவு.

---

## இயல் க—காட்சி உ.

உறுப்பினர்:—பரணர், பொன்முடியார், அதிகைமுதல்வன், அமைச்சன், எழினி, காவலன்; அம்பலவாணர், கிளிவண்ணன், நகர்முதல்வன்.

இடம்,—அதிகையில் எழினியின் கோயில்.

பொழுது:—காலைப்பொழுது.

[தகடூர் மக்கள் அதிகை நகர்த்தலைவன் அஞ்சியைத் தங்கட்குத் துணையாமாறு வேண்டுதல்.]

பரணர்:—உலகம் சுருக்குமாறு புகழ்பரப்பும் உயர்ந்தோய்! வரையாது கொடுக்கும் வள்ளலே! யானை, தனது கொம்புகளுக்கிடையே, தான் உண்ணுதற்குரிய கவளத்தை வைத்துக்கொண்டு பொழுது போக்கினும், பின்னர் தவறாது அக்கவளத்தை அஃது உண்டு விடுவதுபோல நின்னையடைந்தபுலவர், பாணர், இரவலர் எவரும், 'பரிசிலும் நம்கையகத்தே உளது, நெஞ்சே! நீ வருந்த வேண்டாம். அவன் தாள் நீடுவாழ்க' என நினைந்து நீ காலம் நீட்டித்தாலும், உன்பால் உறுதிகொண்டு, நாளும் பழுமரம் நாடிய பறவைபோல நின்னை நாடிவந்த வண்ணமாகவே இருக்கின்றனர். ஆதலால் கருந்தனமின்றி கவலையுற்றுக் கலங்குவார்க்குக் களைகணுயுள்ள நீ, நீடு வாழ்வாயாக!

பொன்முடியார்:—மலர்ந்த தும்பையணிந்த பரந்த மார்பையுடைய வீரர் தலைவ! விரிந்த வெண்காந்தள் மலர் இலைதழைத்த குழவியுடனே மணக்கும் மலைச்சாரலிலுள்ள சினம் மிகும் புலி சீறின், அதனை எதிர்க்க வல்ல யான்கூட்டங்களும் உண்டோ? உலகம் உவப்ப பலர்புகழ் செஞ்ஞாயிறு தோன்றமுற்படின் வானத்தின் எந்தத் திசையிலாவது செறிந்த இருள் நிலைக்க இயலுமா? அவைபோல பெரும! நீ போர்க்களத்திற் புகின், நின்முன்னின்று ஆர்த்து எழும் வலிமையுடைய வீரரும் இந்நானிலத்தும் உண்டோ?

அதிகை முதல்வர்:—நன்மணம் உற்ற பொன்மலர் போல கல்வியிற் சிறந்த கட்டழக! தந்தையர்க்கு, தமது இளமை மிக்க சிறுபிள்ளைகளின் மழலை ததும்பும் மொழிகள் யாழின் ஓசை போல இசையினால் இன்பமும் செய்யாது, உரிய காலத்தோடும் சேர்ந்தும் இராது, பொருளும் அறிய வாரா நிலையினவாயினும், அச்சொற்களே அவர்கட்கு மிகுந்த இன்பத்தைத் தருகின்றன. அஃதொப்ப, உடல் நலம் பொருள்நலம், படைநலம், ஆட்சிநலம் யாவும் பெற்றிருக்கும் கல்விநலம் கனிந்த பெரியாரின் அமுத மொழியினை உண்டாலன்றி எனது நெஞ்சம் அமைதியுறாத தாயிருக்கின்றது, என்பதை நன்குணர்ந்த நின் குடி மக்கள் யாவரும் கல்வித்துறையிற் படிந்த கற்றல் கேட்டல் இவற்றுள் மனங்கொண்டு, அறிவு விளக்கம் பெறுகின்றனர்.

அமைச்சன்:— ஆட்சிநலம் பெருக, கோல்கோடாது நன் முறை செலுத்தும் மாண்பு மிக்க மன்ன! நம் நாட்டின் குடி மக்கள் யாவரும் பசி, பிணி, பகையின்றிக் கல்வியும் செல்வமும் மிக்குடையராய், இன்புற்று வாழ்கின்றனர். மேலும், பாரிப் பெருமான், பொன்முடியார், நம் நாட்டு முதல்வர் ஆகிய இம் மூவரும் மாட்சிமிக்க தங்கள் வென்றியும் புகழும் விளங்கக் கூறி னர். தங்களது மன்னுயிர் ஓம்புக்கிறன், நம்நாட்டு முடியுடை வேந்தர் மூவருக்கும் பொறுமையை விளைவித்துள்ளதெனில் எம்மனோர் தங்களது பெருமையைக் கூறஇயலுமோ! திருவருள், எல்லாம் வல்ல, தங்களது ஆட்சிநலன், நீடு நிலவ, அருள்புரி வாளாக.

எழினி:—அறிவுசால், அன்புமிக்க பெருந்தகையீர்! நீங்கள் அனைவரும், எனதுபுகழை, மிகுதிப்படவே கூறினீர்கள். நமது வழிபடு முதல்வனும் முருகனது திருவருள், நீவிர் கருதிய அனைத்தும் எளியனுக்கு எளிதில் வந்துறத் துணைபுரியுமாக. உங் களது உறுதுணையைப்பற்றி, அவனது அருள்வழிநின்று எனது கடைமையை யான் இனிதுபுரிய மறவேன் என்பது திண்ணம்.

காவலன்:—(வணங்கி நின்று) எளியாரைப் புரந்து வலி யாரை வாட்டி, குடிநலம் ஓம்பும் கொற்றவ, வாழிஇ! தங்களது கழலடி எனது முடியை அழகு செய்யுமாக. பெரும! நமது

*தலைவாயிலிலே, தகடூர்ப் பெருமக்கள் ஒரு சிலர் கூடி நின்று தங்களது திருவருட்காட்சியை விரும்பி வேண்டுகின்றனர்.*

எழினி:—*நல்லது, காவல! அவர்களை விரைவில் இவண் அழைத்து வருக.*

காவலன்:—*தங்கள் திருவாணைப்படி* (வணங்கிச் செல்லுகிறான். அம்பலவாணர், தகடூர்ப் பெருமக்களுடன் உள்நுழைந்து வணங்குதல்.)

எழினி:—*வருக, தகடூர்ப் பெருமக்களே! வாருங்கள், வாருங்கள்!* இவண் *அமருங்கள்* (தகரோர் இடத்தமர்தல்) *நீவிர் யாவரும்* இவண் *எழுந்த நிகழ்ச்சி யாதோ? உங்களது தலைவரும் பிறரும் நலந்தானே?*

அம்பலவாணர்:—*கொடியவரை வாட்டி, அன்பரைப் புரக்கும் கொன்றைமலர் புனைவோனின் அருள்நிலைப் பட்டகோவே! எங்களது வணக்கம் உங்கட்கு உரியதாகுக. எங்கள் தலைவன் 'தகடூர் நாயகன்' தாயை இழந்த சேய்போல யாங்கள் இவ்வுலகிலிருந்து நெடுந்துயரெய்துமாறு விட்டு, இறைவன் திருவடியை நாடிய செய்தி தாங்கள் அறிந்திருக்கலாகுமே?*

(*தொடரும்.*)

---

# மதிப்புரை

---

அறிவுக்கோடி:—*என்னும் மாதத்தாள் 15—11—36 தேதி முதல் கும்பகோணத்திலிருந்து வெளிவருகின்றது. சமூக சீர்திருத்தத்தைக் குறிக்கோளாகக் கொண்டு செவ்விய தமிழில் எளிய நடையில் தனது பொருளைப் பலரும் உணருமாறு அறிவு புகட்டுவது. இதன் ஆண்டுவரி உள்நாட்டிற்கு ரு. 1—0—0 வெளிநாட்டிற்கு ரூ. 1—8—0.*

*சாதி சமயக்கோட்பாடுகளால் சமூகம் சீர் குலைந்திருப்பது மறுக்கவொண்ணாத செய்தி. சீர் திருத்தம் பேசுவோர் புதுமை என்றதால் ஒரு கொள்கையை ஏற்பதும் பழமை என்றதால்*

அக்கொள்கையை மறுப்பதும் நேரிதன்று. மக்களின் நல்வாழ்விற்கும், முன்னேற்றத்திற்கும் துணை செய்வனவா என நடுநின்று ஆய்ந்து முடிபு காணவேண்டும். இத்தகைய ஆராய்ச்சியில் தலைப்படும் நன்மக்கள் அறிவின் பேரெல்லையைத் தாம் எய்தியதாக நினையாது அறியுந்தொறும் அறியாமை காண்பதென்னும் உண்மையை மறக்கவொண்ணாது. வாழ்க்கையின் குறிக்கோளுக்கு ஏற்றவாறு மக்களின் கடமையும் ஒழுகலாறும் மேற்கொள்ளப்படுமென்பதை அறிஞர்கள் மறுக்க மாட்டார். மெய்ப்பொருளைக் காணவும், கண்டமெய்ப்பொருளை உலகறியச் செய்யவும், தலைப்பட்டிருக்கும் 'அறிவுக்கொடி'யைத் தமிழுலகம் விருப்புடன் போற்றுமாக.

---

## எண்ணெயும் தண்ணீரும் என்ற கட்டுரையின் பிழை திருத்தம்

(துணர் 12. மலர் 8-ல் பார்க்க.)

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 287 | 4 | இரைக்க | இறைக்க |
| ,, | கடைசிவரி | குளிர்ச்சியே | ஈர்மை குளிர்ச்சியே |
| 288 | 5 | "பாட்டில் மீனெய் | பாட்டில் "மீனெய் |
| ,, | 15 | ஐயரவர்களும், | ஐயரவர்களும். |
| ,, | கடைசிவரி | பரிபாடலின் | பரிபாடலில் |
| 289 | 4 | சொதியான் | சோதியான் |
| 290 | 1 | 'நெய் | 'நெய்' |
| ,, | கடைசிவரி | சூரியநாரயண | சூரியநாராயண |
| 291 | 8—9 | வேறுபட்டது........ ....பற்றியதாகலின், | வேறுபட்டது, ....பற்றியதாகலின். |
| ,, | 17 | மண்ணெய் | மண்ணெண்ணெய் |
| 292 | 13 | ஊரிய நீர் | ஊறிய நீர்" |
| ,, | 14 | குறட்பகுதில் | குறட்பகுதியில் |
| ,, | 29 | நகர்நீங்க | நகர்நீங்கு |
| 293 | 13 | கொள்ளிரே | கொள்ளீரே |

உ

கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய "கார்த்திகை" நன்கொடை

| திங்கள் நன்கொடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, K. நடராசன் B.A., B.L., (Advocate.) | ,, | 5 | 0 | 0 |
| ,, T. S. சபாபதி பிள்ளை B.A., (Retired. Dt. Registrar.) | ,, | 1 | 0 | 0 |
| ,, R. விசுவநாதன் | ,, | 0 | 4 | 0 |

| ஆண்டு நன்கொடை | | |
|---|---|---|
| ,, V. நாடிமுத்துப் பிள்ளை | ,, | 10—0—0 |
| ,, R. பொன்னுசாமிப்பிள்ளை (தமிழ்வித்துவான், உரத்தநாடு) | ,, | 4—0—0 |
| ,, இராவ்சாகிபு I. குமாரசாமிபிள்ளை B.A., | ,, | 1—0—0 |
| ,, T. S. சுப்பிரமணிய பிள்ளை (Vice-Chairman.) | ,, | 2—0—0 |
| ,, டாக்டர் L. சொக்கலிங்கம்பிள்ளை L.M.P. | ,, | 1—0—0 |
| ,, கு. பேச்சிமுத்து பிள்ளை (Merchant.) | ,, | 1—0—0 |
| ,, S. சோமசுந்தர முதலியார் (Clerk, Collectors Office.) | ,, | 1—0—0 |

| | | | |
|---|---|---|---|
| திரு. | R. அருணாசலம் பிள்ளை (Municipal Water Works.) | அவர்கள் | 1—0—0 |
| ,, | ராவ்சாகிபு N. S. ராஜகோபால்நாயுடுகாரு | ,, | 1—0—0 |
| ,, | V. அழகிரிசாமிநாயுடுகாரு B.A., B.L., (Advocate) | ,, | 1—0—0 |
| ,, | நா. கந்தசாமிபிள்ளை | ,, | 1—0—0 |
| ,, | N. L. ஐயர் (Merchant) | ,, | 1—0—0 |
| ,, | K. S. ராமசாமிசெட்டியார் B.A., B.L., (Advocate) | ,, | 1—0—0 |
| ,, | T. A. வாசுதேவ பிள்ளை B.A., (Retired Dt. Registrar.) | ,, | 1 0 0 |
| ,, | K. மாணிக்கம் பிள்ளை (Head Clerk, D. B. A. E. Office.) | ,, | 1—0—0 |
| ,, | J. G. கோயில் பிள்ளை B.A., L.T., (Head-Master, S. P. G. High School.) | ,, | 1—0—0 |
| ,, | M. வேங்கடாசலம் பிள்ளை B.A., B.L., (Advocate) | ,, | 1—0—0 |
| ,, | N. L. சின்னகிருட்டின நாயுடு (மளிகை) | ,, | 1—0—0 |
| ,, | A. பால் B.A., L.T., | ,, | 1—0—0 |
| ,, | சந்திரகாசநாடார் (அரிசி வியாபாரம்) | ,, | 1—0—0 |
| ,, | A. வீரப்பிள்ளை (காய் கறிக்கடை) | ,, | 1—0—0 |
| ,, | A. சிங்காரவேல் உடையார் (அரிசி வியாபாரம்) | ,, | 1—0—0 |
| ,, | வேங்கடசாமி நாயுடு (எண்ணெய் வியாபாரம்) | ,, | 1—0—0 |

## மருத்துவசாலைக்குதவிய 'கார்த்திகை' நன்கொடை

திரு. ச. தியாகராச பிள்ளை அவர்கள் B.A., (Electrical Engineer) பம்பாய். 120—0—0



உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௰உ | தாது, தை | மலர் ௰ |
|---|---|---|

உ

## கல்லாட நூலாராய்ச்சி

திருவாளர். E. R. நரசிம்மஐயங்கார் அவர்கள் B.A., B.L., சேலம்.

(முற்றொடர்ச்சி துணர் 12, மலர் 9, பக்கம் 323)

இறையனாருரை, சங்ககாலத்திற்குப்பின் 8-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகும்; கிளை முறையாக 35 பெயர்களால் ஓதப் பட்டு வந்ததாக உரைகாரர் கூறியிருப்பின் இவ்வுரை நக்கீரர் உரையாகுமெனக் கொள்ளத்தகும். 13 பெயர்களே உரைகாரர் கூறியுள்ளார். இக்கூற்றை ஆராய்ச்சியாளர் கொள்ளார். எனவே நக்கீரர் உரையென்பது கற்பனையாகும்; இக்கற்பனையை உரைகாரர் கூற்றெனக்கொள்க. இந்நூலாசிரியர் இறையனார் என்பவர். இப்புலவர் "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் குறுந்தொகைச் செய்யுளை இயற்றியவர். இப்புலவர் ஊனுடம் பொடு பிறந்தவரேயன்றி பிறவாயாக்கைப்பெரியோனல்லர். இப்

புலவர் பெயர் ஈசன் பெயரோடு ஒரொற்றுமைப் படுவதைக் கருதி இந்நூல் ஈசனே இயற்றியதென்றும் களவியலுரைகாரர் கற்பித்துவிட்டார். இதனைப் பின்னோரும் பின்பற்றி வேறு கதைகளும் புனைந்தார்.

இறையனாருரைகாரர் கருத்தையறிந்த மற்றோர் புலவர் ஈசனார் பாடிக் கொடுத்த செய்யுளில் நக்கீரர் குற்றங் காட்டினாரென்று ஓர் கதையைப் புனைந்து நக்கீரர் பெயரால் சில நூல்களைப்பாடி. இறையனாருரைகாரர் கூறிய கதையை வளம்பெறச் செய்தார். இக்கதைக்கு "நன்பாட்டுப் புலவனுமாகிச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன்" என்று நாவுக்கரையர் பாடியுள்ள பழைய வரலாறொன்றை ஆதாரவாகக்கொண்டு, நக்கீரர் குற்றங்காட்ட, ஈசனார் நக்கீரன்மாட்டு சினமுடையவராய் நெற்றிக் கண்ணால் நோக்க, நக்கீரன் விழிக்கனலின் வெப்புக் காற்றானாகி, ஓர் வாவி நீருட்புக் கிருந்தவாறே ஈசனைப்பாடி அருள்பெற்றுய்ந்தான் என்று இப்புலவர் கற்பித்தார். இக் கதை புனைந்தவர் ஈசனார் பாடிய செய்யுளைக்கூறாது விடுத்தது குறிக்கத்தக்கது.

இக்கதையைப் புனைந்த புலவர் தாம் பாடிய பாட்டுக் களுக்கு நக்கீரர் பெயரைச் சூட்டியது போலவே வேறு சில செய்யுட்கள்பாடி அவற்றிற்கு மற்றை சங்கப்புலவரான கபிலர், பரணர், கல்லாடர் முதலியோர் பெயரையும் சூட்டினார்போலும். இப்பாட்டுக்களனைத்தும் பதினொன்றாம் திருமுறையில் சேர்க் கப்பட்டுள்ளன. இவைகள் நடையானும் இலக்கணக் குறிப்புக் களானும் தேவாரப் பதிகங்களுக்கும் மூந்தியவை யாகாவெனக் கூறலாகும். இறையனாருரையை இப்புலவர் பின்பற்றினாரென வுங் கூறலாமாகலான் இப்புலவர் 8-ம் நூற்றாண்டிற்கும் முற் பட்டவராகார். "நுணலுந் தன் வாயாற்கெடும்" என்பதற்கு இப்புலவர் பாடிய திருவெழுக் கூற்றிருக்கையில் "நால்வகை, இலக்கணம் நலத்தக மொழிந்தனை" என்னும் கூற்றே இலக் காகும் என்பதனைக் காட்டுவாம்.

தொல்காப்பியருக்கு முன்னர் இலக்கணம் எழுத்தும் பொரு ளும் என்னும் இருவகைப்பாகுபாடே இருந்ததென்பர். தொல்

# கடிமர யானை

(ஓர் சிறு நாடகம்.)

திரு. து. நா. சுந்தரேசன் அவர்கள், B.A., (Hons.,)
கணக்காயர், பரகம்புரம், கஞ்சம்.

[ஒரு பூஞ்சோலை. கை நிறைய பலவகைக் கொடிகள் நிலம் தோய்ந்து பின் தொடர வேரி வருகிறாள்.]

வேரி:—வாழி என் நினைவு! மறந்திலேன் இவ்விடத்தன, அனைத்தையும் அறுத்துச் செல்வல் (அருகு ஒரு மரத்தேறிய கொடிகளை இழுத்துப் பரிகிறாள்) கொம்பும் ஏறுவென்....ஆ! என்னைத் தகையவோ வருகின்றான் தில்லன் அங்கே? வருக, வேணவா நல்க வலிப்பேன்,[1] அவனையே ஏறச்செய்வேன் (கீழ் படுத்துறங்கிய துண்ணி விழித்துக் கொள்கிறான், அவள் கீழெறிந்த கொடிகள் தன்மேல் வீழ்ந்ததால் போலும்)

துண்ணி:—கால் கீழூர்கின்றன, நினைக்கொள் அம்ம, கண்கள் மேலூர்வ வேனும்! (எழுகிறான்)

வேரி:—(திடுக்கிட்டு) பொறுத்தி, முதிய, பொறுத்திடு. நறை[2] நாடிவந்தேன்! (சேண்நோக்கி) வந்த தில்லன் மீண்டனன் ஏனோ? உதவுதியோ பெரும?

துண்ணி:—யான் கள் அருந்துவேனல்லன். வேளிமான் விளிந்தது கட்கடுவால் என்று இப் பேரூர் அலரறைந்ததே அன்று—மறந்தனையோ?

வேரி:—நீர்நறை[3] அன்று, கொடிநறை[4] தேடிவந்தேன்—காண்டி அங்கே! (சிரிக்கிறாள்)

துண்ணி:—(மேல்நோக்கி) ஆம்......மணமாலை தொடுத்தற்கோ? (சிரிக்கிறான்) சிலதருகின்றேன்.

வேரி:—(புன்னகைத்து) மணமலர்கள் தொடுக்கவே; மணமிலிமலர் யான் வேண்டலன், யாண்டும். பொருதுமாய்வோர் .......வஞ்சியும் நொச்சியும், காந்தையோ உழிஞையோ[5] மணமிலி மலட்டு மலரவற்றைப் பூண்க..., சாய்க களனிலே!

---

1. "வேண்டுமளவு பூக்கள் கொய்து தருமாறு அவனை வற்புறுத்துவேன்."
2. நறைக் கொடி. 3. நீர்நறை—கள். 4. நறைக் கொடி. 5 "இவை போன்ற நறுமணமிலா மலர்கள் யான் விரும்பேன்."

துண்ணி:—நுந்தை[1] எவரோ—புலமைசான்றோன் மன்ற!

வேரி:—யாங்ஙனம் அறிதி நீ?

துண்ணி:—(சிரித்து) நின் உரையால். அவற் காண்கும்—கொண்டு நும் அகம் உய்த்தியோ, குறுமகாள்?

வேரி:—உணர்ந்தேன் யானும், அப்புலவன்[2] நீயோ? (பணிந்து) நெருநல் உற்றனர் ஒருவர் என்று அம்பல் அலைந்தது ஊரிலே—பெரும் புலவன் நின்னைக்காண எனக்குப் புணர்த்திய பாலே,[3] வாழி நீ! வாழி!

துண்ணி:—பொலிக நின் ஊழி![4] புற்கொரு இரவலனே யான்!

வேரி:—களிறு பெற்றனையோ? அஃது ஒன்றேயோ? பிறவோ? (வலதில் சுட்டிக் காட்டுகிறான்.)

துண்ணி:—பிற, வைகின்ற அதரிடை,[5] எம் ஊர் வழிக் கொண்டு. களிற்றினை.......யான்.......இங்கு.......

வேரி:—சான்றீர், சாற்றுக இது. மன்னன் இளவேளிமான் நும் புலமை ஆபுமளவை புலம் அமைந்தவனோ—நிற்காணலின்றியே இக்களிறீந்து, கல்லாப்பேதையன் இழித்தனனோ நும் பெரும் பெயர்ப் புகழினை?

துண்ணி:—எக்களிறு? அஃதா? இளவேளிமானோ?—கொற்றக் குமணன் ஈந்தது அது!—இளவேளிமானோ? இவ்வூரையல்லையோ நீ?

வேரி:—இவ் ஊரோரே மன், இளவெளிமானினை இன்னும் கண்டிலிரோ?—காண வந்திலிரோ?

துண்ணி:—அக்கருதியே உற்றேன், இனி அச் செலவு அழுங்கினென்.

வேரி:—யாது நேர்ந்தது பெரும, நீவிர் சீறற்கு? காண்க அக் குரிசிலை, பெரிது நல்குவன்.

துண்ணி:—(நகைமுழங்கி) மடவைமன்றநீ, மடவைமன்ற!

வேரி:—(துயர்முகமொடு) துரிசு, யாவ ஓர்ந்தனை.[6]

---

1. உன் தந்தை. 2. நெருநல் வந்துள்ள புலவன். 3. புணர்த்திய பாலே=கூட்டுவித்த விதியே! 4. ஊழி=விதி. 5. வழியிலே. 6. "குற்றமென்ன கண்டனை அவன் செயலில்?"

துண்ணி:—அறனுமிலன், மறனுமிலன்

வேரி:—எம் மன்னனோ?

துண்ணி:—மன்னன்? தன் முன்னோன் அரியணை இழிதகை யிவற்கு யாங்கு தொடரும்? அவனது பிள்ளைமகனது பிள்ளைமைக் காலத்து முதுகண்[1] என்ற அனைத்தற்கன்றே, அரசு கடாவஇயலும். அளித்து இவ்வூரே! பேதைதன் அரில்வலைப் பட்டு யாதுழக்குமோ, வரும் பத்து நெடும் ஆண்டுகள்!

வேரி:—(உயவொடுநின்று) வசைவாய்[2] வறிய! வாழிநீ, செல்லுதும் யான்.

துண்ணி:—(வியந்து) செல்க, கொடி சாப்பறித்த மாலை நார் எடுத்தேக மறத்தியோ?........ எனக்கு வேண்டாம் அவை. (பொறுக்குகையில்)

வேரி:—யானும் வேண்டலன். மலர் எதற்கு? மாலை எதற்கு....தந்தை தாயற்றேற்கு?

துண்ணி:—(வழிமறிந்து) நில்லு, மடந்தாய்!

வேரி:—விலங்கற்க[3] நும்பாடல்களை மகிழ்தற்குமுன் கண்ணினேன் சிறிது...இனி யான் செல்லல்வேண்டும், பின்னர் வருவல்.

துண்ணி:—இப்பொழில் காவற்கு யாரும் இலரே இங்கு! ஈதென்ன, இயம்பு நீ அம்ம!

வேரி:—நீயே அறிதி, வினவுதலென்? கொடியோனது கோடிய கோலே (சிரிக்கிறாள்)

துண்ணி:—யாமம் முழுதும் யானும் களிறும் ஈங்கு துயின்றேம்....உசாவிட, ஒறுத்திட-யாவனும் இலன்-இது விந்தையே. சீறற்க நீ. நம் அரசனைக் காண்பல் இன்னே. அக்களிறு அம் மரத்து யாத்தேன். சிறிது அல்குக நீ, இங்கே, களிற்றினை யாரும் அலைத்திடாவண்ணம்—நான் சென்று வருவல் விரைந்து.

வேரி:—(முகம் மலர்ந்து) சென்றீ,[4] அரும்புலவ. மீண்டு, உரைத்திசின்[5] எனக்கு, நிகழ்ந்த முற்றும் (கீழ்அமர்கிறாள்).

துண்ணி:—உரைத்திசின்? இசின்?[6] விந்தையோ வியப்போ இரா நெடிதுகூற. உரைப்பென். நினக்கு விந்தையாயிருப்பினும் இருக்கும்—உரைப்பல். (சிரிக்கிறான்).

---

1. முதுகண்=Guardian. 2. பழித்து வைவதை வேரிமனம் பொறுக்கவில்லை. 3. வழிமறிக்காதே. 4. Please go, சென்றருள். 5. உரைத்திசின்=விவரமாய்ப் பின்னர் நெடிது உரைப்பாய். 6. இசின் என்ற சொல் அசைநிலை என்று கூறுப. நெடுமை குறிக்கும் பொருளது என்பது ஆசிரியன் தன் சிற்றறிவு ஆராய்ச்சியில் கண்டது.

வேரி:—பரிசில் கடா,[1] ஆங்கு, நாப்பொழிதியோ? அன்றி, யாத்துக் கையகத்துளதோ?

துண்ணி:—ஆங்குச் சென்று பாடுவல். கையகத்தும் ஒன்றுளது. (மடியிலிருந்து பல பனையோலைகளை எடுத்து ஒன்றினைப் பொறுக்கி) உய்த்தோர்க.

வேரி:—(கையில் வாங்கி, மனத்துள்ளே படிக்கையில் ஆங்காங்கு சில உரக்க நவின்றும், நகைத்தும்)

.... .... ...வோன்*செவிமுதல்
வித்திய பனுவல் விளைந்...ற...றென
.... .... எருக்கிய ...ளிர்
வாழைப் பூவின் வளைமுறி சிதற...." (நகைக்க.)

துண்ணி:—மகளிர் மறுகுகின்றனர், நகைத்தியோ ரீ?

வேரி:—உவமை காண வியந்து மகிழ்ந்தேன், ஐய, (மீண்டும் படிக்கையில்).... .... .... ....

"புலிபார்த்* தொற்றிய களிற்றிரை பிழைப்பின்
எலி பார்த் தொற்று தாகும்...." (வியந்து நகைத்து)

ஓவியம் தீட்டுதி; நீ சொல் கோலாக! எலி பார்த்தொற்றுது புலி![2] ஆம்!

துண்ணி:—சிந்தடியினைப் படி....ஈற்றயலது!

வேரி:—(படித்து) வியந்தேன்....

"நனி யுடைப் பரிசில் பெறுதி,
எழுமதி நெஞ்சே துணிபு முந்துறுத்தே!"

துண்ணி:—(சிரிப்பொடு) ஆகுக, செல்வல்!

வேரி:—பிற செய்யுட் சில என்பால் தருதி புலவ, பொழுது போக்குவல், நுகர்ந்து.

துண்ணி:—(ஒரு ஓலைக்கட்டினைத்தந்து) கிழித்தலோ, இழத்தலோ ஓம்புக[3] புலமகளணங்கே! (இடதில் மறைகையில்) களிற்றினையும் திக்குறுமை ஓம்புக! (மறைகிறான்.)

வேரி:—(ஆவலொடு, கட்டினைப் பிரித்து) குமணனைப் பாடியது இது....ஆ! (மனத்துள் படித்து)....

---

1. "பரிசில் கடாவும் செய்யுளை முன்னரே எழுதியாய் விட்டதா—மற்று அங்கு வாய் மலர்வாயோ?" 2. எலியைக் கொல்லாத புலி. 3. "கிழிக்காமல், இழக்காமல் ஜாக்கிரதையாய் வைத்திரு." * புறநானூறு 237.

"கோல் காலாக*க் குறும்பல ஒதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்துயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாயும்"........................

மறைக்கின்றன நீர்! (கண்ணைத் துடைத்து) "மருங்கிற்கொண்ட பல்குறுமாக்கள்" "பிசைந்து தினவாடியமுலையள்" "பெரிதழிந்து குப்பைக்கீரை" (விழிநீர் பெருக்கி "குப்பைக்கீரை கொய்கண் அகைத்த முற்றா இளந்தளிர் கொய்து கொண்டு உப்பின்று நீருலையாக ஏற்றி, மோரின்று அவிழ்ப்பதம் மறந்து, பாசடகு மிசைந்து மாசொடு குறைந்த உடுக்கையள், அறம்பழியாத் துவ்வாளாகிய என்வெய் யோளும்" (தேம்புகிறாள். விழிநீர் அடக்க இயலாமல் விம்முகிறாள்) கொடிது, கொடிது வறுமை, எனின், புலவனின்ஞேன் வறுமையினை இங்ஙனம் சித்திரம்பாட வறுமையும் ஓர் அழகு கொண்டது, வாழி வறுமை! வாழி வறனே!

துண்ணி:—(இவள் தேம்புதலைக் கேட்டு, நின்று விட்டான் போலும்; அவன் குரல்:) அம்ம, மகளே—தீங்கு என் உற்றாய்? ஏன் புலம்புதி? நின் விடுத்து அகலேன், வந்தனென், காண்.

வேரி:—தீங்கிலது, எந்தாய், சென்று வருக. அதோ, எனக்குத் துணை வருகிறான் தில்லன், நீ செல்க.

துண்ணி குரல்:—காதலனோ அவன்? மற்று, யான் அகல்வதே தகுதி....

தில்லன் குரல்:—(அவன் வரும் பரியினது அரவத்திற்கும் மேலெழுந்து) நில்லு, நில்லட, பேதாய்!

வேரி:—தில்ல, புலவர் பெருமகனார் அவர்—இழிவு படப் பேசேல்!

துண்ணி:—(குரல்) நின்றேன், நின் நோக்கி, எதிர்கொண்டேனும் யான்.

தில்லன் குரல்:—அவிழ் அதனை, என் பரி யான் செறிக்கும் முன்.

வேரி:—எதனை? கரியினை?[1]

---

* புறநானூறு 159. 1. யானையை.

துண்ணி:—(இடதிருந்து வந்து) நின் ஊர்தி மரத்தில் நீ யாத்தது போன்றே யானும் என் ஊர்தி யாத்தேன், பிழை யென்? (சிரிக்கிறான்).

தில்லன்:—(வலதிருந்து புகுந்து), வருகின்றான் அரசன்—. ஓடு, ஒளி, ஒழி....உய்ந்திடு.......

வேரி:—ஓடற்க, ஒளியற்க. நீ படர்கின்ற அரசன் தானே வருகின்றான் நிற்தேடி....நின் பெருமை ஓர்ந்தோன் மன்ற! தில்ல, காண்க இச்செய்யுட்களை! சித்திரப் புலவர் இவர்ப் பணிதி!

தில்லன்:—புலவனே யாகுக, பொருநனே யாகுக, ஆறுவது சினமன்று, என்சினமன்று! களிபினை ஒய்த்து கரிகரந்து ஒழிக.... கரி பகரும்....

துண்ணி:—(நகைத்து) வேறு ஒன்று இலதோ? "பொழி லுட மரனும் வேறே" என்று சிலகால் யான் அயிர்த்ததும் உண்டு. வருக வீரன்! (தரையில் உட்காருகிறான்) வீர னல்லையோ நீ? (நகைக்க).

தில்லன்:—யானே அவிழ்க்கிறேன், ஒரு தனிபனேனும். வேரி, நீ செல்க உன் மனைக்கு, (வலதில் மறைகிறான்).

வேரி:—யான் அரசனைக் காணுதல் பிழையோ? (நகைத்து) புலன் நாவுழவ! நின் வறுமை நகரி நோவுடைத்து, ஓர்ந்திசின் யானே....

துண்ணி:—(உரக்க) களிறு கதழும் நின்னை, வேண்டாம், தில்ல, வாளா இரு. வேரி, செப்புக நீயே நின் காதலற்கு.

வேரி:—தில்லனோ? (நகைத்து) என் காதலன் வேறு. காணு தல் விழைதியோ, புலவ? எற்குத் தக்கோனு என்று ஆய்தல் நச்சும் என் உள்ளம்.

துண்ணி:—வீழ்ந்தான் தில்லன் (நகைக்கிறான்) உதுக்காண்!

வேரி:—பேதாய், வருக, உறும் அரசற்கு இம்மரனைச் சூழத் துலக்கி,[1] அணிந்து இன்முகவிருந்தாக்குக—யாதோ செய்தியோ பிற?

---

1. "இரவெல்லாம் படுத்திருந்த யானை மாசாக்கிய இடத்தினை சுத்தமாக்கி, வரும் அரசனுக்கு இனிதாக்கு."

தில்லன்:—(ஓடோடி வந்து) புலவோய், பெரும, சான்றோய்! என் பிழை பெரிது, பொறுத்திடுக. நம் பாகன் யாங்குச் சென்றான்? எழுந்தருள்க, யானையினை வேறு கந்திற் படுத்துக, இறைஞ்சினேன் நின் மூதடி.

வேரி:—கோழரைத்[1] திண்மரம் அஃதொன்றே இக்காவில், அவ் அண்ணல் யானைக்கு....அம்மரவெளிலும் வருந்துதல் காண். நீ செய்த பிழை யாதுமிலது. அறிஞரிவரை இங்ஙனம் நீ அலைப்பதே நோனரும் ஞாழிலாட்டு.

துண்ணி:—இரவெல்லாம், ஆங்கேப் பிணித்திருந்ததே—மரம் பட்டதோ? (நகைக்கிறான்.)

தில்லன்:—இரவெல்லாம்? வீழ்ந்தது என் திரு. ஊழ்ந்தது என் உறை.[2] வேரி, வேரி, வேந்தன் ஈங்குவரின், இதனை விளம்பற்க அச்செவிக்கு!

வேரி:—என்? இரவும் நின் காவற்றோ இது? துயிலிலாழ்ந்தனையோ? நின் காவற் பணி யாது? அம்மரத்தினைக் காப்பதோ நின் பணி? அஃதேல்....

தில்லன்:—ஆம், வேரி, ஆம். அதனை ஓம்புவதே என் வாழ்ச்சிக் கடன்.

துண்ணி:—(நகையொடு) அது காவல் மரமோ?

தில்லன்:—ஆம், ஐய. அறிந்தும் செய்தனிர். இரவு யான் வேற்றிடம் சென்றேனால்....

துண்ணி:—இப்பெருந்திறத் தொழில் அயர்ந்தோ?

தில்லன்:—காதற் கவர்ச்சியும்....

வேரி:—கவர்ச்சியோ, நவற்சியோ? (சிரிக்க).

தில்லன்:—கவர்ச்சி அறிவீர், முதிய. இரவுக் குறிக்குச் சென்றேன்—குறியும் பொய்த்தது. கலங்குகின்றது எமுள்ளம்,[3] மன்னன்பால் செய்தி சென்றது, கண்டேன். இங்கு போதுவர் கணப்பொழுதிலே....நம்மையும் ஒறுப்பர், என்னையும் துரப்பர்.

வேரி:—புலவ, திரங்குகின்றான், பெரிதும்....அவன் காதலி மாழ்கற்க. அவள் காவலன் கலங்கற்க, பொறுத்திடுக அவனை. யான் சென்று அவிழ்க்கிறேன் கரியினை....கலுழேல் தில்ல!

---

1. கொழு கொழு என அடி பருத்த திண்ணிய மரம். 2. உறை= வாழ்நாள்; ஆயுள் முடிந்தது. 3. எமுள்ளம்= மயங்கிய உள்ளம்.

துண்ணி:—கரி பகர வேறு குறிகள் மான்சூழ இலவோ—உணராேனா மன்னன்?

தில்லன்:—விரைவில் யான் சீர்த்துவல் அனைத்தையும்.

துண்ணி:—(எழுகின்ற வேரியை,இழுத்துத் தரையமர்த்தி) கவலற்க, வாரான் அரசன்.

தில்லன்:—யானே சென்று செப்பியுளேன்.

வேரி:—என் இயம்பினை?—ஓ-அப்பொழுது—முதலில்வந்தோய், மீண்டனை அதற்கோ?

தில்லன்:—அலரெழுப்பினேன்,[1] அஃதே....குற்றம் என் சுவல் ஏறல்[2] ஓம்புமினோ, ஐய. இரவு இங்கு நீ வைகியது செப்பன் மின்.

துண்ணி:—தில்ல, அஞ்சல்நீ, அரசன் இன்னும் கடுகிலன், வாரான் மன்ற! "கடிமரம் கந்தாயிற்று வேற்றோனுக்கு" என்று செவி உணர்ந்ததும் உள்ளம் கொதித்துப் பொங்கி உடல் நுரைத்து விழல் வேண்டாமோ ஈங்கே? காலம் தாழ்த்தான் இவ்வளவை. வேரி, ஆதலின் அறைந்தேன் மறமிலன் நம் மன்னன் என்று.

வேரி:—(பொள்ளென எழுந்து) கடிமரம்! கடிமரம்? நம் மன்னர் கடிமரமோ இது, தில்ல?

தில்லன்:—ஆம், நம்நாட்டுத் தெய்வத்திருமரம் மன்ற!

வேரி:—பகைவர் தீண்டுதல் அறைக்கூவே[3] என்று கேட்டலும் கேட்டுளேன்....மெய்யோ புலவ?

துண்ணி:—மெய்மன்ற! (நகைக்கிறான்)

வேரி:—ஆனால்....ஆனால்....பகைவனல்லலீ. தில்ல,கவலற்க. அன்புடைப்பரிசிலனே இவன்—அரசன் அணங்கான் உன்னை!

தில்லன்:—பகைவரோ, நகைவரோ— யாருமே தொடல் கூடாது....

வேரி:—நண்பரும்....

துண்ணி:—கையறுநிலைத் துறை அப்பாடலை ஓர்ந்தனையோ வேரி?—பாடியோன் பகைவனல்லனோ?

---

1. "ஊரார்க்குத் தெரிவித்தேன்." 2. என்மீதுபழி வராமல் காத்திடுக.
3. Ultimatum.

வேரி:—(துயர்முகத்தோடு) மானம் போன பின் வாழ்வ தெவன்? யானே பிணி அவிழ்க்கின்றேன் (வலதில் மறைகிறாள்)

துண்ணி:—என்ன வீரம், தில்ல, காண்நீ அவளை!

தில்லன்:—வாழி நற்களிறு, மெல்லியளை ஊறு செய்யற்க, (அவள் செல்புறம்நோக்கி) இறைஞ்சுவன் நம் திருஅடியில்—தெரிவின்றிச் செய்த பிழை என அறத்தொடுநின்றிடுக அரசிடம், புலவோய்!

துண்ணி:—பார், களிறு செல்கிறது, பெட்டாங்கு, நறு மதப்பட்டிபோல்! வாழிவேரி, நின்வீரம்! அப்பனே, தில்ல, யான் கூறினும் கொள்ளான் நம்கோன்.

தில்லன்:—புலவர், என்போர் பொய்நூற்று, மாயம் இழைத்து பனுவல் நெய்யும் பகட்டுமொழி வன்வாயரன்றோ—என்றுனும் அவன் என்னைச் சிறலோம்புமின்.

வேரி:—(வலதிருந்து புகுந்து) புலவர் பொய் நூற்போரோ? இழிக்கின்றனை இப்பெருந்தகைபோரை!—போய்ச் சேர்த்துக—அம்மரச்சூழலை!

தில்லன்:—மெள்ள திருத்துவல். அரசன் வாரானே போலும், வரின்........ஐய, முன்னர்க் கண்டுளிரோ அவனை?

துண்ணி:—கண்டுள்ளேன், மன்ற, என் முகம் கண்டதும், எனைப்பொய் புனையினும், கொள்ளான்—பகையென்றே பாய்வான் என் மீது.

வேரி:—அஃதேல், என்சிறுகுடிற்கு எழுந்தருள்க, வருகமா, பெரும. சிறு விருந்தோம்புவல். கடவுளே, இளவெளிமான் வாரற்க இப்பொழில், வாரல் ஓம்புமின், கடவுளே.

துண்ணி:—(முழங்க நகைத்து) வாரானேல் பாழ்த்தது இந் நாடு. அறமிலி, மறமிலி, மானமிலி! வேண்டாமம்ம, யான் வழிக் கொள்வல், என் பரிசில் பவனி செல்கின்றது ஆரதரிடை. களிறும் சேண் அகன்றுவிட்டது. கதிரோன் ஊர் கொண்டான் வெப்பொடு. செல்வல் யான், களிறு நோக்கி.

வேரி:—எம்மூர் எதிர்திசை யுள்ளது, யானும் செல்வல், விடுதி—புலவ, எடுத்துக்கொள் சுவடிகளை. (பொறுக்கித் தருகையில்)

தில்லன்:—உய்ந்தேன், உய்ந்தேன் (வலதில் மறைகிறான்)

துண்ணி:—வாரான் மானமிலி, துணிவிலி, மெள்ளத் திருத்துக. மெள்ள மெழுகுக, மெள்ள அலகுக களரியை! அம்ம! வேரி, என்றேனும் அவனை நீ காணுதியேல் கழறுக இதனை.......

வேரி:—(சினமுகமொடு) என்ன?

துண்ணி:—ஓர் எளிவரு புலவன் செய்த வீரம்!

வேரி:—இஃதென்ன வீரம்?

துண்ணி:—யாத்தது களிறு! கடிமரத்தில்!—வீரமன்றோ (சிரிக்க)

வேரி:—யாது வீரம்? அவிழ்த்துக் கொண்டு செல்தியே.

துண்ணி:—நீ அவிழ்த்தனை, யானோ? (சிரிக்கிறான்)

வேரி:—பான் நெகிழ்த்தேன்மன்!—நெகிழ்த்தேன் நின் வீரத்தினையும் மன்ற. முதுகு காட்டி ஓடுவது முதியன் நீயே—வீரம் யாண்டுளது இஃதில்?

துண்ணி:—ஆம் அவனைக் காணப்பெறாது—எதிரெதிர்ந்து நெடுமொழி அறைவதின்றிச் செல்வது வீரமில்லை மன்ற. என் செய்கோ? வருவன், வருவன் என்று நின்று நின்று அசைந்தனன் சால. வந்திலான் உணர்விலி. போகின்றேன், களிறு சேட்சென்றது.

வேரி:—(துண்ணிகைப் பற்றி இழுத்து) அமர்க, பெரும. வருவர் அரசர், கண்டனை சென்மோ.

துண்ணி:—வாரான், வாரான், வயமிலி! வலமிலி!

வேரி:—வருகுவன் இன்னே—தில்லன் தூது தெரிந்தனன் அல்லனோ? (உரக்க வலது நோக்கி) தில்ல, தில்ல! நீ சொல்லினை யல்லையோ?

துண்ணி:—சொல்லியும் வாரான்.

வேரி:—தில்ல—கூறுக மெய்.

தில்லன்:—சொன்னேன் மன்ற........

வேரி:—சொல்லியிரான் மன்ற, தன் தலையினையே வாள் சாய்க்கும் என அஞ்சி, தெரித்திலன் தில்லன். ஓ! பொய்ய! பொய்ய! தெரியின் வாராது அமைகுவனல்லன் எம்மோன்.

துண்ணி:—வாரான், வாரான் (நகைக்கிறான்)

வேரி:—யாங்கு அறிதி நீ? யான் போய்ப் புகல்வல், காண்

துண்ணி:—பெண்நீ, யாங்கு? வேண்டாம் வேரி, எந்நாடு வருகநீ, என் களிறுமிசை.

வேரி:—நகை யொழிக. யான் நுவன்று வருவென்காணினி என் மன்னன் வீரத்தினை! அவனது ஈகையினையும் சுவைக்காமல் செல்லுதல் வலித்தனையே. (வலதில் போகையில்)

துண்ணி:—செல்க நீ. நும் வர வெதிர்ந்து நான் ஈங்கல்கு தல் நீடேன்—பெண் நீ. காண்டற்கரிய தீயன் அவனுடில், பெரிது இடும்பை யுறுதி நீ, நும் இறைவனால்—வரைந்து தரு கின்றேன் முறியில், இரு, சிறிது.

வேரி:—தருக, தருக. நன்று, சால நன்று.

துண்ணி:—(தரை யமர்ந்து முறியும் கோலும் கொண்டு எழுதத் துவங்கி) அஃதேல்........யான்........

வேரி:—அஃதேல்? என்ன?....எழுதுக....(உரக்க) தில்ல இவ் ஓலையை மன்னன்பால் தூதுய்த்தியோ?....யானோ....

தில்லன்:—அக் களிறு பெரும்பணி நல்கிற்று, ஐயோ! இரவு சிறிதும் துயிலாது உளைவேன்....யான்.... என்னையோ நீ ....எவ்வதி?

வேரி:—நீ செய்யும் இப்பணி, பெண் பாற்றே. யான், தூய், மெழுகி, அலகி அணிபெறுத்துவல் இம்மரனுக்கு நீ செல்க தில்ல, அரசனை அழைக்க.

தில்லன்:—அழைக்க? வேண்டாம், வேரி, நின் மனை செல். சேர்ந்த இழிவோ ஒழிந்தது, மறப்போம் அனைவரும்.

துண்ணி:—ஒரு சிற்சிறு செய்யுள்! எடுத்துச்செல்—அவன் மறுக்கின்றானே....ஒன்று உரை!

வேரி:—(சினமொடு) என்ன? மொழிமதி விரைவில்!

துண்ணி:—மானமிலி, வாரான். ஆகலின், என்னொடு வருதியோ? என் மனையோள் நிற்கண்டு நனி மகிழ்வள்.

வேரி:—முத்து உகற்க, சிப்பிவாய் நின்று! வீரமுளையேல், இங்கு கிடத்தி நீ, முதிய.

துண்ணி:—வீர முளையேல்? படி அதனை, அவ் ஓலையை.

வேரி:—மன்னற்கு அது. எனக்கு உரிமை யாங்கோ? (நகைக்கிறாள்)—உளது.......

துண்ணி:—உளது—படி, (வேரி தனக்குள் படிக்க) உரக்கப் படி, உருமென உருளவல்லதோ அவன் செவிக்கு என்று அளந் தோர்ப்பேன்.

வேரி:—உருமுகின்றேன்: (படிக்கிறாள்)

* "இரவலர் புரவலை நீயுமல்லை,
புரவலர் இரவலர்க் கில்லையுமல்லர்;
இரவலர் உண்மையும் காணினி, இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காணினி; நின்னூர்க்
கடிமரம் வருந்தத், தந்துயாம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்!
கடுமான் தோன்றல்! செல்வல் யானே!"

துண்ணி:—சாலும் அது, (சிரிக்கிறான்)

வேரி:—பொய் புகன்றனை, இஃதில்.

துண்ணி:—என்ன பொய்?

வேரி:—பார் அங்கே! கடிமரனில் காண்பிலதே நம் நெடுநல் யானை. பிணித்துளது காணினி, என்றியே, பொய்யல்லவோ?

* புறநானூறு 162.

துண்ணி:—தா, அதனை, மாற்றுகின்றேன். (வாங்கிப், படித்துப் பார்த்து) பொய்யென்ன?

"கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானை........"

பிணித்த! பிணித்த! பிணித்த!—கேளினி வேரி, பிணித்த—இறந்த காலம். பொய்யில்லை, எடுத்தேகுக. (சினத்தொடு) செல்வல் யானே, நினக்கென—நின் மறுத்தரவுக்கென, ஈண்டு அல்கலன் யான்.

வேரி:—வீரமல்ல, இங்ஙனம் புறம் தருவது—என்னினும் எம்மோன் நிற்றொடர்ந்து காடோ, நாடோ, தேடிப் பிடித்துப் பழியறுப்பான், செல்க, காளாய்! (வலது திரும்பி) யானே செல்வன், தில்லனை நம்பேன், நயவேன், தில்ல....உன் பரிமா.... சிறிது.... (மறைகிறாள்)

தில்லன்:—அது கொடுமா—வறற்க.

துண்ணி:—இகல் கொண்டனள் என் பால். ஆகுக, அங்ஙனம்! களிறு வருகிறது, அதோ! வீளையிட்டு அதனை விளித்து இறைப்பொழுது....காவல் மரத்தில் மீண்டும் யாத்து நிற்பேன். (விளிக்கிறான் களிற்றை, வீளையினால்).

தில்லன்:—ஐய வேண்டாம்! ஒருவாறு, இனிது காண்கின்றது அருங்கடிக்களரி—மீண்டும் கூவற்க.

துண்ணி:—அக் குறுமகள் என்னை இகழ்ந்தாள். அவள் தந்தையும் ஒரு புலவன் என்று அவளே நேர்ந்தாள்—யானும் புலவனே, தன் தந்தை போன்றொரு இலம்பாட்டுக் கீழ்மகன் என்று என்னை எள்ளினள் போலும், விலகு, விலகு—களிறு விரைந்தோடி வருகிறது பார்.

தில்லன்:—(ஓடோடி வந்து) காத்திடுக, காத்திடுக.

துண்ணி:—(அவனை விலக்கி) அஞ்சற்க, அவன் வாரான், யான் கரியினைப் பிணிப்பல் ஆங்கேயே (வலதில் மறைகிறான்).

தில்லன்:—(துயரொடு, திடுக்கென கீழ்சாய்ந்து) பாழ்ந்தது அனைத்தும், பாவிப்புலவ, சாக நீயே, நின் களிறினுனே.

துண்ணி:—வாரான் அவன்; போகாள் இவள்—அஞ்சற்க.

தில்லன்:—(மெல்ல எழுந்து) குதிரை யரவம்! ஆம் சென்றிலள் வேரி. ஐயோ—இடதிலா அரவம்? யாங்கொளிப்பேன்? (கீழ் விழுகிறுன்) பொறுக்க, பொறுக்க!

ஒரு குரல்:—எழு, எழு! களிறு அஃதோ?

தில்லன்:—(எழுந்து கைகூப்பி) ஆம், அஃதே மன்ன.

ஒரு குரல்:—களிறு அதனில் யாப்புற வில்லைபோலும்—பொதும்பர் திரிந்து நின்றதே.

தில்லன்:—ஆம், ஐய. இப்போழ்தே செறித்து வருகின்றுன் புல்லன், கொணர்கிறேன் அவனை (பின் திரும்புகையில்)

துண்ணி:—(இடதிருந்து மீண்டு) இதோ, நிற்கிறேன், ஈர்த்துச் செல் பரிமேலோனிடம்.

குரலோன்:—(தன் பரியினை ஒரு மரனில் பிணித்த பின் வலதிருந்து வந்து) யார் நீ? தெரிகிறது—மறந்தேன்....யார் நீ?

துண்ணி:—யாங்ஙனம் மறத்தி? அனைத்தும் மறத்தி நீ. அரசனல்லை நீ? இளவெளிமான்?

இள:—குரலோர்ந்தேன்—துண்ணியல்லை நீ?—என்ன........ அது....ஓவியப்புலவன்! அல்ல....ஓவப்புலவன்....அல்ல, சித்திரப் புலவன்—ஆம் சித்திரப்புலவனல்லை? விடுதி அவனை தில்ல, வெகுளற்க.

தில்லன்:—காண்க, புலவ, எம் மன்னனின் நோன் மாட்சியினை.

துண்ணி:—கண்டேன், கண்டேன், நோய்மாட்சியினை (சிரிக்கிறுன்) வந்தது எதற்கோ?—யான் நின்னைக் காணற்கோ........

இள:—வந்திலே, அறிவேன். தில்ல, யானையை அவிழ்த்திடு. செல்க அவன், வெகுளற்க.

தில்லன்:—தெரியாத பிழை, பொறுப்போம்!

துண்ணி:—தெரிவின்றிச் செய்ததல்ல, மன்ன, செல்வல் உண்மை பின் அறிதி நீ, சென்றுள செய்யுளால், கொணர்தி களிற்றினை—எம் பரிசில், மன்ன, அது; கண்டிசின் நீ, வாழி!

தில்லன்:—(வலதில் சிறிது சென்று) என்னை வெருவுகிறது யானை—நீயே அவிழ்.

இள:—என்ன, அச்செய்யுள்? பிறவும் உளவோ?

துண்ணி:—உள, பிற. நின் செவிக்கு அல்ல. (வலதில் மறைந்து) செல்கம் யாம்.

வேரி குரல்:—(இடதிருந்து) விட்டேல் அவனே. விலங்குக கரியின.

தில்லன்:—ஐயையோ—அவளா?

இள:—வேரி! வருக அவள், நீயும் செல்க, தில்ல. புலவ. வாழ்க நின் வாயே!

வேரி:—தில்ல, பிடி அவனை!

தில்லன்:—விடை கொண்டனென், பெரும(வலதில் மறைந் தோடுகிறான்.)

வேரி:—ஐயோ, அவனைப் பற்றாமல், எங்கோ விரைகின்ற னனே. (இடதிலிருந்து வருகிறாள்.)

இள:—யான் இவ்வழிப்போந்தது சுட்டினரோ, வேரி விரைந்து வந்தனை இவுளிமேல்? பரிகடாவவும் யாங்கு கற்றனை?

வேரி:—அப்புலவன் கொடுத்த செய்யுள் இது—உன்பால் எடுத்தேகினேன்—நீயே இங்குப் போந்தனை—வாழ்க நின் கண்ணி! (அவனைத் தொழுகிறாள்).

இள:—அமர்க, தரையில். சாலக்களைத்தனை மகளே.

வேரி:—(வலது நோக்கி) வீரமுளதேல், புலவ, வருக இங்கே, புரவலன் எதிர் நில்.

இள:—(மெல்ல) வேரி, இழியற்க; அவன் பெருஞ் சீற்றன், அரும் பெறற் புலவனேனும்; அவன் செல்க. தில்லனும் மறைந்தான். வா, வேரி, நிற்கண்டு நெடுநாள் உலந்தன.

வேரி—:இருவேமும் ஈங்கு என் செய்ய? கடிமரம் யாத்த யானை யோன் நின்னை வசைபாடியது காண். காணங்கே, அச் செய்யுளை! (வலதில் செல்கிறாள்) ஓடாதே, வா இங்கே!

துண்ணி குரல் :—யாது நீ இயம்புதி?

இள:—(செய்யுளைப்படித்து நகைத்து) ஆம் நல்நெடியானை யே!—பாரீந்தது?

துண்ணி:—குமணன். (வலதிருந்து தோன்ற)

இள:—முதிரைக் குமணனா? காடு பற்றிக் கரந்து உறைந் தோன், இளவலொடு இனிது வாழ்கின்றானா நாட்டிலே?

துண்ணி:—இனிதே யுளர் இருவரும்.

வேரி—:மன்ன, யாரோ நீ? இவனைக் கொணர்ந்துள்ளேன், சிறைச் செறித்திடு, நலம் வினைய் கதைகேட்டு, களிறு புகழ்ந்து மகிழ்தியோ, நின் மானம் பொன்றித் துஞ்சும் காலை?

துண்ணி:—(நகைத்து) மன்ன, இவளை மணத்தி நீ. திருச் சான்ற வீர மங்கை இவள்!

இள:—வாழ்க, புலவ! காதல் துய்க்கின்றேம், களவினில். வெள்ளென மகிழும் நாள் நண்ணுகிறது மன்ற.

வேரி:—யாது கூறினை? யானறிவேன், இம் முதுவாய்க் கயவனை. "மணந்துசாக!" என்று வாழ்த்தி வீழ்த்தும் கொலை ஞனே இவ் அரம்பாடும் புலவோன்!

இள:—ஏன் இவனை முனிதி நீ வெய்தே?

வேரி:—மானமிலி, அறமிலி, மறமிலி என்று நின்னை வைது ஏசினன் சிறுமுன்னே! இக் கணம் வாழ்த்துகின்றான் உன்னை. நீ கள்ளின் மருள்தி.

இள:—ஏசினையோ, பெரும? வேரி, ஏசினுனேனும் பொறுத் திடுவோம் (சிரிக்கிருன்)

வேரி:—பதடி, பேதைநீ! இவனைச் சிறைசெய்து ஒருயேல், யான் நின்னை மணவேன், மன்நீர்த்துச் செல்க.

இள:—கடிமரனைப் பிழைத்த பிழைக்கு வருந்தல் வேண்டும் வரன்முறையே, வழக்காற்றுப்படியே, வேரி நீ கூறுவது தகுதியே.

வேரி:—ஈர்த்துச் செல், களிற்றையும் நம்பணைக்கு உய்த்தி.

துண்ணி:—பெட்டாங்கு இயலுக. வருகின்றேன் நும்மோடு.

வேரி:—களிற்றினை ஏவுவான், ஐய, முதன்முதல் செறித் திடுக இம் மரத்தில். தில்லன் எங்கோ?

இள:—அவனில்லை, போயினன். புலவ, பெருந்தகைமை யுள்ளாயேல் நீயே, எளிது, இனிது........

வேரி:—அவன் சொல் நம்பலோம்புக. காவலாளரைப் பின்னர் வருவிப்போம்—ஆ, கொடி நார் உள்ளன பலவே........ இம்மரனில் பிணித்திடு.

துண்ணி:—எந்தமரம்? இஃது முள்ளரைத்து (சுட்டிய மரன் நண்ணிச் சாய்ந்திட)

வேரி:—அஃதொக்கும், பிணி, பிணி அவனை!

இள:—வேண்டாம், அம்ம, வேரி.

வேரி:—நின்னை மணக்க யான் விரும்புவதால் நின்மானம் யான் ஓம்புவல்—யானே பிணிக்கிறேன் (தானே முன் பறித்துக் குவித்த கொடிகளால் அவனை மரத்தில் செறிக்கையில், சுற்றி

சுற்றி வருங்காலை) மன்னனைப் பழித்தெழுதிய வலக்கை விரல் உலக்கைகாள்! கிடமின் வறிது—உய்ந்து போவீர் இனி!

துண்ணி:—நாவும் ஆறாது ஆடும்— அதனைத்துணித்திடுக.

இள:—துயில்க நின்நா! (தானும் துண்ணியை இறுகப் பிணித்தற்குதவ) நோகின்றோ உடல் எங்கேனும்?

துண்ணி:—நோகுப, நோவில்ல—என் சொல்கோ?

வேரி:—வருக, பெம்மான், செல்கம். நீ நெடுநகர்சென்று ஆளும் கூளியும் அனுப்புக, இவற்பிடித்துக்கொண்டு புகற்கு—ஆ களிறு! அவிழ்ந்தது—மாயம்!

துண்ணி:—யான் தான் அவிழ்த்தேன் அப்போழ்து.

இள:—நம்மைத் தாக்கிறது—புரவி, புரவி—யானும் புரவி....(இடதில் மறைகின்றனர் வேரியும் இவனும்)

வேரி:—உய்ந்துமறைக—ஓடுக—ஓ....(இருவரும் இரு புரவி மீது எறிச் செல்லும் அரவம்)

துண்ணி:—களிறு கண்டது என் நிலை—வந்து அது இம் மரனைச் சாய்ப்பினும் பயன் யாது—விடுவிப்போர் இலரால்—ஆ....அவர்ப்பின் தொடர்கிறது....மரம்வீழ்த்தின் யானைசாவல், களிறு வாழிய, அது நல்கிய குமணன் வாழிய! சினவெறியில்....—வலதுகையென—என் இடக்கை விரல்களை யாத்தாள் பேதை வேரி—கடவுள் அருள்! தனியே உறைந்து செய்யுள் இயற்று வென் இச்சிறையில். (மடியில்செருகியுள்ள ஓலைகளிலொன்றில் ஆங்கு வைத்த வண்ணமே எழுதும்முன்,) யார்க்கு?....முதலில் என்குஞ்சிக்கு ஓ குஞ்சி!....வழிபார்த்து நிற்பர் என் ஆட்கள், பரிசிலொடு, இடைவழியிலே! வாய்க்குமாயின் செல்லற்கியலும் இது, உரியோர்க்கு......களிறு—எங்கே?—ஓ! களிறே, ஈங்கு வருதியேல், குமணன் தந்த பணியாளரை வருவிக்கலாம்........ ஓ! ஆண்டுத்தான் சென்றனை போலும், அறிவுடைநீ.......அதற்குள்.......(எழுதுகிறான். சிறிது நேரம் கழிந்தபின்) தில்லனே?....

தில்ல, வருக! வருக! (வலதிருந்து தில்லன் தோன்றிட) காண் எங்கிலே!

தில்லன்:—கண்டனென், கண்டனென். ஒருமரமிசை பதுங்கி ஒளித்துக் கண்டேன் அனைத்தும், விடுவிக்க வந்துளேன். அவர் வருமுன், யாமிருவேமும் ஓடி ஒளிப்போம்.

துண்ணி:—சிச்சீ! அஃது பின்னர். இவ் ஓலையை நீ கொண்டு, தொண்டூர்ப் பொய்கைக்கு எடுத்துச் செல் கடிது. ஆங்குள் ளோர், எம் இளையர், அவர்க்குக் கொடுத்த பின்........

தில்லன்:—ஆங்கே மீள்வல்........

துண்ணி:—வேண்டாம், உன்னை ஒறுப்பான் இறைவன். எம் மரொடு நீயும் செல்க இனிது—எம்மூரில் குடி ஊன்றுதி இனி!

தில்லன்:—வாழ்க, புலவ! எனின்........எனது........

துண்ணி:—(நகைபொடு) உன்காதலி ஈங்கு உளாள், அவளை யும் கொண்டு செல்மதி—தாழற்க, என்னை மறந்திடு, யாங்ஙனு னும் உய்ந்து வருவல்—களிறு உளது துணை எனக்கு.

தில்லன்:—இக் கொடிகளைப் பறித்து நின்னைச் சிறிது நெகிழ்த்துகோ....ஓ! துஞ்சுக என்கண்கள் இக்காண! (தன் கண் களை மூடிக் கொள்ள)

துண்ணி:—வேண்டாம், இங்ஙனே இருக்க அவை. இந்தா ஓலை.

தில்லன்:—(வாங்கிக்கொண்டு) இனி ஈங்கு தலைகாட்டேன். (பணிந்து வலதில் மறைகிறான்)

துண்ணி:—வேறுபார், மற்று?—(சிறிது சூழ்ந்து, எழுதத் துவங்குகிறான். சிறிதுநேரம் கழிந்தபின்) குதிரை! வேரி! வருக! என் சிறு புலமையினை வியப்பவளல்லளோ? (எழுதுகிறான்)

வேரிகுரல்:—புலவ, அவிழ்த்து விடுகோ? விழைதியோ?

துண்ணி:—வாழ்க நின் அளி! எழுதுதற்கு இடமில்லை, இதுக்காண்....(எழுதிக் காட்டுகிறான்)

வேரி:—(பரியிழிந்து வந்து) யாங்ஙனம்? வலதினையே வலம்பட யாத்தேனே?

துண்ணி:—(நகைத்து) உன்வலம் எனது இடமன்றோ? உன்வெற்றி என்களத்திலன்றோ (சிரிக்க)

வேரி:—பிழைத்தனென், மகிழ்தி, புலவ. (சிரித்து) எழுதுக வேட்டாங்கு, நின்களிறு எங்கே?

துண்ணி:—(நகைமுழக்கி) நின்நெறி அதுவிலங்க, அஞ்சி வந்த நீயன்றோ அறிதி, யானோ?

வேரி:—ஊருள் நுழைந்தது, சிக்குண்டது வீரர்கையில்.

துண்ணி:—ஆங்குச் சென்று அதனை எள்ளிநகுக, என்பால் வருவதென்னோ?

வேரி:—நின்னை நகவே வந்தேன்மன்ற! மன்னன் நெகிழ் வினை முறுக்கி, நின்னை முருக்கவே!

துண்ணி:—இனி அறிந்தேன், நம்மோன் அத்துணைக் கிழோன் அன்று, மன்ற.

வேரி:—மூடு, நின் வாயினை, பேதாய்! மானமிலி நீயே. உயிர்க்கு அஞ்சி, கெஞ்சி இளித்து, நின் ஊரேகுதற்கு சூழ்கின் றனையோ, மாயம்?—யான் அருகிருந்து, மன்றும் ஏறி நின்னை ஒறுப்பது காண்டும்—ஆ, வருகின்றார் மன்னர்.

துண்ணி:—என்னை ஈர்த்தேக? மகிழ்க வேரி! மற்றை யோர்க்காணலனே.......எனிது?

வேரி:—"என் வந்தனை வேரி, மீண்டும்?" என்று சீறினும் சீறுவர்—யான் கரந்திடுகின்றேன் (வலதில் ஒளிகிறான்)

துண்ணி:—குதிரையைக் கண்டு உணரானோ இவன் வர வினை. பேதைமன்! பேதைமன்! (குதிரை அரவம். அது ஒய இளவெளிமான் இடதிருந்து வருகிறான்)

இள:—எது, குதிரை யிது?

துண்ணி:—யாரது இது, அறிவாயோ?

இள:—தில்லனது, வேரி ஏறிச் சென்றது, தானே வந்து விட்டது போலும்—என்னே இதன் அறிவு!

துண்ணி:—தில்லன் இங்கு வந்திலன்.

இள:—அஃதறிவேன், அங்கு அகப்பட்டான் (சிரிக்க)

துண்ணி:—எங்கே? எங்கே?

இள:—கவலேல், ஊறின்றி யுளான். குமணற்கு நீ செய்தி விடுத்து, போர்மூள்தியோ எம்மொடு, என்று கவன்று அவனை வழி மறித்தேன்.

துண்ணி:—வீழ்க என் ஊழி!

இள:—கவலற்க, வா, போர்வேளேன், யாருடனும்.

துண்ணி:—யானே வருவல், சிறைக்கு.

இள:—வேண்டாம், அவிழ்ந்து விடுகிறேன், நீ செல் உன் மனைவியிடம்.

வேரி:—(வெளிவந்து) நீயும் சென்று மகிழ்ந்திட, மனைவியுள் ளாளோ, உனக்கு? யாங்கு? அவிழேல், யான் பிணித்தது, பெரு வியர்வொடு, சிறுமென்கைகளால் (இளவெளிமானை இழுத்துத் தள்ளுகிறாள்)

இள:—(சினத்தொடு எழுந்துநின்று) உன் வீரத்தினை ஆங்குகாட்டு, களிறு நம் ஊரினைப் பாழ்த்தி உழுது, சாவுவித்து கிறது........

துண்ணி:—ஐயோ, என்களிறோ? அட, கடவுள்!

இள:—புலவ, வல்விரைந்து சென்று, அம் மதக்களிறு அடக்கிடுக, என் புரவிமீது செல்க.

வேரி:—மானமிலி! மானமிலி! விடேன், தொடற்க என் கொடிகளை. (அவிழ்க்கச் சென்ற இளவெளிமானைத் தகைகிறாள்)

இள:—ஆண்மகனல்ல நான்? மானமிலி? நீயோ வசுதி?

(தரதரென அவளை இழுத்து) வா, இம்மானுக்கு, நின் கலிங்கம்—நின் தானையாலேயே பிணிக்கின்றேன்........

வேரி:—அரோ, புலவ, நம் கண்ணினை மூடுக என்மானம் போயிற்று—களவில் என் மேனி கண்ட காதலன் இவன்—நீயோ........

துண்ணி:—(தன் கண்களை வலது கையால் மூடிக் கொண்டு) வேண்டாம் மன்ன, விடுதி அவளை!

இள:—உள பிற, கொடி நார் இன்னும்....இவற்றால் செறிப்பேன். (பற்றிய முன்தானையை விடுத்து கொடிகளால் அவளைப் பிறிதொரு மரனில் கட்டி) கிட இங்கே, பேயே நீ, பெண்ணல்லை, (அவள் இடமுகமே நமக்குத்தெரிகிறது, வலது நோக்கிச் செறிப் பட்டதால்; துண்ணி முகமோ எதிர் நோக்குவது).

வேரி:—வீரன் நீ........பேதையை....அல்ல-ஒரு பேயினைப் பிணித்தனை! (கண்களை மூடிக்கொண்டு அழுகிறாள்.)

துண்ணி:—வேண்டாம், மன்ன. மெல்லியள், விடுதி அவளை.

இள:—அவள் சொல் கேட்டேன், ஊரே பாழாகின்று. விரைந்து செல். ஆ....உன்னை இன்னும் அவிழ்த்திலேனே, கொடியேன்—உன்னைப் பிணித்ததும் இக்கொடியோளே!....

துண்ணி:—கொடிமகளிரா? (சிரிக்கிறான்) கொடியோர்களே!

இள:—நகைப் பொழுதல்ல இது....

துண்ணி:—ஆம், வருகிறது சினக்களிறு அதோ!....வேரி நேராளேல், என்னை விடற்க! உடம் படுத்து அவளை!

இள:—என்னைக் கொல்லத்துணைகிறது, அது. வேரியினையும்! உன்னை ஒரு உலா மகனுக்காணேதல்—போயிற்று என் உயிரும். மாழ்க யானே. எம் ஊரார் பலர் துஞ்சினர், யான் வாழ்ந்து ஆவதென்? (சோர்ந்து நிற்க)

வேரி:—விடற்க அவனை, அனைவோரும் மாண்டு வீழ்வோம்.

இள:—(திடுக்கென) மாண்டு? புலவன் கூடாது. நின்காதலி,

பெருந்துயர்ப் பேதுறைவி—மனையோள் குஞ்சி—கைம்மை காண்பதோ? வேரி, புலமை வியக்கக் கற்றனே, இச் செய்யுளை ஓது, கண்ணைத் திறந்துபார் (அவள் முன்நீட்டி)படி, உன் கண்ணை விரைவில் மூடும் இது காட்சி ஒழிய!

வேரி:—விடுவி, என்னை.

இள:—மாட்டேன். முதலில் புலவனை. (துண்ணியை அவிழ்க்கையில்)

துண்ணி::—வேண்டாம், மன்ன.

வேரி:—(கட்டுண்ட வண்ணமே நின்ற நிலையில் படிக்கிறாள்)

* "நின்நயந் துறைநர்க்கும், நீநயந் துறைநர்க்கும்,
பன்மான் கற்பினின் கிளைமுத லோர்க்கும்,
கடும்பின் கடும்பசிதீர, யாழ நின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்,
இன்னோர்க் கென்னாது................"

இள:—மீண்டும்!....(துண்ணியை அவிழ்த்துக் கொண்டு) மீண்டும்! (பாடுகிறான்)

"இன்னோர்க் கென்னாது என்னொடும் சூழாது,
வல்லாங்கு வாழ்தும் என்னாது"..................

(அவன் ஈரக்குரல் தேம்புகிறது. மரத்தில் சாய்ந்த புலவனைக் கட்டி அணைகிறான்—முத்தமிடுகிறான் கன்னத்தில்).

துண்ணி:—ஈதென்ன?

இள:—பொறுத்தருள்க, நின் திருவடியையன்றோ முத்திடல் வேண்டும் (காலில் வீழ்கிறான்).

துண்ணி:—சிச்சி! சித்தை பேனையோ?

வேரி:—ஈதென்ன இழிவு? மன்னன் வீழ்ச்சி என்னே? (மீண்டும் படிக்கிறாள்.)

"வல்லாங்கு வாழ்து மென்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி, மனைகிழ வோயே!
பழந்தூங்கும் முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே."

---

* புறம் 163.

இள:—(துண்ணியை அவிழ்த்துவிட்டு) பொறுத்திடுக புலவ ரேறே! வேரி, இவர்க்காண்—புரவலரோ இரவலரோ. அப் பாட்டினை மீண்டும் மீண்டும் ஓதுக, நேரம் நனி தருகம் உனக்கு தமியே ஓத! யாம் செல்லுகின்றோம்—ஆ, களிறு படுத்திருக் கிறது களைத்து—விளித்திடுக மெல்ல.

துண்ணி:—(நகைத்து) துஞ்சும் அரவினைச் சீற்றுவதென்? எடுப்புவதென்? வேரி! (அவள் தலைகுனிந்து நிற்றல் கண்டு) வேரி, என்னைப்பார்!

வேரி:—கண்களைக் குத்திச் சாவல் யான், சென்றீமோ (தேம்புகிறாள்) நோக்கற்க என்னை, அணுகற்க (திமிறுகிறாள்) போதி நீ மன்ன, போதி புலவ, என்னைத் தீண்டுதியேல் மாள்வல் இன்னே, இவ்வே, இந்நிலையே.

துண்ணி:—(அவளையணுகி, யாத்த கயிற்றினை அவிழ்த்துக் கொண்டே) பொறுத்தி என்னை. பெரிது நெடிது பிழைத்தனென்.

இள:—(முகமலர்ந்து) என்னே இவர் சால்பு! நின்னை இரக் கின்றனர். செய்யுளில் புரவலர், நின்னடியில் இரவலர்.

வேரி:—செய்யுளில் புரவலன்? மன்ன, மடவன் மன் நீ, அறிந்திலை சூழ்ச்சியை, அவனை மரன் செறித்தனை, களிறு கொண்டனை. குமணன் நல்கிய மற்றை வளனையும் கவர்திநீ என்று இவன் அஞ்சியே, தன் மனைப்பேதைக்கு விடுத்தனன் அவ்வோலை, "அனைவர்க்கும் கொடுமதி" என்ற சொற்பொரு ளாழம் அறிந்திலை. கொடுமதி? கொடுமதி? என் மதி? கொன்னே தோன்றிய முன்னிலை அசையோ அது? கொடுமதி—கொடுத் தலை மதிபுடைத்தாம்....கொடுமதி! இச்சூழ்ச்சியோன் விரகினை வாழ்த்துதியே நாணின்றி! போழ்க நின் நா!

துண்ணி:—(மரமென நின்று கலங்கி, அவளை அவிழ்த்தல் சோர்ந்து) அறிவும் உணர்வும் சான்றோளே இவள் மன்ன; மற்று, பெருமகாள்! இளவெளிமான், குமண வள்ள லீந்தன கவர்வன் என்று எனைத்தும் எண்ணிலேன் யான், அவ் அனைத்து நும் தலைவனை இகழ்ந்திலேன், கடவுளே நிற்பர் கரி. கொடுமதி எனின் விரைந்துகொடு என்றல்லோ பொருள்?

இள:—விரைந்து கொடுப்பதே மதியுடைமையும். நும் இகழ்ச்சி, சிறிதோ, பெரிதோ—யான் நொந்திலேன், பெரும; என்னையே நொந்து கொண்டேன், கேள்வி கல்வி நிரம்பா புன் மதி இளைஞனைப் பொறுத்தி, சித்திரப்புலவ!

துண்ணி:—(அவிழ்த்தல் தொடர்ந்து) சித்திரப்புலவ? அஃதே விளித்தனள் இவளும்—இருவீரும் ஒத்த மனத்தீர் போன்ம், விடுத்தேன், செல்க வேரி, நும்மனை.

வேரி:—(அகன்றோடி) மாட்டேன், இங்கேயே மாள்வல், (சிரிக்கிறாள்) சித்திரப் புலவீர் யா, யா பாடினும், ஆடினும்! ஆம், இஃதே வடக்கு—வடக்கிருந்து விளிவல்.

துண்ணி:—(நகைத்து) வடக்குறை நோன்பு அணங்கே நீ! மன்ன, யான் கடிமரனில் யானைப் பிணித்தது பெரும்பிழையே, நோனற்கரிது. நீ நோன்றனை; நோன்றதும் பிழையே, மான மோம்பிச் செருவிளைத்தோள் வேரிதன் போரே அறப்போர் மன்ற! யான் செய்த பிழை கொடிது—யானே வடக்கிருந்து நோற்றல் வேண்டும். (நிற்கும் வேரி அருகுசென்று வடக்கு நோக்கித் தரையில் அமர்ந்து, அவள் அடிகளை இருகையாலும் தைவர)

வேரி:—(நகையொடு) சீச்சீ! (துள்ளிக்குதிக்கிறாள்) கூடாது சித்திரனார்! கூடாது, எழுக!

இள:—யான் செய்ததும் பிழையே—அறமகளை மரத்தில் யாத்துக் கொடுமை மொழிந்ததற்கு யானன்றோ வடக்கிருத்தல் வேண்டும்? சித்திரனார், நீவிர் எழுக. (துண்ணிபக்கம் அமர்ந்து அவரை எழுப்ப.)

துண்ணி:—(துண்ணென எழுந்து) வடக்கு நீயிர் அமர்வீ ராகில் யானெதற்கு நடுவண்? அமர்க நீயிர். (அவளை இழுத் துக்கொணர்ந்து)—மணம் புணர்த்திச் செல்கிறேன். ஒருமாலை யால் பிணிப்பேன் மன்ன, இங்கு நிற்கும் வேரிமானில்! (கொடி யால் கட்டப் போகிறான் அவர்களை) ஆம், இக்கடிமானிலே! கடி எனின் வதுவையன்றோ? இக்களிறினைப் பிணிப்பென்.

தில்லன் இலனிங்கே, காவற்காரன், என்னை விலக்க, (நகையொடு) கடிமரம் நேற்றும் பார்த்தேன், இன்றும் பார்த்தேன். (விளையிட்டு) களிறு வருமோ?

தில்லன்:—(திடுக்கென இடதில் தோன்றி) எதற்கு? இகல் மாறினவோ? ஆறினவோ? ஆ, களிறு வருகிறதே.

துண்ணி:—இளமான், பணிக நீ இவட்கு, இவளது சீற்றம் அனைத்தும் உணர்ந்தேன். அரசனை....அன்றியும் காதலனை யான் கழறியதற்குச் சீற்றம் கொண்டாள் என்மேல் காதல் மாண் பினைக் கண்டனென், என் இழிவினை ஓர்ந்தேன். மணக்க நீவிர், நெடிது ஊர்க நும் ஊழியாழி! களிற்றினில் இவர்ந்து செல்க, மணமக்காள்!

தில்லன்:—களிறு வெருவிலது—வருக!

இள:—களிற்றினல் இடருற்றது எம்மூர், யாம் மணம் துய்ப்பதோ? (சிரிக்கிறான்)

வேரி:—வேறொருநாள் கண்ணுக! (எழுகின்றனர்)

தில்லன்:—யாரும் மாண்டிலர், ஊர்சென்று, தெருதோறும் உலாவிப், போந்தேன் இங்கு. நெடுநல் யானைவெருத் தந்ததன்றி யார்க்கும் ஊறு தந்தின்று வாழி யானை!

துண்ணி:—அத்தகைந்த குமணன்வாழியர்—அஃதோ, ஏறுக, இருவிரும் வம்மின்.

வேரி:—சித்திரனர், நீவிரோ? புரவிமீதோ?

இள:—பெருஞ்சித்திரனர்—ஏறுக, என்புரவி. நும்யானை போல் எனதும் ஊறு தராத்தகையது.

தில்லன்:—(இடதில் அனைவரும் மறைகையில்) மன்ன, கடிமரம் காத்துத் தமியன் யான் நிற்றல் வேண்டுமோ—நும்மொடு உலா வருதல் விழைந்தேன், அருள்க....என் பரியுமுளது....

பெருஞ்சித்திரனர்:—(பாடுகிறார்)

சிறிதே தக்கனை இவ்இரு சொல்லே!
பெரிதே மாண அரும் பரிசில்லே!

[மறைகின்றனர்]

## புத்தக மதிப்புரை.

கம்பராமாயணசாரம் பாலகாண்டம்:—கம்பராமாயணத்தில் சுவை மிகுந்த பாடல்களைப் பல்காலும் ஆய்ந்து தமது நுண்மாண் நுழைபுலனால் கண்ட கவிநலன்களை தமிழன்பர்கள் யாவரும் சுவைத் தின்புறுதற்பொருட்டு திருவாளர். இராவ் சாகேப். வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் இயற்றிய அகலஉரையுடன்கூடியபாடற்றிரட்டின்முதற்பகுதியாகும். மதிநுட்பம் நூலோடமைந்த இப்பெரியார் தமிழ், அங்கிலம் என்ற இருமொழிகளிலும் தலைசிறந்த கவிகளின் உள்ளத்தை நன்கு தெரிந்து, அவற்றின் சொன்னயம், பொருணயங்களைச் சுவைத்துச்சுவைத்துத் திளைக்கும் மாபெருந் தமிழ்ப்புலவர். தமது அருந்தொண்டின் பயனாய் இவர் உவந்தளிக்கும் இவ்வுரைநூல், தமிழ் மக்கள் இன்புறுதற்கான நல் விருந்தாகும்.

இந்நூலின் மாட்சியினை அறிந்து இதனை நவின்பெற வெளியிட்டுதவிய தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர்க்கு தமிழுலகு நன்றிபாராட்டும் கடப்பாடுடைத்து. தமிழராவார் ஒவ்வொருவரும் இவ்வரிய நூலை விலைக்கு வாங்கி பதிப்பாளர்களை நன்முயற்சியில் ஊக்கி, கம்பராமாயணத்தின் எஞ்சிய பகுதிகளும் வெளிவந்து, தமிழ்கூறு நல்லுலகு இன்புற்றிலங்க ஆவனபுரிவாராக.

இதன் விலை ரூ. 1—10—0. ரூ. 2—0—0.

## தமிழ்ச் செய்திகள்.

திரு. வித்துவான் C. R. நமசிவாயமுதலியார் அவர்களின் படத்திறப்பு:—பல்கலைக் கழகமன்றத்தில் முதலியார் அவர்களின் உருவப்படமானது 20–3–37தேதியன்று பேர் அறிஞர்பலரின் பாராட்டுதலுடன் திறந்து வைக்கப் பெற்றது. திருவாளர்கள்

Dr. A. இலட்சுமணசுவாமி முதலியார் அவர்கள், Dr. உ. வே. சுவாமிநாத ஐயர் அவர்கள், மகாமகோபாத்தியாய S. குப்புசாமி சாஸ்திரி அவர்கள், Miss. De. La. Hay அவர்கள், Dr. S. கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள், Mrs. நல்லமுத்து இராமமூர்த்தி அவர்கள், மு. இராகவஐயங்கார் அவர்கள் ஆகியபலரும் முதலியார் அவர்களின் புகழுரைகளைக் கூறினர். முதலியார் அவர்கள் எளிய குடும்பத்தில் பிறந்து, புலமைமிக்க தமிழாசிரியரால் வளர்க்கப் பெற்றவர். தனது உலைவிலா முயற்சியாலும், அருங் குணங்களாலும், தலைசிறந்த தமிழ்த் தொண்டினாலும் உன்னத நிலையை அடைந்தவர். தமிழ்ப் புலவர்களின் நிலையையும், தமிழ் மொழியின் நிலையையும் கண்ணுங்கருத்துமாய்ப் போற்றி இப் பல்கலைக் கழகத்தில் உயர் நிலைக்குக் கொணர்ந்தவர். தெலுங்கு மொழியை உயிர்ப்பித்ததில் திரு. வீரேசலிங்கம் பந்தலு அவர்கள் எத்துணை சிறந்தவரோ அது போலவே தமிழ் மொழியை உயிர்ப்பித்ததில் முதலியார் அவர்கள் தலை சிறந்தவர். கலைநூற் பொருளையும், புதுக் கருத்துகளையும் விளக்குதற்கான வசன நூல்களை பாலர்முதல் முதியர் ஈறுகப் பயிலுதற்குரியவாறு கவின்பெற இயற்றி உதவிய பெருந்தகை எனப்பலரும் புகழ பல்கலைக்கழகத்தின் துணை வேந்தர் திரு. R. Littlehailes துரைமகனர் திருவுருவப் படத்தை மன முவந்து ஏற்றனர்.

**சென்னைப் பல்கலைக் கழகம்:**—இந்த மார்ச்சு மாதம் 20 தேதி நிகழ்ந்த கூட்டத்தில் கல்லூரிகளில் பணியாற்றும் புலவர்களையும் மற்ற பாடங்களைக் கற்பிக்கும் ஆசிரியர்களைப் போலவே (Lecturers) சொற்பொழிவாளர் எனும் பெயரால் குறிக்கவேண்டுமெனவும், ஊதியமும் மற்ற ஆசிரியர்களின் படித்தரத்திலேயே கொடுக்கவேண்டுமெனவும் திரு. S. இராமச்சந்திர ஐயர் அவர்களால் முன் மொழியப்பெற்று திரு. V. இராமநாத ஐயரவர்களால் வழிமொழியப்பெற்றது. திருவாளர்கள் திவான்பகதூர் K. S. இராமசாமி சாஸ்திரிகள், M. R. இராமசாமி சிவன், ஆமீது ஆசன் ஆகிய அன்பர்கள் இதனைத் துணைமொழிந்து ஆதரித்தனர். Rev. A. G. Hogg துரையவர்கள் கல்லூரிகளின்

ஆட்சிமுறையில் பல்கலைக்கழகத்தார் தலையிடுதல் முறையல்லவெனவும், கல்லூரிக்கான முதற்பொருளைத்தேடுதலில் பொறுப்பற்ற பல்கலைக் கழகத்தினர் கல்லூரிப் பணியாளர்களின் ஊதியத்தைத் திட்டஞ்செய்வது அடாத கருமம் எனவும் மறுத்தனர். பல்கலைக்கழகத்தினர் நாட்டுமொழிப் புலவர்களையும் மற்ற ஆசிரியர்களுடன் ஒருபடித்தாகவே நடத்திவருகின்றனர்; கழகத்தினர் நடத்திக்காட்டும் நேரியமுறையினை கல்லூரித் தலைவர்களும் பின்பற்றுகின்றனராவென்பது ஆராய்ந்துகாண வேண்டுவது; புலவர்களின் நிலையை உயர்த்துவதில் கழகத்தின் ஆட்சிக்குழுவினர் (Syndicate) தமது செல்வாக்கினால் ஆவன புரியும் விருப்புடையர்; அடுத்துவரும் ஐந்தாண்டுக் கல்லூரிச் சோதனையில் கல்லூரித் தலைவர்கள் புலவர்களை அகீதமாகக் கீழ்மைப்படுத்துகின்ற செய்தி வெளியானால் கவனித்தல் நலம்; என Dr. A. இலட்சுமணசுவாமி முதலியார் அவர்கள் விளக்கினர். ஆதலால் இம்முடிபு வலியுறுத்தப் பெறவில்லை.

---

உ

## 1937-ஆம் ஆண்டிற்கு திக்கற்ற மாணவ இல்லத்துக்கு நெல்லும், காசும் உதவி அருளிய பெருந்தகையாளர்கள்.

---

| | | |
|---|---|---|
| திரு. T. S. நந்திகேசுவரம் பிள்ளை அவர்கள் கருந்திட்டைக்குடி, | நெல் கலம். | 40 |
| ,, ம. குமாரசாமிப் பிள்ளை மனைவியார் அவர்கள் மகர்நோம்புச் சாவடி. | நெல் கலம். | 10 |
| ,, B. இராஜராஜேசுவரி அம்மாள் அவர்கள் வடக்கு ராஜவீதி தஞ்சை. | நெல் கலம். | 10 |
| ,, கைலாச அறநிலைய வரவு | ரூபா. | 85—0—0 |
| செந்தமிழ்ப்புரவலர் ,, இராவ்சாகிபு. த. வே. உமாமகேசுவரம்பிள்ளை வரவு | ரூபா. | 20—0—0 |

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழாவிற்கு தாது, மாசித்திங்கள் முடிய உதவிய அன்பர்கள்.

திரு. த. பொ. கை. அழகிரிசாமி பிள்ளை அவர்கள் வழியாக:—

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. T. A. சிவசங்கரம் பிள்ளை | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, கா. கந்தசாமி பிள்ளை Retd. Eng. | ,, | 8 | 0 | 0 |
| ,, T. P. K. அழகிரிசாமி பிள்ளை | ,, | 6 | 0 | 0 |
| ,, N. N. CT. சிதம்பரம் செட்டியார் | ,, | 5 | 0 | 0 |
| ,, பெயர் வேண்டாப் பெரியார் | ,, | 10 | 0 | 0 |
| ,, இராம பஞ்சநதம் பிள்ளை | ,, | 10 | 0 | 0 |
| ,, A. Y. அருளானந்தசாமி நாடார் | ,, | 5 | 0 | 0 |
| ,, சிவசாமி மூப்பனர் | ,, | 2 | 0 | 0 |
| ,, T. இராதாகிருஷ்ண நாயுடு B.A., B.L., | ,, | 2 | 0 | 0 |
| | கூடுதல் | 53 | 0 | 0 |

திரு. S. A. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் வழியாக:—

| | | | |
|---|---|---|---|
| திரு. வ. மருதப்பா பிள்ளை அவர்கள் | 50 | 0 | 0 |
| ,, G. இராமசாமி பிள்ளை ,, | 6 | 0 | 0 |
| ஆக | 56 | 0 | 0 |

திரு. வித்துவான் அ. வடிவேலர் அவர்கள் வழியாக:—

| | | | | |
|---|---|---|---|---|
| திரு. V. தங்கவேற் பிள்ளை L.M.P. | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, R. தீனதயாளு நாயுடு | ,, | 5 | 0 | 0 |
| ,, A. நாராயணசாமி பிள்ளை B.A., | ,, | 3 | 0 | 0 |
| ,, T. C. வேங்கடாசலம் பிள்ளை | ,, | 1 | 0 | 0 |
| | ஆக | 14 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| திரு. T. R. விசுவநாதபிள்ளை அவர்கள் Asst. Eng. வழி மூன்று தவணைகளாக | 75 | 0 | 0 |
| திரு. கோதண்டபாணி பிள்ளை B.A., அவர்கள் வழியாக:— | | | |
| திரு. V. முத்துலிங்கப் படையாச்சியாரவர்கள் | 10 | 0 | 0 |
| திரு. குப்புசாமி ரெட்டி என்கிற நாராயண ரெட்டியாரவர்கள் | 10 | 0 | 0 |
| ஆக | 20 | 0 | 0 |
| திரு. C. வேதாசலம்பிள்ளை அவர்கள் B.A., B.L., வழியாக முதற்றவணை | 17 | 0 | 0 |
| திரு. இராவ்சாகிபு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் வழியாக:— | | | |
| திரு. T. V. K. காமராஜபாண்டிய நாயக்கர் அவர்கள் போடிநாயக்கனூர் ஜமீன்தார் | 100 | 0 | 0 |
| திரு. P. சாமிநாதபிள்ளை அவர்கள் B.A., L.T., வழியாக முதற்றவணை | 20 | 0 | 0 |



உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## கல்லூரிக்கு அன்பர்கள் உதவிய நன்கொடை

| திங்கள் நன்கொடை | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| திரு. சித்த வைத்திய சரபம் Dr. ஆ. சோதிபாண்டியன் | அவர்கள் | 5 | 0 | 0 |
| ,, K. நடராசன் B.A., B.L., (Advocate.) | ,, | 5 | 0 | 0 |
| ,, N. A. அனந்தவிசய முதலியார் | ,, | 1 | 0 | 0 |
| ,, K. பிரணதார்த்திஅரன் பிள்ளை | ,, | 1 | 4 | 0 |
| ,, T S. சபாபதி பிள்ளை B.A., (Retired. Dt. Registrar.) | ,, | 1 | 0 | 0 |
| **ஆண்டு நன்கொடை** | | | | |
| ,, N. A. வர்த்தமான முதலியார் அவர்கள் | | 50 | 0 | 0 |